# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

மூன்றாம் மடலம் - மூன்றாம் பாகம்

**செ - னௌ**

Vol. III - Part - III


பு.ஏ. இராமையா இ.ஆ.ப.
அரசு செயலாளர்,
தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறை

தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.
இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு)
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட
இயக்கக வெளியீடு
2004

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

மூன்றாம் மடலம் - மூன்றாம் பாகம்

செ - ஔ

Vol. III - Part - III

பு.ஏ. இராமையா இ.ஆ.ப.,
அரசு செயலாளர்,
தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறை

தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.,
இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு)
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

மேற்பார்வையாளர்

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட
இயக்கக வெளியீடு

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட இயக்கக வெளியீடு - 9

முதற் பதிப்பு : 2004

A Comprehensive Etymological Dictionary of the Tamil Language, Vol. III, Part - III

பதிப்புரிமை : தமிழ்நாட்டரசு

விலை : உருபா 300/-

குறியீட்டெண் : Colon No. P.J1-J, 314" K.M4

வெளியிட்டோர் : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி-48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை - 600 040

அச்சீடு : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி
சென்னை - 600 113

நூல் கிடைக்குமிடம் : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி
சென்னை - 600 113

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி-48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை - 600 040

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

**Vol. III - Part - III**

## மூன்றாம் மடலம் - மூன்றாம் பாகம்

## (செ முதல் சௌ வரை)

### பதிப்புக் குழு

திரு. பு.ஏ. இராமையா இ.ஆ.ப.,
அரசு செயலாளர்,
தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறை

திரு. தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.,
அரசு சிறப்புச் செயலாளர்,
தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறை
மற்றும்
இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு)
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

### மேற்பார்வையாளர்

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

### கூர்ந்தாய்வாளர்

புலவர் த. சரவணத் தமிழன்

### தொகுப்பாளர்கள்

திரு. முத்து. பிச்சை
முனைவர் மு. கண்ணன்
முனைவர் பா. வெற்றிச்செல்வன் (பகுதிப்பொறுப்பாளர்)
முனைவர் ச. செந்திலாண்டவன்
முனைவர் இரா.கு. ஆல்துரை
திரு. கா. இளமுருகு
திரு. ச.கி. கணேசன் (ஓவியர்)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

**ஜெ ஜெயலலிதா**
முதலமைச்சர்




தலைமைச் செயலகம்
சென்னை-600 009

22.12.2004

## அணிந்துரை

'ஒண்டமிழ்த்தாய் சிலம்படியின் முன்னேற்றம் ஒவ்வொன்றும் உன் முன்னேற்றம்' என்னும் வைர வரியில் தமிழின் முன்னேற்றமே தமிழர் முன்னேற்றம் என்பதை எடுத்துக் காட்டினார் பாவேந்தர் பாரதிதாசன் அவர்கள்.

பாவேந்தர் பணித்தபடி, ஒல்லும் வகையில் எல்லாம் அந்த ஒண்டமிழை வளர்க்க உற்ற பணி புரியும் நற்றமிழ் அரசே தமிழ் நாடு அரசு.

காலத்தை வென்று நிற்கும் நம் கன்னித் தமிழை இந்திய அரசின் ஆட்சி மொழியாக ஆக்குவதற்கும், உயர்தனிச் செம்மொழியாம் தமிழ் மொழியின் ஒப்பற்ற இலக்கியமாகவும், உலக சிந்தனையின் உச்சமாகவும் விளங்கும் திருக்குறளைத் தேசிய இலக்கியமாக ஆக்குவதற்கும், இடையறா முயற்சிகளை எடுத்து வருகிறது எனது அரசு. அனைத்து மாணவரும் தமிழைப் பயில வேண்டும் என்பதற்காக மழலையர் வகுப்பு முதல் பன்னிரண்டாம் வகுப்பு வரை அறிவியல் தமிழைக் கற்பிக்க ஏற்பாடு செய்ததும் எனது அரசே.

வளர்ந்து வரும் அறிவியலுக்கு ஈடு கொடுக்கும் வகையிலும், இலக்கண இலக்கிய மரபுகளைப் பேணிக் காக்கும் முறையிலும் மொழியின் சொல்வளத்தை அறிந்து கொள்வதும், பெருக்குவதும் இன்றியமையாததாகும். இப் பயன்பாட்டு நோக்கில் 'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலி' (A comprehensive Etymological Dictionary of Tamil Language) நூல்களை உருவாக்கும் திட்டம் தோற்றுவிக்கப்பட்டது. இப் பணியின் தனித் தன்மை கருதி, பன்மொழிப் புலமையும், ஆய்வு நுட்பமும், தமிழ்ப் புலமையும், ஒருங்கே அமையப் பெற்றிருந்த மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்களை இயக்குநராகக் கொண்டு இத் திட்டம் தொடங்கப்பட்டது. பைந்தமிழ் அறிஞர் பாவாணர் அவர்கள் 'தனித் தமிழ் இயக்கம்' கண்ட மறைத்திரு மறைமலை அடிகளார் வழியில் தமிழ் ஆய்ந்து தமிழே உலக முதன்மொழி என்பதை உலகுக்கு உணர்த்தியவர் ஆவார்.

அவர் தொடங்கி வைத்த செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டம், அருந்தமிழின் வளர்ச்சிக்கு அடிப்படையான தலையாய பணிகளில் ஒன்றாகும் என்பதைக் கருத்திற் கொண்டு எனது அரசு இத் திட்டத்திற்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருகிறது. இத் திட்டம் தொடங்கப்பட்ட நாளிலிருந்து 6 பகுதிகள் மட்டுமே முடிக்கப்பட்டிருந்தன. இவற்றில் 'அ' முதல் 'ஙௌ' வரையிலான எழுத்துக்களில் அமையும் சொற்கள் பற்றிய விளக்கங்கள் இடம் பெற்றுள்ளன. தற்பொழுது 'ச' வரிசையில் மூன்று பகுதிகளும் 'த' வரிசையில் மூன்று பகுதிகளும் ஆக மேலும் 6 பகுதிகள் முடிக்கப்பட்டு வெளியிடப் பெறுவதை அறிந்து நான் மிக்க மகிழ்ச்சி அடைகிறேன்.

இயல், இசை, நாடகம் எனும் முத்தமிழோடு இந்த யுகத்தின் நான்காவது தமிழாகிய 'அறிவியல் தமிழ்' வளர, அறிவியலைத் தமிழில் கூறுவதற்கான சொற்களைக் கண்டறிய வேண்டியது இன்றியமையாததாகும். அதற்காக ஏற்கெனவே தமிழில் உள்ள சொல்வளத்தை அறியவும், புழக்கத்தில் இல்லாத சொற்களைப் புதுப் பயன்பாட்டிற்குக் கொண்டு வரவும், புதிய சொற்களை உருவாக்கவும், சொற்களின் வேர்களை ஆராய்ந்து புதியன படைக்கவும் இன்றைய தமிழ் வளர்ச்சியின் உடனடித் தேவையை நிறைவு செய்வதாக செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலி நூல் மடலங்கள் அமைகின்றன.

இம் மடலங்கள் தமிழின் அழிவிலாச் சொத்தாக விளங்கும் என்பது உறுதி.

இப் பகுதிகள் வெளிவர அயராது உழைத்த அறிஞர் பெருமக்களையும், அலுவலர்களையும் நான் மனமாரப் பாராட்டுகிறேன்.

வாழ்க தமிழ்!
வளர்க தமிழ்ப் பணி!

ஜெ ஜெயலலிதா
தமிழக முதலமைச்சர்

*சி.வி. சண்முகம்*
*கல்வி மற்றும்*
*வணிக வரித்துறை அமைச்சர்*



*தலைமைச் செயலகம்*
*சென்னை - 600 009*

# *அணிந்துரை*

"ஒரு மொழிக்குட்பட்ட சொற்களை ஆராயும் சொல்லாராய்ச்சியும் பல மொழிகளை ஒப்பு நோக்கும் மொழியாராய்ச்சியும் மேனாட்டாரிடமிருந்து நாம் அறிந்தவை.

இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்று
அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே (தொல்.சொல்.எச்.1)

என்று தொல்காப்பியர் காலத்திலேயே சொல்லாராய்ச்சியும் மொழியாராய்ச்சியும் ஓரளவு தமிழ்நாட்டிலிருந்ததேனும் விரிவான முறையிலும், நெறிப்பட்ட வகையிலும் சொன்னூலும் (Etymology), மொழிநூலும் (Philology) நாம் பெற்றது மேலையரிடமிருந்தே". இது, மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்கள் தம் சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் என்ற நூலைச் சேலத்திலிருந்து 1948-இல் வெளியிட்டபோது, அந்நூலில் அவரே எழுதிய முகவுரை. ஆகப் பல்லாண்டுகளாகச் சொல்லாராய்ச்சியிலேயே தம்மை ஆட்படுத்திக். கொண்டு, நுணுகி நுணுகித் துருவித் துருவிப் பார்த்ததன் தெள்ளிய வெளிப்பாடுதான் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி. அதன் வாயிலாகத் தமிழின் சொல்வளத்தை நாம் அறிகின்றோம். அத்துடன் நில்லாது தொன்றுதொட்டு இன்று வரையுமுள்ள பண்பாடு, நாகரிகம், வரலாறு ஆகியவற்றையும் அறிய முடிகிறது.

தமிழ் பிறமொழியின் கலப்பில்லாமல் தனித்தியங்கும் ஆற்றலுடைய தன்னிகரில்லா மொழி என்று உலக மொழியறிஞர்களெல்லாம் ஒப்புக் கொள்கின்றனர். செந்தமிழின் நீண்ட நெடிய சொல்வள வரலாற்றில் சொல்லும் பொருளும் பெருகியுமுள்ளன; அருகியுமுள்ளன! வழக்கிழந்த சொற்களை மீட்பதற்கும், அனைத்துச் சொற்களையும் காப்பதற்கும் அகரமுதலிகள் இன்று வழிவகுக்கின்றன.

இலக்கியச் சொல்லாட்சிகள் முதலாக இன்றைய பேச்சு வழக்குச் சொல்லாட்சிகள் ஈறாக அனைத்தையும் உள்ளடக்கிச் சொற்களின் வடிவம், பொருள், பிறப்பு போன்றவை பற்றிய தேவையான செய்திகளுடன் விளக்கமுற உரைப்பவையாக இருப்பவையே செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் மடலங்கள்.

மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரின் நூற்றாண்டு விழா கண்ட நம் **புரட்சித் தலைவி மாண்புமிகு முதலமைச்சர் அம்மா** அவர்களின் சீரிய தலைமையில் அமைந்த அரசு, அவரின் தனித்தமிழ்ப் பற்றினைப் பேணிக் காத்திடவும், அவர் காட்டிய நெறிமுறைகளின்படி அகரமுதலி மடலங்கள் வெளிவரவும் ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருகிறது. தமிழகத்தை முன்னேற்றப் பாதையில் கொண்டு சென்று இந்தியாவிலேயே தலைசிறந்த முதன்மை மாநிலமாக மாற்றிடச் சூளுரைத்துச் செயற்பட்டு வரும் **புரட்சித் தலைவி மாண்புமிகு முதலமைச்சர் அம்மா** அவர்களின் சீரிய வழிகாட்டுதல்படி தமிழக அரசு முனைந்து பீடுநடை போடுகின்றது.

'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் எஞ்சிய பகுதிகள் யாவும் நான்காண்டுக்கால வரம்பெல்லைக்குள் வெளிக்கொணரப்படும்' எனச் சட்டப்பேரவையில் அறிவித்தபடி 'ச'கர மடலத்தின் 3 பகுதிகளும், 'த'கர மடலத்தின் 3 பகுதிகளும் இப்போது ஒருசேர வெளிவருவது, மிகவும் மகிழ்ச்சிக்குரியதாகும். முன் எப்போதும் இல்லாதவாறு 6 பகுதிகள் ஒருசேர முடிக்கப்பெற்று வெளியிடப்பெறுவது அருஞ்சாதனையே! அதற்கு முதற்காரணம் நம் **புரட்சித் தலைவி மாண்புமிகு முதலமைச்சர் அம்மா** அவர்களே என்பது மறுக்க முடியாத உண்மை. 6 பகுதிகள் சீரிய முறையில் வெளிவர அரும்பங்காற்றிய தமிழ் வளர்ச்சி-பண்பாடு மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் திரு. பு.ஏ. இராமையா இ.ஆ.ப., அவர்களுக்கும், அகரமுதலித் திட்டப் பொறுப்பு இயக்குநர் திரு. தா. சந்திரசேகரன் இ.ஆ.ப., அவர்களுக்கும், அகரமுதலி மேற்பார்வையாளர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கும், சூர்ந்தாய்வுப் புலமையாளர்களுக்கும் மற்றும் அகரமுதலித் தொகுப்பாளர்களுக்கும் என்னுடைய பாராட்டுகள். இதேபோல மற்றப் பகுதிகளையும் விரைந்து முடித்து வெளியிடத் தொடர்ந்து பாடுபடுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

சென்னை

**சி.வி. சண்முகம்**
கல்வி மற்றும்
வணிக வரித்துறை அமைச்சர்

பு.ஏ. இராமையா, இ.ஆ.ப.,
அரசு செயலாளர்



தமிழ் வளர்ச்சி-பண்பாடு
(ம) அறநிலையத்துறை
தலைமைச் செயலகம்
சென்னை - 600 009

# அணிந்துரை

*"கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு
முன்தோன்றி மூத்த குடி"* (பு.வெ.மாலை)

என்று தமிழ்க்குடி பாராட்டப்பெறும். அவ்வகையில் எத்திசையும் புகழ்மணக்க இருந்த பெருந்தமிழணங்கின் சீரிளமைத்திறம் வியந்து தம்முடைய வாழ்நாள் பணியாகச் சொல்லாராய்ச்சியை மேற்கொண்டவர் மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர் அவர்கள்.

முதல் மாந்தன் தோன்றிய இடம் குமரி; உலக முதன் மொழி தமிழ். என்ற கோட்பாட்டில் திளைத்து, அக்கோட்பாட்டின் அடிப்படையில் தம் ஆராய்ச்சியை அமைத்து முதன்மொழியாகிய தமிழின் சொற்பிறப்பாய்வைத் துருவித்துருவியாய்ந்து மிகத் துல்லியமாக வேர் விளக்கம் கண்டவர் பாவாணரே.

இப்பெருமகனாரைப் போலத் தனித்தமிழ் ஆய்வுக் கருத்துகளை இதுவரை எந்தவோர் அறிஞரும் வழங்கிடவில்லை; பெருஞ்சித்திரனார் கூறுவதைப்போலத் "தமிழ்த் துறைக்கு அவர் தொண்டு புதியது; தமிழர்க்கு அவர் கருத்துகள் மயக்கறுப்பன; மேனாட்டார்க்கு அவர் நூல்கள் வியப்பளிப்பன; அவர் எடுத்துக் கொண்ட முயற்சி அரியது. தொல்காப்பியர் காலத்திற்குப் பின் தமிழ் தன்னை நிலைப்படுத்திக் கொள்ளும் ஒட்டுமொத்த முயற்சிக்குப் பாவாணர் என்றே பெயரிடலாம்". இவ்வுரைக்கு ஏதும் மறுப்புரையுண்டோ?

**"கதிர்தரு ஒளியென மொழிதரு மலையே!
முதிர்முகி லெனவே வேர்பொழி விளைவே
தமிழ்ச்சுட ரணிதலைப் பாவா ணர்தான்
தமிழ்மகள் பெறுதவப் பேரறிவாளன்!
வேர்ச்சொல் லாய்வின் வித்தகன்! மொழியின்
போர்ப்படைத் தலைவன்! புலமைப் புதையல்!
தலைவ! நீதரும் ஒளியே பாதை
விலைமதிப் பில்லா வெற்றியைத் தருமே!"**

என்றொரு பாவலர் பாடியதற்கேற்பப் பாவாணர் பெரும்புகழ் பெற்ற அமுதப்படையல்!

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி 12 மடலங்களில் 31 தொகுதிகளாக வெளியிடத் திட்டமிடப்பட்டதாகும். கடந்த 28 ஆண்டுகளில் 6 தொகுதிகள் மட்டுமே வெளிவந்துள்ள நிலையில், சுணக்கமுற்றிருந்த அகரமுதலித் திட்டத்திற்கு மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் புதுத்தெம்பு ஊட்டியதன்விளைவாய், எஞ்சிய 25 தொகுதிகளை நான்காண்டுக் கால வரம்பெல்லைக்குள் வெளிக்கொணரப் பணிகள் முடுக்கிவிடப்பட்டன. அதன் வெளிப்பாடே இப்போது 'ச' மற்றும் 'த' மடலங்களின் 6 தொகுதிகள் ஒருசேர வெளிவருகின்றன. இது ஓர் அரும்பெருஞ் செயல் என்றால் மிகையாகாது.

இத்தொகுதிகளில் காட்டப்பெறும் தமிழ்ச் சொற்களின் விரிவும் விளக்கமும் நம்மை வியப்பிலாழ்த்துகின்றன. எடுத்துக்காட்டிற்கு ஒன்றிரண்டினைக் குறிப்பிட விரும்புகிறேன்.

'ச'கர மடலத்தின் முதற்பகுதியில் (ச, சா) வரும் **'சக்கரம்'** என்ற சொல்லிற்கு 27 வகையான பொருள் விளக்கங்கள் தரப்பட்டுள்ளன. அதுமட்டுமல்லாது இலக்கிய மேற்கோள்களும் வேர் விளக்கமும் அருமையாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

**சருக்கு - சருக்கரம் - சக்கரம்** (வே.க. 239)

அதேபோல் **'சத்தம்'** என்ற சொல்லுக்கான விளக்கமும் அருமை.

சாத்து = பண்டங்களைக் கொண்டு விற்கும் வணிகர் கூட்டம். சாத்துவண்டிக்குக் கொடுக்கும் கூலி சாத்தம் எனப்பட்டது. வண்டிச்சாத்தம் = வண்டிக்கூலி. சாத்தம் - சத்தம் ஆயிற்று.

அடுத்து, இரண்டாவது தொகுதியில் (சி-சூ), 'சிலை' என்ற சொல்லிற்குக் காட்டப்பட்டுள்ள விளக்கம் அழகுற அமைந்துள்ளது. 'சீரகம்' என்ற சொல்லிற்குப் பொருள் - வேர் விளக்கம் - விரிவுப் பொருள் காட்டியிருப்பது திகைக்க வைக்கிறது.

**சீர் - சீரம் - சீரகம்**

உலகில் முதன்முதலாகச் சிறந்த முறையில் சமையல் தொழில் தொடங்கியதும் அதற்குச் சீரகத்தைப் பயன்படுத்தியதும் தமிழகமே! என்பதற்குச் சான்றுகள் பல உள.

"சிறுபிள்ளை இல்லா வீடும், சீரகம் இல்லாத கறியும் செவ்வையாயிரா" என்பது தொன்று தொட்டுவரும் பழமொழி.

சீரகக்கோரை, சீரகச்சம்பா, சீரகவள்ளி என்பன ஒப்புமை பற்றிப் பெயர்பெற்ற நிலைத் திணை வகைகள். பொன்னளவையிற் சீரகம் என்பது ஓர் அளவு.

**5 கடுகு = 1 சீரகம்; 5 சீரகம் = 1 நெல்**

**"அளவிற்கும் நிறையிற்கும் மொழிமுதலாகி**
**உளவெனப் பட்ட வொன்பதிற்றெழுத்தே**
**அவைதாம்**
**கசதப வென்றா நமவ வென்றா**
**அகர உகரமோ டவையென மொழிப"** (தொல்.எழுத். 170)

என்னும் தொல்காப்பிய எழுத்ததிகார நூற்பா உரையில் கழஞ்சு, சீரகம், தொடி, பலம், நிறை, மா, வரை, அந்தை என்று இளம்பூரணரும், 'கழஞ்சு, சீரகம், தொடி, பலம், நிறை, மா, வரை, அந்தை, இவை நிறை' என்று நச்சினார்க்கினியரும் கூறியிருத்தலையும் நோக்குக.

**செரி - செரியகம் - சீரகம்**

என்றுமாம். வடவர் மூலம் காட்டும் வகை. ஜீரக - ஜீரண; ஜ்ரு - ஜீரண, ஜ்ரூ - கிழமாக்கு, கட்டுக்குலை, கரை, செரிக்கச் செய். ஜ்ரூ என்பது கிழ என்னும் தென்சொற்றிரிபே (வ. மொ. வ.153).

அடுத்து, மூன்றாம் தொகுதியில் (செ - சௌ) 'செம்பியன்' என்ற சொல்லின் பொருள் விளக்கம் சிறப்புடையதாயிருக்கின்றது. அதைப்போலச் 'செஞ்சம்' என்ற சொல்லுக்கு

அளிக்கப்பட்டுள்ள பொருள் விளக்கமும் சிறப்பாயுள்ளது. செஞ்சு - செம்மை, செவ்வை, நிறைவு, செஞ்சு - செஞ்சம்.

அடுத்து, 'த்'கர மடலத்தின் முதற் தொகுதியில் (த, தா) 'தமிழ்' என்ற சொல்லுக்குக் காட்டப்பெற்றிருக்கும் விளக்கம் விரிவானதாகவும் பொருத்தமானதாகவும் நுட்பமானதாகவும் அமைந்துள்ளது. அதைப்போலத் 'தா' என்னும் சொல்லுக்கும் அருமையான விரிவான விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது, 'தா' என்ற சொல் தந்தை என்பதனையும் குறிக்கும் என்று நிறுவியிருப்பது ஆராய்ச்சியாளரின் சான்றாண்மையைக் காட்டுகிறது.

அதே மடலத்தின் இரண்டாவது தொகுதியில் (தி-தூ) 'திறம்' என்ற சொல்லுக்கும், 'துடி' என்ற சொல்லுக்கும் தரப்பட்டுள்ள விளக்கங்கள் பயனுடையவையாகும்.

மூன்றாவது தொகுதியில் (தெ-தௌ), 'தெரு' என்னும் சொல்லின்கீழ், முடுக்கு சிறுசந்து; சந்து தெருவின் கிளை; தெரு சிறுவீதி; மறுகு போக்குவரத்து மிகுந்த பெருந்தெரு அல்லது வீதி; ஆவணம் கடைத்தெரு; அகலுள் அகன்ற மறுகு; சாலை பெருவழி; சந்தி மூன்று தெருக்கள் கூடுமிடம்; சதுக்கம் நான்கு தெருக்கள் கூடுமிடும் என்ற வகையில் பதிவு செய்துள்ளமை பாராட்டுக் குரியதாகும்.

அடுத்து, 'தொல்காப்பியர் காலம்' என்னும் தலைப்பின்கீழ்க் காட்டப்பட்டுள்ள சான்றுகள் ஆய்வாளர்களுக்கு மிக்கப்பயனுடையனவாகும். இந்த ஆறு தொகுதிகளிலும் தேவையான சொற்களுக்குப் பொருத்தமான பட விளக்கங்கள் கொடுக்கப்பட்டிருப்பதும் அழகுக்கு அழகு சேர்ப்பதாயுள்ளது.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டப்பணிகள் விரைந்து நடைபெற பலவகையிலும் பெரிதும் ஆக்கமும் ஊக்கமும் அளித்துவரும் **மாண்புமிகு முதலமைச்சர்** அவர்களுக்கும், **மாண்புமிகு கல்வி அமைச்சர்** அவர்களுக்கும் எனது நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். அரசு அறிவித்தவண்ணம் 6 தொகுதிகளை ஒருசேர அணியமாக்கி வெளியிடும் பணியைச் சிரமேற்கொண்டு செவ்விய முறையில் வெளிவர அரும்பணியாற்றிய தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத்துறை அரசு சிறப்புச் செயலாளரும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் **திட்டப்பொறுப்பு இயக்குநருமான திரு. தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.,** அவர்களுக்கும், அகரமுதலி மேற்பார்வையாளராகச் செயற்பட்ட உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கும், அகரமுதலித் திட்டப் பணியாளர்கள் மற்றும் கூர்ந்தாய்வுப் புலமையாளர்களுக்கும் எனது மனமுவந்த பாராட்டுகள். பாராட்டுகளைப் படிக்கற்களாகக் கொண்டு தொடர்ந்து நன்கு உழைத்து எஞ்சிய தொகுதிகள் அனைத்தையும் அரசு விரும்பிய வண்ணம் வெளிக்கொணர வேண்டுமென விழைகிறேன்.

**சென்னை**
***23-10-2003***

**பு.ஏ. இராமையா**
**அரசு செயலாளர்**

தா. சந்திரசேகரன், இ.ஆ.ப.
இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு)



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகரமுதலித் திட்ட இயக்ககம்
சென்னை - 600 008

# பதிப்புரை

"ஓங்க லிடைவந் துயர்ந்தோர் தொழ விளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத் திருளகற்றும் - ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிரொன் றேனையது
தன்னே ரிலாத தமிழ்" (தண்டி 50 நூ. மேற்கோள்)

மக்களினம் முதன் முதல் தோன்றிய இடம் ஞால உருண்டையின் நடுப்பகுதியே. அப்பகுதியே பண்டு குமரிக் கண்டம் (இலெமுரியா) என அழைக்கப்பட்டது. எங்கு முதன் மாந்தன் தோன்றினானோ அங்குதான் ஞால முதன்மொழியும் தோன்றியிருக்க வேண்டும். குமரி நில மாந்தனே முதன் மாந்தன். அவன் பேசிய மொழியே முதன்மொழி; அதுவே நந்தம் தாய்மொழியாம் தமிழ்மொழி.

தமிழ்மொழி தென்னாட்டுப் பழங்குடிமொழி; அதுவே திரவிடத்திற்குத் தாய்மொழி; ஆரியத்திற்கு மூலமொழி; உலகத்திற்கு முதன்மொழி என்பது பாவாணர் கொள்கை.

தமிழ் இயல்பாகத் தோன்றிய மொழி. அதனால் இயன்மொழிக்குரிய பதினாறு பண்புகளும் ஒருசேர வாய்க்கப் பெற்ற சிறப்புமிக்க தமிழ்மொழிக்குச் சொற்பிறப்பியல் அகரமுதலி இல்லாத குறையை நீக்கத் தமிழக அரசு மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணரை இயக்குநராகக் கொண்டு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தைத் தோற்றுவித்தது.

போர் வீரனுக்குச் செவ்விய படைக்கலங்கள் வெற்றிக்குத் துணைபுரிவது போலப் பல்வேறு துறைகளில் அறிவை வளர்த்துக் கொள்ள விழையும் எம்மொழியினர்க்கும் அம்மொழியில் அவ்வத்துறைத் தொடர்பான கலைச்சொற்கள் பெரிதும் துணை நிற்கும். நல்ல அகரமுதலி மக்களைச் செவ்விய மொழிப் பாங்குடையவராக மாற்றும். தாய்மொழியின் வெற்றிக்கும், பற்றுக்கும், தாய்மொழியில் ஊற்றாய்ப் பெருகும் சொல்வளம் மிகவும் இன்றியமையாதது.

ஒவ்வொரு சொல்லும் எப்படி பிறந்தது: எவ்வேரிலிருந்து எச்சொல் பிறந்தது. பிறமொழியில் இருந்து கடன்பெற்ற சொல்லாயின் அது எவ்வாறு திரிகிறது; அம்மொழியின் கிளை மொழிகளில் எவ்வாறு வழங்குகிறது; அச்சொல்லின் மாற்று வடிவங்கள் எவை; சொல் வடிவிலும், பொருளமைப்பிலும் எவ்வாறு அமைகிறது என்பதை விளக்கமாக ஆராய்வது சொற்பிறப்பு அகரமுதலியின் பணியாகும்.

இயற்சொல், திரிசொல், திசைச்சொல், அயற்சொல் என்னும் சொல்பாகுபாட்டை உலகமொழிகளில் காணலாம். இவற்றுள் தமிழிலுள்ள கொச்சை வழக்குகளுக்கும், மருவித் திரிந்தவற்றுக்கும், வடதமிழ் எனப்படும் பாலி பிராகிருத மொழிச் சொற்களுக்கும், ஏனைத்

திராவிட திசைச் சொல்லாக மாறியவற்றுக்கும் மூலவடிவங்களை மீட்டெடுத்துச் செந்தமிழ்ச் சொல் வடிவம் காட்டுதலாலும், மறைந்துபோன செந்தமிழ்ச் சொற்களையும், வேர் மூலங்களையும் ஏரண அடிப்படையில் பொருத்திக் காட்டுதலாலும், தமிழில் காலந்தோறும் வந்து கலந்த பிறமொழிச் சொற்களுக்கேற்ற செந்தமிழ்ப் படைப்புச் சொற்களைச் சேர்த்திருத்தலாலும், தமிழா சமற்கிருதமா என்னும் ஐயம் தெளிவித்துத் தமிழ்ச் சொற்களை வேறுபடுத்தி வேர் மூலம் விரித்துக்காட்டி இது செந்தமிழ்ச் சொல் அல்லது வடதமிழ்ச் சொல் என ஐயம் நீக்கதலாலும் பொதுவாகத் தமிழ் சொற்பிறப்பியல் அகரமுதலி எனப் பெயரிடாமல் "செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி எனப் பெயரிடப்பட்டுள்ளது.

சொல்லின் பிறப்பை மட்டும் உணர்த்துவதே எல்லை என்று மேலை நாட்டவா கருதினர். ஆனால் பாவாணரைத் தலைவராகக் கொண்டு துவக்கப்பட்ட இச்சொற்பிறப்பியல் அகரமுதலி சொல்லின் பிறப்போடு நில்லாமல் சொல்லின் வரலாற்றையும் கூறுகிறது. இம்முறையில் செந்தமிழ்ச் சொற்பிறப்பில் அகரமுதலித் திட்ட இயக்ககம் ஆய்வு செய்ததின் பயனாக மூன்றாம் மடலத்தின் மூன்றாம் பகுதி செ-சௌ வெளிவருகிறது. இந்நூலுக்கு அடிப்படையாகச் சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ள பேரகரமுதலி எடுத்துக் கொள்ளப்பட்டது. மேலும் 40-க்கும் மேற்பட்ட அகரமுதலிகளிலிருந்தும் சொற்கள் தொகுக்கப்பட்டுள்ளன. நாட்டுப்புற வழக்கில் உள்ள சொற்களும், மன்னர் பெயர்களும், புலவர் பெயர்களும் இதில் இடம்பெற்றுள்ளன. வரலாற்று புகழ்மிக்க ஊர்ப்பெயர்களும் இடம்பெற்றுள்ளன.

பாவாணரின் நூல்களில் இருந்தும், தனிக்கட்டுரைகளில் இருந்தும் வேரும், வரலாறும், விளக்கமும் தொகுத்துச் சேர்க்கப்பட்டுள்ளன. சொற்களுக்கு அரண்சேர்ப்பதாக அரிய படங்கள் விளங்குகின்றன. அழிந்துவரும் **செக்கு, செங்கோட்டுயாழ், சொக்கப்பனை, செடிலாட்டம், சொக்கட்டான் மனை, சேகண்டி** போன்ற படங்கள் பழைமையை நிலைநாட்டுவதாக அமைகின்றன. இவ்வகரமுதலியில் பழந்தமிழ்ச் சொற்கள் முதல் இக்கால அறிவியல் தமிழ்ச் சொற்கள் வரை தொகுக்கப்பட்டுள்ளன. இவ்வகரமுதலியின் சிறப்புக்குச் சில எடுத்துக்காட்டுகள் **(1) செட்டி, (2) செல்(லு)-தல், (3) சோகா-த்தல்.**

நாளும் தமிழ் நலம் நாடிவரும் தமிழக அரசுக்கும் தமிழ் வளர்ச்சியில் ஆர்வம் கொண்டு அதன் வளர்நிலைகளைக் கவனமுடன் மனத்தில் நிறுத்திச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சிறப்புடன் இயங்கத் தேவையான அனைத்து ஏந்துகளையும் அளித்து எங்களை ஊக்குவித்து வரும் **மாண்புமிகு தமிழக முதல்வர்** அவர்களுக்கும், **மாண்புமிகு கல்வியமைச்சர்** அவர்களுக்கும், எங்கள் துறையின் **செயலாளர் திரு. பு.ஏ. இராமையா,** இ.ஆ.ப. அவர்களுக்கும் நன்றிக் கடப்பாடுடையேன்.

தமிழகத்தின் மூலை முடுக்குகளில் ஒளிந்திருக்கும் சொற்களை எல்லாம் தொகுத்து உரிய விளக்கம் எழுதவும், நன்கு பதிப்பிக்கவும் துணையாயிருந்து அகரமுதலி மேற்பார்வையாளராகச் செயற்பட்ட உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர். சா. கிருட்டினமூர்த்தி அவர்களையும், நன்முறையில் கூர்ந்தாய்வு செய்து தந்த அமரர் எம். சி. சீனிவாசன், சிறப்பான முறையில் நூலைத் தொகுப்பித்த தொகுப்பாளர்கள், பணியாளர்கள் ஆகிய அனைவரையும் பாராட்டுவதோடு மேலும் திறம்பட உழைத்து அடுத்தடுத்த மடலங்கள் விரைந்து வெளிவரப் பாடுபட வேண்டும் என்று விழைகின்றேன்.

சென்னை
15-10-2003

*தா. சந்திரசேகரன்*

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## மூன்றாம் மடலம் - மூன்றாம் பாகம்

## செ - ஔ

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

# செ

**செ**[1] *še/ce*, பெ. (n.) *சகர மெய்யும் எகர உயிரும் சேர்ந்த உயிர் மெய்யெழுத்து;* the combination of c and e.

*[ச் + எ - செ]*

**செ**[2]**-த்தல்** *še-*, 4 செ.குன்றாவி. (v.t.) பொருந்துதல், ஒத்தல், கருதுதல்; to intend; to purpose; to design. "வெப்புடை யாடூஉச் செத்தனென்" *(பதிற்றுப். 86).*

*[(சுள்) → செள் → செ-.]*

**செக்கச்சிவ-த்தல்** *šekka-c-civa-*, 3 செ.கு.வி. (v.i.) மிகச்சிவத்தல்; to be deep-red. "விழியிணை செக்கச் சிவந்து" *(திருப்பு. 126).* சினத்தால் அவனது முகம் செக்கச் சிவப்பாயிற்று *(உ.வ.).*

*[செக்கம்² + சிவ-.]*

**செக்கச்சிவந்த** *šekka-c-civanda*, பெ.எ. (adj.) மிகவும் சிவப்பான; deep red. செக்கச் சிவந்த உதடு.

*[செக்கம்² + சிவந்த]*

**செக்கச்சிவேரெனல்** *šekka-c-civēr-enal*, பெ. (n.) மிகவும் சிவந்திருத்தற் குறிப்பு; expr. of being deep-red. காலை ஞாயிறு செக்கச் சிவேரென்று ஒளிர்ந்தது *(உ.வ.).*

*[செக்கம்² + சிவேரெனல்]*

**செக்கச்செவேரென்று** *šekka-c-cevēr-enru*, வி.எ. (adv.) செக்கச்சிவேரெனல் பார்க்க; see *šekka-c-civēr-enal*. நாணத்தால் அவள் முகம் செக்கச் செவேரென்றானது *(உ.வ.).*

*[செக்கம் + செவேரென்று]*

**செக்கஞ்செகு-த்தல்** *šekkañ-jegu-*, 4 செ.கு.வி. (v.i.) செக்கச்சிவ-த்தல் பார்க்க; see *šekka-c-civa-*. 'செக்கஞ்செக என்றது செக்கச்சிவ என்றாய்' *(ஈடு, 1. 9:5).*

*[செக்கம்² + செகு-.]*

**செக்கடி**[1]**-த்தல்** *šekkadi-*, 4 செ.குன்றாவி. (v.t.) செக்கில் எள் முதலியவற்றை ஆட்டுதல் (உ.வ.); to work the oil-press.

மறுவ. செக்காட்டடல்

*[செக்கு + அடி-.]*

**செக்கடி**[2] *šekkadi*, பெ. (n.) எண்ணெய்யாட்டும் இடம்; place where oil-press is working. செக்கடிக்குப் போய்வந்தான் *(உ.வ.).*

*[செக்கு + அடி]*

**செக்கடிக்கறுப்பன்** *šekkadi-k-karuppan*, பெ. (n.) செக்கடியில் இருக்கும் சிறுதெய்வம் (வின்.); a demon or ferocious deity having its abode in oil-press.

*[செக்கு + அடி + கறுப்பன்]*

**செக்கடிமுண்டன்** *šekkadi-mundan*, பெ. (n.) செக்கடிப்பதற்கு ஏற்ற உடல்வலிவுள்ள வெறுந்தடியன்; stout, strong but senseless man, as fit only to work an oil-press.

மறுவ. செக்குலக்கை

ம. சக்கடியன்

*[செக்கடி² + முண்டன்]*

**செக்கணி** *šekkani*, பெ. (n.) கூத்துவகை; a kind of dance. "தெள்ளிய செக்கணி யாடி" *(குற்றா. தல. தருமசாமி. 55).*

தெ. சக்கணி

*[சொக்கம் → செக்கம் → செக்கணி]*

**செக்கம்**[1] *šekkam*, பெ. (n.) *இறப்பு;* death. 'செக்கமென்று மரணமாய்' *(ஈடு, 1. 9:5)*

*[செகு → செக்கம்]*

**செக்கம்**[2] *šekkam*, பெ. (n.) *1. சிவப்பு;* redness. *2. சினம்;* anger. "செக்கஞ் செகவென் றவள்பா லுயிர்செக வுண்ட பெருமான்" *(திவ். திருவாய். 1. 9:5).*

*[செம் → செவ் → செவு → செகு → செக்கு → செக்கம்]*

**செக்கமலம்** *šekkamalam*, பெ. (n.) செந்தாமரை; red lotus flower.

*[செங்கமலம் → செக்கமலம்]*

**செக்கர்** *šekkar*, பெ. (n.) *1. சிவப்பு;* redness, crimson. "சுடுதீவிளக்கஞ் செல்சுடர் ஞாயிற்றுச் செக்கரிற் றோன்ற" *(புறநா. 16:8).* 2. செவ்வானம்; red sky of the evening. "செக்கர் கொள் பொழுதினான்" *(கலித். 126).* 3. மாலைநேரம்; evening.

ம. செக்கர்

*[செக்கல் → செக்கர்]*

**செக்கர்வானம்** *šekkar-vāṉam*, பெ. (n.) செவ்வானம்; red sky. "செஞ்சோரி யெனப் பொலிவுற்றது செக்கர்வானம்" *(கம்பரா. வரைக். 66).*

*[செக்கர் + வானம்]*

**செக்கர்வானிறத்தன்** *šekkar-vāṉiṟattaṉ*, பெ. (n.) 1. செவ்வானம்போற் செந்நிற முள்ளவன் (வீரபத்திரன்.); lit., one red as the red sky (Virabadraṉ). *2. சிவன்;* Lord Šivaṉ. *3. முருகன், செவ்வேள்;* Lord Murugaṉ.

*[செக்கர் + வான் + நிறத்தன்]*

**செக்கல்** *šekkal*, பெ. (n.) 1. செக்கர்,2 பார்க்க; see *šekkar*,2. 2. அந்திமாலை (யாழ்.அக.); evening. 3. செவ்வந்தி; a flower.

ம. செக்கல்

*[செக்கம்² → செக்கல்]*

**செக்கவுரி** *šekkavuri*, பெ. (n.) கற்சூரை (மலை.); spinous wild indigo.

*[செக்கர் + அவுரி - செக்கரவுரி → செக்கவுரி]*

**செக்காட்டி** *šekkāṭṭi*, பெ. (n.) *வாணியன், எண்ணெயின் பொருட்டுச் செக்கை யாட்டுபவன்;* person of the Vāṇiyaṉ caste, as worker of oil-press.

*[செக்கு + ஆட்டி. ஆட்டு → ஆட்டி]*

**செக்காடி** *šekkāḍi*, பெ. (n.) செக்காட்டி பார்க்க; see *šekkāṭṭi*.

*[செக்கு + ஆடி. ஆட்டு → ஆடு → ஆடி]*

**செக்காடு-தல்** *šekkāḍu-*, 5 செ.கு.வி. (v.i.) செக்கில் *அரைபடுதல்;* to be pressed in oil-press. எள் செக்காடுகிறது *(உ.வ.)*

*[செக்கு + ஆடு. ஆட்டு → ஆடு]*

**செக்காத்தி** *šekkātti*, பெ. (n.) செக்கார இனப் பெண்பாற் பெயர்; woman of the Vāṇiya caste.

*[செக்கான் → செக்காத்தி]*

**செக்காயம்** *šekkāyam*, பெ. (n.) எண்ணெய் ஆட்டும் செக்குக்குரிய முற்கால வரி (I.M.P.Cg. 1113); tax levied on oil crusher.

மறுவ. செக்குக் கடமை

*[செக்கு + ஆயம்]*

**செக்கார்** *šekkār*, பெ. (n.) எண்ணெய் வணிகர்; oil merchant.

*[செக்கு → செக்கார்]*

**செக்காரக்குடி** *šekkārakkuḍi*, பெ. (n.) செக்காலியர் பார்க்க; see *šekkāliyar*.

*[செக்கார் + குடி]*

**செக்காலியர்** *šekkāliyar*, பெ. (n.) செக்காட்டுந் தொழிலுள்ள ஒரு இனத்தாரான வாணியர் (நாஞ்.); a caste of oil-press workers.

*[செக்கு + (ஆலையர் →) ஆலியர்]*

**செக்கான்** *šekkāṉ*, பெ. (n.) செக்காட்டி பார்க்க; see *šekkāṭṭi*. "செக்கானெண்ணெய் விற்பான்" *(தனிப்பா.1, 58:114).*

ம. செக்கன்

மறுவ. வாணியன், வாணியச் செட்டியார்

*[செக்கு → செக்கான்]*

**செக்கான்கைதுவட்டுமெண்ணெய்ச்சி** *śekkāṉ-kaiduvaṭṭum-eṇṇeycci*, பெ. (n.) வாணியன் எண்ணெய் பிழிந்து கையைத் துடைக்கப் பயன்படுத்தும் துணி. இது நாய்முள்ளைப் போக்கும்; a rag used by oil monger to wipe his hands in an oil press. This piece of cloth is said to cure thorny eruptions.

*[செக்கான் + கை + துவட்டும் + எண்ணெய்ச்சி]*

**செக்கில்வைத்தாட்டு-தல்** *śekkil-vaittāṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. செக்கில் எள் போன்றவற்றை ஆட்டுதல்; grinding in the oil press. 2. மிகத் துன்புறுத்துதல்; to oppress, torment as by grinding in oil-press.

*[செக்கு + இல் + வைத்து + ஆட்டு-.]*

**செக்கில்வைத்துத்திரி-த்தல்** *śekkil-vaittu-t-tiri-*, 4 செ.குன்றாவி. (v.t.) செக்கில்வைத்தாட்டு-பார்க்க; see *śekkil-vaittāṭṭu-*.

*[செக்கில் + வைத்து + திரி-.]*

**செக்கிலிட்டுத்திரி-த்தல்** *śekkil-iṭṭu-t-tiri-*, 4 செ.குன்றாவி. (v.t.) செக்கில்வைத்தாட்டு-பார்க்க; see *śekkil-vaittāṭṭu-*. "செக்கிலிட்டுத் திரிக்கு மைவரை" *(திவ்.திருவாய். 7. 1:5).*

*[செக்கில் + இட்டு + திரி-.]*

**செக்கிழு-த்தல்** *śekkiḻu-*, 4 செ.கு.வி. (v.i.) சிறைத் தண்டனையின் ஒரு பகுதியாக மாட்டிற்குப் பதிலாக எண்ணெய்ச் செக்கை இழுத்தல்; to work on the oil-press by pulling the yoke instead of bull. இந்திய விடுதலைப் போரின் போது கப்பலோட்டிய தமிழன் வ. உ. சிதம்பரனார் கோவைச் சிறையில் செக்கிழுத்தார் *(உ.வ.).*

*[செக்கு + இழு-.]*

**செக்கிறை** *śekkiṟai*, பெ. (n.) ஊர்ப்பொது விடத்தைச் செக்கு நிறுத்தப் பயன்படுத்திக் கொண்டதற்காகச் செலுத்தும் வரி (தெக.தொ. 7; *கல்.* 98, 107); tax for utlizing the public land for installing oil crusher.

மறுவ. செக்குவரி, செக்குக்கடமை, செக்காயம்.

ம. செக்கிற, சக்கிற, சேக்கிற

*[செக்கு¹ + இறை]*

**செக்கு¹** *śekku*, பெ. (n.) 1. மரத்தாலோ கல்லாலோ ஆன பெரிய உரல் போன்ற அமைப்பின் நடுவில் பொருத்தப்பட்டுள்ள உலக்கை போன்ற தடியை மாடுகளைக் கொண்டு வட்டமாகச் சுழலச் செய்வதன் மூலம் வித்துகளிலிருந்து எண்ணெய் எடுக்கப் பயன்படும் பொறி; a country oil-press. "செக்கூர்ந்து கொண்டாருஞ் செய்த பொருளுடையார்" *(நாலடி, 374).* 2. காணம், ஒரு செக்கில் ஒரு முறை ஆட்டிக் கிடைக்கும் எண்ணெயின் அளவு; a measure of oil extracted one's from an oil press called *kāṇam*. 3. இருபத்து நான்காம் விண்மீன் (பிங்.); the 24th star. "மகயிரஞ் செக்குருடேர்" *(விதான. குணாகுண. 11).*

ம. செக்கு, சக்கு; க. செக்கு

எண்ணெய் ஆட்டும் செக்கு கருங்கல், மரம் ஆகியவற்றால் செய்யப்பட்டது. கல்செக்கில் பிழிவு அதிகமிருக்கும். எனினும், மரச்செக்கே நன்றெனக் கருதப்படுகிறது. கல்செக்கை விழுப்புரம் மாவட்டத்தில் ஏராளமாகப் பார்க்கலாம். கருங்கல் செக்கு மிகுந்திருந்த காலத்தில், அரிதாக மரச்செக்கு இருந்த ஊர் மரக்காணம் ஆயிற்று.

*[சக்கரம் → (சக்கு) → செக்கு = எண்ணெயாட்டும் வட்டமான பேருரல். ஒ.நோ. ச → செ. சத்தான் → செத்தான் சற்றே பொறு → செத்த (கொச்சை) பொறு. சருமன் (வ) → செம்மான்]*




**செக்கு²** *śekku*, பெ. (n.) கும்பஓரை; Kumbha rāsi.

*[செக்கு¹ → செக்கு²]*

**செக்கு**[3] *šekku*, பெ. (n.) இட்டலி, தோசை முதலானவற்றிற்கு ஈர மாவரைக்கும் கருங்கல் கருவி; stone grinder for wet flour.

மறுவ. ஆட்டுக்கல், ஆட்டுரல்.

*[செக்கு¹ → செக்கு³]*

**செக்குக்கடமை** *šekku-k-kaḍamai*, பெ. (n.) செக்காயம் பார்க்க; see *šekkāyam*. 'செக்குக் கடமை, வணிகர் பேராற் கடமை உள்ளிட்ட கடமைகளும்' *(தெ.க.தொ. 1, கல்.108)*.

ம. சக்குகடமப்பாட்டம்

*[செக்கு¹ + கடமை]*

**செக்குக்கீரை** *šekku-k-kīrai*, பெ. (n.) கீரை வகை *(வின்.)*; a kind of green, herb.

*[செக்கு + கீரை]*

**செக்குத்துணி** *šekku-t-tuṇi*, பெ. (n.) எண்ணெய் ஆட்டும்போது எண்ணெய்யைப் பிழிந்து எடுக்கும் துணி; cloth used to take away the oil occumuleted in the press. செக்குத் துணி போல அழுக்காகி விட்டதே *(உ.வ.)*.

*[செக்கு¹ + துணி]*

**செக்குமன்றாடி** *šekku-maṉṟāḍi*, பெ. (n.) வரி வகை (M.E.R. 134 of 1924); a tax.

*[செக்கு + மன்றாடி]*

**செக்குமுட்டை** *šekku-muṭṭai*, பெ. (n.) செக்காடுவோரிடத்திலிருந்து ஊர்த்தலைவர் எண்ணெய் நிரம்பிய முட்டை உருவமாகப் பெறும் ஒரு வகை வருமானம் (R.T.); spoonful of oil, being a contribution from oil-presses in the village to the village proprietors.

*[செக்கு + முட்டை]*

**செக்குமூட்டை** *šekku-mūṭṭai*, பெ. (n.) செக்கு போன்று கனமான சுமை *(பாரம்.)*; a bag full of heavy material is considered as told as oil press bag. இது என்ன கனம் கனக்கிறது; செக்கு மூட்டை போல அல்லவா இருக்கிறது! *(உ.வ.)*.

*[செக்கு¹ + மூட்டை]*

**செக்குமேடு** *šekku-mēḍu*, பெ. (n.) எண்ணெயாடும் செக்குள்ள மேட்டிடம் (உவ.); raised place where oil-press works. செக்கு மேட்டிற்குப் போய் வருகின்றேன் (உ.வ.).

*[செக்கு¹ + மேடு]*

**செக்குரல்** *šekkural*, பெ. (n.) செக்கின் அடிப் பகுதி *(உ.வ.)*; mortar of oil-press. உடம்பு செக்குரல் போலப் பருத்துவிட்டதே *(உ.வ.)*.

ம. செக்குரல், சக்குரல்

*[செக்கு¹ + உரல்]*

**செக்குலக்கை** *šekkulakkai*, பெ. (n.) 1. செக்கில் அழுத்தும் மரத்தடி; pestle or shaft of the oil press, large and heavy wooden pole used to press the oil seeds etc., in the oil press. "வாய்ந்தவிடை செக்குலக்கை மாத்திரமே" *(தனிப்பா. 1, 51:99)*. 2. செக்கு உலக்கை போல நின்று மெதுவாகச் சுறுசுறுப்பின்றி வேலை செய்பவன்; a person working very slowly like the wooden shaft used in the oil-press. வேலையைச் சுறுசுறுப்பின்றிச் செய்வதால் அவளுக்குச் செக்கு உலக்கை என்பது பட்டப் பெயர் *(உ.வ.)*. 3. வலிமை உள்ளவன்; a strong person.

*[செக்கு + உலக்கை]*

**செக்குவாணிகர்** *šekku-vāṇigar*, பெ. (n.) எண்ணெய் விற்கும் இனத்தினர்; caste of oil mongers.

மறுவ. வாணியர், வாணியச் செட்டி

*[செக்கு¹ + வாணிகர்]*

**செக்கைப்பிடியாய்தம்** *šekkai-p-piḍi-y-āydam*, பெ. (n.) சிற்ப வேலைக்குரிய கருவி வகை (C.E.M.); flagner's iron.

**செக்கையன்** *šekkaiyaṉ*, பெ. (n.) விளக்கு எரிக்கப் பொன் கொடுத்தவன்; a person who denoted for lighting. 'இத்தளித்தேவனார் மகன் குமரடி நங்கை மகன் செக்கையன் கையால்' *(தெ.க.தொ. 5-8, 1366-8)*.

*[செக்கு → செக்கையன்]*

**செகண்டி** *šegaṇḍi*, பெ. (n.) தட்டும்போது ஒலியெழுப்பும் வட்ட மாழைத்தட்டு *(வெண்கலம்)*; circular bronze plate, raising sound on beating; a musical instrument used in religious rituals. 'செகண்டிகை . . . இவ்வூர் அரணியச் சிங்க உவைச்சன் கொட்டுவதாக வைத்தோம்' *(தெ.க.தொ. 12, பக. 1. கல். 114)*.

*[சேகண்டி² → செகண்டி]*

**செகண்டை** *šegandai*, பெ. (n.) சேகண்டி; gong. "தண்ணுமை செகண்டை" *(மேருமந். 1030).*

*[சேகண்டி → செகண்டி → செகண்டை]*

**செகதம்** *šegadam*, பெ. (n.) உண்ணுகை *(யாழ்.அக.)*; eating.

**செகதி** *šegadi*, பெ. (n.) இங்கிதம் *(யாழ்.அக.)*; indication, hint.

*[செய்தி → செகதி]*

**செகிடு** *šegidu*, பெ. (n.) அலகடி, கன்னம்; cheek. செகிட்டைக் கட்டியறைந்தான் *(உ.வ.)*

*[செகிள் → செகிடு (வே.க. 223)]*

**செகில்**[1] *šegil*, பெ. (n.) தோளின் மேலிடம்; upper part of the shoulders. "நாடு செகிற் கொண்டு நாடொறும் வளர்ப்ப" *(பொருந. 138)*

E. shoulder

*[செகிடு → செகில்]*

**செகில்**[2] *šegil*, பெ. (n.) சிவப்பு; redness. "செகிலேற்றின் சுடருக் குளைந்து" *(திருவிருத். 69).*

*[செம் → செவ் → செவு → செகு → செகில்]*

**செகிள்** *šegil*, பெ. (n.) *1.* கனியின் தோல் *(பிங்.)*; skin or rind of fruit. *2.* மீன் செதில்; fish scales. *3.* மீனின் சிவந்த மூச்சுறுப்பு (செதிள்); fins. *4.* கேழ்வரகின் கப்பி; bran of ragi.

*[செகில் → செகிள்]*

**செகு-த்தல்** *šegu-*, 4 செ.குன்றாவி. (v.t.) *1.* கொல்லுதல்; to destory, kill. *2.* வெல்லுதல்; conquer. "பொருப்பெலாம் வானகஞ் செகுக்குமே" *(சீவக. 1903).*

*[செம் → செவ் → செவு → செகு-.]*

**செகுடன்** *šegudan*, பெ. (n.) செவிடன்; deaf.

*[செவிடன் → செகுடன்]*

**செகுடு** *šegudu*, பெ. (n.) செவிடு; deaf.

*[செவிடு → செகுடு (கொ.வ.)]*

**செங்கட்டி** *šengatti*, பெ. (n.) *1.* காவிக்கல் *(யாழ்.அக.)*; red ochre. *2.* சாதிலிங்கம் *(யாழ்.அக.)*; vermilion. *3.* செங்கல்லின் துண்டு *(வின்.)*; brick bat.

*[செம் + கட்டி. கட்டம் → கட்டி]*

**செங்கடப்பாரை** *šengada-p-pārai*, பெ. (n.) கடலில் வாழும் வெள்ளிய பெருமீன் வகை; large silvery sea-fish.

*[செம் + கடல்பாரை → செங்கடப் பாரை]*

**செங்கடம்பு** *šen-gadambu*, பெ. (n.) கடம்ப மரவகை (திருமுருகு. 10, உரை); small Indian oak.

ம. செங்கடம்பு

கடம்பு வகைகள் : வெண்கடம்பு, மஞ்சட் கடம்பு, செங்கடம்பு

*[செம் + கடம்பு → செங்கடம்பு]*

**செங்கடல்** *šen-gadal*, பெ. (n.) அரேபியாவிற்கு மேல்பக்கம் உள்ள கடல்; the Red sea.

ம. செங்கடல்

*[செம் + கடல்]*

**செங்கடிவாயுப்பு** *šengadi-vāyuppu*, பெ. (n.) வெடியுப்பு; potasium nitrate *(சா.அக.).*

**செங்கடுக்காய்** *šen-gadukkāy*, பெ. (n.) செந்நிறமுள்ள கடுக்காய் வகை (பதார்த்த. 972); red species of chebulic myrobalan.

ம. செங்கடுக்க

*[செம் + கடுக்காய் - செங்கடுக்காய்]*

**செங்கடுகு** *šen-gadugu*, பெ. (n.) செடி வகை; Indian mustard.

ம. செங்கடுகு

*[செம் + கடுகு - செங்கடுகு]*

**செங்கடுமொழி** *šengadumoli*, பெ. (n.) போலியாகக் கூறும் கொடிய மொழி; strong words from sweet consort.

*[செம் + கடுமொழி]*

**செங்கண்** *šen-gan*, பெ. (n.) *1.* சிவந்து விளங்கும் விழி; bright glowing eyes. "செயிர்தீர் செங்கட் செல்வநிற் புகழ" *(பரிபா. 4:10). 2.* நான்கு விரல் நீளமும் வெளிர்சிவப்பு நிறமுமுள்ள கடல்மீன் வகை (F.L.); sea-fish rosy, attaining 4 in. in length.

ம. செங்கண்ணு; க. கெங்கண்

*[செம் + கண் - செங்கண்]*

**செங்கண்டங்கத்திரி** *šeṅ-gaṇḍaṅ-gattiri,* பெ. (n.) சிவப்புக் கண்டங்கத்திரி; a red variety of prickly night shade.

*[செம் + கண்டங்கத்திரி]*

**செங்கண்ணன்**[1] *šeṅ-gaṇṇaṉ,* பெ. (n.) மீன்வகை; a kind of fish. "குமிளா மாசினி செங்கண்ணன்" (பறாளை பள்ளு. 74).

*[செம் + கண் - செங்கண் → செங்கண்ணன்]*

**செங்கண்ணன்**[2] *šeṅ-gaṇṇaṉ,* பெ. (n.) சிவந்த கண்களுடைய எலிவகை (வின்.); a kind of rat as red-eyed.

*[செம் + கண்ணன் - செங்கண்ணன்]*

**செங்கண்ணனார்** *šeṅ-gaṇṇaṉār,* பெ. (n.) அகம் 39, நற்றிணை 122 ஆகிய பாடல்களின் ஆசிரியர்; author of the verse Agam 39 and Naṟṟiṇai 122.

*[செம் + கண்ணனார்]*

**செங்கண்ணி** *šeṅ-gaṇṇi,* பெ. (n.) 1. சிவந்த கண்களுடைய கடல் மீன்வகை; young cockup, grey, as having eyes remarkably reddish and transparent. 2. செந்நெல் வகை; a kind of šampā paddy.

ம. செங்கண்ணி

*[செம் + கண்ணி - செங்கண்ணி]*

**செங்கண்ணிக்கார்** *šeṅ-gaṇṇi-k-kār,* பெ. (n.) கார் நெல் வகை; a kind of paddy.

*[செம் + கண்ணி + கார்]*

**செங்கண்ணிப்பாரை** *šeṅ-gaṇṇi-p-pārai,* பெ. (n.) செங்கண்ணி,1 பார்க்க; see *šeṅ-gaṇṇi,1.*

*[செம் + கண்ணி + பாரை]*

**செங்கண்மா**[1] *šeṅ-gaṇ-mā,* பெ. (n.) திருவண்ணா மலைக்கு அருகில் உள்ள தற்காலச் செங்கம் என்ற ஊரின் பழைய பெயர்; the old name of present Šeṅgam town near Thiruvaṇṇāmalai. 'செங்கண் மாத்து நன்னன் சேய் நன்னனை' (மலைபடு, ப. 503, உரை).

பத்துப்பாட்டின் இறுதியில் உள்ள மலைபடுகடாம் பாட்டின் தலைவனான நன்னன் வேண்மான் தலைநகரம்.

**செங்கண்மா**[2] *šeṅ-gaṇ-mā,* பெ. (n.) சிவப்பான கண்ணுடைய விலங்கு, கரடி (உரிநி.); bear, as red-eyed beast.

மறுவ. உளியம்

*[செங்கண் + மா. மா = விலங்கு]*

**செங்கண்மாரி** *šeṅ-gaṇ-māri,* பெ. (n.) மஞ்சள் காமாலை (யாழ்ப்.); jaundice.

*[செங்கண் + (மாறு →) மாரி]*

**செங்கண்மால்** *šeṅgaṇ-māl,* பெ. (n.) சிவந்த கண்களுடைய திருமால்; Thirumāl, as having red eyes. "திருமகள் போல வளர்த்தேன் செங்கண்மால்தான் கொண்டு போனாள்" (திவ்.பெரியாழ். 3. 8:4).

மறுவ. விண்ணவன், மாலவன்.

*[செங்கண் + மால்]*

**செங்கணார்கிழங்கு** *šeṅgaṇār- kiḻaṅgu,* பெ. (n.) ஒரு வகைக் கிழங்கு; a variety of tuber.

**செங்கணான்** *šeṅ-gaṇāṉ,* பெ. (n.) 1. செங்கண் மால் பார்க்க; see *šeṅgaṇ-māl.* "சிறியதோர் முறுவலுந் தெரியச் செங்கணான்" (கம்பரா. கும்பகர்ணன். 310). 2. கோச்செங்கணான்; a Chōḻā king. "செங்கணான் கோச்சோழன் சேர்ந்த கோயில்" (திவ். பெரியதி. 6. 6:4).

*[செங்கண் + ஆன் - செங்கணான். ஆன் - ஆண் பாலீறு]*

**செங்கணிக்குறுவை** *šeṅgaṇi-k-kuṟuvai,* பெ. (n.) மூன்று அல்லது நான்கு திங்களில் பயிராகும் குறுவை நெல்வகை; a kind of coarse paddy cultivated throughout the year, maturing in three or four months.

*[செங்கண்ணி + குறுவை - செங்கணிக் குறுவை. ஆண்டு முழுமையும் பயிரிடக் கூடிய செந்நெல் வகை]*

**செங்கத்தரி** *šeṅ-gattari,* பெ. (n.) செடிவகை (L.); orbicular-leaved caper.

*[செம் + கத்தரி]*

**செங்கத்தாரி** *šeṅ-gattāri,* பெ. (n.) மயிலடிக் குருந்து (வின்.); false peacock's foot tree.

**செங்கத்திமீன்** *šeṅ-gatti-mīṉ*, பெ. (n.) ஒருவகை மீன்; a kind of fish.

*[செங்கத்தி + மீன்]*


செங்கத்திமீன்

**செங்கதாரி** *šeṅ-gadāri*, பெ. (n.) செங்கத்தாரி பார்க்க; see *šeṅ-gattāri.*

**செங்கதிர்** *šeṅ-gadir*, பெ. (n.) பகலவன் (திவா.); the sun, as bright-rayed.

ம. செங்கதிர்; க. செங்கதிர

*[செம் + கதிர். சிவந்த கதிர் உடைய கதிரவன்]*

**செங்கதிர்நாள்** *šeṅ-gadir-nāḷ*, பெ. (n.) மானேறு (உத்திர) நாள் (சூடா.); the 12th star as having Sun for its presiding deity.

*[செங்கதிர் + நாள்]*

**செங்கதிர்பிறந்தநாள்** *šeṅ-gadir-piṟanda-nāḷ*, பெ. (n.) செங்கதிர்நாள் பார்க்க; see *šeṅ-gadir-nāḷ.*

*[செங்கதிர் + பிறந்த + நாள்]*

**செங்கதிரோன்** *šeṅ-gadirōṉ*, பெ. (n.) செங்கதிர் பார்க்க; see *šeṅ-gadir.* "செங்கதிரோன் மகன் செருக்கி" (கம்பரா. வாலிவதை. 55).

ம. செங்கதிரோன்

மறுவ. ஞாயிறு

*[செம் + கதிரோன்]*

**செங்கதிர்வாழி** *šeṅgadir-vāḻi*, பெ. (n.) கத்தூரி; musk.

**செங்கம்** *šeṅgam*, பெ. (n.) குழலாதொண்டை (L.); common caper.

**செங்கமட்டை** *šeṅga-maṭṭai*, பெ. (n.) செங்கமுட்டி பார்க்க; see *šeṅga-muṭṭi.*

**செங்கமலக்காமாலை** *šeṅ-gamala-k-kāmālai*, பெ. (n.) காமாலை வகை (சீவரட். 134); a kind of jaundice.

*[செங்கமலம் + காமாலை]*

**செங்கமலநெல்** *šeṅ-gamala-nel*, பெ. (n.) நெல் வகை (A.); a kind of paddy.

*[செங்கமலம் + நெல்]*

**செங்கமலம்** *šeṅ-gamalam*, பெ. (n.) செந்தாமரை; red lotus. "செங்கனிவாய் செங்கமலம்" (திவ். திருவாய். 2. 5:1).

ம. செங்கமலம்

*[செம் + கமலம்]*

கமலம் பார்க்க

**செங்கமலவல்லி** *šeṅ-gamala-valli*, பெ. (n.) செந்தாமரை மலரில் வாழும் கொடி போன்ற திருமகள் (அக.நி.); Thirumagaḷ, as the creeper dwelling on red lotus.

ம. செங்கமலவல்லி

*[செங்கமலம் + வல்லி]*

**செங்கமலை**[1] *šeṅ-gamalai*, பெ. (n.) செங்கமல வல்லி, திருமகள்; Thirumagaḷ.

*[செங்கமலம் → செங்கமலை]*

**செங்கமலை**[2] *šeṅ-gamalai*, பெ. (n.) துளசி; holy basil.

**செங்கமுட்டி** *šeṅ-gamuṭṭi*, பெ. (n.) உடைந்த செங்கல் துண்டு; brick piece.

மறுவ. செங்கமட்டை, செங்கமட்டி, செங்கற் சல்லி.

*[செங்கல் + முட்டி. மத்தி → மட்டி → முட்டி]*

**செங்கயல்** *šeṅ-gayal*, பெ. (n.) மீன்வகை; a kind of fish. "செங்கயல் பாய்ந்து பிறழ்வன கண்டாங்கு" (மணிமே. 4:22).

*[செம் + கயல் – செங்கயல்]*

**செங்கரடு** *šeṅ-garaḍu*, பெ. (n.) செம்மண் குன்று (வின்.); red-hill.

மறுவ. செங்குன்று, செம்மலை

*[செம் + கரடு – செங்கரடு]*

**செங்கரந்தை** *šeṅ-garandai*, பெ. (n.) பூடுவகை (சங்.அக.); red-basil.

*[செம் + கரந்தை]*

**செங்கரப்பன்** *šeṅ-garappaṉ*, பெ. (n.) எயிற்றுப் புண் (சங்.அக.); red-gum.

ம. செங்கரப்பன்

*[செம் + கரப்பன்]*

**செங்கரப்பான்** *šeṅ-garappāṉ*, பெ. (n.) செங்கரப்பன் பார்க்க; see *šeṅ-garappaṉ*.

*[செம் + கரப்பான்]*

**செங்கரா** *šeṅ-garā*, பெ. (n.) 1. மஞ்சள் கலந்த செந்நிறமுள்ள கடல்மீன் வகை (சங்.அக.); sea-fish, yellowish red. 2. கருஞ்சிவப்பும், பழுப்பு நிறமும் கலந்த கடல்மீன் வகை; red rock-cod, dark reddish-brown.

**செங்கரிப்பான்** *šeṅ-garippāṉ*, பெ. (n.) கையாந்தகரை (பாலவா. 692) என்னும் மூலிகை; a kind of herb.

*[செம் + கரிப்பான்]*

**செங்கருங்காலி** *šeṅ-garuṅgāli*, பெ. (n.) மரவகை (குறிஞ்சிப். 78, உரை); red catechu.

ம. செங்கரிங்ஙாலி

*[செம் + கருங்காலி]*

**செங்கரும்பு** *šeṅ-garumbu*, பெ. (n.) செந்நிற முள்ள கரும்பு வகை (பதார்த்த. 178).; red sugar cane.

ம. செங்கரிம்பு

*[செம் + கரும்பு]*

**செங்கல்** *šeṅ-gal*, பெ. (n.) 1. கட்டடம் முதலியவை கட்டப் பயன்படும் செம்மை நிறக் கனச் செவ்வகச் சுடுமண் கல், கட்டுமானப் பொருள் (பு.வெ. 6, 19, உரை); burnt brick, as red. 2. காவிக்கல்; red ochre in lumps; laterite. "செங்கற் பொடிக்கூறை" (திவ். திருப்பா. 14). 3. மாணிக்கம்; ruby. "கட்செவி யுமிழ் செங்கல் வீசுவர்" (வெங்கைக்கோ. 396).

ம., பட. செங்கல்லு

*[செம் + கல்]*

**செங்கல்மங்கல்** *šeṅgal-maṅgal*, பெ. (n.) 1. மங்கின செந்நிறம்; dim red colour. 2. அந்தி வேளையில் உண்டாகும் மங்கல் ஒளி; dimness, of the evening twilight.

*[செம் → செங்கல் + மங்கல்]*

**செங்கல்மா** *šeṅgal-mā*, பெ. (n.) செங்கல்லின் தூள் (வின்.); brick-dust.

*[செங்கல் + மா. மாவு → மா]*

**செங்கல்மாச்சுண்ணாம்பு** *šeṅgal-mā-c-cuṉṉāmbu*, பெ. (n.) சுண்ணாம்புடன் கலந்த செங்கல்தூள் காரை; mortar of brick dust and lime.

*[செங்கல் + மா(வு) + சுண்ணாம்பு]*

சுண்ணாம்பும் செங்கற்பொடியும் கலந்த காரை மிகவும் உறுதியானது. இன்றும் பழைய கட்டுமானங்களில் இவ்வலிமையைக் காணலாம். சுதைமா வந்த புதிதில், சுதைமா கற்காரையை விடச் செங்கல்மாவும் சுண்ணாம்பும் கலந்த கலவையே சிறந்ததென்ற கருத்து நிலவியது.

**செங்கல்மால்** *šeṅgal-māl*, பெ. (n.) செங்கற் சூளை (நெல்லை); brick-kiln.

*[செங்கல் + மால். மால் = காளவாய்]*

**செங்கல்மாவெள்ளம்** *šeṅgalmā-veḷḷam*, பெ. (n.) செங்கலங்கல் பார்க்க; see *šeṅ-galaṅgal*.

**செங்கல்வராயன்** *šeṅgalva-rāyaṉ*, பெ. (n.) செங்கல்வமலையென்னும் திருத்தணி மலைத்தலைவன், முருகக் கடவுள்; Murugan, as lord of Šeṅgalvakiri, i.e., Tiruttaṇi hill. "செங்கல் வராயரே வாரும்" (அருட்பா, 5. சண்முகர். காலைப். 5).

தெ. செங்கலுவ

*[செங்கல்வன் + அரையன்]*

**செங்கலங்கல்** *šeṅ-galaṅgal*, பெ. (n.) செந்நிறக் கலங்கலாக வரும் புது வெள்ள நீர்; freshets, flood from rains, as turbid and reddish. "செங்கலங்கல் வெண்மணன் மேற் றவழு நாங்கூர்" (திவ். பெரியதி. 4. 4:7).

*[செம் + கலங்கல்]*

**செங்கலச்சு** *šeṅgal-accu*, பெ. (n.) செங்கற் கட்டளை (இ.வ.) பார்க்க; see *šeṅgaṟ-kaṭṭaḷai.*

மறுவ. செங்கற் கட்டளை

*[செங்கல் + அச்சு]*

**செங்கலதை** *šeṅgaladai*, பெ. (n.) நெல்வகை (A.); a kind of paddy.

**செங்கலம்** *šeṅ-galam*, பெ. (n.) செந்தாமரை (மூ.அ.); red lotus.

*[செம் + கமலம் - செங்கமலம் → செங்கலம். கமலம் → கலம்]*

**செங்கலறு-த்தல்** *šeṅgal-aṟu-*, 5 செ.கு.வி. (v.i.) ஈரமண்ணிலிருந்து செங்கல் வார்த்தல்; to make brick with wet clay.

*[செங்கல் + அறு-.]*

**செங்கவளநாரை** *šeṅ-gavaḷa-nārai*, பெ. (n.) செங்கானாரை பார்க்க; see *šeṅ-gaṉārai.*

*[செம் + கால் + வளம் + நாரை - செங்கால் வளநாரை → செங்கவள நாரை]*

**செங்கழனாரை** *šeṅ-gaḻaṉārai*, பெ. (n.) செங்கானாரை (யாழ்.அக.); pelican ibis.

*[செம் + கழல் + நாரை.]*

**செங்கழுத்துள்ளான்** *šeṅ-gaḻuttuḷḷāṉ*, பெ. (n.) உள்ளானைப் போன்ற பறவை; red necked phalarope.

*[செம் + கழுத்து + உள்ளான்]*

இது உப்பங்கழிகளில் காணப்படும்; கூட்டம் கூட்டமாகப் பறக்கும் இயல்புடையது; உடல் நீல நிறமாகவும், மார்பு வெண்மையாகவும் இருக்கும்.

**செங்கழுநாடு** *šeṅgaḻu-nāḍu*, பெ. (n.) ஆய் நாட்டில் இருந்த ஊர்; a place in Āy country. "செங்கழு நாட்டு ஐம்மாக் கொல்லை" *(பாண்டிய செப்பேடு).*

*[செங்கழுநாடு = செங்கழுநீர்ப்பூ அதிகமாக இருந்த நாடு]*

**செங்கழுநீர்** *šeṅ-gaḻu-nīr*, பெ. (n.) 1. அல்லிக் கொடி வகை; purple Indian-lily. "கண்மலர் செங்கழுநீர்" *(திருக்கோ. 108).* 2. செவ்வாம்பல்; red Indian water-lily.

ம. செங்ஙழிநீர்

*[செம் + கழுநீர். கழுநீர் = குவளை மலர்]*

**செங்கழுநீர்க்கல்** *šeṅ-gaḻunīr-k-kal*, பெ. (n.) காவிக்கல் வகை (வின்.); red ochre, reddle.

*[செங்கழுநீர் + கல்]*

**செங்கழுநீர்க்காய்** *šeṅ-gaḻu-nīr-k-kāy*, பெ. (n.) ஊதா நிறமுள்ள வழுதுணங்காய் வகை (இவ.); purple brinjal.

*[செங்கழுநீர் + காய்]*

**செங்கழுநீர்ப்பற்று** *šeṅgaḻu-nīr-p-paṟṟu*, பெ. (n.) செங்கல்பட்டு நகரம்; cheṅgal-paṭṭu town.

*[செங்கழுநீர்ப்பற்று → செங்கல்பட்டு = செங்கழுநீர் அதிகம் காணப்பட்டதால் பெற்ற பெயராகலாம்]*

**செங்கழுநீர்ப்புறம்** *šeṅgaḻu-nīr-p-puṟam*, பெ. (n.) குளத்தில் வளரும் செங்கழுநீர் எனும் குவளை மலரை நாடோறும் அலரெடுத்து மாலையாக்கி கோயிலுக்குத் தர அமர்த்தப் பட்டவனுக்காக வைக்கப்பட்ட முதல் தொகை; capital alocated for payment from interest to the person nominated for preparation of garland out of lilly flower grown in the tank.

"திருவண்ணாமலை உடைய நாயனார்க்கு ... ஒடுக்கின காசு 2000 திருச்செங் கழுநீர்ப் புறமாகக் கொடுத்தோம் (தெ.க.தொ. 8, கல். 93).

*[செங்கழுநீர் + புறம்]*

**செங்கழுநீரோடை** *šeṅkaḻu-nīr-ōḍai*, பெ. (n.) இலால்குடி வட்டம் துறையூர் கோயிலுக்கு வழங்கப்பட்ட நிலத்தின் ஓரெல்லை; a rivulet forming one boundary of a land denoted to Thuṟaiyūr temple in Lālguḍi Taluk. "செங்க முநீரோடைக்கும் மேற்கே" *(தெ.க.தொ. 26, கல். 752).*

*[செங்கழுநீர் + ஓடை]*

**செங்களம்** *šeṅ-gaḷam*, பெ. (n.) அரத்தத்தால் சிவந்த இடமான போர்க்களம்; battlefield, as red with blood. "செங்களம் படக்கொன்று" *(குறுந். 1).*

ம. செங்களம்

*[செம் + களம்]*

**செங்களி** *šeṅ-gaḷi*, பெ. (n.) 1. செம்பஞ்சுக் குழம்பு; red lac-dye. "செங்களி தோய்ந்துள் சிவந்த சீறடி" (சூளா. சுயம். 101). 2. பாக்கினை ஊறவைக்குஞ் சாயக்குழம்பு; a kind of infusion used in preparing areca-nuts "கருங்காலிச் செங்களியளைஇ" (பெருங். மகத். 14:81).

ம. செங்களி

[செம் + களி]

**செங்களை**[1] *šeṅ-gaḻai*, பெ. (n.) செங்கரும்பு (யாழ்.அக.); red sugarcane.

[செம் + கழை]

**செங்களை**[2] *šeṅ-gaḷai*, பெ. (n.) குதிரை நஞ்சு (வின்.); a mineral poison.

ம. செங்கள

**செங்கற்கட்டடம்** *šeṅgaṟ-kaṭṭaḍam*, பெ. (n.) செங்கல் கொண்டு கட்டப்பட்ட கட்டடம்; building made up of bricks.

[செங்கல் + கட்டடம்]

**செங்கற்கட்டளை** *šeṅ-gaṟ-kaṭṭaḷai*, பெ. (n.) செங்கல் செய்தற்குரிய அச்சு; mould for making bricks.

மறுவ. செங்கலச்சு, செங்கற் சட்டம்

[செங்கல் + கட்டளை]



செங்கற்கட்டளை

**செங்கற்காளவாய்** *šeṅgaṟ-kāḷavāy*, பெ. (n.) செங்கற்சூளை பார்க்க; see *šeṅgaṟ-šūḷai*.

[செங்கல் + காளவாய்]

**செங்கற்சல்லி** *šeṅgaṟ-šalli*, பெ. (n.) தளம் போடுவதற்காகவும், தட்டைக்கூரை மீது போடுவதற்காகவும், உடைக்கப்பட்ட செங்கல் துண்டுகள்; broken brick jelly for flooring and weathering course over that roof.

[செங்கல் + சல்லி. சன்னமாக உடைக்கப் பட்டது சல்லி]

**செங்கற்சீரை** *šeṅgaṟ-šīrai*, பெ. (n.) காவித் துணி; ochre-colored cloth. "கையில் அர்த்த முண்டான காலம் பார்வையைச் செங்கற்சீரை கட்டிக் கூப்பிட்டுத் திரியவிடுமவன்" (திவ்.பெரிய திரு. 1, 1:4, வியா. ப.34).

[செங்கல் + சீரை. செங்கல் = காவிக்கல்]

**செங்கற்சுவர்** *šeṅgaṟ-šuvar*, பெ. (n.) செங்கல் வைத்துக்கட்டிய சுவர்; wall made up of bricks.

[செங்கல் + சுவர்]

**செங்கற்சூளை** *šeṅgaṟ-šūḷai*, பெ. (n.) உலர்ந்த களிமண் பாளங்களை (செங்கற்கள்) இடைவெளியிட்டு அடுக்கி, அதில் மரத்துண்டுகள் இட்டு, எரித்துச்சுடும் அமைப்பு; stack of dried bricks with wooden blocks as fuels to burn kiln.

மறுவ. செங்கற் காளவாய்

[செங்கல் + சூளை]



செங்கற்சூளை

**செங்கற்பால்** *šeṅgaṟ-pāl*, பெ. (n.) நீரில் கலக்கிய செங்கற் பொடி (வின்.); brick-dust mixed with water.

[செங்கல் + பால்]

**செங்கற்பொடி** *šeṅgaṟ-poḍi*, பெ. (n.) 1. செங்கல்லின் தூள்; brick-dust. 2. செங்கற் றுண்டு (இ.வ.); brick-bat, piece of brick.

மறுவ. செங்கற்சல்லி

[செங்கல் + பொடி]

**செங்கற்றலை** *śeṅ-gaṟṟalai*, பெ. (n.) **மீன்வகை** *(யாழ்.அக.);* a kind of fish.

*[செம் + கற்றலை]*

**செங்கற்றாழை** *śeṅ-gaṟṟāḻai*, பெ. (n.) கற்றாழை வகை *(சித்.அக.);* a species of aloes.

*[செம் + கற்றாழை]*

**செங்கறுப்பிறுங்கு** *śeṅ-gaṟuppiṟuṅgu*, பெ. (n.) சோள வகை *(விவசா. 3);* a kind of maize.

*[செம் + கறுப்பு + இறுங்கு. இறுங்கு = சோளம்]*

**செங்கனல்** *śeṅ-gaṉal*, பெ. (n.) 1. கொழுந்து விட்டெரியுந்தீ; blazing fire. "செங்கனல் வெண்மயிர் செல்ல" *(கம்பரா. வாலிவதை 50)* 2. செந்தணல் பார்க்க (இ.வ.); see *śen-daṇal.*

மறுவ. செந்தணல், செஞ்சுடர்

*[செம் + கனல்]*

**செங்கனிறமணி** *śeṅ-gaṉiṟa-maṇi*, பெ. (n.) படிதமென்னும் ஒருவகை மணி (கோவாங்கப் பதுமராகம்) *(யாழ்.அக.);* a kind of precious stone.

*[செங்கல் + நிறம் + மணி]*

**செங்காகம்** *śeṅ-gāgam*, பெ. (n.) செம்போத்து *(யாழ்.அக.)* பார்க்க; see *śem-pōttu.*

மறுவ. செம்புகம்

*[செம் + காகம்]*

**செங்காட்டுக்கோட்டம்** *śeṅ-gāṭṭu-k-kōṭṭam*, பெ. (n.) முதல் இராசராசன் ஆட்சிக்கு உட்பட்ட செயங்கொண்டசோழ மண்டலத்தில் இருந்த 24 கோட்டங்களுள் ஒன்று; one of the 24 areas (kottam) in Jayamkoṇḍa Chōḻa maṇḍalam in first Rajaraja empire. "செயங்கொண்ட சோழ மண்டலத்து செங்காட்டுக் கோட்டத்து மாகனூர் நாட்டு மணிமங்கலம்" *(தெ.க.தொ. 2, 28).*

*[செங்காடு + கோட்டம்]*

**செங்காடக்கோடன்** *śeṅ-gāḍa-k-kōḍaṉ*, பெ. (n.) மதுராந்தகம் வட்டாரத்திலுள்ள திருப்புலி வனம் கோயிலுக்கு நந்தா விளக்கு எரிப்பதற்கு ஆக்களைக் கொடையாக வழங்கியவன்; a person who denoted cows for the lighting of Thiruppulivaṉam temple in Madurandagam taluk. "இராசக்கோன் விளக்கு காலும் பிடாரன் மகன் செங்காடக்கோடன் விளக்கு காலும்" *(தெ.க. தொ-6, கல்326-5).*

*[செங்காடு + கோடன்]*

**செங்காடு** *śeṅgāḍu*, பெ. (n.) 1. சிவந்த காட்டு நிலம் (வின்.); red soil. 2. திருச்செங்காட்டங்குடி; a Śivaṉ shrine. "ஊரோ செங்காடு" (தனிப்பா.).

*[செம் + காடு]*

**செங்காடை** *śeṅ-gāḍai*, பெ. (n.) காடைப்புள் வகை (M.M. 885); rock bush quail.

*[செம் + காடை]*

**செங்காந்தள்** *śeṅ-gāndaḷ*, பெ. (n.) செந்நிற முள்ள கொடி வகை (திவா.); red species of Malabar glory-lily.

*[செம் + காந்தள்]*

**செங்காமாரி** *śeṅ-gāmāri*, பெ. (n.) நெற்பயிரில் விழும் நோய் வகை (நாஞ்.); a blighting disease of paddy.

ம. செங்காமாரி

*[செம் + காய் + மாரி – செங்காமாரி]*

**செங்காய்** *śeṅ-gāy*, பெ. (n.) பழுக்கும் பருவத்துள்ள காய்; fruit almost ripe.

மறுவ. உதைக்காய்; உதைப்பழம்

க. கெங்காய்

*[செம் + காய்]*

**செங்காய்ப்புண்** *śeṅ-gāy-p-puṇ*, பெ. (n.) பழுக்காத புண் (இ.வ.); unripe boil.

*[செங்காய் + புண்]*

**செங்காய்வேளை** *śeṅ-gāy-vēḷai*, பெ. (n.) பூடுவகை (யாழ்.அக.); a herb.

*[செங்காய் + வேளை]*

**செங்கார்** *śeṅ-gār*, பெ. (n.) மழைக்காலத்து விளையும் மங்கிய செந்நிறமுள்ள நெல்வகை (சங்.அக.); a kind of dark-red paddy growing in rainy season.

*[செம் + கார்]*

**செங்காரனி** *śeṅ-gāraṉi*, பெ. (n.) கருஞ் சிவலையான பெற்றம் முதலிய விலங்குகள் (யாழ்ப்.); dark-red animal as cow.

மறுவ. செங்காரி

*[செம் + கார் – செங்கார் → செங்காரனி. கார் = கருமை]*

**செங்காரி**[1] *śeṅgāri*, பெ. (n.) *செங்காரனி பார்க்க;* see *śeṅ-gāraṉi.*

*[செம் + காரி. கார் → காரி]*

**செங்காரி[2]-த்தல்** *śeṅ-gāri-*, 4 செ.கு.வி. (v.i.) *1. சினம், வெயில் கடுமை இவற்றால் முகஞ்சிவந்து காட்டுதல்;* to flush or redden, as face due to anger or exposure to scorching heat. *2. பருவமழையின்றி பயிர்கள் கதிர் வாங்காது செந்நிறமாதல்;* to redden without forming ears, as paddy, crop for want of seasonal rains.

*[செம் + காரி-.]*

**செங்காரை**[1] *śeṅ-gārai*, பெ. (n.) *கன்மீன்* (M.M.105); bride-fish.

*[செம் + காரை]*

**செங்காரை**[2] *śeṅ-gārai*, பெ. (n.) *காரைச்செடி* (L.); spurious honey-thorn.

*[செம் + காரை. காரை = முட்செடி]*

**செங்காலி** *śeṅ-gāli*, பெ. (n.) *செங்கருங்காலி பார்க்க;* see *śeṅ-garuṅ-gāli.* *'பாங்குறு செங்காலி கருங்காலி' (சிலப். 3:26, உரை).*

ம. செங்ஙாலிக்காலி

*[செம் + காலி.]*

**செங்காவி** *śeṅ-gāvi*, பெ. (n.) *1. செங்கழுநீர் (அக.நி.);* purple Indian water lily. *2. குங்குமக் காவி (இ.வ.);* saffron ochre.

தெ. செங்காவி

*[செம் + காவி]*

**செங்காவிதி** *śeṅ-gāvidi*, பெ. (n.) *கணக்கன்;* accountant. *'புகருடையர் செங்காவிதி நல்லாண்டார்' (ஆவணம் : 10-12. பக். 20).*

*[செம் + காவிதி. காவிதி பார்க்க]*

**செங்கானாரை** *śeṅ-gāṉārai*, பெ. (n.) *சிவந்த காலையுடைய நாரைவகை;* pelican ibis, as having red legs. *"செங்கானாரை செல்வன காண்மின்" (பெருங். உஞ்சைக். 40:23).*

*[செம் + கால் + நாரை]*




**செங்கிடை** *śeṅ-giḍai*, பெ. (n.) *ஒருவகை முட்செடி;* prickly sesban. *"நீலச் சுருளுஞ் செங்கிடையுங் கொண்டு" (கம்பரா. மிதிலை.14).*

*[செம் + கிடை]*

**செங்கிடைச்சி** *śeṅ-giḍaicci*, பெ. (n.) *செங்கிடை பார்க்க;* see *śeṅ-giḍai.*

*[செங்கிடை → செங்கிடைச்சி]*

**செங்கிரந்தி** *śeṅ-girandi*, பெ. (n.) *1. ஒருவகை (மேக)க்கட்டி (மூ.அ.);* venereal herpes. *2. செந்நிறப் புண்கட்டி* (M.L); erysipelas.

*[செம்(மை) + கிரந்தி]*

**செங்கிளுவை** *śeṅ-giḷuvai*, பெ. (n.) *1. கீச்சுத் தாரா* (M.M.338); whistling teal. *2. ஒருவகை மரம் (சங்.அக.);* a kind of jujube.

*[செம் + கிளுவை]*

**செங்கீரை**[1] *śeṅ-gīrai*, பெ. (n.) *ஒருவகைக் கீரை (தைலவ. தைல. 135);* cocks comb greens.

ம. செஞ்சீர

*[செம் + கீரை]*

**செங்கீரை**[2] *śeṅ-gīrai*, பெ. (n.) *செங்கீரைப் பருவம் பார்க்க (இலக்.வி.806);* see *śeṅ-gīrai-p-paruvam.*

*[செம் + கீரை]*

**செங்கீரைப்பருவம்** *śeṅgīrai-p-paruvam*, பெ. (n.) *பிள்ளைத் தமிழ்ப்பருவங்கள் பத்தினுள், குழந்தை பிறந்த ஐந்தாம் திங்களில் தன் தலையை நிமிர்த்தி இங்குமங்கும் அசைத்தாட்டுவதைச் சிறப்பித்துக் கூறும் பகுதி;* one of the ten section of piḷḷai-ṭ-tamil describing the stage of childhood in which the



செங்குருவி





செங்கால் நாரை



செங்கழுத்து உள்ளான்



செங்குயில்



செங்காடை



செங்காகம்

child lifts up its head and nods it in about the fifth month from its birth.

[செங்கீரை + பருவம்]

**செங்குங்கிலியம்** *šeṅ-guṅgiliyam*, பெ. (n.) செந்நிறமான குங்கிலிய வகை (வின்.); red resin.

[செம் + குங்கிலியம்]

**செங்குங்குமம்** *šeṅ-guṅgumam*, பெ. (n.) செஞ்சந்தனம் (பிங்.); red sanders.

[செம் + குங்குமம்]

**செங்குட்டம்** *šeṅ-guṭṭam*, பெ. (n.) நோய் வகை; a disease. "தணிந்திடச் செய்யா திடர் செய்யுஞ் செங்குட்ட ரோகர்" (கடம்பு. பு. இலீலா. 124).

[செம் + குட்டம்]

**செங்குட்டுவன்** *šeṅ-guṭṭuvaṉ*, பெ. (n.) இளங்கோவடிகட்குத் தமையனும் பெரும்புழ் பெற்றவனுமான சேரவரசன் (பதிற்றுப். 5. பதி); a famous Šēra king, brother of Iḷaṅgōvaḍigal.

சேரன்செங்குட்டுவன் பார்க்க

**செங்குடை** *šeṅ-guḍai*, பெ (n.) செந்நிறமுள்ள குடை; red umbrella.

க. கெங்கொடெ

[செம் + குடை]

**செங்குணக்கு** *šeṅ-guṇakku*, பெ. (n.) நேர்கிழக்கு; due east. "காவிரிப்பாவை செங்குணக் கொழுகி" (மணிமே. பதி. 13)

[செம் + குணக்கு]

**செங்குத்தாய்விழு-தல்** *šeṅguttāy-viḻu*, 2 செ.கு.வி. (v.i.) தலைகுப்புற விழுதல் (உ.வ.); to fall headlong. மலை மீதிருந்து செங்குத்தாய் அவன் விழுந்ததால் மண்டை உடைந்து மடிந்தான் (உ.வ.).

[செங்குத்து + ஆய் + விழு-]

**செங்குத்தான்** *šeṅ-guttāṉ*, பெ. (n.) பறக்கும் புறாமீது உருண்டையடிக்குங் குழல்; blow-pipe, used for shooting pigeons.

Malay. sumpitan.

**செங்குத்து** *šeṅ-guttu*, பெ. (n.) 1. மேலிருந்து கீழ்விழும் பொருளின் பாதை; perpendicular. 2. பக்கச் சாய்வு இல்லாத நிலை; hot stanting on either side. 3. கிடை மட்டத்திலிருந்து சமமாக எழும்பும் கோடு; line perpendicular to the base. 4. 90 பாகைக் கோணத்தின் இரு பக்கங்கள்; sides of a rectangle. செங்கோண முக்கோணத்தில் இரு பக்கங்களில் ஒன்று கிடைக்கோடாயின் மற்றது செங்குத்துக் கோடு.

ம. செங்குத்து

[செம்+ குத்து]

**செங்குத்துமேடு** *šeṅ-guttu-mēḍu*, பெ. (n.) மிக உயரமான மேட்டுநிலம்; mesa.

[செங்குத்து + மேடு]

**செங்குத்துவழிகால்** *šeṅguttu-vaḻikāl*, பெ. (n.) நீர்போக்கிற்கு ஏற்றமான வழி; shaft spill way.

[செங்குத்து + வழிகால்]

**செங்குந்தம்**[1] *šeṅ-gundam*, பெ. (n.) கண்ணில் விழுங் குந்த நோய் (வின்.); tubercle on the cornea of the eye.

[செம் + குந்தம். செங்குமுதரோகம் பார்க்க]

**செங்குந்தம்**[2] *šeṅ-gundam*, பெ. (n.) அரத்தத் தாற் சிவந்த ஈட்டி (ஈட்டியெழுபது); spear red with blood.

[செம் + குந்தம்]

**செங்குந்தர்** *šeṅ-gundar*, பெ. (n.) செந்நிற ஈட்டியையுடைய கைக்கோளர் (திவா.); persons of Kaikōḷa caste, as the spearmen of ancient times.

[செங்குந்தம் → செங்குந்தர்]

**செங்குமரி** *šeṅ-gumari*, பெ. (n.) சிவப்புக் கற்றாழை; red aloe.

[செம் + குமரி]

**செங்குமரு** *šeṅ-gumaru*, பெ. (n.) வேம்பு; neem tree.

**செங்குமிழ்** *šeṅ-gumiḻ*, பெ. (n.) குமிழ மரவகை (சூடா.); small Cashmre tree.

[செம் + குமிழ்]

**செங்குமுகி** *šeṅ-gumugi*, பெ. (n.) சிவப்புத் தொட்டி நஞ்சு; red poison.

**செங்குமுதம்** *šeṅ-gumudam*, பெ. (n.) **செவ்வாம்பல்;** red Indian water lily. "செய்யிற் கொய்யுஞ் செங்குமுதம்" (கம்பரா. பூக்கொய். 33).

*[செம் + குமுதம்]*

**செங்குமுதரோகம்** *šeṅgumuda-rōgam*, பெ. (n.) **கண்ணின் கருவிழியில் செங்கழுநீர்ப் பூப் போல் சிவப்பான சதை வளர்ந்து, குத்தல், எரிச்சல் முதலிய வலிகளை உண்டாக்கும் நோய்;** red growth of flesh over the pupil of the eye marked by acute pain, burning sensation etc. (சா.அக.).

*[செங்குமுதம் + ரோகம். செங்குமுதம் பார்க்க]*

**செங்குயில்** *šeṅ-guyil*, பெ. (n.) **ஒருவகைக் குயில்;** banded bay cuckoo.

*[செம் + குயில்]*

தமிழ்நாட்டின் மேற்கு மாவட்டங்களின் அடர்ந்த காடுகள், தோப்புகளில் காணப் படும் பறவை. இது செம்பழுப்பான உடலில் பழுப்பு நிறக் குறுக்குக்கோடுகளைக் கொண்டது.




**செங்குரங்கு** *šeṅ-guraṅgu*, பெ. (n.) **முகம் செந்நிறமாகவுள்ள குரங்குவகை;** red monkey, opp. to karu-ṅ-guraṅgu.

*[செம் + குரங்கு]*

**செங்குருகடம்** *šeṅ-gurugaḍam*, பெ. (n.) **உடம்பின் அரத்தத்தில் வாழும் சிறிய அணுப் பூச்சிகள்;** a minute organism forming the constitutent material of blood corpusles.

*[செங்குருதி + கடம்]*

**செங்குருகு** *šeṅ-gurugu*, பெ. (n.) **ஒருவகைப் பறவை;** a kind of bird, chestnut bittern.

*[செம் + குருகு]*

தமிழகத்தில் ஆற்றங்கரையோரம் நெல் வயல்களையும் புதர்களையும் சார்ந்து காணப் படும் பறவை. செம்பழுப்பான உடலையும், வெண்மையான தொண்டையையும் உடையது; மிகவும் அச்சங் கொள்ளும் இயல்பினது.

**செங்குலிகம்** *šeṅ-guligam*, பெ. (n.) **இங்குலிகம், சாதிலிங்கம்;** vermilion. "அரக்குறு நறுநீ ரஞ்செங் குலிகம்" (பெருங். உஞ்சைக். 41:16).

*[செம்(மை) + குலிகம்]*

**செங்குவளை** *šeṅ-guvaḷai*, பெ. (n.) **செங்கழுநீர்** பார்க்க; see *šeṅ-gaḻu-nīr*.

*[செம் + குவளை]*

**செங்குளம்** *šeṅ-guḷam*, பெ. (n.) **இராமநாதபுரம், சாத்தூர் என்னுமிடத்தில் இருந்த பழைய குளம்;** an old pond at Šāttur in Ramanatha puram. "நீர்ப்புகழ் மலியேரியோடு செங்குளமு நாடினோர் தமக்கில்லா" (தெ.க. தொ.14, கல். 44, 19).

*[செம் + குளம்]*

**செங்குளம்படி** *šeṅ-guḷampaḍi*, பெ. (n.) **மான் குளம்படிக் கொடி;** deer's hoof creeper.

*[செம் + குளம்படி]*

மான் குளம்பைப் போன்றதும் செம்மை யானதுமான கொடி

**செங்குளவி** *šeṅ-guḷavi*, பெ. (n.) **செம்மஞ்சள் நிறமுள்ள குளவி வகை (வின்.);** bright yellow hornet. opp. to karu-ṅ-guḷavi.

*[செம் + குளவி]*

**செங்குறிஞ்சி** *šeṅ-guṟiñji*, பெ. (n.) **மரவகை;** Travancore red-wood. "செங்குறிஞ்சித் தாரார் நறுமாலை" (திவ்.இயற். சிறியதிரு. 16).

ம. செங்குறுஞ்ஞு

*[செம் + குறிஞ்சி]*

**செங்குறுவை** *šeṅ-guṟuvai*, பெ. (n.) **ஒரு வகை நெல்;** a kind of paddy. "கோடைக் குறுவை குளவாளை செங்குறுவை" (நெல்விடு. 179).

*[செம் + குறுவை]*

**செங்குன்றி** *šeṅ-guṉṟi*, பெ. (n.) குன்றி (மூ.அ.); crab's eye.

*ம.* செங்குன்னி

*மறுவ.* குன்றிமணி, குன்றி முத்து

*[செம் + குன்றி]*

பொன் நிறுப்பதற்குப் பயன்படும் ஒரு கொட்டை; சிவப்பு, கறுப்பு வண்ணத்துடன் இருக்கும்.

**செங்குன்று** *šeṅ-guṉṟu*, பெ. (n.) கண்ணகியின் இறுதிக் காலத்தோடு தொடர்புடைய மலை; the hill connected with the last days of Kaṇṇagi of Šilappadikāram.

சிலப்பதிகாரத்தின் அரும்பதவுரைகாரர் செங்குன்று என்பது இக்காலத் திருச்செங்கோடு என்று அடையாளம் காட்டுகிறார். இதனை அடியார்க்கு நல்லார் ஒப்பவில்லை. சுருளிமலை மேலுள்ள மங்கலாதேவி கோயிலோடு தொடர்புபடுத்தி இப்போதைய கருத்து நிலவுகிறது.

*[செம் + குன்று]*

**செங்கெறால்** *šeṅgeṟāl*, பெ (n.) இறால் மீன் வகை (மீனவ.); a kind of prawns.

*[சிங்கிறால் → செங்கெறால்]*

**செங்கை** *šeṅgai*, பெ. (n.) 1. கொடுக்குந் தன்னமையுள்ள கை; fair, liberal hand. "செங்கையோன் றங்கை" (கம்பரா. சூர்ப்ப. 39). 2. யாழ்விண்மீன் (திருவாதிரை) (சூடா.); the 6th star.

*[செம் + கை]*

**செங்கையான்** *šeṅ-gaiyāṉ*, பெ. (n.) சிவப்புக் கரிசலாங்கண்ணி; a red variety of Eclipta prostrata.

*[செம் + கையான். கையான் = கரிசலாங் கண்ணி.]*

**செங்கையொளிதம்** *šeṅgai-y-oḷidam*, பெ. (n.) கருங்குளவி; black wasp beetle (சா.அக.).

**செங்கொடிக்காணம்** *šeṅ-goḍi-k-kāṇam*, பெ. (n.) பழைய வரிவகை (தெ.க.தொ. 2, 352); an ancient tax.

*[செம் + கொடி காணம்]*

**செங்கொடிவேலி** *šeṅ-goḍi-vēli*, பெ. (n.) இளஞ்சிவப்பு நிறப்பூவுள்ள கொடி வகை (யாழ்.அக.); rosy-flowered lead wort.

*ம.* செங்கொடிவேலி

*[செம் + கொடிவேலி]*

**செங்கொடுவேரி** *šeṅ-goḍu-vēri*, பெ. (n.) செங்கொடிவேலி பார்க்க; see *šeṅ-goḍi-vēli.*

*[செங்கொடி வேலி → செங்கொடுவேரி]*

**செங்கொய்யா** *šeṅ-goyyā*, பெ. (n.) கொய்யாப் பழ வகை (M.M. 333); red guava.

*[செம் + கொய்யா]*

**செங்கொல்** *šeṅ-gol*, பெ. (n.) செம்பொன் (பிங்.); pure gold.

*[செம் + கொல்]*

கொல்லுத் தொழிலில் அதிகம் பயன்படுவது பொன். எனவே கொல் என்பது பொன்னைக் குறித்தது.

**செங்கொல்லர்** *šeṅ-gollar*, பெ. (n.) தட்டார்; gold smiths.

*[செம் + கொல்லர்]*

**செங்கொள்** *šeṅkoḷ*, பெ. (n.) கொள்ளு வகை; Madras horse-gram. "கருஞ்கொள்ளுஞ் செங்கொள்ளுந் தூணிப் பதக்கென்று" (நாலடி, 387).

*[செம் + கொள்]*

**செங்கொன்றை** *šeṅ-goṉṟai*, பெ. (n.) ஒரு வகை மரம்; red Indian laburnum.

*[செம் + கொன்றை]*

**செங்கொன்னை** *šeṅ-goṉṉai*, பெ. (n.) செங்கொன்றை பார்க்க; see *šeṅ-goṉṟai.*

*[செம் + கொன்னை]*

**செங்கோட்டம்** *šeṅ-gōṭṭam*, பெ. (n.) செந்நிற முள்ள ஒரு கிழங்கு; red Arabian costum.

*[செம் + கோட்டம்]*

**செங்கோட்டியாழ்** *šeṅ-gōṭṭiyāḻ*, பெ. (n.) நால்வகை யாழ்களுள் ஒன்று; a kind of stringed musicl instrument, one of four kinds of yāḻ. "அங்கோற் றீந்தொடைச் செங்கோட்டி யாழின்" (பெருங். உஞ்சைக். 40: 269)

*[செம் + கோட்டியாழ். செம்மை நிற மரத்தால் செய்த யாழாகலாம்]*

**நால்வகை யாழ்களாவன :**

பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ். செங்கோட்டியாழிற்கு ஏழு நரம்புகள்.


செங்கோட்டியாழ்

**செங்கோட்டைச்சிவப்பி** *šeṅgōṭṭai-c-civappi*, பெ (n.) *புளிச்சிறு கீரை;* a kind of sour green.

**செங்கோடு** *šeṅ-gōḍu*, பெ. (n.) 1. *செங்குத்தான மலை;* steep precipice, precipitous cliff. "செங்கோடு பாய்துமே யென்றாள் மன்" *(நாலடி, 372).* 2. *நாமக்கல் மாவட்டத்திலுள்ள திருச்செங்கோடு;* Thiruchengodu in Namakkal. "செந்திலுஞ் செங்கோடும்" *(சிலப். குன்றக்.).* 3. *செருந்தி(சூடா.);* panicled golden blossomed pear tree. 4. *செங்குத்துக்கோடு;* perpendicular.

ம. செங்கோடி

*[செம் + கோடு. கோடு = மலை]*

**செங்கோணம்** *šeṅ-gōṇam*, பெ (n.) *90° பாகை கொண்ட கோணம்;* right angle.

*[செம் + கோணம்]*

**செங்கோல்** *šeṅ-gōl*, பெ. (n.) 1. *அரச இலச்சினை பொறிக்கப்பட்ட அரசாட்சிச் சின்னமாகிய நேர் கோல்;* sceptre, a symbol of sovereignty. "சேயுயர் விற்கொடிச் செங்கோல் வேந்தே" *(சிலப். 26:139).* 2. *அறுவகை நாட்டமைதிகளில் ஒன்றாகிய நல்லரசாட்சி;* kingly justice, impartial administration of justice, one of six principles of a state. opp. to koḍu-ṅ-gōl. "செங்கோல் காட்டிச் செய்தவம் புரிந்த *(மணிமே. 18:82).* 3. *பழுக்கக் காய்ந்த சலாகை;* red-hot rod. "தீத்துறு செங்கோல் *(மணிமே. 18:2).*

ம. செங்கோல்

*[செம் + கோல்]*

**அறுவகை நாட்டமைதியாவன:**

செல்வம், விளைநிலம், செங்கோல், நோயின்மை, வளம், குறும்பின்மை.


செங்கோல்

**செங்கோல்கோடு-தல்** *šeṅ-gōl-kōḍu-*, 5 செ.கு.வி. (v.i.) *அரச முறை (நீதி) தவறுதல்;* to fail in justice, rule unrighteously, as the sceptre slanting. "செங்கோல் கோடியோ செய்தவம் பிழைத்தோ" *(மணிமே. 28:188).*

*[செங்கோல் + கோடு-.]*

**செங்கோலம்** *šeṅ-gōlam*, பெ. (n.) *செம்பு மணல் (வின்.);* sand containing copper-ore.

*[செம் + கோலம்]*

**செங்கோலறுகு** *šeṅ-gōl-aṟugu*, பெ. (n.) *அறுகு வகை (பு.வெ.10, முல்லைப். 3, உரை.);* a kind of hurrialli grass.

*[செம் + கோலறுகு]*

**செங்கோலோச்சு-தல்** *šeṅ-gōl-ōccu-*, 5 செ.கு.வி. (v.i.) *அறம் (நீதி) தவறாது அரசு புரிதல்;* to rule righteously, as wielding the sceptre properly. "செல்வவேந்தன் செங்கோ லோச்சி" *(பெருங். வத்தவ. 14:185).*

*[செங்கோல் + ஓச்சு]*

**செங்கோற்கடவுள்** *šeṅ-gōṟ-kaḍavuḷ*, பெ. (n.) *அறக்கடவுள், யமன்;* Yama, as the god dispensing impartial justice.

*[செங்கோல் + கடவுள்]*

**செங்கோற்பொறையன்** *šeṅgōṟ-poṟaiyaṉ*, பெ. (n.) சேரமான் பெருமாளுக்கு முன் சேரநாட்டையாண்ட அரசர்; the predecessor of Šeramān perumāḷ.

*[செங்கோல் + பொறையன்]*

பொறையன் சேர மன்னர்களின் அடைமொழி

**செங்கோன்தரைச்செலவு** *šeṅgōṉ-darai-c-celavu*, பெ. (n.) மறைந்து போன தமிழ் நூல்; a Tamil book lost in time.

**செங்கோன்மை** *šeṅ-gōṉmai*, பெ. (n.) அரச முறைமை (நீதி) (குறள்,அதி. 55); righteous rule.

ம. செங்கோம

*[செம் + கோன்மை]*

**செச்சை**[1] *šeccai*, பெ. (n.) *1.* சிவப்பு; redness. "செச்சை வாய்திறந்து" *(திருவிளை. வலை. 24).* *2.* வெட்சி; scarlet ixora. "செச்சைக் கண்ணியன்" *(திருமுருகு. 208).* *3.* செந்துளசி (மலை.); red basil.

ம. செச்ச, செக்கி

*[சல் (சிவப்பு) → செல் → செள் → செட்டு → செச்ச → செச்சை]*

**செச்சை**[2] *šeccai*, பெ. (n.) *1.* வெள்ளாட்டுக் கடா; he-goat. "வெள்ளாட்டுச் செச்சை போல" *(புறநா. 286).* *2.* ஆடு; sheep. "செச்சைக் கண்டத் தொத்தூன் போல" *(ஞானா. பாயி. 5:12).* *3.* மேழ ஓரை (விதான. நல்வினை. 9); aries of the zodiac.

ம. செச்ச; தெ. த்சுத்சு

*[சே → செச்சை]*

**செச்சை**[3] *šeccai*, பெ. (n.) *1.* சந்தனக் குழம்பு (திவா.); sandal unguent. *2.* நீறு (அக.நி.); ashes. *3.* சட்டை; coat. "உதிரச் செச்சை யொண்ணிண மீக்கொ டானை" *(சீவக. 1080).*

*[செம் → செச்சை]*

**செச்சை**[4] *šeccai*, பெ. (n.) *1.* தழைகள் வேய்ந்த விடுதி; resting-place with roof of foliage. "மன்றமுஞ் செச்சையும் பலகண்டான்." *(குற்றா. தல.கவுற்சன.90).* *2.* காடு (அக.நி.); forest. *3.* இலிங்கங்கட்டிகள் அணிந்து கொள்ளும் இலிங்கப் பெட்டகம்; a little casket for liṅgam, worn by Liṅgāyats. லிங்கச் செச்சை (இவ.)

ம. செச்ச; க., தெ. செச்செ

*[செத்தை → செச்சை]*

**செச்சை**[5] *šeccai*, பெ. (n.) இரட்டை (அக.நி.); pair or set.

*[செண்டை → செச்சை. செண்டை = இரட்டை]*

**செச்சை**[6] *šeccai*, பெ. (n.) தோன்றும் நிலா; rising moon.

*[செம் → செச்சை]*

தோன்றும் நிலவு செந்நிறம் கொண்டது

**செஞ்ச** *šeñja*, வி.எ. (adv.) *1.* நேராக; properly, directly. "செஞ்ச நிற்போரைத் தெரிசிக்க" *(திருமந். 2118).* *2.* முழுதும் (யாழ்.அக.); abundantly; completely, wholly.

*[செஞ்செவே → செஞ்ச]*

செஞ்செவே பார்க்க

**செஞ்சடைச்சி** *šeñ-jaḍaicci*, பெ. (n.) மஞ்சட் பூவுள்ள செடி வகை (L.); yellow-flowered climbing Indian linden.

*[செம் + சடைச்சி]*

**செஞ்சடையோன்** *šeñ-jaḍaiyōṉ*, பெ. (n.) காசுமீரத்துப் படிகக்கல் (யாழ்.அக.); a kind of red crystal.

*[செம் + சடையோன். செந்நிறமான படிகக்கல்]*

**செஞ்சந்ததி** *šeñ-jandadi*, பெ. (n.) சிவப்பு ஆவிரை; red variety of cassia curiculata.

**செஞ்சந்தனம்** *šeñ-jandaṉam*, பெ. (n.) *1.* சந்தன மரவகை; red sanders. *2.* மரவகை; Travancore red-wood.

*[செம் + சந்தனம்]*

**செஞ்சம்** *šeñjam*, பெ. (n.) *1.* நேர்மை; correctness, directness. *2.* நிறைவு, முழுமை; completeness, fullness. "செஞ்சமுற வேறல் செயமென்று" *(குற்றா.தல.திருமால். 114).*

*[செஞ்ச → செஞ்சம்]*

இயல்பாக எல்லாரையுஞ் சுடவேண்டிய நெருப்பானது வாய்மை, குற்றமின்மை, கற்பு, தெய்வநம்பிக்கை முதலிய பண்புகளை மெய்ப்பிக்கும் தெய்வச் சான்றாக நின்று சுடாதிருப்பதால், தீயின் நிறப்பண்பாகிய செம்மைக் கருத்தினின்று, தூய்மை அல்லது நேர்மைக் கருத்தும், நேர்மைக் கருத்தினின்று நிறைவுக் கருத்தும், கிளைத்தன.

**செஞ்சம்பா** *šeñ-jambā*, பெ. (n.) நான்கு அல்லது ஐந்து திங்களில் பயிராகும் சம்பா நெல் வகை (*பதார்த்த. 804*); a red Šamba paddy, maturing in four or five months.

*[செம் + சம்பா]*

**செஞ்சாந்து** *šeñ-jāndu*, பெ. (n.) 1. குங்குமம் (*திவா.*); saffron powder. 2. சந்தனக்கூட்டு; fragrant sandal-paste. "செஞ்சாந்து புலர்த்துந் தேக்க ணகிற்புகை" (*பெருங். உஞ்சைக். 33:64*).

*[செம் + சாந்து]*

**செஞ்சாமாருதம்** *señjā-mārudam*, பெ. (n.) 1. மழையோடு கூடிய காற்று; violent storm, boisteros wind and rain. "செஞ்சாமாருதம் போலே நொடிக்கிறேன்" (*இராமநா. ஆரணி5*). 2. திறனை வெளிப்படுக்கை (*உ.வ.*); show or display of skill.

*[செம் + (சமம் →) சா + மாருதம். மாருதம் = காற்று]*

**செஞ்சாமிருதம்** *šeñjā-mirudam*, பெ. (n.) செஞ்சாமாருதம், 2 பார்க்க; see *šeñjā-mārudam,2*.

*[செஞ்சாமாருதம் → செஞ்சாமிருதம்]*

**செஞ்சாமை** *šeñ-jāmai*, பெ. (n.) ஒரு வகைச் சாமை; red species of little millet.

*[செம் + சாமை]*

**செஞ்சால்** *šeñjāl*, பெ. (n.) துமுக்கி (துப்பாக்கி) (*யாழ்.அக.*); gun, rifle.

*[செம் + சால்]*

**செஞ்சாலி** *šeñ-jāli*, பெ. (n.) உயர்தரச் செந் நெல்வகை; a kind of superior yellowish paddy. "செஞ்சாலி நெல்லின் வளர்சோ றளிக்கொள்" (*தேவா. 37:7*).

ம. செஞ்சாலி

*[செம் + சாலி]*

**செஞ்சி** *šeñji*, பெ. (n.) விழுப்புரம் மாவட்டத்தில் திண்டிவனம் திருவண்ணாமலை இடையே யுள்ள வரலாற்றுப் புகழ் பெற்றதும் அரணுடையதுமான ஒரு குறிஞ்சி நிலத்தூர் (G.S.A.D); Ginji, a hill fortress of historical interest in Villupuram district.

**செஞ்சிக்கோட்டை** *šeñji-k-kōṭṭai*, பெ. (n.) செஞ்சியிலுள்ள கோட்டை; fort at Ginji.

*[செஞ்சி + கோட்டை]*

திண்டிவனம், திருவண்ணாமலை இடையில் உள்ள செஞ்சி, வீர இளைஞன் இராசா தேசிங்கு பற்றிய நாட்டுப்பாடலால் பெரும் புகழ் பெற்றது. இராசகிரி, கிருட்ண கிரி, சந்திரகிரி ஆகிய மூன்று அரண் மனைகளையும், கொத்தளங்களையும் இணைத்து அமைக்கப்பட்ட கோட்டை சுமார் 5 கல் (8 கிலோமீட்டர்) நீளம் கொண்டது. இன்றைய விழுப்புரம் மாவட்டத்தைச் சேர்ந்த சுற்றுலாப் பேரூர்.

**செஞ்சியர்கோன்காடவன்** *šeñjiyar-kōn kāḍavan*, பெ. (n.) செஞ்சியில் வாழ்ந்த குறுநில மன்னன்; a king lived in Ginji. பல்லவ குலமரபைச் சார்ந்தவன்.

*[செஞ்சியர்கோன் + காடவன்]*

**செஞ்சிலுவைச்சங்கம்** *šeñjiluvai-c-cangam*, பெ. (n.) போர், புயல், பஞ்சம் போன்ற சீரழிவுகளால் அல்லலுறும் மக்களுக்கு மருத்தவ உதவியும் பிற உதவிகளும் வழங்கக் கூடிய ஒரு பன்னாட்டுத் தொண்டு நிறுவனம்; Red cross society an international organisation to help the people affected by war, cyclone, famine etc.

*[செம் + சிலுவை + சங்கம். Syr. slibo → த. சிலுவை; Skt. saṅgha → த. சங்கம் ]*

**செஞ்சிலை**[1] *šeñ-jilai*, பெ. (n.) 1. சிவந்தகல் (*யாழ்.அக.*); a red stone. 2. செங்காவி; red ochre.

*[செம் + சிலை]*

பெருங்கல்லில் இருந்து செதுக்கும்போது சிதறி விழும் சிறுகல்லிற்குப் பெயர் 'சில்' ஆகும். இதனால் தான் செதுக்கப்பட்ட கல்லிற்கு ஆகுபெயராய் சிலை என்ற பெயர் உண்டாயிற்று.

**செஞ்சிலை**[2] *šeñ-jilai*, பெ. (n.) அழகிய வில்; beautiful bow. "செஞ்சிலைக் கரத்தர்" (*கம்பரா. மிதிலை. 20*).

*[செம் + சிலை]*

**செஞ்சிற்றகத்தி** *šeñ-jiṟ-ṟ-agatti*, பெ. (n.) மரவகை (*சித்.அக.*); variety of comon sesban.

*[செம் + சிற்றகத்தி]*

**செஞ்சீரகம்** *šeñ-jīragam*, பெ. (n.) செந்நிறமுள்ள சீரக வகை (யாழ்அக.); red cumin.

ம. செஞ்சீரகம்

[செம் + சீரகம்]

**செஞ்சு** *šeñju*, பெ. (n.) செஞ்சம் பார்க்க; see *šeñjam*. "செஞ்சுறு செஞ்சுடர்" (திருமந். 1743).

ம. செஞ்சு (அழகு)

[சல் → செல் → சென் → செட்டு → செச்சு → செஞ்சு = செம்மை, செவ்வை, நிறைவு]

**செஞ்சுடர்** *šeñ-judar*, பெ. (n.) 1. பகலவன் (பிங்.); Sun. 2. எரியும் நெருப்பு (யாழ்அக.); fire.

ம. செஞ்சுடர்; க. கெஞ்சொடர்

[செம் + சுடர்]

**செஞ்சுடர்ப்பகவன்** *šeñ-judar-p-pagavaṉ*, பெ. (n.) 1. நெருப்பு (திவா.); the Fire-god. 2. பகலவன் (வின்.); the Sun-god.

[செம் + சுடர் + பகவன்]

**செஞ்சுருட்டி** *šeñ-jurutti*, பெ. (n.) ஒரு பண்; one musical mode.

ம. செஞ்சுருட்டி

[செம் + சுருட்டி. சுருட்டி = பண்]

**செஞ்சுருட்டை**[1] *šeñ-juruttai*, பெ. (n.) சுருட்டைப் பாம்பு வகை; the yellow variety of Echis carinata, red carpet-snake.

[செம் + சுருட்டை]

சுருட்டை = ஒருவகைப் பாம்பு

**செஞ்சுருட்டை**[2] *šeñ-juruttai*, பெ. (n.) கேழ்வரகு வகை (விவசா.3); a species of ragi.

[செம் + சுருட்டை. சுருட்டை = சுருண்ட கதிரையுடைய கேழ்வரகு]

**செஞ்சுறா** *šeñ-jura*, பெ. (n.) சுறாமீன் வகை (M.M. 850); shark, grey or bronze, attaining considerable size.

[செம் + சுறா. சுறவு → சுறா]



செஞ்சுறா

**செஞ்சூரன்** *šeñ-jūraṉ*, பெ. (n.) செந்நாய்; a particular variety of dog used in the chase while hunting.

[செம் + சூரன். சூரன் = நாய்]

**செஞ்செயல்** *šeñ-jeyal*, பெ. (n.) நேர்மையான தொழில் (இ.வ.); upright action.

[செம் + செயல்]

**செஞ்செவியர்** *šeñ-jeviyar*, பெ. (n.) செல்வர் (யாழ்அக.); wealthy person.

[செம் + (செவ்வியர் →) செவியர்]

**செஞ்செவே** *šeñ-jevē*, வி.எ. (adv.) 1. நேராக; properly, directly. "செஞ்செவே கமலக் கையாற் றீண்டலும்" (கம்பரா. பூக்கொய். 7). 2. எளிதாக; with ease. "செஞ்செவே படர்வரென் படைஞர்" (கம்பரா. வருணனை. 13). 3. முழுதும்; abundantly, completely, wholly. "செஞ்செவே யாண்டா சிவபுரத்தரசே" (திருவாச. 28: 6).

ம. செஞ்செம்மே.

[செம் + செவ் – செஞ்செவ் → செஞ்செவே]

**செஞ்செழிப்பு** *šeñ-jeḻippu*, பெ. (n.) 1. முக மலர்ச்சி; cheerfulness of countenance. 2. பயிர்ச் செழிப்பு (யாழ்ப்.); fertility, luxuriance of crops or produce. 3. ஏராளம் (யாழ்அக.); plentifulness, copiousness.

[செம் + செழிப்பு]

**செஞ்சேரா**[1] *šeñ-jērā*, பெ. (n.) ஒரு வகை நச்சுப் பூச்சி (சீவரட். 364); a kind of poisonous insect.

**செஞ்சேரா**[2] *šeñjērā*, பெ (n.) இறால் வகை; spiny lobster.

**செஞ்சைப்பாலை** *šeñjai-p-pālai*, பெ. (n.) முல்லை; a kind of jasmine.

*[செம்(மை) + செய் + பாலை]*

**செஞ்சொட்டி** *šeñ-jotti*, பெ. (n.) பூடுவகை; a plant. "செஞ்சொட்டி யடியொட்டி" (குருகூர்ப். 45).

*[செம் + சொட்டி]*

**செஞ்சொல்** *šeñ-jol*, பெ. (n.) 1. திருந்திய சொல்; correct language; felicitous words. "செஞ்சொலா னயந்த பாடல்" (தேவா. 734. 10). 2. வெளிப்படையான சொல் (குறள், 711, உரை.); word or language in its direct primary significance. 3. பல சொற்களிலிருந்து தேர்ந் தெடுக்கப்பட்ட சரியான சொல்; standard term.

*[செம் + சொல்]*

**செஞ்சொற்கழகம்** *šeñ-jor-kalagam*, பெ. (n.) பிற மொழிகளில் உள்ள தொழில் நுட்பச் சொற்களுக்கு இணையான செம்மைப் படுத்திய நல்ல தமிழ்ச் சொற்களை வழங்கு வதற்கான நிறுவனம்; an institution to furnish standarised Tamil equivalents for technical terms from other languages.

*[செம் + சொல் + கழகம்]*

**செஞ்சொன்மாலை** *šeñ-jon-mālai*, பெ. (n.) புகழ் மாலை; eulogy. "செஞ்சொன்மாலை சூடினான்" (சீவக. 691).

*[செம் + சொல் + மாலை]*

**செஞ்சோளம்** *šeñ-jōlam*, பெ. (n.) செந்நிறமுள்ள சோளவகை (பதார்த்த. 832); a red species of great millet.

ம. செஞ்சோளம்; க. கெஞ்சோளம்

*[செம் + சோளம்]*

**செஞ்சோற்றுக்கடன்** *šeñ-jōrru-k-kadan*, பெ. (n.) 1. அரசனிடம் பெற்றுண்ட உணவுக்காக அவன் பொருட்டு வீரன் தன் உயிரைப் போரிடைக் கொடுத்தலாகிய கடமை; duty or obligation of a soldier to lay down his life in the cause of the king who fed him. "செஞ்சோற்றுக்கட னீங்கி" (சீவக. 2240). 2. பெற்ற உதவிக்காகச் செய்யும் உதவி; a help done for the help received. பாரதப் போரில் கன்னன் துரியோதனனுக்குத் தன் உயிரைக் கொடுத்துச் செஞ்சோற்றுக் கடன் தீர்த்தான்.

*[செஞ்சோறு + கடன்]*

**செஞ்சோற்றுதவி** *šeñjōrrudavi*, பெ. (n.) செஞ்சோற்றுக்கடன் பார்க்க (திவா.); see *šeñjōrru-k-kadan*.

*[செஞ்சோறு + உதவி]*

**செஞ்சோறு** *šeñ-jōru*, பெ. (n.) 1. தீட்டாத சிவப்பு அரிசி கொண்டு வடித்த சோறு; cooked rice of red colour. "கருஞ்சோறு மற்றைச் செஞ்சோறுங் களனிழைத்தென் பயன்" (திவ். திருவாய். 4. 6:4). 2. செஞ்சோற்றுக்கடன் பார்க்க (பு.வெ.8: 30, கொளு.); see *šeñ-jōrru-k-kadan*. 3. தன்பொருட்டுப் போரில் உயிர் கொடுத்தலைக் கருதிய வீரனுக்கு அரசனளிக்குஞ் சோறு; provisions given by a king to a soldier as the price of his blood.

*[செம் + சோறு]*

**செஞ்ஞானி** *šeññāni*, பெ. (n.) சிறந்த அறிவாளி; a person of ripe wisdom. "செஞ்ஞானிக் குரித்தாகு நற்சீவன் முத்தி" (வேதா. சூ. 162).

*[செம் + ஞானி]*

வ. ஜ்ஞாநிந் (jñanin) → த. ஞானி

**செட்டி**[1] *šetti*, பெ. (n.) 1. வணிகன்; Vaišya or mercantile community. "முட்டில் வாழ்க்கைச் செட்டியர் பெருமகன்" (பெருங்.இலாவாண. 20:126). 2. வணிகர்களின் பட்டப்பெயர்; title of traders.

ம. செட்டி; Pkt., Pali. šetthi

*செட்டி → ச்ரேஷ்டின் (Skt.)*

எழுதல் = உயர்தல். எண்ணுதல் = மேன்மேல் அளவிடுதல். எட்டுதல் = உயர்தல்; உயர்ந்து தொடுதல், தொடுமளவு நெருங்குதல். எட்டி நோக்குதல் = அண்ணாந்து பார்த்தல் (பெருங். நரவாண. 8:82). எட்டம் = உயரம், தொலைவு. எடுத்தல் = உயர்த்துதல், தூக்குதல். எட்டி = 1. உயர்ந்தவன், மேலோன். 2. பண்டையரசர் வணிக மேலோனுக்குக் அளித்த பட்டம். "எட்டிக் குமர விருந்தோன் தன்னை" (மணிமே. 4:58) 3. வணிகன் (திவா.).

எட்டு → எட்டி

எட்டிப்பூ = எட்டிப்பட்டம் பெற்றவனுக்கு அரசர் கொடுக்கும் பொற்பூ. "எட்டிப் பூ பெற்று" (மணிமே. 22:115).

எட்டிப்புரவு = எட்டிப்பட்டம் பெற்றவனுக்கு அரசர் கொடுத்த நிலம் (நன். 158, மயிலை, உரை).

எட்டி → செட்டி ஒ.நோ: இளை → சிளை; ஏண் → சேண்.

செட்டி எனுஞ் சொல்லிற்கு வடமொழியாளர் காட்டும் மூவேறு மூலம் வருமாறு.

1. ச்ரீமத் (திருமான்) என்பதன் உச்சத்தரம்.

2. பிரகஸ்பம (புகழப்படத் தக்கவன்) என்பதன் உச்சத்தரம்.

3. ச்ரீ (திரு) என்பதன் உச்சத்தரம்

தென் சொற்களை வட சொல்லாக்கும் வழிகளுள் ஒன்று முதலெழுத்தின் பின் ரகரம் இடைச் செருகல்.

எ-டு :- தமிழம் - த்ரமிள; கமுகம் - க்ரமுச; திடம் - த்ருட; நட்டம் - ந்ருத்த; படி - ப்ரதி; மெது - ம்ருது; விடை - வ்ருஷ்

இம்முறையில் செட்டி என்பதை வடமொழியில், எகரம் இன்மையால் ச்ரேட்டி எனத் திரித்து அதற்கேற்பப் பொருந்தப் பொய்த்தல் எனும் உத்தி பற்றி வெவ்வேறு மூலங்காட்டுவாராயினர். செட்டி என்பது தமிழில் வணிகனை மட்டுமே குறிக்கும் என்றும் ச்ரேஷ்டின் என்பது வடமொழியிற் சிறந்தோன் என்பதனையும் குறிக்கும் என்றும், வேறுபாடறிக (வ.மொ.வ.).

**செட்டி**[2] *setti*, பெ. (n.) 1. சிவந்த அடியையுடைய வெட்சிச் செடி; scarlet ixora. 2. சேயோன் (செந்நிற முருகன்); Murugan. "கடற்சூர் தடிந்திட்ட செட்டி" (தேவா. 742, 10).

[சல் → செல் → சென் → (செட்டு) → செட்டி = செம்மலர் மரவகை (வெட்சி)]

**செட்டி**[3] *setti*, பெ. (n.) மல்லகசெட்டி; wrestler, prize fighter.

க., தெ. செட்டி

**செட்டிகுடிகெடுத்தான்** *setti-kudi-keduttān*, பெ. (n.) அறிவனது (புதனது) தோற்றத்தை வெள்ளியின் (சுக்கிரன்) தோற்றமாகக் கருதி மயங்கிப் புறப்பட்ட செட்டி இடை வழியிற் கள்வராற் கொலையுண்ணும்படி அச்செட்டி குடும்பத்தைக் கெடுத்தவனான அறிவன் (புதன்) (செஞ். 10,243); Mercury, as one who, by his appearance like Venus, misled a Chetti to start on his journey in the dead of night and runied his family by the robbers murdering him.

[செட்டி + குடிகெடுத்தான்]

**செட்டிச்சி** *setticci*, பெ. (n.) வணிக குடிப் பெண் (உவ.); woman of Vaisya (merchant) community.

ம. செட்டிச்சி; க. செட்டிதி; பட. செட்டித்தி

[செட்டி ஆ.பா. → செட்டி(ய)த்தி → செட்டிச்சி (பெ.பா.)]

**செட்டிநாகம்** *setti-nāgam*, பெ. (n.) நல்ல பாம்பு வகை (யாழ்.அக.); cobra.

[செட்டி + நாகம்]

**செட்டிப்பிள்ளை** *setti-p-pillai*, பெ. (n.) நாட்டுக் கோட்டைச் செட்டி; person of Nāttukkōttai Chetti caste.

[செட்டி + பிள்ளை]

**செட்டிபிள்ளையப்பன்** *setti-pillaiyappan*, பெ. (n.) கொங்கு மண்டல சதகத்தில் பாடப் பெற்ற ஒரு வள்ளல்; a donor praised in a verse of Kongu-mandala-šadagam.

[செட்டி + பிள்ளை + அப்பன்]

"இட்டமான கவிசொல்லும் பாவலர்க்கில்லை யென்று சொலற்கஞ்சிக் காட்டில் வாழ்துட்ட வன்புலித் தூற்றில் புகுந்தவன் தூயவன் கணவாள குலத்தினன், செட்டிப் பிள்ளையப் பன்றனந் தொண்டு செய்தேவி மாமலை யாதொரு பங்குள கட்டு செஞ்சடை அமரவிடங்கனார் கதித்து வாழ் பாரியூ ரெங்கரரோ" கொங்கு மண்டல சதகம்.

**செட்டிமை** *settimai*, பெ. (n.) 1. வணிகத் தன்மை (யாழ்.அக.); qualities, characteristics of the Chetti caste. 2. வணிகம் (வின்.); trade, traffic mercantile profession.

[செட்டி → செட்டிமை]

**செட்டியப்பன்** *setti-y-appan*, பெ. (n.) முருகக் கடவுளின் தந்தையான சிவன்; Šivan, as the Father of Murugan. "கடற்சூர் தடிந்திட்ட செட்டியப்பனை" (தேவா. 742, 10).

[செட்டி + அப்பன்]

**செட்டியார்குதிரை** *šeṭṭiyār-kudirai*, பெ. (n.) பிள்ளை விளையாட்டு வகை (இ.வ.); a boy's game of leap-frog.

*[செட்டியார் + குதிரை]*

**செட்டியார்மகமை**[1] *šeṭṭiyār-magamai*, பெ. (n.) வணிகர்கள் நாள்தோறும் தம் வருமானத்தில் ஒரு பகுதியைத் தம் குமுகாயத்திற்கோ பொதுநன்மைக்கோ ஒதுக்கி வைத்தல்; allocation of a small portion of the income daily by the merchants for the benefit of their communties or public.

*[செட்டியார் + மகமை]*

மகன்மை = மகனுக்குச் செய்யும் பண உதவி போல குமுகாய மக்களுக்கு உதவும் வகையில் ஏற்படுத்தப்பட்ட ஒருவகைப் பொது நலச் சேமிப்பு. மகன்மை → மகமை ஆயிற்று. சில இடங்களில் பேச்சு வழக்காய் மகிமை என உள்ளது.

**செட்டியார்மகமை**[2] *šeṭṭiyār-magamai*, பெ. (n.) செட்டியிறை (I.M.P.Sm.91) பார்க்க; see *šetti-y-iṟai.*

**செட்டியிறை** *šeṭṭi-y-iṟai*, பெ. (n.) வணிகர்களிடம் வாங்கப்பட்ட பழைய வரி; an ancient tax on traders.

*[செட்டி + இறை. இறை = வரி]*

**செட்டிறை** *šeṭṭiṟai*, பெ. (n.) செட்டியிறை பார்க்க; see *šeṭṭi-y-iṟai.*

*[செட்டியிறை → செட்டிறை]*

**செட்டு**[1] *šeṭṭu*, பெ. (n.) கொங்கு நாட்டுக் குயவர் சமுதாயத்தின் சிறுகுழுத் தலைவர்; a leader of a small group of Kulalar of Kongu country.

*[செட்டி → செட்டு]*

கொங்கு நாட்டுக் குயவர்குடி 24 நாடாகப் பிரிந்துள்ளது. ஒவ்வொரு நாட்டுக்காரரும் தம்முள் பங்காளிகள். பிறநாட்டில் தான் மணஉறவு கொள்வர். ஒவ்வொரு நாட்டுக்காரரும் 20 அல்லது 30 குழுவாக இயங்குகின்றனர். இதில் 2 அல்லது 3 குழுக்களுக்கு ஒரு செட்டுக்காரர் இருப்பார். திருமணம், பிற சிறப்பு நிகழ்ச்சிகள் உறுதி செய்ய இவரிடம் உரிய கட்டணம் செலுத்தி ஒப்புதல் பெற வேண்டும். குடி வழக்குகளில் இவர் முறைமை வழங்குவார். சிறப்பு நிகழ்ச்சிகளில் கட்டில் மேல் அமரவைத்துப் பல சிறப்புகள் செய்யப்படுவார், குயவர் குடியில் மதிப்புறு மாந்தர்.

**செட்டு**[2] *šeṭṭu*, பெ. (n.) 1. வாணிகம் (யாழ்.அக.); trade, traffic. 2. சிக்கனம்; economy, thrift. "பலங்கொண்ட செட்டுமக்குப் பலித்தது" (குமர.பிர.மதுரைக்.7). வரவுக்குத் தக்க செலவு செய்து செட்டாகக் குடும்பம் நடத்தத் தெரியாதவர். 3. கஞ்சத்தனம்; miserliness, stinginess.

ம. செட்டு

*[செட்டி → செட்டு]*

**செட்டுக்கட்டு** *šeṭṭu-k-kaṭṭu*, பெ. (n.) சிக்கனம் (உ.வ.); carefulness, thrift.

*[செட்டு + கட்டு]*

**செட்டுக்காரர்**[1] *šeṭṭu-k-kārar*, பெ. (n.) கோயம்புத்தூரில் வாழும் தேவாங்க இனத்தார் (E.T. ii, 155); Dēvāṅgas of Coimbatore.

*[செட்டு + காரர்]*

**செட்டுக்காரர்**[2] *šeṭṭu-k-kārar*, பெ. (n.) 1. செட்டுப் பொறுப்பை வகிப்பவர்; one who has the responsibility of šettu. 2. செட்டுப் பொறுப்பை வகிப்பவருக்கு உரிய பட்டம்; the title of the person who bears the responsibility of šettu.

*[செட்டு + காரர்]*

**செட்டுக்காரன்** *šeṭṭu-k-kāraṉ*, பெ. (n.) 1. அளவாய்ச் செலவிடுவோன் (உ.வ.); thrifty person, one careful in spending. 2. கஞ்சன் (வின்.); niggard, hard dealer.

*[செட்டு + காரன்]*

**செட்டுப்பொட்டா-தல்** *šeṭṭu-p-poṭṭā-*, 6 செ.கு.வி. (v.i.) வணிகம் சிதைதல்; to fail, as business. அவன் வணிகம் செட்டுப் பொட்டாய் விட்டது (வின்.).

*[செட்டு + பொட்டு + ஆ-]*

**செட்டுமை** *šeṭṭumai*, பெ. (n.) செட்டு[2] பார்க்க; see *šeṭṭu*[2].

*[செட்டு → செட்டுமை]*

**செட்டை**[1] *šettai*, பெ. (n.) 1. சிறகு (யாழ்.அக.); wing, feather, plumage. கோழி செட்டை அடித்துப் பறந்தது. 2. மீன்சிறை (வின்.); fin. 3. தோட்பட்டை (யாழ்.அக.); shoulder blade.

தெ. செட்டுப

*[தோள் → தேள் → சேள் → செட்டை ]*

**செட்டை**[2] *šettai*, பெ. (n.) ஆடைக் கரைவகை; short lace-border in cloth.

*[சிட்டை → செட்டை]*

**செடல்** *šedal*, பெ. (n.) செடில் (வின்.) பார்க்க; see *šedil*.

**செடி**[1] *šedi*, பெ. (n.) 1. மரத்தை விடக் குறைவாக வளரக் கூடிய, மெல்லிய தண்டைக் கொண்ட சிறுபூடு; shrub. கத்தரிச் செடி. 2. புதர் (பிங்.); shrubbery, bush. 3. நெருக்கம், அடர்த்தி (சூடா.); denseness. "செடிகொள் வான்பொழில் சூழ்" (திருவாச. 29:5).

ம. செடி; க. கிட, கிடு, செட்டு; தெ. செட்டு; து., குட. கிட; பட. கிடு; கோத. கிட்வ்; துட. கிட்வ்; கொலா. செட்ட், செட்டு; நா. செட்ட் (மரம்)

இ. ஜாட் (d) = மரம்

*[சென் → செழி → செடி = இலை கிளையடர்ந்த சிறு நிலைத்திணை வகை]*

**செடி**[2]**-த்தல்** *šedi-*, 4 செ.கு.வி. (v.i.) கொடி தழைகள் அடர்தல் (யாழ்ப்.); to grow bushy, shoot out, as sprays, foliage.

ம. செடிக்குக

*[சென் → செழி → செடி - செடி-த்தல் = அடர்தல் (வ.மொ.வ.)]*

**செடி**[3] *šedi*, பெ. (n.) 1. அறங்கடை (பாவம்.); sin. "செடியேறு தீமைகள்" (திருவாச. 40:2). 2. தீமை (சூடா.); vice, evil. 3. துன்பம்; trouble, distress. "செடிபடுநோ யடியாரைத் தீர்ப்பார் போலும்" (தேவா. 44, 7). 4. தீய நாற்றம்; bad odour, stench. "செடிபடுந் துணியுடைச் சீரை சுற்றினான்" (திருவாலவா. 54: 19). 5. காய் விழுந்த மகளிர் தீண்டுதலால் குழந்தைகளுக்கு நேர்வதாகக் கருதப்படும் நோய்வகை; a disease of children, believed to be caused by the approach of aborted women. குழந்தைக்குச் செடி தட்டியிருக்கிறது (நெல்லை.). 6. இழிவு; meanness. "செடி நாய் குரைக்க" (தேவா. 991,7). 7. பதனழிந்தது (யாழ்.அக.); that which is decayed, faded, spoiled, as food, flower, etc.,

ம. செடி; தெ. செடு, செட்ட; து. செடி.

*[சிதை → செதை → செடி. சிதை = சிதைத்தல்]*

**செடி**[4] *šedi*, பெ. (n.) ஒளி(பிங்.); light, splendour. "செடிச்சிறு செம்பொற் கிண்ணம்" (இரகு. தேனுவ. 112).

*[சுல் → செல் → செள் → செழி → செடி]*

**செடிக்கள்ளி** *šedi-k-kalli*, பெ (n.) சதுரக்கள்ளி (இ.வ.); square spurge.

*[செடி + கள்ளி]*

**செடிக்காடு** *šedi-k-kādu*, பெ. (n.) புதர்; low thicket, jungle.

*[செடி[1] + காடு]*

**செடிக்குடிபுக்கி** *šedi-k-kudi-pukki*, பெ (n.) நாகரவண்டு (மூ.அ.); bee.

*[செடி + குடி + புக்கி. புகு → புக்கு → புக்கி = புகுவது அல்லது புகுந்தது.]*

**செடிக்கொல்லி** *šedi-k-kolli*, பெ. (n.) களைச் செடிகளை அழிக்கும் மருந்து; herbicide.

*[செடி[1] + கொல்லி.]*

**செடிங்காடு** *šedi-ṅ-gādu*, பெ. (n.) செடிக்காடு (வின்.) பார்க்க; see *šedi-k-kādu*.

*[செடி + காடு. செடிக்காடு → செடிங்காடு]*

**செடிச்சி** *šedicci*, பெ. (n.) இழிந்தவள் (யாழ்ப்.); bad woman, strumpet. "செடிச்சிகள் மன்றி விடைபலி தேரப் போவது வாழ்க்கையே" (தேவா. 991, 7).

தெ. செடிப

*[செடி[3] → செடிச்சி]*

**செடிசீ-த்தல்** *šedi-cī-*, 4 செ.கு.வி. (v.i.) காடுவெட்டுதல்; to clear jungle. 'செடிசீத்துக் குடியேற்றினபடை வீடுகளை' (ஈடு, 1. 7:4).

*[செடி[1] + சீ-.]*

**செடியன்** *šeḍiyaṉ*, பெ. (n.) இழிந்தோன் (யாழ்.அக.); bad, vicious fellow.

*[செடி³ → செடியன்]*

**செடில்** *šeḍil*, பெ. (n.) வேண்டுதலுக்காக முதுகின் தோலிடைக் கொக்கியைச் செலுத்தி அந்தக் கொக்கியை அதற்கென நாட்டப் பெற்ற நீண்ட கழையில் மாட்டி ஒருவனைத் தூக்கியாட்டுங் கருவி; a mechanism consisting of a standing post with a long sweep at its top, on one end of which a person, under a vow, is suspended by a hook fastened into the integuments of his back and raised high in the air, is swung around.

க., தெ. சிடி.

*[செடி³ → செடில்]*

**செடிலாட்டம்** *šeḍil-āṭṭam*, பெ. (n.) மாரியம்மன் வேண்டுதலுக்காகச் செடிலில் தொங்கியாடும் ஆட்டம்; hook-swinging in honour of Māriyammaṉ.

*[செடில் + ஆட்டம்]*


செடிலாட்டம்

**செடிலூசல்** *šeṭil-ūšal*, பெ. (n.) செடிலாட்டம் பார்க்க; see *šeḍil-āṭṭam*.

*[செடில் + ஊசல்]*

**செண்** *šeṇ*, பெ. (n.) மகளிர் கொண்டை; tuft, tresses done into a knot. "செண்ணியற் சிறுபுறம்" (அகநா. 59).

*[செல் → செள் → செண் (மு.தா.171)]*

**செண்டலரி** *šeṇḍalari*, பெ. (n.) அடுக்கலரி; double-flowred oleander.

*[செண்டு¹ + அலரி]*

**செண்டாடு¹-தல்** *šeṇḍāḍu-*, 5 செ.கு.வி. (v.i.) பந்தாடுதல்; to play ball.

க. செண்டாடிசு; தெ. செண்டாடு; து. செண்டாடுனி; பட. செண்டாடு

*[செண்டு¹ + ஆடு-.]*

**செண்டாடு²-தல்** *šeṇḍāḍu-*, 5 செ.குன்றாவி. (v.t.) நிலை குலைத்தல்; to demolish, ruin. "தக்கன் பெருவேள்வி செண்டாடுதல் புரிந்தான்" (தேவா. 908, 9).

க. செண்டாடிசு; தெ. செண்டாடு; து. செண்டாடுனி.

*[செண்டு¹ + ஆடு-.]*

**செண்டாய்தன்** *šeṇḍāydaṉ*, பெ. (n.) செண்டாய்தம் உடைய ஐயனார் (பிங்.); Aiyaṉār, as bearing the weapon šeṇḍu.

*[செண்டு¹ + ஆய்தன்]*

**செண்டு¹** *šeṇḍu*, பெ. (n.) 1. கட்டப்பட்ட மலர்த்தொகுப்பு பூக்கற்றை; a kind of bouquet. "செண்டாடல் பாடி" (திருவாச. 9:18). 2. விளையாட்டில் பயன்படுத்தும் பந்து; ball used in games. "செண்டோ முலை" (தனிப்பா ii, 22:48). 3. குதிரைஓட்டும் சவுக்கு; horse-whip. "செண்டு கொண்டு கரிகாலன்" (கலிங்.165). 4. குதிரை முதலிய வற்றைப் பழக்கிச் செலுத்தும் வையாளி வீதி; குதிரையைப் பயிற்றும் சாலை; horse training area; race-course. "செண்டுசேர் விடையினான்" (தேவா. 35, 2). 5. பந்தடி மேடை (யாழ்.அக.); terrace for ball-game. 6. நூற்செண்டு (வின்.); ball of thread. 7. தீவட்டிச்செண்டு (இ.வ.); ball of rags used in torch. 8. கொடி; flag.

க., தெ., து., செண்டு

*[செள் → செண் → செண்டு (மு.தா. 171)]*

மணவேளையின்போது மணமக்கள் கையில் கொள்ளும் கட்டிய பூங்கொத்து, பூச்செண்டு. தீவட்டி, குதிரைச் சவுக்கு அனைத்தும் கையில் கொள்வன. குதிரையைப் பழக்கும் இடம், பந்தடி மேடை ஆகியவை இடஞ் சார்ந்தன. முதலில் பூச்சுற்று செண்டாகியது; பின்னர் துணிச்சுற்று (பந்து) செண்டாகியது. கொடியையும் செண்டு என்றனர்.

**செண்டு²** *šeṇḍu,* பெ. (n.) 1. கூர்மை (அக.நி.); sharpness. 2. மழு; a kind of axe.

*[சுள் → செள் → செண்டு (மு.தா.228)]*

*மரத்தைச் செதுக்குவதற்கு உரிய கோடரி மனிதர்களையும் வெட்டிச் (செதுக்குவதில்) சிதைப்பதற்கு உரிய மாற்றம் பெற்றது; கூர்முனையையுடையது.*

**செண்டுகோல்** *šeṇḍu-kōl,* பெ. (n.) பந்தடிக்குங் கோல்; a kind of bat used in ball-game. "சுரிகையுந் தெறிவில்லுஞ் செண்டுகோலும்" *(திவ்.பெரியாழ். 3. 4:3).*

*[செண்டு + கோல்]*

**செண்டுமல்லிகை** *šeṇḍu-malligai,* பெ. (n.) குடமல்லிகை; Arabian jasmine.

மறுவ. குண்டு மல்லிகை

ம. செண்டு மல்லிக; து. செண்டுமல்லிகெ.

*[செண்டு' + மல்லிகை]*

**செண்டுவாத்து** *šeṇḍu-vāttu,* பெ. (n.) நீலமும் பசுமையும் தோய்ந்த கருப்புநிற உடலையும் வெண்மையான மார்பையும் வயிற்றையும் கொண்ட பறவை; comb duck.

*தமிழ்நாட்டின் வடக்குப் பகுதியில் காணப்படுகிறது. ஆண் பறவையின் அலகின் நெற்றியை ஒட்டிய பகுதியில் குமிழ் அமைந்திருக்கும். பெண் பறவை ஆணை விட சிறியது.*

**செண்டுவெளி** *šeṇḍu-veḷi,* பெ. (n.) அரண்மனையைச் சார்ந்துள்ள குதிரையைப் பழக்கும் இடம்; open place adjacent to a palace, used for training and riding horses. "வெம்பரியூர் செண்டுவெளி பார்த்து" *(தெய்வீகவுலா. 23).*

*[செண்டு + வெளி]*

**செண்டேறு-தல்** *šeṇḍēṟu-,* 5 செ.கு.வி. (v.i.) உலாவரப் புறப்படுதல்; to promenade. "அழகு செண்டேறக் கடவதாயிறே யிருப்பது" *(திவ். திரு. நெடுந். 6, பக்.50).*

*[செண்டு' + ஏறு-.]*

**செண்டை¹** *šeṇḍai,* பெ. (n.) கேரள மாநிலத்தில் அதிகம் பயன்படும் ஒருவகைக் கொட்டிசைக் கருவி; a kind of large drum. "திமிலை செண்டை குறடு" *(கம்பரா. பிரமாத். 5).*

ம. செண்ட; து. செண்டெ


செண்டை

**செண்டை²** *šeṇḍai,* பெ. (n.) இரட்டை (இ.வ.); pair, set.

க. சண்டி; தெ. சண்ட

*[சுள் → செள் → செண்டு → செண்டை (வ.மொ.வ.)]*

**செண்டைவரிசை** *šeṇḍai-varišai,* பெ. (n.) இசைப்பண் வரிசை; serial combination of the notes of the scale doubled, sung as exercise.

*[செண்டை² + வரிசை]*

*சச, ரிரி, கக என ஏழிசைகளும் இரட்டை, இரட்டைகளாய் வருதல் (மு.தா. 192)*

**செண்ணம்** *šeṇṇam,* பெ. (n.) 1. நுண்டொழில்; fine, delicate work. "செண்ண வஞ்சிலம் பேறுதுக ளவித்து" *(சீவக. 1333).* 2. அழகிய வடிவு; beautiful form. "செண்ணக் காஞ்சனை" *(பெருங். உஞ்சைக். 3:75).*

மறுவ. நுண்வேலை

*[சன்னம் → சண்ணம் → செண்ணம்]*

**செண்ணிகைக்கோதை** *šeṇṇigai-k-kōdai,* பெ. (n.) பூமாலை வகை; a kind of garland. "செண்ணிகைக் கோதை கதுப்போ டியல" *(பரிபா. 21: 56).*

*[கண்ணி (=பூமாலை) → செண்ணி → செண்ணிகை + கோதை]*

**செண்ணு-தல்** *šeṇṇu-,* 5 செ.குன்றாவி. (v.t.) அழகுபடுத்துதல் (அகநா. 59, உரை); decorate, dress up.

*[செள் → செண் → செண்ணு-.]*

**செண்பகக்குளிகை** *šenbaga-k-kuligai*, பெ. (n.) *பழைய காசு வகை (புது.கல். 261);* an ancient coin.

**செண்பகம்**[1] *šenbagam*, பெ. (n.) *மணமிக்க மஞ்சள் நிறப் பூப்பூக்கும் ஒருவகை மரம்;* champak. *"பெருஞ் செண்பகமும் பிண்டியும் பிரம்பும்" (பெருங். உஞ்சைக். 50: 25).*

ம. செண்பகம், செம்பகம்

*[சண்பகம் → செண்பகம்]*

சண்பக மரம் வெப்பமண்டலத்தைச் சார்ந்தது. வடமொழியில் 'சம்பகா' என்று ஆளப்படுகிறது.


செண்பகம்

**செண்பகம்**[2] *šenbagam*, பெ. (n.) செம்போத்து *பார்க்க;* see *šem-bōttu.*

H., U. pue.

**செண்பகவருக்கை** *šenbaga-varukkai*, பெ. (n.) *பலாவகை (யாழ்.அக.);* a species of jack fruit tree.

**செத்தல்** *šettal*, பெ. (n.) *1. சாகை (யாழ்ப்.);* dying. *2.* தேங்காய் நெற்று *(யாழ்ப்.);* dry, over-ripe coconut on the tree. *3. உலர்ந்து சுருங்கிய பனம்பழம், மிளகாய், வாழை முதலியன;* shrivelled palmyra or other fruit; dried chillies, plantain trees, vegatbles or grass. *4. ஒல்லி (வின்.);* emaciated person; leán, skinny animal. *5.* மெலிவு; leanness. செத்தற் பிள்ளை *(யாழ்.அக.).* *6. பதர் (தெ.க.தொ. 5, 84);* chaff, withered.

*[சா → (சத்தல்) → செத்தல்]*

**செத்தல்மிளகாய்** *šettal-milagāi*, பெ. (n.) *மிளகாய் வற்றல் (யாழ்ப்.);* dried chilly.

*[செத்தல் + மிளகாய்]*

**செத்தலி** *šettali*, பெ. (n.) *1.* எலும்புந் தோலுமான பெண் *(யாழ்ப்.);* lanky or skinny woman. *2.* மெலிகை அல்லது இற்றுப் போகை; leaning or becoming to powerless.

*[செத்தல் → செத்தலி]*

**செத்தலை** *šettalai*, பெ. (n.) *உழவுக் கணக்கு;* cultivation accounts. செத்தலை யிலே புளித்தரவு எழுதவும்.

*[செய் + தலை - செத்தலை]*

**செத்தவீடு** *šetta-vīdu*, பெ. (n.) இழவு வீடு *(உவ.);* mourning house.

மறுவ. துட்டி வீடு, இறப்பு வீடு.

*[செத்தல் + வீடு - செத்தவீடு]*

**செத்து**[1]**-தல்** *šettu-*, 5 செ.குன்றாவி. (v.t.) செதுக்குதல்; to cut with adze, chisel, pare off. "மனத்தையுங் குழையச் செத்து மாண்பினன்" *(சீவக. 1578).*

ம. செத்துக; க., பட. கெத்து; தெ. செக்கு

*[செதுக்கு → செத்து-.]*

**செத்து**[2] *šettu*, வி.எ. (adv.) *1. கருதி;* having thought. "அரவுநீ ருணல் செத்து" *(கலித். 45).* *2. ஒத்து* (தொல். பொருள். 286, உரை); having resembled. *3. ஐயம் (யாழ்.அக.);* doubt.

*[செய் → செ → செத்து (மு.தா. 216)]*

**செத்து**[3] *šettu*, பெ. (n.) *செதுக்குகை;* cutting, chiseling. 'வாய்ச்சியினது வாயைச் சேர்த்தி ஒரு மயிர்க்கு ஒரு செத்தாகச் செத்தினாலும்' *(சீவக. 2825, உரை).*

*[செதுக்கு → செத்து]*

**செத்துபனை** *šettu-panai*, பெ. (n.) *கள்ளிறக்கும் பனை (நாஞ்.);* toddy-yielding palmyra.

*[செத்து + பனை]*

**செத்துபாட்டம்** *šettu-pāttam*, பெ. (n.) பனையிற் கள்ளிறக்கக் கொடுக்கும் வரி *(நாஞ்.);* tax paid for tapping palmyra.

*[செத்து' + பாட்டம்]*

**செத்துப்பிழை-த்தல்** *šettu-p-pilai-*, 4 செ.கு.வி. (v.i.) நெருக்கடிக்கு உள்ளாகி மீள்தல்; have a narrow escape; survive a crisis. காமாலை நோயால் அவதிப்பட்டுச் செத்துப் பிழைத்தான் என்று தான் நினைக்க வேண்டும்.

*[செத்து + பிழை-.]*

**செத்துவம்** *šettuvam*, பெ. (n.) பேய்; spirit. "செத்துவங்க டாக்கி" (நீலகேசி, 112).

*[சா → (சத்துவம்) செத்துவம்]*

**செத்துவிருப்பாநெல்** *šettu-viruppā-nel*, பெ. (n.) நெல்வகை; a kind of paddy.

**செத்தெழுத்து** *šetteḻttu*, பெ. (n.) ஒற்றெழுத்து (வின்.); consonant.

மறுவ. மெய்யெழுத்து

*[செத்தல் + எழுத்து]*

உயிரற்ற மெய்யெழுத்து

**செத்தை** *šettai*, பெ. (n.) 1. கூரை வேய்வதற்கான தட்டை, புல், சருகு முதலியன; roofing materials like leaves, straw etc. 2. குப்பை; dry rubbish, dried vegetable matter, as grass, leaves, etc., "செத்தையேன் சிதம்பநாயேன்" (தேவா. 996, 1). 3. வைக்கோல் (இ.வ.); hay, straw. 4. ஓலைவேலி (யாழ்ப்.); hedge or fence of palm leaves. 5. அழுகின தசை; putrefied flesh. மாட்டின் காலிற் செத்தை வைத்திருக்கிறது (நாஞ்.). 6. கன்று ஈனிய பிறகு மாடு வெளியிடும் நஞ்சு; pleasanta. 7. வெண் சாம்பல் நிறமுள்ள கடல் மீன் வகை; sea-fish, silvery grey.

ம. செற்ற; க. செத்தெ; தெ. செத்த

*[சா → செத்து → செத்தை]*

**செத்தைகட்டு-தல்** *šettai-kaṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) பழத்துக்கு ஓலை மறைவு கட்டுதல் (யாழ்ப்.); to cover fruit with olas, screening it from coveting or evil eyes.

*[செத்தை + கட்டு-.]*

**செத்தைகுத்து-தல்** *šettai-kuttu-*, 5 செ.கு.வி. (v.i.) மதிலில் முளைக்குஞ் செடிகளைக் களைதல்; to root out parasitic plants on walls. "நித்தியப்படி திருமதில் கோபுரங்களிலே செத்தை குத்தி வைக்கிறதும்" (கோயிலொ. 63).

*[செத்தை + குத்து-.]*

**செத்தைமேய்-தல்** *šettai-mēy-*, 1 செ.குன்றாவி. (v.t.) கூரையைக் காய்ந்த தழை வைக்கோல் முதலியவற்றால் மூடுதல் (வின்.); to cover roof with dried leaves, hay etc.

*[செத்தை + மேய். வேய் → மேய்]*

**செத்தைவேர்** *šettai-vēr*, பெ. (n.) நெல் வயலில் முளைக்குங் களை வகை (நாஞ்.); a kind of weed growing in paddy-fields.

*[செத்தை + வேர்]*

**செத்தோர்ப்புணர்-த்தல்** *šettōr-p-puṇar-*, 2 செ.கு.வி. (v.i.) இறந்தோரை உயிர் பெற்றெழச் செய்தல்; to restore to life, resuscitate. "செத்தோர்ப் புணர்க்கும் விச்சையொடு" (பெருங். மகத. 4:91).

*[செத்தோர் + புணர்-.]*

புணர்த்தல் = உயிர் பெற்றெழச் செய்தல்

**செதில்** *šedil*, பெ. (n.) 1. மீனின் உடல் மேலுள்ள காப்பு உறுப்பு; fish-scale. "பல கடலுஞ் செதிலடங்க ... மீன்வடி வெடுத்தாய்" (அழகர்கலம். 1). 2. மரப்பட்டை (வின்.); outer bark of trees.

ம. செதும்பல்

*[செது → செதில். சில் → சிலு → செலு = சிறு செதிள். செலு → செது]*

**செதிலடுக்கு** *šedil-aḍukku*, பெ. (n.) மீனின் மேல் செதில் செதிலாக உள்ள அமைப்பு; lamella.

*[செதில் + அடுக்கு]*

**செதிள்** *šediḷ*, பெ. (n.) 1. செதில்,1 பார்க்க; see *šedil*,1. 2. தூசி; dust. "நிலஞ்செதி ளெடுக்கு மான்றேர்" (சீவக. 2915). 3. மரப்பட்டை (தொல்.பொருள்.643); bark of a tree. 4. ஓணான் போன்றவற்றின் உடல்மேல் செறிவாக மூடியிருக்கும் விறைப்பான தோல் அடுக்கு; skin.

ம. செதல்

*[சில் → சிலு → செலு → செது → செதிள்]*

**செதிள்வயிற்றுமரங்கொத்தி** *šediḷ-vayiṟṟu-maraṅ-gotti*, பெ. (n.) புல் பச்சை நிற உடலும் மஞ்சள் நிறப்புட்டமும் கொண்ட பறவை; little scaly-bellied green wood pecker.

*[செதிள்வயிற்று + மரங்கொத்தி]*

ஆணின் உச்சந் தலையும், தலைக் கொண்டையும் குங்குமச் சிவப்பாக இருக்கும். பெண்ணின் உச்சியும் கொண்டையும் கருப்பு நிறமானவை. மேற்கு, கிழக்குத் தொடர்ச்சி மலைப்பகுதியில் காணப்படுகிறது.

**செதிளெடு-த்தல்** *šedil-edu-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. தோலையுரித்தல்; to skin off. அங்கே போனால் உன் காலைச் செதிளெடுத்து விடுவேன். 2. முற்றும் போக்குதல்; to remove utterly. "கரு நிறஞ் செதிளெடுப்பான் கருணை செய்கென" (காஞ்சிப்பு. வீராட்ட 43.)

[செதிள் + எடு]

**செது-த்தல்** *šedu-*, 4 செ.கு.வி. (v.i.) 1. ஒளி முதலியன மழுங்குதல்; to get blunt; to lose lustre. செதுக்கணார (புறநா. 261:9). 2. வற்றி யொடுங்குதல் (புறநா. 261:9, உரை); to shrink. 3. சோர்தல்; to be weak. "செதுகாற் குரம்பை" (அகநா. 63).

[செத்தல் → செது-த்தல். செத்தல் = ஒல்லி, மெலிதல்]

**செதுக்கடவேலை** *šedukkaḍa-vēlai*, பெ. (n.) அணிகலன்களில் மணிபதிக்குந் தொழில்; work of inlaying gem in gold jewels by setting gold leaf on it and chiselling.

[செதுக்கு → செதுக்கடவேலை]

**செதுக்கணார்-தல்** *šedu-k-kaṇār-*, 3 செ.கு.வி. (v.i.) விஞ்சியிருத்தல் (புறநா. 261: 9, உரை); to be excessive.

மறுவ. மீதி, மிஞ்சுதல், எஞ்சுதல்

[செது + கண் + ஆர்-.]

**செதுக்கி** *šedukki*, பெ. (n.) செதுக்குப்பாறை பார்க்க; see *šedukku-p-pārai*.

[செதுக்குப்பாரை → செதுக்கி]

**செதுக்கு[1]-தல்** *šedukku-*, 5 செ.கு.வி. (v.i.) 1. புல் முதலியன செதுக்குதல்; to cut off a surface, as in cutting grass; to pare, shave off. 2. மர முதலியன செதுக்குதல்; to plane, how with an adze, chisel. கட்டையைச் செதுக்கிக் கத்திக்குப் பிடி போட்டான்.

ம. செதுக்கு; க., பட. கெத்து; தெ. செக்கு

[செது → செதுக்கு-.]

**செதுக்கு[2]** *šedukku-*, 5 செ.கு.வி. (v.i.) செது,2 பார்க்க; see *šedu-2*.

[செது → செதுக்கு-.]

**செதுக்கு[3]** *šedukku*, பெ. (n.) 1. செதுக்குகை; paring, cutting, chiselling. 2. பூ முதலியவற்றின் வாடல்; that which is faded, dried, as flowers. "செம்பூத் தூய செதுக்குடை முன்றில்" (பெரும் பாண். 338). 3. சேறு (அக.நி.); mud, mire.

[செது → செதுக்கு]

**செதுக்குப்பாரை** *šedukku-p-pārai*, பெ. (n.) புல் மண் முதலியன செதுக்குங் கருவி; tool for cutting grass, soil, etc.

[செதுக்கு + பாரை]

**செதுக்குவேலை** *šedukku-vēlai*, பெ. (n.) 1. மிகையாயுள்ளவற்றைக் கழித்துச் சீர்படுத்தும் கலைத்தொழில்; the art of trimming the excess portion for beautification. 2. செதுக்கடவேலை பார்க்க; see *šedukkada-vēlai*.

[செதுக்கு + வேலை]

**செதுக்குளி** *šedukkuḷi*, பெ. (n.) 1. தச்சனின் உளி; carpenter's chisel. 2. மணி பதித்தற்குரிய தட்டான் கருவி; gold-smith's chisel, used in enchasing.

[செதுக்கு + உளி]

**செதுக்கை** *šedukkai*, பெ. (n.) தழும்பு (பிங்.); scar, cicatrice.

[செது → செதுக்கை]

**செதுகு[1]-தல்** *šedugu-*, 5 செ.கு.வி. (v.i.) தவறுதல்; to err, as in aim; to go wrong. "செதுகாப்படை தொடுப்பேன்" (கம்பரா. நிகும்ப. 130).

[செது → செதுகு-.]

**செதுகு[2]** *šedugu*, பெ. (n.) 1. கூளம்; rubbish, chaff. "குலால னானவன் மண்ணும் நீரும் செதுகுங் கூட்டி (ஈடு, 6. 9:1). 2. சருகு; dried leaves. "செதுகையிட்டுப் புகைக்க அமையும்" (ஈடு, 1. 6:1). 3. தீங்கு; evil. "செதுகறா மனத்தார்" (தேவா. 381, 9).

ம. செதுக்கு; க. சத்தெ, சதெ, செதாக; தெ. செத்த; து. சதெ

[செத்தை → செது → செதுகு]

**செதுகை** *šedugai*, பெ. (n.) தீமை; evil. "செதுகைப் பெருந்தானவர்" (கம்பரா. நாகபா. 22)

[செதுகு → செதுகை]

**செதும்பல்** *šedumbal*, பெ. (n.) செதும்பு,1 பார்க்க; see *šedumbu,1*. "செதும்பற் றாமரைச்செவ்விதழ் போல" *(பெருங். உஞ்சைக். 40: 323).*

*[செதும்பு → செதும்பல்]*

**செதும்பு¹-தல்** *šedumbu-*, 5 செ.கு.வி. (v.i.) ஈரம் *உறைத்தல்;* to become damp and moist, as from excessive sprinkling of water; to be soaked. செதும்ப நீர்தெளி (இ.வ.).

**செதும்பு²** *šedumbu*, பெ. (n.) *1. சேறு;* mud, mire. "செகுத்தற் நீம்பால் செதும்பு படப் பிலிற்றி" *(பெருங். உஞ்சைக். 49: 112). 2. குறைவாக ஓடும் நீர்;* thin current of water, as of rivers in summer. "இன்னுரைச் செதும்பரற்றுஞ் செவ்வியுள்" *(கலித். 48).*

*[செதுக்கு² → செதும்பு]*

**செதுமகவு** *šedu-magavu*, பெ. (n.) *இறந்து பிறக்கும் பிள்ளை, சாபிள்ளை;* still-born child. "செதுமகப் பலவும் பெற்று" *(சீவக. 1124).*

*[(செத்த) செது + மகவு]*

**செதுமொழி** *šedu-moli*, பெ. (n.) *தீ மொழி, பொல்லாச் சொல்;* evil words. "செதுமொழி சீத்த செவி" *(கலித். 68).*

*[செது + மொழி]*

**செதுவல்** *šeduval*, பெ. (n.) *பட்டுப் போகை;* withering, drying. "செதுவன் மரத்திற் சேக்கை யாதலின்" *(பெருங். மகத. 15:20)*

*[செது¹ → செதுவல்]*

**செந்தட்டி** *šen-datti*, பெ. (n.) செந்தொட்டி¹ பார்க்க; see *šen-dotti,¹*.

**செந்தட்டு** *šen-dattu*, பெ. (n.) *1. தன்மேல் விழும் அடியைத் தடுக்கை;* parrying. *2. செயல் வெற்றி கிட்டுமாறு செய்யும், மறைந்து கொள்ளல் முதலிய செயற்பாடு;* scheme; knavish contrivance to secure an object, as evading a creditor or the tax gatherer.

*[செம்(மை) + தட்டு - செந்தட்டு]*

**செந்தண்டீன்(னு)-தல்** *šendandīn [nu]-*, 5 செ.கு.வி. (v.i.) *நோயுற்ற கதிரை ஈனுதல்* (யாழ்ப்.); to put forth blighted ears.

*[செந்தண்டு + ஈன்(னு)]*

**செந்தண்டு** *šendandu*, பெ. (n.) *1.* செந்தண்டுக் கீரை பார்க்க; see *šendandu-k-kīrai*. *2. நோயாற் சிவந்த கதிர்* (யாழ்ப்.); red spikes of blighted paddy. *3. பவளம்* (யாழ்.அக.); coral.

ம. செந்தண்டு

*[செம்(மை) + தண்டு]*

**செந்தண்டுக்கீரை** *šendandu-k-kīrai*, பெ. (n.) *செந்நிறமுள்ள கீரைவகை* (வின்.); red spinach.

ம. செந்தண்டுசீர

*[செந்தண்டு + கீரை]*

**செந்தணக்கு** *šendanakku*, பெ. (n.) *1. முட்டைக் கோங்கு எனும் மரம்;* whirling nut. *2. கோங்கிலவு மரவகை;* false tragacanth tree. *3. வெண்டாளி;* white catamaran tree.

ம. செந்தணக்கு

*[செம்(மை) + தணக்கு]*

**செந்தணல்** *šen-danal*, பெ. (n.) *கனிந்து கொண்டிருக்கும் அழல்* (உ.வ.); glowing red-hot cinder.

ம. செந்தணல்; க. கெந்தணலு

*[செம்(மை) + தணல். தழல் → தணல்]*

**செந்தணற்கொடி** *šen-danar-kodi*, பெ. (n.) செந்தழற்கொடி பார்க்க; see *šen-dalar-kodi*

*[செந்தணல் + கொடி]*

**செந்தம்** *šendam*, பெ. (n.) *எழுத்தாணி யென்னும் பூடு* (மலை.); style plant.

ம. செந்தம்

**செந்தமிழ்** *šendamil*, பெ. (n.) *கலப்பற்ற தூய தமிழ்;* refined, standard Tamil, free from all corruptive elements, opp. to kodu-n-tamil "செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணி" *(தொல். சொல். 398).*

ம. செந்தமிழ்

*[செம்(மை) + தமிழ்]*

**செந்தமிழ்நாடு** *šen-damil-nādu*, பெ. (n.) *1. செந்தமிழ் வழங்கும் பகுதி;* portion where standared Tamil is in vogue. *2. வைகையாற்றின் வடக்கும் மருதயாற்றின் தெற்கும் மருவூரின் மேற்கும் கருவூரின் கிழக்கும் ஆகிய செந்தமிழ் வழங்கும் நிலம்* (தொல்.சொல். 400, உரை);

the country of the standard Tamil, said to be bounded on the south by the river Vaigai on the north by the river Mrudai on the east by Maruvūr, and on the west by Karuvūr.

[செந்தமிழ் + நாடு]

**செந்தமிழ்நிலம்** *šen-damil-nilam*, பெ. (n.) செந்தமிழ்நாடு பார்க்க; see *šen-damil-nādu*. "செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணி" (தொல். சொல். 398)

[செந்தமிழ் + நிலம்]

**செந்தமிழிலக்கணம்** *šentamil-ilakkaṇam*, பெ. (n.) வீரமாமுனிவரால் இயற்றப்பட்ட செந்தமிழ் மொழியின் இலக்கணம்; a grammar of classical Tamil by Beschi.

[செந்தமிழ் + இலக்கணம்]

**செந்தயிர்** *šen-dayir*, பெ. (n.) செந்நிறமுள்ள கட்டித்தயிர்; reddish curds. "வெண்டயிருஞ் செந்தயிரும் விராய்" (கலிங். 506).

[செம்(மை) + தயிர்]

**செந்தரா** *šen-darā*, பெ. (n.) கசப்புள்ள மருந்துக்கொடி வகை (பதார்த்த. 581); a kind of bitter climber.

[செம் → தரா]

**செந்தருப்பை** *šen-daruppai*, பெ. (n.) நச்சுப் புல்வகை (மலை.); a kind of poisonous grass.

[செம்(மை) + தருப்பை]

**செந்தரை** *šendarai*, பெ. (n.) கரை விளங்கு மரவகை (L.); a species of white cadar.

**செந்தலி-த்தல்** *šen-dali-*, 4 செ.கு.வி. (v.i.) 1. செழிப்பாதல் (திவ். திருவாய். 6. 8: 4 பன்னீ.); to be rich, fertile, as soil. 2. செவ்வியுறுதல்; to be fresh and attractive. "நம்முகம் பண்டுபோலே செந்தலித்திருக்க நாம் காண்பதெப்போதோ? (திவ்.திருநெடுந். 12, வியா. பக்.107).

[செம் + தளிர் - செந்தளிர் → செந்தலி]

**செந்தலிப்பு** *šendalippu*, பெ. (n.) செழிப்பு; fertility, prosperity. "அவனுடைய செந்தலிப் பேயிறே அத்தேசத்திற்குஞ் செந்தலிப்பு" (திவ். திருநெடுந். 12: 105, வியா).

[செந்தளிர் → செந்தலி → செந்தலிப்பு]

**செந்தலை** *šen-dalai*, பெ. (n.) அரைக்கால்; the fraction 1/8, a mercantile slang. "கருந்தலை செந்தலை தங்கான் றிரிக்கால்" (தனிப்பா. 87: 171)

**செந்தலைக்கதிர்க்குருவி** *šendalai-k-kadir-k-kuruvi*, பெ. (n.) உச்சந்தலை செம்பழுப்பாகவும் உடலின் மேற்பகுதி கருங் கோடுகளோடும் கீழ்ப்பகுதி துருநிறமாகவும் இருக்கும் பறவை; golden-headed fantail warbler.

[செந்தலை + கதிர்க்குருவி]

இது கொடைக்கானல், நீலகிரி மலைப் பகுதிகளில் காணப்படும் பறவை வகை.

**செந்தலைக்கழுகு** *šendalai-k-kalugu*, பெ. (n.) கருப்பு நிற வுடலையும், தலை, கழுத்து, தொடை, கால் ஆகிய பகுதிகள் சிவப்பு நிறமாகவும் உள்ள பறவை; red-headed vulture.

[செந்தலை + கழுகு]

தமிழ்நாடு முழுமையும் வறள் காடுகளிலும், மக்கள் வாழ்விடத்தை அடுத்தும் காணப்படும் பறவை. பிணம் தின்னும் பறவை. மற்ற வகைக் கழுகுகளினும் வலிமை வாய்ந்ததால் கழுகு அரசன் (King vulture) என்று அழைக்கப்படுகிறது. கழக இலக்கியங்களில் 'செஞ்செவி எருவை' எனக் குறிக்கப்படுகிறது.

**செந்தலைக்கிளி** *šendali-k-kiḷi*, பெ. (n.) நீலந்தோய்ந்த சிவப்பு நிறத்தலையும் மஞ்சள் நிற அலகும் கொண்ட கிளி; plum-headed parakeet.

[செந்தலை + கிளி]

**செந்தலைப்பஞ்சுருட்டான்** *šendali-p-pañjuruṭṭāṉ*, பெ. (n.) செம்பழுப்பு நிறத் தலையும் புல்பச்சை நிற உடலும் கொண்ட பறவை; chestnut-headed bee.

[செந்தலை + பஞ்சுருட்டான்]

மேற்குத் தொடர்ச்சி மலையைச் சார்ந்த இலையுதிர் காடுகளில் காணப்படும் பறவை.

**செந்தலைப்புலி** *šendalai-p-puli*, பெ. (n.) சிவப்புத் தலைப்பாகை அணிந்த காவல்

*துறைப் பணியாளர்;* police constable, as a tiger with red turban, used in contempt mod.

*[செம் + தலை + புலி]*

*ஆங்கிலேயர் ஆட்சி முதல் 1972ஆம் ஆண்டு வரை காவலரின் தலைத் தொப்பி சிவப்பு வண்ணத்தில் இருந்தது. பின்னர் சீருடை மாறிவிட்டது.*

**செந்தலைப்பூங்குருவி** *šendali-p-pūṅguruvi,* பெ. (n.) **தலை பிடரி, மார்பு, வயிறு ஆகிய பகுதிகள் ஆரஞ்சு நிறம் தோய்ந்த செம்பழுப்பாக இருக்கும் குருவியினப் பறவை வகை;** orange headed thrush.

*[செந்தலை + பூங்குருவி]*

*நிழல் அடர்ந்த மலையருவிகள், நிழலான ஏலக்காய்த் தோட்டங்கள், மூங்கில் காடுகள் ஆகிய பகுதிகளில் காணப்படும் பறவை.*

**செந்தலைமுத்தி** *šendalai-mutti,* பெ. (n.) எலிவகை (வின்.); a kind of rat.

*[செம் + தலை + முத்தி]*

**செந்தலைவல்லூறு** *šendalai-vallūṟu,* பெ. (n.) **செந்நிறத் தலையை உடைய ஒரு வகை வல்லூறு;** marlin redhead falco.

*[செந்தலை + வல்லூறு]*

**செந்தலைவிரியன்** *šen-dalai-viriyaṉ,* பெ. (n.) நச்சுப் பாம்பு வகை (யாழ்அக.); russell's viper.

*[செந்தலை + விரியன்]*

**செந்தழல்** *šen-dalal,* பெ. (n.) 1. **பொங்கி யெரியுந் தீ;** blazing fire. "செந்தழலே வந்தழலைச் செய்திடினும்" *(திவ்.பெருமாள். 5:6).* 2. **செந்தணல், கனிந்து கொண்டிருக்கும் தீ;** glowing red hot cinder. 3. **18வது விண்மீன்** (கேட்டை) (யாழ்.அக.); the 18th star.

*[செம் + தழல்]*

**செந்தழற்கொடி** *šendalaṟ-kodi,* பெ. (n.) **பவளக் கொடி** (யாழ்அக.); creeper-like coral.

*[செம் + தழல் + கொடி]*

செம்மையான கொடி போன்ற பவளம்

**செந்தளி-த்தல்** *šendaḷi-,* 4 செ.கு.வி. (v.i.) **செந்தலி–** பார்க்க; see *šen-dali-.*

*[செம் + (தளிர் →) தளி]*

**செந்தளிப்பு** *šen-daḷippu,* பெ. (n.) செந்தளிர்ப்பு பார்க்க; see *šen-daliṟppu.*

*[செந்தளி → செந்தளிப்பு]*

**செந்தளிர்** *šen-daḷir,* பெ. (n.) **செந்நிறமுள்ள இளந்தளிர்;** fresh, tender sprout, as reddish. "செந்தளிர் மராஅத்துப் பைங்காய்" *(பெருங். மகத. 1:114)*

ம. செந்தளிர்; க. கெந்தளிர்

*[செம் + தளிர்]*

**செந்தளிர்ப்பு** *šen-daḷirppu,* பெ. (n.) 1. **செழிப்பு** (வின்.); fertility, luxuriance, prosperity. 2. மகிழ்ச்சி (யாழ்ப்.); joy, happiness.

*[செந்தளிர் → செந்தளிர்ப்பு]*

**செந்தாது** *šen-dādu,* பெ. (n.) **பொன்** (திவா.); gold.

*[செம் + தாது]*

**செந்தாமரை** *šendāmarai,* பெ. (n.) **செந்நிறமுள்ள தாமரை;** red lotus. "அஞ்செந் தாமரை யகவித ழன்ன" *(பெருங். உஞ்சைக். 53: 149).*

ம. செந்தாமர, செந்தார்; க. கெந்தாவரெ

*[செம்(மை) + தாமரை. வெண் தாமரை போல செந்தாமரை நிறத்தால் பெயர் பெற்றிருக்கிறது]*

**செந்தார்** *šen-dār,* பெ. (n.) **கிளிக்கழுத்தின் செவ்வரை;** bright red streaks round parrot's neck. "செந்தார்ப் பைங்கிளி முன்கை யேந்தி" *(அகநா. 34).*

*[செம் + தார்]*

**செந்தார்ப்பைங்கிளி** *šen-dār-p-paiṅgiḷi,* பெ. (n.) **பச்சைக்கிளி;** rose-ringed paraker.

*[செந்தார் + பைங்கிளி]*

இதன் கழுத்தில் உள்ள ரோசா நிற வளையக் கோடு கொண்டு இலக்கியங்களில் செந்தார்ப் பைங்கிளி என அழைக்கப்படுகிறது.

**செந்தாரை** *šen-dārai,* பெ. (n.) **வெண்மை கலந்த சிவப்பு** (இ.வ.); pale redness.

*[செம் + தாரை. தாரை = கோடு]*

**செந்தாழம்பழம்** *šen-dāḷam-paḷam,* பெ. (n.) அன்னாசிப்பழம் (மூ.அ.); pine-apple fruit.

*[செம் + தாழம்பழம்]*




**செந்தாழை**[1] *šen-dāḻai*, பெ. (n.) 1. செந்நிறமுள்ள தாழை வகை (பதார்த்த. 622); red species of screw pine. 2. கோங்கிலவு மரவகை; false tragacanth. 3. பார்வை மறைவுண்டாக்கும் கண்ணோய் (வின்.); redness of the eye causing obscurity of sight. 4. பயிரைச் செந்நிறமாக்கும் நோய்; red blight of paddy. 5. உதட்டிற் புண்ணுண்டாக்கி வாயில் கெட்ட நாற்றம் அடைவிக்கும் நோய் (வின்.); a disease which causes the mouth to smell badly, making the lips sore.

*[செம் + தாழை]*

**செந்தாழை**[2] *šen-dāḻai*, பெ. (n.) நெல்வகை (குருகூர்ப். 58); a kind of paddy.

*[செம் + தாழை]*

**செந்தாள்** *šen-dāḷ*, பெ. (n.) நோய்ப்பட்ட பயிரின் செந்நிறமான கதிர் (யாழ்ப்.); red spikes of blighted paddy.

*[செம் + தாள்]*

**செந்தாளி** *šen-dāḷi*, பெ. (n.) கொடிவகை (L.); red convolvulus.

*[செம் + தாளி]*

**செந்தி** *šendi*, பெ. (n.) செந்தில் பார்க்க (கந்தபு. முதனா. 6); see *šendil.*

*[செந்தில் → செந்தி]*

**செந்திரிக்கம்** *šendirikkam*, பெ. (n.) செந்திருக்கம் பார்க்க; see *šendirukkam.*

*[செந்திருக்கம் → செந்திரிக்கம்]*

**செந்திரு** *šen-diru*, பெ. (n.) 1. திருமகள்; goddess of wealth. "செந்திரு நீரல்லீரே லவளும்வந் தேவல் செய்யும்" (கம்பரா. மாயாசனக. 53). 2. தாளகம் (மூ.அ.); yellow sulphide of arsenic.

*[செம் + திரு - செந்திரு]*

**செந்திருக்கம்** *šendirukkam*, பெ. (n.) 1. ஓலைக் கடிதத்தின் மூடு சுருள் (வின்.); ola envelope of an ola letter. 2. காற்றாடிக் கயிற்றில் ஏறிச் செல்லுமாறு தொடுக்கும் ஓலைச் சுருள் (நாஞ்.); an ola scroll passed through the string of a flying kite.

ம. செந்திரிக்க

Skt. candraka

*[செந்துருக்கம் → செந்திருக்கம்]*

**செந்திருக்கு** *šendirukku*, பெ. (n.) 1. செடி வகை (மூ.அ.); a plant. 2. செந்திருக்கம்,2 பார்க்க; see *šendirukkam,2.*

*[செந்திருக்கம் → செந்திருக்கு]*

**செந்திருக்கை**[1] *šen-dirukkai*, பெ (n.) திருக்கை மீன் வகை; a kind of dirukkai fish.

*[செம் + திருக்கை]*

**செந்திருக்கை**[2] *šen-dirukkai*, பெ (n.) மஞ்சள் வகை (யாழ்.அக.); a kind of turmeric.

**செந்தில்** *šendil*, பெ. (n.) முருகனின் அறுபடை வீடுகளுள் ஒன்றாகிய தூத்துக்குடி மாவட்டத்திலுள்ள திருச்செந்தூர்; Tiru-c-cendūr, one of six abodes of Lord Murugan in Thoothukudi distirict. "வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தில்" (புறநா. 55: 18)

திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், பழனி, திருத்தணிகை, பழமுதிர்ச்சோலை, சுவாமி மலை ஆகியன முருகனின் ஆறு படை வீடுகள் ஆகும். இவற்றிற்கு வேறு பெயர்களும் உள. அவை திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவின்குடி, திருவேரகம், குன்றுதோராடல், பழமுதிர் சோலை ஆகியனவாகும்.

திருச்சீரலைவாய் என்பது திருச்செந்தூரின் மறுபெயர்.

*[சேந்து + இல் - சேந்தில் → செந்தில்]*

**செந்திலகம்** *šen-dilagam*, பெ. (n.) செடி வகை (புட்ப. 29); a kind of plant.

**செந்திறம்** *šendiṟam*, பெ. (n.) 1. சிவப்பு (சங்.அக.); redness. 2. குறிஞ்சி யாழ்த்திறத் தொன்று (திவா.); a secondary melody-type of the *kuriñji class.* 3. தெளிவு; clearness. "செந்திறத்த தமிழோசை" (திவ். திருநெடுந். 4).

ம. செந்நிறம்

*[செம் + திறம். நிறம் → திறம்]*

**செந்தினை** *šen-dinai*, பெ. (n.) 1. தினை வகை; Italian millet. "செந்தினையிடியுந் தேனும்" (கந்தபு. வள்ளி 208). 2. கம்புப்பயிர் (சூடா.); bulrush millet.

ம. செந்தினை

[செம்(மை) + தினை]

**செந்தீ** *šen-dī*, பெ. (n.) கொழுந்து விட்டெரியுந் தீ; blazing fire. "ஊருளெழுந்த வுருகெழு செந்தீக்கு" (நாலடி, 90).

ம. செந்தீ

[செம் + தீ]

**செந்தீக்கரப்பன்** *šendī-k-karappan*, பெ. (n.) கரப்பன் கட்டி வகை; erysipelas, a kind of cutaneous eruption.

ம. செந்தீக்கரப்பன்

[செந்தீ + கரப்பன்]

**செந்தீவண்ணன்** *šendī-vaṇṇaṉ*, பெ. (n.) 1. சிவன்; Šivaṉ. 2. செவ்வாய் (திவா.); Mars.

நெருப்பின் நிறமுடையவன் என்ற பொருள் அடிப்படையில் இச்சொல் சிவனையும், செவ்வாயையும் குறித்தது.

[செந்தீ + வண்ணன்]

**செந்தீவளர்ப்போர்** *šen-dī-vaḷarppōr*, பெ. (n.) (ஓமத்தீயை வளர்ப்பவர்) அந்தணர் (யாழ்அக.); Brahmins, as tending the sacred fire.

[செந்தீ + வளர்ப்போர்]

**செந்தீவேள்-தல் (செந்தீவேட்டல்)** *šen-dī-vēḷ*, 16 செ.குவி. (v.i.) வேள்வி (யாகம்) செய்தல்; to perform Vēdic sacrifice "செந்தீவேட்ட சிறப்புரைத் தன்று" (பு.வெ. 9: 15, கொளு).

[செந்தீ + வேள்-.]

**செந்து**[1] *šendu*, பெ. (n.) 1. உயிரி (பிங்.); anything possessed of life, living being, creature. 2. ஊர்வன; animal of the inferior species, as the lower brutes, insects, reptiles, worms etc. 3. நரி (பிங்.); jackal. 4. அணு; atom. 5. ஏழுநிரய (நரக)த்தொன்று (பிங்.); a hell, one of ēḻu-naragam.

வ. ஜந்து.

**செந்து**[2] *šendu*, பெ. (n.) 1. பெரும் பண்களுள் ஒன்று; a primary melody-type. 2. ஓசை; sound.

**செந்து**[3] *šendu*, பெ. (n.) 1. சடாமாஞ்சி (மலை.); spikenard herb. 2. பெருங்காயம் (மூ.அ.); assafoetida.

**செந்துத்தி** *šen-dutti*, பெ. (n.) சிறுதுத்தி (மூ.அ.); fine-winged capsule rose mallow.

[செம் + துத்தி]

**செந்துத்தீ** *šenduttī*, பெ. (n.) செந்து[3] பார்க்க; see *šendu*.

[செந்து → செந்துத்தீ]

**செந்தும்பி** *šen-dumbi*, பெ. (n.) ஏறக்குறைய 14 விரலம் (அங்குலம்) நீளமும் செந்நிறமும் உடைய கடல்மீன் வகை; sea-fish, reddish, attaining nearly 14 in. in length.

[செம் + தும்பி. தும்பி = மீன்வகை]

**செந்தும்பை** *šen-dumbai*, பெ. (n.) தும்பை வகை (மூ.அ.); a species of spider flower, shrub.

ம. செந்தும்ப

[செம்(மை) + தும்பை]

**செந்துமி** *šen-dumi*, பெ. (n.) செம்மரம்; Indian red wood tree or bastard cedar.

**செந்துரசம்** *šen-durašam*, பெ. (n.) ஒருவகைப் பிசின்; a resinous substance.

**செந்துரிப்போ-தல்** *šenduri-p-pō-*, 8 செ.குவி. (v.i.) மட்பாண்டத்தின் அடியில் சிறு ஓட்டை விழுதல்; to form a hole at the bottom of a earthen pot.

[சிந்தூரி → செந்தூரி + போ-.]

**செந்துருக்கம்**[1] *šen-durukkam*, பெ. (n.) எழுதிய ஓலையின் மேற் சுற்றும் ஓலைச் சுருள் (யாழ்அக.); ola leaf wound round an ola.

[சந்திரகம் → (செந்திரகம்) → செந்துருக்கம். சந்திரகம் = ஓலைச்சுருள்]

**செந்துருக்கம்**[2] *šen-durukkam*, பெ. (n.) செடி வகை (M.M. 776); safflower.

ம. செந்துரகம்

[செம் + துருக்கம்]

**செந்துருக்கு** *šen-durukku,* பெ. (n.) செந்துருக்கம் பார்க்க; see *šen-durukkam.*

*[செம் + துருக்கு]*

**செந்துருக்கை** *šen-durukkai,* பெ. (n.) செந்துருக்கம் பார்க்க; see *šen-durukkam.*

*[செம் + துருக்கை]*

**செந்துருத்தி** *šen-durutti,* பெ. (n.) செம்பாலைப் பண்களுள் ஒன்று *(சிலப். 8:35, உரை);* an ancient melody-type.

*[செம் + துருத்தி]*

**செந்துருதி** *šen-durudi,* பெ. (n.) குறிஞ்சி யாழ்த்திறத்துள் ஒன்று *(பிங்.);* a secondary melody type of the kuriñji class.

*[செம் + துருதி]*

**செந்துளசி** *šen-dulaši,* பெ. (n.) செந்நிறமுள்ள துளசி வகை *(பதார்த்த. 303);* red basil.

ம. செந்துளசி

*[செம் + துளசி]*

**செந்துளிர்** *šen-dulir,* பெ. (n.) செந்தளிர் பார்க்க; see *šen-dalir.*

*[செந்தளிர் → செந்துளிர்]*

**செந்துறை** *šen-durai,* பெ. (n.) பாடற்கேற்ற செய்யுள் வகை *(யாப்.வி.537);* a kind of composition adapted to singing, dist. fr. vendurai.

*[செம் + துறை]*

விகார வகையான் அமரராக்கிச் செய்யும் அறுமுறை வாழ்த்தினைப்போலாது உலகினுள் இயற்கை வகையான் இயன்ற மக்களைப் பாடுவது, செந்துறைப் பாடாண் பாட்டு எனப்படும். (தொல். பொருள். நச். 82).

பாடாண் பாட்டின்கண் செந்துறைப் பாட்டு இவையெனக் கூறப்படவில்லை. எனவே எல்லாப் பாட்டும் செந்துறைப் பாட்டே ஆம். (தொல். பொருள். இளம். 80).

**செந்துறைச்செந்துறை** *šen-durai-c-cendurai,* பெ. (n.) இசைப்பாட்டு வகை *(யாப்.வி. 537);* a kind of musical composition.

*[செந்துறை + செந்துறை]*

**செந்துறைப்பாட்டு** *šen-durai-p-pāttu,* பெ. (n.) செந்துறை பார்க்க; see *šen-durai.*

**செந்துறைமார்க்கம்** *šen-durai-mārkkam,* பெ. (n.) நாற்பெரும் பண்ணிலும் இருபத்தொரு திறனிலும் பாடக்கூடிய இசைப்பாடல் *(யாப்.வி. 537);* musical composition which could be sung in any of the four major paṇ and of the 21 diraṉ.

*[செந்துறை + மார்க்கம்]*

**செந்துறைவெண்பா** *šen-durai-venbā,* பெ. (n.) செந்துறைவெள்ளை பார்க்க; see *šen-durai-vellai.*

*[செந்துறை + வெண்பா]*

**செந்துறைவெள்ளை** *šen-durai-vellai,* பெ. (n.) குறள் வெண்பாவின் இனத்துள் ஒன்றாகி, ஒழுகிய ஓசையும் விழுமிய பொருளும் பெற்று இரண்டடியாய்த் தம்முள் அளவொத்து வருவது *(காரிகை, செய்.6);* a species of rythemic couplet of equal metrical quantitiy, dealing with noble topics, a variety of kural-venbā.

மறுவ. வெண்செந்துறை

எ-டு. "ஆர்கலி யுலகத்து மக்கட்கெல்லாம்
ஓதலிற் சிறந்தன் றொழுக்க முடைமை"
(முதுமொழிக். 1)

*[செந்துறை + வெள்ளை]*

**செந்தூக்கு**[1] *šen-dūkku,* பெ. (n.) 1. நேராகத் தூக்குகை; lifting straight up, direct lift. செந்தூக்காய்த் தூக்கிக் கொண்டு போனான். 2. செங்குத்து; steepness, as of rock. செந்தூக்கான மலையினின்றும்' *(பு.வெ. 1:11, உரை).* 3. தாளவகை *(சிலப். 14:150, உரை);* a mode of beating time.

ம. செந்தூக்கு

*[செம் + தூக்கு]*

**செந்தூக்கு**[2] *šen-dūkku,* பெ. (n.) கையால் இலேசாய்த் தூக்கும் கனம், கனமுள்ளது *(யாழ்.அக.);* weight which can be easily lifted by a person.

*[செம் + தூக்கு. தூக்கு = தூக்கக்கூடியது.]*

**செந்தூட்படுத்து-தல்** *šendūt-paduttu*, 5 செ.கு.வி. (v.i.) கெடுத்தல் (நாசஞ்செய்தல்); to reduce to dust. "வழக்கையெல்லாம் செந்தூட்படுத்தி" (பேரின்பக்கீர்த். பக். 103).

*[செந்தூள் + படுத்து-.]*

**செந்தூரத்தாசி** *šendūra-t-tāši* பெ. (n.) கந்தகம் (சங்.அக.); sulphur.

**செந்தூரத்தாதி** *šendūra-t-tādi*, பெ. (n.) செந்தூரத்தாசி பார்க்க (மூ.அ.); see *šendūra-t-tāši.*

*[செந்துரத்தாசி → செந்தூரத்தாதி]*

**செந்தூரம்** *šendūram*, பெ (n.) சிந்தூரம் (உ.வ.); red metallic oxide.

செந்தூரம் > Skt. sindūra

*[செந்தூள் → செந்தூரம்]*

**செந்தூரி-த்தல்** *šendūri-*, 4 செ.கு.வி. (v.i.) சிந்தூரமாக்குதல் (யாழ்.அக.); to calcine.

*[செந்தூரம் → செந்தூரி-.]*

**செந்தூள்** *šen-dūḷ*, பெ. (n.) போர்க்களத்தி லுள்ள அரத்தமயமான தூளி; red dust, dust red from the blood of the slain in battle. செந்தூள் கருந்தூள் பறக்கிறது (யாழ்.அக.).

*[செம் + தூள்]*

**செந்தூள்கருந்தூள்பறத்தல்** *šendūḷ-karundūḷ-paṟattal*, பெ. (n.) பொருதல் முதலிய செய்கையின் கடுமையை உணர்த்துங் குறிப்பு; expr. denoting fierceness of combat in battlefield or vehemence of action in general.

*[செந்தூள் + கருந்தூள் + பறத்தல்]*

**செந்தூள்பறத்தல்** *šendūḷ-paṟattal*, பெ. (n.) செந்தூள்கருந்தூள்பறத்தல் (இவ.) பார்க்க; see *šendūḷ-karundūḷ-paṟattal.*

*[செந்தூள் + பறத்தல்]*

**செந்தெங்கு** *šen-deṅgu*, பெ. (n.) செந்நிறத் தேங்காய் காய்க்கும் தென்னை வகை (இவ.); a variety of coconut bearing red fruit.

ம. செந்தெங்கு; க. செந்தெங்கு; குட. கென்தெங்கெ

*[செம் + தெங்கு]*

**செந்தேன்** *šendēṉ*, பெ. (n.) 1. அறுவகைப் புகைப்பொருள்களுள் ஒன்று (சீவக. 534, உரை); a kind of frankincense one of six dūba-varukkam. 2. உயர்ந்த வகைத் தேன்; honey of superior quality. "செந்தேன் பருகி" (கம்பரா. மாயாசனக. 86).

ம. செந்தேன்

*[செம் + தேன்]*

**செந்தொட்டி**[1] *šen-doṭṭi*, பெ. (n.) 1. காஞ்சொறி (பதார்த்த. 471); climbing nettle. 2. சிறு காஞ்சொறி (மலை.); small climbing nettle. 3. உடலின் மீது பட்டால் அரிப்பையுண்டாக்கும் ஒருவகைச் சிறு கொடி; a creeper which when touched, causes irritation to the skin.

*[சேர் + தொட்டி. தொட்டி = செடி. இச்செடியைச் சேர்ந்தால், செடியைத் தொட்டால் அரிப்பையுண்டாக்கி, அவ்விடத்தைச் செந்நிறமாக்கும் தன்மை யுடையது]*

**செந்தொட்டி**[2] *šen-doṭṭi*, பெ. (n.) செப்புத் தொட்டி நஞ்சு (யாழ்.அக.); a prepared arsenic.

*[செம் + தொட்டி]*

செம்மையான தொட்டி நஞ்சு

**செந்தொடை** *šen-dodai*, பெ. (n.) 1. சிவப்பு மாலை; garland of red flowers. 2. மோனை முதலிய அமையாது வேறுபடத் தொடுக்குந் தொடை (காரிகை, உறுப். 17); versification in which mōṉai etc., are neglected. 3. அம்பு முதலியவற்றை எய்யுங்குறி; aim in shooting. "செந்தொடை பிழையா வன்க ணாடவர்" (புறநா. 3:20).

*[செம் + தொடை]*

செந்தொடை : எ-டு

"பூத்த வேங்கை வியன்சினை யேறி
மயிலினம் அகவும் நாடன்
நன்னுதற் கொடிச்சி மனத்தகத்தோனே"

**செந்தொடைமருள்** *šen-dodai-maruḷ*, பெ. (n.) இனவெழுத்துப் பெற்றுத் தொடையும், தொடை விகற்பமும் போலாது தொடுப்பது (யாப்.வி.53); a typical poetical grammar reference.

*[செம் + தொடை + மருள்]*

**செந்தொடையன்** *šen-dodaiyan*, பெ. (n.) செந்நிறப் பூமாலையை அணிந்த, வைரவன் (வின்.); Bairavan, as wearing a garland of red flowers.

*[செம் + தொடையன்]*

**செந்தோன்றி** *šen-dōnri*, பெ. (n.) 1. காந்தள் மலர் (மலை.); Malabar glory lily. 2. செங்கழுநீர் (வின்.); red Indian water lily.

*[செம் + தோன்றி]*

**செந்நகரை** *šen-nagarai*, பெ. (n.) 1. எட்டு விரல நீளமும் செந்நிறமுமுள்ள கடல் மீன் வகை; sea fish, reddish, attaining 8 in. in length. 2. ஒரு வகை மரம் (தைலவ. தைல. 135); a species of live linden.

*[செம் + நகரை. நகரை = மீன்]*



செந்நகரை

**செந்நடை** *šen-nadai*, பெ. (n.) நாளும் தவறாது நிகழும் தூய வழிபாட்டு முறைமை; daily or the adore rituals in a temple. "இவ்வூர்த் திருமேற்றாகி ஆழ்வார்க்கு வைத்த திருச்செந்நடை நிசதி நெல்லுக் குறுணி நானாழி யால் சந்திராதித்தவல் வைத்தோம். (தெ. க. தொ. 19, கல் 351)

*[செம் + நடை]*

**செந்நடையந்தாதி** *šen-nadai-y-andādi*, பெ. (n.) செய்யுளின் இறுதியடியின் இறுதிச் சீரும் முதலடியின் முதற்சீரும் ஒன்றாகாமல் அடிதோறும் எழுத்து, அசை, சீர் முதலியன, அந்தாதியாக வருந்தொடை (யாப்.வி. 52, 184); a kind of metrical composition in which the last syllable of every line occurs at the beginning of the next line, the last syllable of the last line and the first syllable of the first line being dissimilar.

*[செம் + நடை + அந்தாதி]*

*அந்தாதியை ஈறுதொடங்கி என்பர்*

**செந்நாகம்** *šen-nāgam*, பெ. (n.) 1. செந்நிறமுள்ள நாகப் பாம்பு வகை; red cobra. 2. செம்பாம்பு (கேது); descending node. "செந்நாகமோடு கருநாகத்தின் செய்கை பெற்று" (கந்தபு. மகாசாத்தா. 25).

*[செம் + நாகம்.]*

**செந்நாடிக்கா** *šen-nādikkā*, பெ. (n.) மூக்கிரட்டை (மலை.); spreading hogweed.

**செந்நாப்போதார்** *šennāp-pōdār*, பெ. (n.) செஞ்சொல் கமழும் செந்நாவாகிய தாமரையையுடைய திருவள்ளுவர்; the poet Tiruvaḷḷuvar. "மறுவில் புலச்செந்நாப் போதார்" (வள்ளுவமா. 21).

*[செம் + நா(ப்)போதார்]*

நாப்போதார் = செந்நாவாகிய தாமரையை யுடையவர்

**செந்நாய்** *šen-nāy*, பெ. (n.) செந்நிறமுள்ள நாய் வகை; brown - coloured dog. "வேட்டச் செந்நாய் கிளைத்தூண் மிச்சில்" (குறுந். 56).

ம. செந்நாயி; க. கெம்பு நே; பட. கென்னெ

*[செம் + நாய் - செந்நாய் = செந்நிற உடலும் கறுப்பு நிறவாலும் உடைய காட்டு நாய்]*



செந்நாய்

**செந்நாயுருவி** *šen-nāyuruvi*, பெ. (n.) நாயுருவி வகை (பதார்த்த. 396); a kind of dog-prick.

*[செம்(மை) + நாயுருவி]*

**செந்நிலம்** *šen-nilam*, பெ. (n.) *1.* போர்க்களம்; battle-field. *2.* செந்தரை; red soil.

க. கெந்நெல

*[செம்(மை) + நிலம்]*

அரத்தத்தால் சிவந்த நிலம்

**செந்நிலை** *šen-nilai*, பெ. (n.) கூத்துநிலை வகை; a posture in dancing. "செந்நிலை மண்டிலத்தாற் கற்கடகக் கைகோஒத்து" *(சிலப். 17, கூத்துள். 1).*

*[செம் + நிலை]*

கூத்துக்கு வேண்டிய செம்மையான நடை (பாவணை) வகை.

**செந்நிறக்கல்** *šen-niṟa-k-kal*, பெ. (n.) ஒருவகை சிவப்புக் கல் (மாமிசச்சிலை) (யாழ்.அக.); a kind of red stone.

*[செம் + நிறம் + கல்]*

**செந்நிறமி** *šen-niṟami*, பெ (n.) அரத்தத்திற்குச் சிவப்பு நிறம் தரும் நுண்பொருள்; huemoglobin.

*[செம் + நிறமி. நிறமி = நிறம் தரும் பொருள்]*

**செந்நிறுவு-தல்** *šen-niṟuvu-*, 5 செ.குன்றாவி. (v.t.) நேர்வழியில் நிறுத்துதல்; to keep one out of harm's way; to establish one in the path of virtue. "சேரி திரியாமற் செந்நிறீஇ" *(திவ். இயற். 1:47).*

*[செம் + நிறுவு-.]*

**செந்நீர்**[1] *šen-nīr*, பெ. (n.) *1.* புது வெள்ளம்; fresh, flood, as turbid. "மூதூர்ச் செந்நீர்க் கடியின் விழவாட்டினுள்" *(சீவக. 12). 2.* அரத்தம்; blood, as red. "செந்நீர்த் திரைகடல் பருகலாக" *(கலிங். 293). 3.* விந்துவோடு கலந்து கரு உண்டாகு தற்குக் காரணமாகும் மகளிர் அரத்தம்; blood believed to be in the womb causing pregnancy when fused with semen. "மாதர் செந்நீரொடு கூடி" *(சூத. ஞான.10: 9).*

ம. செந்நீர்; க. கெந்நீர்

*[செம் + நீர்]*

**செந்நீர்**[2] *šen-nīr*, பெ. (n.) பருவ காலத்தில் ஆற்றில் பெருகி வரும் செவ்வண்ணப் புதுநீர்; fresh water in the rivers, rivulats in red colour. "செந்நீர் வெட்டி செய்யக் கடவதில்லை யாகவும், புந்நீர் விட்டுப் பாய்ச்சிக் கொள்வதாகவும்" *(தெ. க. தொ. 2:1, கல். 24).*

*[செம் + நீர்]*

**செந்நீர்நுங்கல்** *šen-nīr-nuṅgal*, பெ. (n.) ஒரு நிரையம் (நரகம்) (சேதுபு. தனுக்கோ. 4); a hell.

*[செந்நீர் + நுங்கல்]*

**செந்நீர்ப்பவளம்** *šen-nīr-p-pavaḷam*, பெ. (n.) சிவந்த பவளம் (யாழ்.அக.); coral with bright red lustre.

*[செம் + நீர் + பவளம்]*

**செந்நீர்முத்து** *šen-nīr-muttu*, பெ. (n.) செந்நீரோட்டமுள்ள முத்து (சிலப். 14: 195, உரை); pearl with pink lusture.

*[செம் + நீர் + முத்து]*

**செந்நெய்தல்** *šen-neydal*, பெ. (n.) அல்லிக் கொடிவகை (புட்ப. 4); a kind of water-lily.

*[செம் + நெய்தல். நெய்தல் = ஆம்பல் மலர்]*

**செந்நெல்** *šen-nel*, பெ. (n.) *1.* செஞ்சாலி நெல்; a kind of superior paddy of yellowish hue. "பருஉப்பக டுதிர்த்த மென்செந் நெல்லின்" *(பதிற்றுப். 71:4). 2.* நன்னீர் மீன்வகை (யாழ்.அக.); a kind of fresh water fish.

ம. செந்நெல்; க. கெம்புநெல்லு

*[செம் + நெல்]*

**செந்நெல்தீட்டல்** *šen-nel-dīṭṭal*, பெ. (n.) புது நெல்லை உரலிலிட்டுக் குற்றித் தீட்டிய அரிசி; hand pounded rice from fresh paddy. "செந்நெற்றீட்டல் அறுபத்து நாற்கலம்" *(தெ.க.தொ. 14, கல்.13).*

*[செம் + நெல் + தீட்டல்]*

**செந்நெற்றீட்டல்** *šenneṟṟīṭṭal*, பெ. (n.) செந்நெல்தீட்டல் பார்க்க; see *šen-nel-dīṭṭal*. "நாழி அரிசிக்கு முற்றாழி நெல்லாகத் திருபலிக்கு நியதி அரிசி செந்நெற்றீட்டல் ஒரு போரைக்கு நாழியாக" *(தெ.க.தொ. 14 கல். 16:4 - 133).*

**செந்நெறி** *šen-neṟi*, பெ. (n.) *1.* செவ்விய வழி; good or fine path. "இடையது செந்நெறியாகும்" *(சிலப். 11:142). 2.* நல்வழி (சன்மார்க்கம்); path of virtue, the right way, especially in religious sense. "சேராரே செந்நெறிச் சேர்து மென்பார்"

(நாலடி, 378). 3. மரபு சார்ந்து ஒழுகும் தூய பண்பு; righteous path.

[செம் + நெறி]

**செந்நென்முத்து** *šennen-muttu*, பெ. (n.) செந்நெலில் உண்டாவதாகக் கருதப்படும் முத்து (யாழ்.அக.); pearl believed to be formed in šennel paddy.

[செந்நெல் + முத்து.]

**செந்நொச்சி** *šen-nocci*, பெ. (n.) நொச்சி வகை (யாழ்.அக.); a variety of chaste-tree.

[செம் + நொச்சி]

**செப்பஞ்செய்-தல்** *šeppañ-jey-*, 1 செ.குன்றாவி. (v.t.) 1. ஒழுங்குபடுத்துதல்; to clean, repair, put in order. 2. புதைத்தல் (வின்.); to inter. 3. கட்டடங்களைப் பழுதுபார்த்தல்; to repair buildings, maintenance of buildings. 4. பழுது, குறைபாடு, பிழை முதலியவற்றை நிக்கிச் சரிசெய்தல்; புதுப்பித்தல்; restore; renovate; set right.

[செப்பம் + செய்-.]

**செப்பட்டை**[1] *šeppattai*, பெ. (n.) 1. கட்டடச் சுவரின் அடிப்படை; plinth. 2. தூணின் அடியில் வைக்கும் சதுரக்கல்; square plate stone placed at the bottom the piller.

[செம்பொன் → செம்பு → செப்பு. செப்பு + பட்டை → செப்பட்டை]

**செப்பட்டை**[2] *šeppattai*, பெ. (n.) 1. பறவைச் சிறகு (யாழ்.அக.); wing. 2. தோட்பட்டை; shoulder blade. 3. கன்னம்; cheek.

[சப்பட்டை → செப்பட்டை]

**செப்பட்டைமட்டம்** *šeppattai-mattam*, பெ. (n.) அடிப்படை மட்டச் சுவர் அளவு; plinth level.

[செப்பட்டை + மட்டம்]

**செப்பட** *šeppada*, கு.வி.எ. (adv.) செவ்விதாக; correctly, neatly. "மாலை வாங்கிச் செப்பட முன்கை யாப்ப" (சீவக. 2665).

[செம் + படு = செம்படு. செம்படு → செப்படு → செப்பட. படு → பட]

**செப்படக்குவித்தை** *šeppadakku-vittai*, பெ. (n.) செப்படிவித்தை பார்க்க; see *šeppadi-vittai.*

"பச்சிலைக்குளோது செப்படக்கு வித்தையோ." (தனிப்பா. II, 57:140).

[செப்பு + அடக்கு + வித்தை]

**செப்படி**[1]**-த்தல்** *šeppadi-*, 4 செ.கு.வி. (v.i.) செப்படி வித்தை செய்தல்; to practise sleight of hand. "செப்படிப்பவரி னின்று சிரித்தனன்" (பாரத. புட்ப. 106).

[செப்பு + அடி]

**செப்படி**[2] *šeppadi*, பெ (n.) செப்படிவித்தை பார்க்க; see *šeppadi-vittai.*

ம. செப்படி, செப்பிடி

**செப்படிவித்தை** *šeppadi-vittai*, பெ (n.) 1. பிறரறியா வகையில் செப்புகளுள் உருண்டைகள் வந்து போகுமாறு அவற்றைத் தரையில் அடித்துக்காட்டுவது முதலிய தந்திரக் கலைகள்; legerdemain; sleight of hand, as causing a ball to appear or disappear by a mere touch on the cup containing it. 2. தந்திரம்; tricks, deceptive arts. "செப்படி வித்தைத் திறமறியேன் பூரணமே" (பட்டினத். திருப்பா. பூரண. 73). 3. சிறுகச் செலவாக்கிச் செய்யுஞ் சிக்கனம் (யாழ்ப்.); contrivance to economise by dealing out in small quantities.

ம. செப்படிவித்ய

[செப்படி + வித்தை]

**செப்படிவித்தைக்காரன்** *šeppadi-vittai-k-kāran*, பெ. (n.) 1. செப்படிக்கலை செய்வோன்; one who practises legerdemain, juggler. 2. தந்திரக்காரன்; deceitful person.

[செப்படி + வித்தை + காரன்]

**செப்பப்புல்** *šeppa-p-pul*, பெ (n.) நாணல் (மலை.); kaus.

**செப்பம்** *šeppam*, பெ (n.) 1. செம்மை; ruddiness. "செப்பமு நாணு மொருங்கு" (குறள், 951). 2. நடு நிலை (பிங்.); impartiality, evenness, equity. செப்பமுடைய வனாக்கம் (குறள், 112). 3. சீர்திருத்துகை; repair, renewal. இந்த வீதியைச் செப்பஞ்செய். 4. ஆயத்தம் (யாழ்ப்.); preparedness, fitness. 5. பாதுகாப்பு; protection. "செப்ப முடையாய்" (திவ். திருப்பா. 20). 6. செவ்விய வழி; straight path, road. "சேந்த

செயலைச் செப்பம் போகி" (மலைபடு. 160). 7. தெரு (பிங்.); street. 8. நெஞ்சு (பிங்); heart. 9. மனநிறைவு (திருப்தி) (வின்.); satisfaction, agreeableness. 10. ஒழுங்கு, செவ்வை; perfection. ஆய்வுக்கட்டுரை செப்பமாக உள்ளது.

[செய்ம்மை → செய்மை → செப்பம்]

**செப்பம்செய்-தல்** *šeppam-šey-*, 1 செ.குவி. (v.i.) செப்பஞ்செய்-தல் பார்க்க; see *šeppañ-jey-*.

**செப்பல்**[1] *šeppal*, பெ (n.) 1. சொல்லுகை; saying, replying, declaring. "செறிவளை மகளிர் செப்பலு முண்டோ" (மணிமே. 4:110). 2. செப்பலோசை பார்க்க; see *šeppal-ōšai*. "திண்பா மலிசெப்பல்" (காரிகை, செய். 1).

[செப்பு → செப்பல்]

**செப்பல்**[2] *šeppal*, பெ (n.) செந்நிறம்; red, rosy colour, as of dawn. பொழுது செப்பலோடி வரும் பொழுது (யாழ்ப்.).

[செப்பு[3] → செப்பல்]

**செப்பல்பிரி-தல்** *šeppal-piri-*, 4 செ.குவி. (v.i.) பொழுது விடிதல்; to dawn. செப்பல் பிரியப் புறப்பட்டோம் (இ.வ).

[செப்பல்[2] + பிரி]

**செப்பலி** *šeppali*, பெ. (n.) 1. இரண்டடி நீளமும் ஒருவகைச் செந்நிறமும் உடைய கடல் மீன்வகை; sea-fish, cherry red, attaining 2 ft. in length. 2. கருமை கலந்த செந்நிறமுடைய கடல் மீன்வகை; red rock cod, dark reddish brown.

[செப்பல்[3] → செப்பலி]

**செப்பலோசை** *šeppal-ōšai*, பெ. (n.) வெண்பாவுக்குரிய ஓசை (தொல்.பொருள். 379, உரை); rhythmic tone appropriate to veṇbā verse.

[செப்பல் + ஓசை]

செப்பலோசை மூன்று வகைப்படும். ஏந்திசைச் செப்பலும், தூங்கிசைச் செப்பலும், ஒழுகிசைச் செப்பலும் என்பன (யாப். கா. 22). அகவிக் கூறாது ஒருவற்கு ஒருவன் இயல்பு வகையானே ஒரு பொருண்மையைக் கட்டுரைக்குங்கால் எழும் ஓசை செப்பலோசை எனப்படும் (தொல். பொருள். 394, பேரா.). அழைத்துக் கூறாது ஒருவற்கு ஒருவன் இயல்பு வகையான் ஒரு பொருண்மையைக் கட்டுரைக்குங்கால் எழுந்த ஓசை செப்பலோசை (தொல். பொருள். செய். 82, நச்)

**செப்பலோடு-தல்** *šeppal-ōḍu-*, 5 செ.குவி. (v.i.) செந்நிறங் கொள்ளுதல் (யாழ்ப்.); to become red, as the sky at dusk. பொழுது செப்பலோடி வரும் பொழுது (யாழ்ப்.).

[செப்பல் + ஓடு-.]

**செப்பவாய்** *šeppavāy*, பெ. (n.) இடை (யாழ்.அக.); waist.

[செப்பு → செப்பவாய்]

**செப்பனிடு-தல்** *šeppaṉiḍu-*, 18 செ.குன்றாவி. (v.t.) 1. பழுதுபார்த்தல், சீர்திருத்துதல்; to repair, correct. சாலைகளைச் செப்பனிடக் கேட்டுள்ளோம். 2. சமப்படுத்துதல்; to level, make even. 3. மெருகிடுதல்; to polish.

[செப்பம் → செப்பன் + இடு-.]

**செப்பாடல்** *šeppāḍal*, பெ. (n.) பழைய காசு வகை (பணவிடு. 139); an ancient coin.

**செப்பாடு** *šeppāḍu*, பெ. (n.) நேர்மை; straightness, justness. "செப்பாடுடைய திருமாலவன்" (திவ்.பெரியாழ். 35:6).

[செப்பம் + பாடு.]

**செப்பிக்கூறு-தல்** *šeppi-k-kūṟu-*, 5 செ.குன்றாவி. (v.t.) விடை சொல்லுதல்; to reply, give answer. ஒருவன் கேட்ப அவற்கு ஒன்று செப்பிக் கூறாது (தொல். பொருள். 393, உரை).

[செப்பு → செப்பி + கூறு-.]

**செப்பிடில்** *šeppiḍil*, பெ. (n.) சடாமாஞ்சி (மலை.); spikenard herb.

**செப்பிடுவித்தை** *šeppiḍuvittai*, பெ. (n.) செப்படிவித்தை பார்க்க; see *šeppaḍi-vittai*. "செப்பிடு வித்தை செலத்தம்பன வித்தை" (பணவிடு. 20).

[செப்பு + இடு + வித்தை]

**செப்பியம்** *šeppiyam*, பெ. (n.) திரும்பத்திரும்பச் சொல்லுகை (யாழ்.அக.); repeating.

[செப்பு → செப்பியம்]

**செப்பிலி** *šeppili*, பெ. (n.) செப்பலி,1 பார்க்க; see *šeppali,l.*

*[செப்பலி → செப்பிலி]*

**செப்பிலை** *šeppilai*, பெ. (n.) தும்பை (மலை.); white dead nettle.

*[செம்பு + இலை]*

**செப்பு[1]-தல்** *šeppu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. சொல்லுதல்; to say, speak, declare, tell. "செய்ததும் வாயாளோ செப்பு" (பரிபா. 6: 67). 2. செப்பிக்கூறு- பார்க்க (தொல்.பொருள். 393, உரை); see *šeppi-k-kūru-.*

ம. செப்புக; தெ. செப்பு; குரு. கெப்னா

**செப்பு[2]** *šeppu*, பெ. (n.) 1. சொல்; speech, word. "ஏதுபோ விருந்த தைய னிசைத்த செப்பென்றார்" (திருவிளை. வளையல். 9) (சூடா.) 2. விடை; answer, reply. "செப்பும் வினாவும் வழாஅ லோம்பல்" (தொல். சொல். 13).

தெ. செப்பு

OE. secgan; OS. soggian; E. say; M.E. seggen; A.S. secgañ; Dan. sige; Swed. saga; G. sagen; OHG. sagēn; Lith. sakyti; Ol. in-sece; Wels. heb

**செப்பு[3]** *šeppu*, பெ. (n.) 1. செம்பு-1 பார்க்க; see *šembu-l.* 2. குங்குமம் முதலியவைப் போட்டு வைக்கப் பயன்படும் மரத்தால் அல்லது மாழையாலான சிறிய பெட்டி, சிமிழ்; casket, little box of metal, ivory or wood. "செப்பின் புணர்ச்சிபோற் கூடினும்" (குறள், 887). 3. நீர்க்கரகம்; a kind of water-vessel. "சேமச் செப்பிற் பெறீஇயரோ" (குறுந். 277). 4. மரத்தால் செய்யப்பட்ட விளையாட்டு ஏனம் (உ.வ.); toy utensils.

ம. செப்பு; குட. செப்பி

E. copper; M.E. coper; O.E. coper; L.L. cuper; L. cuprum; Gk. cyprium; G. kupper; Du. koper; F. cuivre.

*[செம்பு → செப்பு]*

**செப்பு[4]** *šeppu*, பெ. (n.) இடுப்பு; hip. அவன் விழுந்ததில் செப்பு நகர்ந்து விட்டது (நாஞ்.).

*[சப்பை → செப்பு]*

**செப்புக்கட்டை** *šeppu-k-kaṭṭai*, பெ. (n.) பொன் வளையல் முதலியவற்றிற்கு உள்ளே இடும் தாமிரக்கட்டை (உ.வ.); copper bar inserted in hollow gold ornaments, as in bracelets.

*[செம்பு + கட்டை]*

**செப்புக்கால்திருச்சிற்றம்பலமுடையான்** *šeppu-k-kāl-tiru-c-ciṟṟambalam-uḍaiyāṉ*, பெ. (n.) முற்காலத்து வழங்கிய நெல்லளக்குங் கருவி வகை; a kind of measure for paddy used in ancient times. 'செப்புக்கால் திருச்சிற்றம்பல முடையானாலே அளக்கக் கடவார்களாகவும்' (தெ.க.தொ. 5, 178).

*[செம்புக்கால் + திருச்சிற்றம்பலம் + உடையான் = செம்பால் செய்யப்பட்ட அளவு கருவி]*

**செப்புக்குடம்** *šeppu-k-kuḍam*, பெ (n.) 1. கோயில் கோபுரத்தின் மீது பொருத்தப்படும் செம்பலான கலசம்; ornamental copper kuḍam placed at the top of vimāṉam and gopuram. "ஸ்தூபித் தறியில் வைக்கக் குடுத்த செப்புக் குடம்" (தெ.க.தொ.2; கல்.1). 2. கோயில் பூசைக்கு நீர் எடுத்துவரும் செம்பாலான குடம்; copper vessel used to bring water to temple rituals. 3. குடிநீர் எடுத்து வரும் செம்பாலான குடம்; water carrier for drinking purposes made of copper. செப்புக் குடத்து நீர் குடிக்க நல்லது.

ம. செப்புகுடம், செப்பிக்குடம்

*[செப்பு + குடம்]*

கோயில் கோபுரத்தின் மீது பொருத்தப்படும் செப்புக் குடத்துள் ஒன்பது வகைத் தவசங்களைப் போடுவர். செப்புக் கலயமும் தவசங்களும் கூடி இடிதாங்கியாகப் பயன் படுகின்றன. இதுகாறும் எந்தக் கோவில் மீதும் இடிவிழுந்ததில்லை. இஃது பழந் தமிழரின் அறிவியல் திறமைக்குச் சான்றாகும்.


செப்புக்குடம்

**செப்புக்கோட்டை** *šeppu-k-kōṭṭai*, பெ. (n.) செம்பினாலியன்ற கோட்டை; fort, as made of copper.

செம்பினால் கட்டியது இராவணன் கோட்டை

*[செம்பு → செப்பு + கோட்டை]*

**செப்புச்சல்லி** *šeppu-c-calli*, பெ. (n.) ஒரு தம்படியான சிறு தாம்பரக்காசு; small copper coin = 1 pie. ஒரு செப்புச் சல்லிக் காசு கூட உனக்குத் தரமாட்டேன்.

*[செப்பு + சல்லி]*

**செப்புச்சிலை** *šeppu-c-cilai*, பெ. (n.) 1. செம்பாலான படிமை (பிரதிமை); copper idol or statue. செப்புச்சிலை போன்ற உடம்பு. 2. மாந்தளிர்க்கல் (யாழ்.அக.); a copper-coloured stone.

*[செம்பு + சிலை]*

**செப்புத்தளிகை** *šeppu-t-taḷigai*, பெ. (n.) செப்புத் தட்டு; copper plate. 'செப்புத் தளிகை ஒன்று' (தெ.க. தொ. 2. கல். 85-22).

*[செப்பு + தளிகை. தளிகை = தட்டு, ஏனம், உண்கலம்]*

**செப்புத்திருமேனி** *šeppu-t-tirumēṉi*, பெ. (n.) செம்பினாலாகிய கடவுள் உருவச்சிலை; copper idol. 'ஸ்ரீ ராஜராஜேச்வரமுடையார் கோவிலில் . . . எழுந்தருளுவித்த செப்புத் திருமேனி' (தெ.க.தொ. 2, 400).

*[செப்பு + திருமேனி]*

**செப்புத்துறை** *šeppu-t-tuṟai*, பெ. (n.) இடுகாடு (வின்.); burial ground, grave-yard.

*[செப்பு + துறை]*

**செப்புத்தொட்டி** *šeppu-t-toṭṭi*, பெ. (n.) வைப்பு நஞ்சு வகை (மூ.அ.); a prepared arsenic.

*[செப்பு + தொட்டி]*

**செப்புநிறம்** *šeppu-niṟam*, பெ. (n.) கருஞ்சிவப்பு நிறம் (யாழ்.அக.); dark-red colour.

*[செம்பு + நிறம்]*

**செப்புநெருஞ்சி** *šeppu-neruñji*, பெ. (n.) சிறு நெருஞ்சி (பதார்த்த. 357); red cow thron.

*[செம் → செப்பு + நெருஞ்சி]*




**செப்புப்பட்டயம்** *šeppu-p-paṭṭayam*, பெ. (n.) செப்பேடு பார்க்க; see *šeppēḍu*.

மறுவ. செப்பேடு

*[செம்பு + பட்டயம்]*

**செப்புப்பத்திரம்** *šeppu-p-paṭṭiram*, பெ. (n.) செப்பேடு பார்க்க; see *šeppēḍu*. 'விடுபேறாகச் செப்புப் பத்திரஞ்செய் தட்டிக் கொடுத்தேன்' (T.A.S. 2, 68)

மறுவ. செப்பேடு

*[செம்பு + பத்திரம்]*

**செப்புமல்லிகை** *šeppu-malligai*, பெ. (n.) பொன்னிறமுள்ள மல்லிகை வகை; golden jasmine.

*[செம்(மை) → செப்பு + மல்லிகை]*

**செப்புமலை** *šeppu-malai*, பெ. (n.) காவியுடை (யாழ்.அக.); ochre-coloured cloth.

**செப்புவழு** *šeppu-vaḻu*, பெ. (n.) விடைக் குற்றம் (தொல். சொல். 13, உரை); incorrect answer.

*[செப்பு + வழு]*

**செப்பேடு** *šeppēḍu*, பெ. (n.) பழங்கால அரசர்களின் ஆணைகள், அவர்கள் வழங்கிய கொடை பற்றிய செய்திகள் முதலானவை



பொறிக்கப்பட்ட செப்புத்தகடு(ஈடு, 4. 4:10); copper-plate grant. சோழர் காலச் செப்பேடுகள் அந்தக்கால நிர்வாக முறையை அறிய உதவுகின்றன.

ம. செப்பேடு, செம்பேடு

L. cuprium; E. copper.

மறுவ. செப்புப்பட்டயம்

*[செப்பு + ஏடு]*

**செப்போடு** *šeppōḍu*, பெ. (n.) செம்பாலான ஓடு (வின்.); copper tiles, as on temple roof.

*[செப்பு³ + ஓடு]*

**செம்** *šem*, கு.பெ.எ. (adj.) *1.* சிவந்த; reddish. செந்நீர். *2.* நேர்மையான; honest. செங்கோலாட்சி. *3.* நடு நிலையான; impartial. "செம்மனத்தான்" (நள.46). *4.* இலக்கணம் பிறழாத; grammatical. செந்தமிழ். *5.* முதிர்ந்த; mature. செங்காய். *6.* சொல்லழகில்லாத; without flourish of words. செந்தொடை. *7.* இயல்பான; natural. "செம்மகள்" (கல்லா. 5:31). *8.* தகுந்த, ஏற்ற; in accordance with, appropriate. செந்துறை. *9.* சமமான; equal. செம்பாகம். *10.* ஒரே ஒழுங்கான; stright. செந்தூக்கு. *11.* கோட்டமில்லாத; without bend. செங்குத்து. *12.* எண்ணிடைச் சொல் பெறாத; without conjunctive particles. செவ்வெண்.

*[செய்ம்மை → செம்மை → செம். ஒ.நோ.: வெள் → வெய் → வெய்ம்மை → வெம்மை → வெம்]*

**செம்பக்கால்** *šemba-k-kāl*, பெ. (n.) வெற்றிலைக் கொடி நடாத இளமையான அகத்திச் செடிகளையுடைய வெற்றிலைத் தோட்டம் (R.T.); unplanted betel-garden with young 'akatti' plants.

*[செம்பை + கால்]*

**செம்பகம்** *šembagam*, பெ. (n.) செண்பகம்¹ பார்க்க; see *šeṇbagam*.

ம. செம்பகம், சம்பகம்

*[செண்பகம் → செம்பகம் (உ.வ.)]*

**செம்பகை** *šem-bagai*, பெ. (n.) மரக் குற்றத்தால் நரம்பு இன்பமின்றி இசைக்கையாகிய யாழ்க் குற்றம்; harsh note of a lute-string, due to bad wood of the lute. "செம்பகை யார்ப்பே யதிர்வே கூடம்" (சிலப். 8:29).

*[செம் + பகை]*

பகை = குற்றம். சரியான, செம்மையான மரத்தால் செய்யாத யாழில் இருந்து எழும் ஓசை குற்றமுடையது.

**செம்பசலை** *šem-bašalai*, பெ. (n.) பசலை வகை (மலை.); red Malabar nightshade.

*[செம் + பசலை]*

**செம்பசளை** *šem-bašaḷai*, பெ. (n.) செம்பசலை பார்க்க (யாழ்.அக.); see *šem-bašalai*.

*[செம்பசலை → செம்பசளை]*

**செம்பஞ்சி** *šem-bañji*, பெ. (n.) செம்பஞ்சு பார்க்க (சிலப். 6:82, அரும்.); see *šem-bañju*.

*[செம்பஞ்சு → செம்பஞ்சி]*

**செம்பஞ்சு** *šem-bañju*, பெ. (n.) *1.* பருத்தி வகை; Brazil cotton. *2.* செவ்வரக்குச் சாயமிட்ட பஞ்சு; cotton coloured with lac-dye. 'கோகிலக்கண் செம்பஞ்சு' (சிலப். 14:187, உரை).

*[செம் + பஞ்சு]*

**செம்பஞ்சுக்குழம்பு** *šem-bañju-k-kuḻambu*, பெ. (n.) *1.* செம்பஞ்சாற் செய்யப்பட்டு மகளிர் காலிற் பூசியணியப்பட்டுவந்த வண்ணக் குழம்பு வகை (மணிமே. 6:110, உரை); paste prepared from red cotton, used to dye women's feet. *2.* எழுதுவதற்குப் பயன்பட்ட செந்நிற மை; ink prepared for writing letters.

*[செம்பஞ்சு + குழம்பு]*

செம்பஞ்சுக் குழம்பு = எழுதுவதற்குப் பயன் பட்ட வண்ணக் குழம்பு. தாழை மடலில், பித்திகை முனையால் தொட்டு மடல்கள் எழுதப்பட்டன. பனை ஓலையின் பழக்கம் இதன் பின்னரே தோன்றியது. பனை ஓலையில் எழுத்தாணி கொண்டு கீற வேண்டும். தாழை மடலில் மை தோய்த்து எழுத வேண்டும்.

**செம்பஞ்சுநிறமணி** *šem-pañju-niṟamaṇi*, பெ. (n.) ஒருவகை மணி (சௌகந்திகப் பதுமராகம்) (யாழ்.அக.); a kind of precious stone.

*[செம் + பஞ்சு + நிறமணி]*

**செம்பஞ்சூட்டு-தல்** *šem-bañjūṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) மகளிர் பாதத்திற்குச் செம்பஞ்சுக் குழம்பு பூசுதல்; to paint women's feet with red-cotton dye.

*[செம்பஞ்சு + சூட்டு-]*

**செம்பஞ்செழுது-தல்** *šem-bañjeḻudu*, 5 செ.கு.வி. (v.i.) செம்பஞ்சூட்டு- பார்க்க; see *šem-bañjūṭṭu-*.

*[செம்பஞ்சு + எழுது-.]*

**செம்பட்டத்தி** *šem-baṭṭatti*, பெ. (n.) செம்படத்தி பார்க்க (யாழ்.அக.); see *šem-baḍatti*.

*[செம்படத்தி → செம்பட்டத்தி]*

**செம்பட்டலரி** *šem-baṭṭalari*, பெ. (n.) அலரி வகை (புட்ப. 29); a kind of oleander.

*[செம்பட்டை (= வெளிர்ச்சிவப்பு) + அலரி]*

**செம்பட்டை**[1] *šem-baṭṭai*, பெ. (n.) ஒருவகைக் கொட்டிசைக் கருவி; a kind of musical instrument. 'பாணி யிடக்கை செம்பட்டை' (வள்ளிகதை. Ms.)

*[செம் + பட்டை]*

**செம்பட்டை**[2] *šem-baṭṭai*, பெ. (n.) தலை முடியின் ஒரு வகை வெளிர்ச் சிவப்பு நிறம் (உ.வ.); reddish brown colour of hair.

பட. கெஞ்சலு

*[செம் + பட்டை]*

**செம்பட்டைபாய்-தல்** *šem-baṭṭaipāy-*, 1 செ.கு.வி. (v.i.) செந்நிறமாதல்; to become reddish brown, as hair. அவன் தலை செம்பட்டை பாய்ந்தது.

*[செம்பட்டை + பாய்-.]*

**செம்பட்டைமயிர்** *šem-baṭṭai-mayir*, பெ. (n.) செம்மயிர்; reddish brown hair.

*[செம்பட்டை + மயிர்]*

**செம்படக்கரை** *šem-baḍa-k-karai*, பெ. (n.) செம்படவர் வாழும் கடற்கரை; sea shore where fishermen live.

*[செம் + படகு + கரை]*

**செம்படக்கா** *šem-baḍakkā*, பெ. (n.) ஒரு வகை மீன்; a kind of fish.

**செம்படத்தி** *šem-baḍatti*, பெ. (n.) பரதவரினப் பெண் (சங்.அக.); woman of the fisherman caste.

*[செம்படவன் (ஆ.பா.) → செம்படத்தி (பெபா.)]*

**செம்படம்**[1] *šembaḍam*, பெ. (n.) திருநீறு வைக்குஞ் சிறுசெப்பு (இ.வ.); small, round or oval matal box for keeping holy ashes.

*[சம்புடம் → செம்படம்]*

**செம்படம்**[2] *šem-baḍam*, பெ. (n.) செப்புமலை (நிலகேசி, 244, உரை.) பார்க்க; see *šeppu-malai*.

*[செம் + படம்.]*

**செம்படர்** *šembaḍar*, பெ. (n.) சிவப்பாடை அணியும் புத்தர்கள்; Buddhists, as wearing red-coloured cloth. "இது செம்படர்க ளிறைவ னுறையு மிடம்" (நீலகேசி, 464).

*[செம்படம் [2] → செம்படர்]*

**செம்படவச்சி** *šem-baḍavacci*, பெ. (n.) செம்படத்தி பார்க்க; see *šem-baḍatti*.

*[செம்படத்தி → செம்படவச்சி]*

**செம்படவன்** *šembaḍavaṉ*, பெ. (n.) மீன் பிடித் தொழிலில் ஈடுபட்டுள்ள மீனவர்; fisherman.

*[செம் + (படகு → படவு + அன்]*

**செம்படாம்** *šem-baḍām*, பெ. (n.) 1. சிவந்த ஆடை (திவா.); red cloth. 2. சிவப்புச் சீலை; red saree.

*[செம் + படாம்]*

**செம்படை**[1] *šem-baḍai*, பெ. (n.) செம்பட்டை-2 பார்க்க; see *šem-baṭṭai*.

**செம்படை**[2] *šem-baḍai*, பெ. (n.) பொது வுடைமைக் கட்சியினர்; followers of the communist parties.

*[செம் + படை]*

பொதுவுடைமைக் கட்சியின் கொடி சிவப்பு வண்ணமுடையதாதலின், அதன் தொண்டர் செம்படைத் தொண்டர் எனப்பட்டனர்.

**செம்படைச்சி** *šem-baḍaicci*, பெ. (n.) செம்படத்தி (யாழ்.அக.) பார்க்க; see *šem-baḍatti*.

*[செம்படத்தி → செம்படைச்சி]*

**செம்பண்ணை** *šembaṇṇai*, பெ. (n.) சேவலின் தலைக் கொண்டை (மலை.); cock's comb.

*[செம் + பண்ணை]*

**செம்பத்தி** *šembatti*, பெ. (n.) உண்மையான அன்பு; true piety. "தாமரைத்தாள் செம்பத்தியால் வணங்காச் சிறியார்" *(திருநூற். 23)*

*[செம் + (பற்று → பற்றி →) பத்தி]*

**செம்பயிரவப்பூண்டு** *šem-bayirava-p-pūṇḍu*, பெ. (n.) மருதோன்றி வகை; unarmed orange nail dye.

*[செம் + பயிரவப் பூண்டு]*

**செம்பரக்கு** *šembarakku*, பெ. (n.) கொம்பரக்கில் வெந்நீரை விட்டு உண்டுபண்ணும் அரக்கு வகை (M.M. 427); square cake of crimson colouring-matter, obtained by pouring warm water on stick-lac.

*[செம்பு + அரக்கு]*

**செம்பரத்தை** *šem-barattai*, பெ. (n.) செடிவகை; shoe-flower.

ம. செம்பரத்தி

*[செம் + (பருத்தி →) பரத்தை]*



செம்பரத்தை

**செம்பரவன்** *šem-baravan*, பெ. (n.) மீனவருள் ஒரு வகையினர்; a group among fishermen.

*[செம்படவன் → செம்பரவன்]*

**செம்பருத்தி** *šem-barutti*, பெ. (n.) *1.* நல்ல பருத்தி வகை (G.Sm.D. i. 227); a kind of superior cotton. 'திலக முலோத்திரஞ் செம் பருத்திப்பூ' *(சிலப். 14:187, உரை)*. 2. செம்பஞ்சு; Brazil cotton. 3. பருத்தி வகை (L.); a kind of cotton plant. 4. புதர்போல் வளர்வதும் சிவப்பு நிறப்பூப்பூப்பதுமான ஒருவகைச் செடி; a shrub with red flowers. செம்பருத்திப் பூப்போன்றச் சிவப்புச் சேலை வாங்கி வா.

க. கெம்பத்தி; ம. செம்பருத்தி

*[செம் + பருத்தி]*



செம்பருத்தி

**செம்பருந்து** *šem-barundu*, பெ. (n.) கருடன்; sacred kite.

*[செம் + பருந்து]*



செம்பருந்து

**செம்பலக்கிளுவை** *šem-bala-k-kiḷuvai*, பெ. (n.) பேய்ச்சுண்டை (L.); woolly, oblong bluish-flowered prickly night-shade.

**செம்பலகை** *šem-balagai*, பெ. (n.) செங்கல் (வின்.); brick.

*[செம் + பலகை]*

*களி மண்ணைப் பலகை போல் தட்டையாகப் பரப்பி மரச் சட்டத்தால் அறுத்துச் சுட்டுச் செய்வதால் செங்கல்லுக்குச் செம்பலகை என்ற பெயர் உண்டாயிற்று.*

*பண்டை நாளில் செங்கல்லைப் பலகை போன்று அகலமும் நீளமும் மிகுந்ததாகச் செய்தனர். அவ்வகைச் செங்கற்கள் பூம்புகாரில் அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ளன.*

**செம்பலா** *šembalā*, பெ. (n.) கிராம்பு வகை (L.); country cinnamon.

*[செம் + பலா]*



செம்பரத்தை



செம்முள்ளி



செந்தும்பை



சேராங்கொட்டை



செம்பருந்து



செம்பருந்து



செந்தலைக்கதிர்க்குருவி



செந்தலைக் கிளி





செந்தலைப் பஞ்சுருட்டான்



செந்தலைப் பூங்குருவி

**செம்பவளச்சம்பா** *šem-bavaḷa-c-cambā*, பெ. (n.) செந்நிறமுள்ள சம்பா நெல்வகை; a kind of reddish šambā paddy.

*[செம்பவளம் + சம்பா]*

**செம்பவளம்** *šem-bavaḷam*, பெ. (n.) *1.* வெளுப்புக் கலவாது செந்நிறத்திலுள்ள பவளவகை; coral of deep red colour. "வாய் செம்பவளம்" *(திவ். திருவாய். 2. 5:5).* 2. உருண்டை வடிவுள்ள பவளவகை (இ.வ.); round-shaped red coral.

*[செம் + பவளம்]*

**செம்பவழம்** *šem-bavaḻam*, பெ. (n.) செங்காய் (யாழ்.அக.); fruit almost ripe.

*[செம் + பழம்]*

**செம்பளி-த்தல்** *šembaḷi-*, 4 செ.குன்றாவி. (v.t.) அச்சம் முதலிய காரணம் பற்றிக் கண்ணை இடுக்கிக் கொள்ளுதல்; to close the eyes, as in terror. 'அஞ்சிக் கண்ணைச் செம்பளித்தவாறே' *(ஈடு, 5. 5:3)*

**செம்பறாம்பண்ணி** *šembaṟāmpaṇṇi*, பெ. (n.) செம்பழுப்பு நிறமுள்ள ஒருவகைக் கடல்மீன்; sea-fish, reddish brown.

**செம்பன்** *šembaṉ*, பெ. (n.) சிவலை (யாழ்.அக.); brown-coloured cow or bull.

*[செம்பு → செம்பன்.]*

**செம்பனசை** *šem-baṉašai*, பெ. (n.) பனசைப் பாம்பு வகை (யாழ்.அக.); a venomous snake.

*[செம் + பனசை. பனசை = பாம்பு வகை]*

**செம்பாகம்**[1] *šem-bāgam*, பெ. (n.) செம்பாதி பார்க்க; see *šem-bādi*. "காமத்திற் செம்பாக மன்று பெரிது" *(குறள். 1092)*

*[செம் + பாகம். பகு → பாகம்]*

**செம்பாகம்**[2] *šem-bāgam*, பெ. (n.) தெளிவு; lucidity; clear, natural flow of style. அவர்கவி செம்பாகமாயுள்ளது.

*[செம் + பாகம்.]*

**செம்பாட்டுத்தரை** *šem-bāṭṭu-t-tarai*, பெ. (n.) செம்மண் நிலம்; red earth, red soil. "செம்பாட்டுத் தரையிலே மலையருவிகள் விழுந்தாற்போல" *(திவ். பெருமாள். 10:2, வியா.).*

*[செம்பாடு + தரை]*

**செம்பாட்டுநிலம்** *šem-bāṭṭu-nilam*, பெ. (n.) செம்பாட்டுத்தரை பார்க்க (அகநா. 26, 24, உரை); see *šem-bāṭṭu-t-tarai*.

*[செம்பாடு + நிலம்]*

**செம்பாட்டுமண்** *šem-bāṭṭu-maṇ*, பெ. (n.) செம்பாட்டுத்தரை (வின்.) பார்க்க; see *šem-bāṭṭu-t-tarai*.

*[செம்பாடு → செம்பாட்டு + மண்]*

**செம்பாடு** *šem-bāḍu*, பெ. (n.) *1.* செம்மண் நிலம்; red soil. *2.* செம்மண் படிந்தது; anything soiled or tinged with red earth.

*[செம் + பாடு]*

**செம்பாதி** *šem-bādi*, பெ. (n.) சரிபாதி; exact half, moiety. 'இவ்வூர்த் தச்சக்காணி செம்பாதியுடைய தச்சன்' *(தெ.க.தொ. 3, 80).*

ம. செம்பாதி

*[செம் + பாதி. பகுதி → பாதி]*

**செம்பாந்தள்** *šem-bāndaḷ*, பெ. (n.) கேது (சாதகசிந். 7); moon's descending node.

*[செம்பு → செம்பாந்தள்]*

**செம்பாம்பு** *šem-bāmbu*, பெ. (n.) ஒன்பான் கோள்களுள் ஒன்று (கேது) (திவா.); moon's descending node.

*[செம் + பாம்பு]*

**செம்பாரை** *šem-bārai*, பெ. (n.) வரிப்பாரை என்னும் மீன் (வின்.); horse mackerel, silvery.

*[செம் + பாரை. பாரை = மீன்வகை]*

**செம்பால்**[1] *šem-bāl*, பெ. (n.) *1.* அரத்தம்; blood. "செம்பாலிறைச்சி திருந்த மனைசெய்து" *(திருமந். 461).* 2. கருப்பை அரத்தம் (பிங்.); blood in the womb causing, pregnancy.

*[செம் + பால். பால் = அரத்தம்]*

**செம்பால்**[2] *šem-bāl*, பெ. (n.) செம்பாதி பார்க்க; see *šem-bādi*. "செம்பால் வாரம் சிறுமைக் கெல்லை" *(தொல்.பொருள். 463).*

*[செம் + பால். பால் = பாதி]*

**செம்பால்பாய்-தல்** *šembāl-pāy-*, 1 செ.கு.வி. (v.i.) கட்டிளமையால் உடம்பில் அரத்த வோட்டம் தெரியும் படியாயிருத்தல்; to glow with health and beauty, as one's youth, making

the blood-vessels appear through the transparent skin. "இவனுடைய பால்யம் செம்பால் பாயாநிற்கும்" (திவ்.அமலனாதி-9, வியா. 101).

[செம்பால் + பாய்-.]

**செம்பால்முடாங்கி** *šembāl-mudāngi*, பெ. (n.) பூடுவகை (யாழ்.அக.); a shrub.

**செம்பாலை** *šem-bālai*, பெ. (n.) பாலைப் பண்வகை (பிங்.); a melody type of the pālai class.

[செம் + பாலை. பாலை = பண்வகை]

**செம்பாளை** *šem-bāḷai*, பெ. (n.) 1. தில்லைக் கட்டி நெல்; a reddish kind of paddy. 2. சம்பா நெல் வகை (G.Tj.D.I., 92); a species of šampā paddy.

[செம் + பாளை. பாளை = நெல்வகை]

**செம்பாற்சிட்டி** *šem-bāṟ-šiṭṭi*, பெ. (n.) கீரை வகை (யாழ்.அக.); a kind of greens.

[(செம் + பாற்சிட்டி. பாற்சிட்டி = கீரை வகை]

**செம்பாறாங்கல்** *šem-bāṟāṅ-gal*, பெ. (n.) செந்நிறப் பாறை; laterite, cabook.

[செம் + பாறை (ஆம்) + கல்]

**செம்பாறைநண்டு** *šem-bāṟai-naṇḍu*, பெ. (n.) சிவப்பு நண்டு; large red crab.

[செம் + பாறை + நண்டு. பாறை இடுக்குகளில் காணப்படும் நண்டு]

**செம்பி**[1] *šembi*, பெ. (n.) சோழர்குல முன்னோன்; ancestor of Chola dynasty.

**செம்பி**[2] *šembi*, பெ. (n.) கருவண்டு (யாழ்.அக.); black bee.

**செம்பிச்சி** *šembicci*, பெ. (n.) செம்பிச்சு (மூ.அ.) பார்க்க; see *šembiccu*.

**செம்பிச்சு** *šembiccu*, பெ. (n.) செப்புத் தொட்டி நஞ்சு (மலை.); a prepared arsenic.

[செம்பு + (நச்சு →) பிச்சு]

**செம்பித்தநோய்** *šem-bitta-nōy*, பெ. (n.) பித்த நோய் வகை (சீவரட். 185); a bilious disease.

[செம் + பித்தநோய்]

பித்தநோய் பார்க்க

**செம்பிநாட்டுமறவன்** *šembi-nāṭṭu-maṟavaṉ*, பெ. (n.) மறவர் வகையான் (E.T.V, 32); a sub-sect of Maṟava caste.

**செம்பிநாடு** *šembi-nāḍu*, பெ. (n.) கி.பி. 14ஆம் நூற்றாண்டில் திருக்குருகூர் உள்ளிட்ட பகுதியின் பெயர்; the name of a region including Thirukkurugur in Thiruchendur Taluk during 14th century. "வட தலை செம்பிநாட்டு கீழைக்கொடுமளான மது ரோதைய நல்லூர்" (தெ.க.தொ. 26; கல். 495)

**செம்பியதரையன்** *šembiya-daraiyaṉ*, பெ. (n.) திருவள்ளூர் வட்டத்திலுள்ள கூவியம் கோயிலில் பதியப்பட்ட ஒப்பந்தத்தில் கையொப்பமிட்டவர்; a signatury of an agreement recorded in temple of Kūviyam at Thiruvallur tk. 'இவை செம்பியதரையன் எழுத்து' (தெ.க.தொ. 26; கல். 363)

[செம்பியன் + அரையன்]

**செம்பியன்**[1] *šembiyaṉ*, பெ. (n.) 1. சிபியின் வழி வந்த சோழன்; king of the Šōḻa dynasty, as descendant of Šibi. "செம்பியர் மருகன்" (புறநா. 228 : 9). 2. முதல் வள்ளல்கள் எழுவரில் ஒருவன் (சூடா.); an ancient chief, noted for his liberality, one of seven mudal-vaḷḷalgal.

[செம்பி[1] → செம்பியன்]

வ. சைப்ய

முதல் வள்ளல்கள் எழுவராவர்: குமணன், சரகன், சாரண், செம்பியன், துந்துமாரி, நளன், நிருதி, இவர்கள் தொன்மங்களில் கூறப்பட்டவர்கள்.

ஆரியர் வருமுன் ஒரு காலத்தில் இந்தியா முழுவதும் பாண்டியர் ஆட்சியிலிருந்தது.

"பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக்கோடுங் கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கையும் இமயமும் கொண்டு
தென்றிசை யாண்ட தென்னவன் வாழி"
(சிலப். 11:19-22)

என்று இளங்கோவடிகள் கூறுதல் காண்க.

அக்காலத்தில் பாண்டியர் குடியினர் சிலர் வடநாடு சென்று வாழ்ந்திருந்தனர். அவரே, பாண்டவரின் முன்னோரான வடநாட்டுத் திங்கள் மரபினர். அதன்பின், சோழக் குடியினர் சிலரும் வடநாடு சென்று ஆண்டனர். அவரே இராமனின்

முன்னோரான வடநாட்டுக் கதிரவன் மரபினர். இதனாலேயே, மனு, மாந்தாதா, முசுகுந்தன், செம்பி முதலியோர், சோழருக்கும் வடநாட்டுக் கதிரவக் குலத்தினருக்கும் பொது முன்னோராகச் சொல்லப்படுவாராயினர். செம்பி வழிவந்தவன் செம்பியன். செம்பி என்னும் பெயர் வடமொழியிற் சிபி எனத் திரிந்துள்ளது.

செம்பியன் சோழன், "செம்பியர் மருகன்" (புறநா. 228:9).

சோழன் செம்பியன் எனப் பெற்றமையாலும், செம்பியன் தமிழப் பேரரையன், செம்பியன் தமிழவேள் என்பன சோழராற் கொடுக்கப் பெற்று வந்த பட்டங்களா யிருந்தமையாலும், செம்பி என்னும் பெயர் தூய தமிழ்ச் சொல்லாகவேயிருத்தல் வேண்டும். மனு, மாந்தாதா முதலியோரின் தமிழப் பெயர் மறையுண்டு போயின.

தலையெழு வள்ளல்களுள் ஒருவன் செம்பியன் எனப் பெற்றிருந்தமையால், சோழர்குடித் தொன்முது பழைமையும் செம்பியன் முதுபழமையும் உணரப் பெறும்.

ஆரியர் வருமுன் வடநாட்டில் தமிழர் குடியேறி யிருந்தது போன்றே தமிழ் அரசரும் குடியேறியிருந்தனர் என அறிக.

அகத்தியர் "துவராபதிப் போந்து நிலங்கடந்த நெடுமுடி யண்ணல் வழிக்கண் அரசர் பதினெண்மரையும் பதினெண் குடி வேளிருள்ளிட்டாரையும் அருவாளரையும் கொண்டு போந்து காடு கெடுத்து நாடாக்கிப் பொதியின் கண்'' இருந்தார் என்று நச்சினார்க்கினியர் கூறுவதையும் நோக்குக (வ.மொ.வ.).

**செம்பியன்தமிழப்பேரரையன்** *šembiyan-tamila-p-pēraraiyan,* பெ. (n.) **பிற்காலத்துச் சோழர்களாற் கொடுக்கப்பட்டு வந்த பட்டங் களிலொன்று** (தெ.க.தொ. 5,238); a tittle conferred by the later Cholas.

*[செம்பியன் + தமிழப் பேரரையன்]*

**செம்பியன்தமிழவேள்** *šembiyan-tamila-vēl,* பெ. (n.) **பிற்காலத்துச் சோழர்களால் கொடுக்கப்பட்டு வந்த பட்டங்களுள் ஒன்று** (தெ.க.தொ. 3, 22); a title conferred by the later Cholas.

*[செம்பியன் + தமிழவேள்]*

**செம்பியன்மாதேவி** *šembiyan-mādēvi,* பெ. (n.) **கண்டராதித்த சோழனின் இரண்டாம் மனைவி;** wife of Kandarāditta-šōlar.

*[செம்பியன் + மாதேவி]*

கண்டராதித்த சோழரின் இரண்டாம் மனைவியின் பெயர் செம்பியன்மாதேவி. கொல்லிமலை மழவர் குடியைச் சேர்ந்தவர். இராசராசசோழனின் வளர்ப்பு அன்னை. கணவர் இறந்த பின்னரும் 40 ஆண்டு காலம் வாழ்ந்து பல குமுகாயப் பணி செய்துள்ளார். குறிப்பாகப் பல கோயில்கள் கருங்கல்லில் எடுத்துள்ளார்.

**செம்பியன்மாதேவிநாழி** *šembiyan-mādēvi-nali,* பெ. (n.) **திருமழபாடி கோயிலில் உப்பு அளப்பதற்காகப் பயன்படும்படியளவு** (தெ.க.தொ. 5, கல். 627, 638); a volume measure, in use, the temple of Tirumalabādi.

*[செம்பியன்மாதேவி + நாழி]*

அளவுக் கலங்களுக்கு, அரச மரபினர், இறைவன் பேரிட்டு அழைப்பது பண்டைய மரபாகையால், அளவு நாழிக்கு செம்பியன்மா தேவி பெயரிடப்பட்டுள்ளது. இதே பெயரில் ஒரு மரக்காலும் இருந்ததாகத் தெரிகிறது.

**செம்பியன்மாதேவிப்பெருமண்டபம்** *šembiyan-mādēvi-p-perumandabam,* பெ. (n.) **முதல் இராசராசன் (கி.பி. 985-1016) தன்னுடைய பெரிய பாட்டியாகிய செம்பியன் மாதேவியின் பெயரால் திருமுக்கூடல் என்னும் ஊரில் எழுப்பித்த மண்டபம்** (பிற்.சோ.வர. சதாசிவ பண். பக். 134.); a memorial building built by Rajaraja Chola-I.

*[செம்பியன்மாதேவி + பெருமண்டபம்]*

**செம்பியனார்** *šem-bianār,* பெ. (n.) **நற்றிணை 102ஆம் பாடலின் ஆசிரியர்;** author of the verse Narrinai 102.

**செம்பிரண்டை** *šem-birandai,* பெ. (n.) **முடை நாறி;** a small downy-lobed vine.

*[செம் + பிரண்டை]*

**செம்பில்** *šembil,* பெ. (n.) **மரவகை;** cup-calyxed white cedar.

**செம்பில்வேதை** *šembil-vēdai,* பெ. (n.) **சோர நஞ்சு** (மூ.அ.); a prepared arsenic.

**செம்பிளி-த்தல்** *šembiḷi-*, 4 செ.குன்றாவி. (v.t.) செம்பளி- பார்க்க; see *šembaḷi-*.

*[செம்பளி → செம்பிளி]*

**செம்பிற்பொருப்பு** *šembiṟ-poruppu*, பெ. (n.) செம்புகனிமம் உள்ள பொதியமலை; Mt. Podiyam, as containing copper. தென்கால் விடுக்குஞ் செம்பிற் பொருப்பு (கல்லா. 51:11).

*[செம்பு + இல் + பொருப்பு (செம்புத் தாது உள்ள மலை)]*

**செம்பிறப்பு** *šem-biṟappu*, பெ. (n.) அறுவகைப் பிறப்புகளுள் நான்காவதாகிய செம்புயிர்க் குரிய பிறப்பு; the fourth of the six kinds of birhts, which is that of šempuyir. "பசும் பிறப்புஞ் செம்பிறப்பும்" (மணிமே.27:151).

*[செம் + பிறப்பு]*

சமணர் கொள்கையின் படி பிறப்பு அறுவகைப்படும். தமிழகராதிகள் கூற்றுப்படி பிறப்பு ஏழு வகைப்படும். அவையாவன : தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம். சமண வகைப்பாடு வருமாறு : கரும் பிறப்பு, கருநீலப் பிறப்பு, பசும்பிறப்பு, செம்பிறப்பு, பொன் பிறப்பு, வெண் பிறப்பு.

**செம்பிறால்** *šembiṟāl*, பெ. (n.) சிவப்பிறால் மீன் வகை (யாழ்.அக.); a species of reddish prawn.

*[செம்பு + இறால். செம்பு = சிவப்பு]*

**செம்பிறை** *šembiṟai-*, பெ. (n.) 1. கானறக்கல் (யாழ்.அக.); a kind of metallic ore. 2. நீலக்கல் (யாழ்.அக.); blue stone.

*[செம் + பிறை]*

**செம்பின்பச்சை** *šembiṉ-paccai*, பெ. (n.) நாகப்பச்சை (வின்.); a kind of green stone.

**செம்பினிறம்** *šembiṉiṟam-*, பெ. (n.) மாந்தளிர்க் கல் (யாழ்.அக.); a kind of precious stone.

*[செம்பு + நிறம்]*

**செம்பு[1]-தல்** *šembu-*, 5 செ.குன்றாவி. (v.t.) செம்மு[1],2 பார்க்க; see *šemmu[1],2*. "அவுணன் பட்டுக் குரைகடல் செம்ப" (திருப்பு. 841).

*[செம்மு → செம்பு (அடைத்தல்)]*

**செம்பு[2]** *šembu*, பெ. (n.) 1. வெப்பம், மின்சாரம் ஆகியவற்றை எளிதில் கடத்தக் கூடியதும் கடினத் தன்மை குறைந்ததுமான வெளிர்ச் சிவப்பு நிற மாழை, தாம்பரம்; copper Cuprum, as reddish. "செம்பிற் செய்நவுங் கஞ்சத் தொழிலவும்" (சிலப். 14: 174). 2. பொன் (அக.நி.); gold. 3. நீர், பால் முதலியவற்றை எடுத்துச் செல்ல ஏந்தாகக் குறுகிய கழுத்தும் உருண்டை வடிவக் கீழ்ப்பகுதியும் உடைய ஓர் மாழை ஏனம்; a small metal vessel with a narrow neck for carrying water, milk, etc. 4. மூன்றே காற் சேர்கொண்ட முகத்தலளவு; liquid measure = 3¼ šēr = 216 cu. in. 5. காசுக்குற்ற வகை (சரவண. பணவிடு. 16); a blemish in coin.

ம. செம்பு; க. செம்பு, கெம்பு; து. செம்பு

E. copper; LL. cuper; L. cuprum; Gk. cyprium; G. kuppes; Du. koper; F. cuinre.

*[செம் → செம்பு (வே.க. 220)]*

**செம்புக்குட்டி[1]** *šembu-k-kuṭṭi*, பெ. (n.) செம்புச் சிலை; idol made of copper.

*[செம்பு + குட்டி. குட்டி = சிலை]*

**செம்புக்குட்டி[2]** *šembu-k-kuṭṭi*, பெ. (n.) 1. செண்பகக்குட்டி (இயற்பெயர்); a personal name. 2. செண்பகக் குட்டி குலப்பிரிவு; a sub-sect as Šeṇbagakkuṭṭi.

**செம்புக்குள்வேதை** *šembukkuḷ-vēdai*, பெ. (n.) கற்பரி நஞ்சு (வின்.); a mineral poison.

**செம்புகம்[1]** *šembugam*, பெ. (n.) நரி; fox.

**செம்புகம்[2]** *šembugam*, பெ. (n.) செம்போத்து (சங்.அக.); crow pheasant.

தெ. செமுடு காகி

*[செம்போத்து → செம்புகம்]*

**செம்புகொட்டி** *šembu-koṭṭi*, பெ. (n.) செம்பு வேலை செய்யும் தொழிலாளி (சிலப். 5: 28, உரை); copper smith.

ம. செம்பு கொட்டி; க. செம்புகுட்டிக; து. செம்பு குட்டி

*[செம்பு + கொட்டி]*

**செம்புடையன்** *šem-budaiyan*, பெ. (n.) பாம்பு வகை; red wart snake.

*[செம் + உடையன். உடையன் = பாம்பு]*

**செம்புண்** *šem-bun*, பெ. (n.) 1. ஆறும் நிலைமையில் உள்ள புண் (இ.வ.); healing wound, as looking reddish. 2. அரத்தத்தாற் செந்நிறமாயிருக்கும் புண்; fresh wound, red with blood. "தாம்பிறிதின் செம்புண் வறுத்த வறைதின்பர்" (அறநெறி. 94).

*[செம் + புண்]*

**செம்புண்ணீர்** *šem-bunnīr*, பெ. (n.) அரத்தம்; blood. "செம்புணீர் பொசியு மெய்யினன்" (பாரத. வேத்திரகீய. 15).

*[செம் + புண்ணீர்]*

**செம்புத்தீக்கல்** *šembu-t-tīkkal*, பெ. (n.) இரும்புஞ் செம்புங் கலந்த மாழைக்கட்டி (இவ); copper pyrites, sulphide of copper and iron.

*[செம்பு + தீக்கல்]*

**செம்புதட்டி** *šembu-tatti*, பெ. (n.) செம்பு கொட்டி பார்க்க; see *šembu-kotti*.

ம. செம்புதட்டி

*[செம்பு + தட்டி]*

**செம்புப்பற்று** *šembu-p-parru*, பெ. (n.) பொன்னிற் கலந்த செம்பு (வின்.); alloy of copper in gold.

*[செம்பு + பற்று]*

**செம்புமணல்** *šembu-manal*, பெ. (n.) செம்பு கலந்த மணல் (வின்.); sand containing copper.

*[செம்பு + மணல்]*

**செம்புமலை** *šembu-malai*, பெ. (n.) செப்புக் கனிமங்களைத் தன்னிடத்தே கொண்ட மலை; mountain containing copper ore.

*[செம்பு + மலை]*

**செம்புயிர்** *šembuyir*, பெ. (n.) 1. மக்களிற் கீழாயினாரும் விலங்கும் கொண்டுள்ள உயிர்; the grade of life which includes animals and human beings of low type. "செம்புயி ரிரும்புபோல வாம் பிணியுயிர்" (சீவக. 3111)

*[செம்பு + உயிர்]*

மணி உயிர் - வீடு பெற்ற உயிர்; பொன் உயிர்- வானவர் உயிர்; வெள்ளி உயிர் - அழகிய மக்கள் உயிர்; செம்புயிர் - மக்களின் கீழாயினோர் உயிர், விலங்குயிர்; இரும்பு உயிர் - நிரையயுயிர் (நரகருயிர்) (சைனம்).

**செம்புலப்பெயல்நீரார்** *šembula-p-peyal-nīrār*, பெ. (n.) குறுந்தொகை 40ஆம் பாடலில் வரும் சொற்றொடர் கொண்டு அழைக்கப்படும் புலவர், அப்பாடலின் ஆசிரியர்; the name of the poet, named after the terms found in his verse Kurundogai 40, when his original name was not known. "செம்புலப் பெயந்நீர் போல" (குறுந். 40).

*[செம்புலம் + பெயல் + நீரார்]*

**செம்புலம்** *šembulam*, பெ. (n.) 1. செம்மண் நிலம்; red earth country. "செம்புலப் பெயந்நீர் போல" (குறுந். 40). 2. போர்க்களம் (திவா.); battle field. 3. பாலைநிலம் (பிங்.); desert tract. 4. சுடுகாடு; place of cremation. 5. செம்புமலை பார்க்க; see *šembu-malai*. 6. செழிப்பானநிலம் (வின்.); fertile land.

*[செம் + புலம். புலம் = நிலம்]*

**செம்புலவு** *šembulavu*, பெ. (n.) வெண்ணாங்கு மரவகை (L.); creamy-leaved lance wood.

**செம்புலி** *šem-buli*, பெ. (n.) 1. பழுப்பு நிறமுள்ள புலிவகை; tawny-coloured tiger. 2. கள்ளர் இனத்தில் ஓர் உட்பிரிவு (E.T.); a sub-sect of Kallar caste.

ம. செம்புலி

*[செம் + புலி]*

**செம்புலியாடு** *šembuli-y-ādu*, பெ. (n.) செம்மறி பார்க்க (பதார்த்த. 847); see *šem-mari*.

**செம்புவரை** *šembu-varai*, பெ. (n.) செம்பிற் பொருப்பு பார்க்க; see *šembir-poruppu*. "செம்பு வரை தனிலேகி" (குற்றா. தல. திருமால். 9).

*[செம்பு + வரை. வரை = மலை]*

**செம்புவிலை** *šembu-vilai*, பெ. (n.) சேரர் ஆட்சிக் காலத்தில் வாங்கப்பட்ட வரி; a kind of tax.

**செம்புள்** *šem-bul*, பெ. (n.) கருடன்; sacred kite. "செம்புளாய்க் கொடிய நாரசிங்க மாய்" (திருவிளை. யானையெ. 41).

ம. செம்புள்

*[செம் + புள்]*

**செம்புளிச்சான்** *šem-buḷiccāṉ*, பெ. (n.) செம்புளிச்சை (L.) பார்க்க; see *šem-buḷiccai.*

**செம்புளிச்சை** *šem-buḷiccai*, பெ. (n.) *1.* தேவதாரு மரம் (பிங்.); red cedar. *2.* மரவகை (M.M. 83); a kind of tree Roselle.

*[செம் + புளிச்சை. புளிச்சை = மரவகை]*

**செம்புறா** *šemburā*, பெ. (n.) மீன் வகை (யாழ்ப்.); a kind of fish.

*[செம்பிறால் → செம்புறா]*

**செம்புறைக்கல்** *šem-burai-k-kal*, பெ. (n.) செம்பாறாங்கல் (சங்.அக.) பார்க்க; see *šem-pārāṅgal.*

**செம்புனல்** *šem-buṉal*, பெ. (n.) *1.* புது வெள்ளம்; freshes in river. "தலைப் பெயற் செம்புன லாடி" (ஐங்குறு. 80). *2.* சிவந்த நீர்; red -water. *3.* அரத்தம்; blood. "கடார மழித்த நாட் பாய்ந்து செம்புன லாடியு நீந்தியும்" (கலிங். 138).

*[செம் + புனல்]*

**செம்பூ** *šem-bū*, பெ. (n.) செந்நிறப் பூவுள்ள செடி வகை; a plant with red-flower. "செம்பூங் கண்ணியர்" (பரிபா. 22:21).

*[செம் + பூ]*

**செம்பூசணி** *šem-būšaṇi*, பெ. (n.) பூசணி வகை (மூ.அ.); a variety of reddish pumpkin.

*[செம்(மை) + பூசணி]*

**செம்பூட்சேய்** *šembūṭ-šēy*, பெ. (n.) அகத்தியனார் மாணாக்கருள் ஒருவரான கூற்றியல் என்னும் நூலின் ஆசிரியர் (இறை. 56, உரை); a disciple of Agastya, author of Kūṟṟiyal.

**செம்பூர்நாடு** *šembūr-nāḍu*, பெ. (n.) காஞ்சிபுரம் மாவட்டத்திலுள்ள பழைய நாட்டுப் பிரிவு; an old divison in Kāñjipuram dt. "செம்பூர்க் கோட்டத்து செம்பூர் நாட்டு கலிகுளத்து வாயுடையமாங் கோயில் . . ." (தெ.க.தொ : 7, கல். 541-1).

*[செம்பூர் + நாடு]*

**செம்பூரம்** *šem-būram*, பெ. (n.) செம்பூரான் பார்க்க; see *šem-būrāṉ.*

*[செம் + பூரம். பூரம் = பூரான்]*

**செம்பூராங்கல்** *šem-būrāṅgal*, பெ. (n.) செம்பாறாங்கல் பார்க்க; see *šem-bārāṅ-gal.*

*[செம்பாறாங்கல் → செம்பூராங்கல்]*

**செம்பூரான்** *šem-būrāṉ*, பெ. (n.) பூரான் வகை (சங்.அக.); red centipede.

*[செம்(மை) + பூரான்]*

**செம்பூரான்கல்** *šem-būrāṉ-kal*, பெ. (n.) செம்பாறாங்கல் (கட்டடநா. 41) பார்க்க; see *šem-bārāṅ-gal.*

*[செம் + பூரான்]*

**செம்பூவம்** *šem-būvam*, பெ. (n.) மரவகை; a kind of tree.

*[செம் + பூவம். பூவம் = மரவகை.]*

**செம்பூறல்** *šembūṟal*, பெ. (n.) செம்பிலுண்டாகுங் களிம்பு (யாழ்ப்.); verdigris.

*[செம்பு + ஊறல். ஊறு → ஊறல்]*

**செம்பூறு-தல்** *šembūṟu-*, 5 செ.கு.வி. (v.i.) களிம்பு உண்டாதல்; to form verdigris, as on copper.

*[செம்பு + ஊறு-.]*

**செம்பை**[1] *šembai*, பெ. (n.) *1.* சிற்றகத்தி (L.); common sesban. *2.* சீமைச்செம்பை (L.); Jerusalem thorn. *3.* ஒருவகைப் பூச்செடி; a kind of flower plant.

*[செம்பு → செம்பை (வே.க.220)]*



செம்பை

**செம்பை**[2] *šembai*, பெ. (n.) நெற்பயிரின் நோய் வகை (நீலகேசி, 366, உரை.); a disease affecting paddy crop.

**செம்பொடி**[1] *šem-bodi*, பெ. (n.) 1. செம்மணல் (சங்.அக.); red sand. 2. மகரந்தப்பொடி; pollen. "சேவலொடு பெடையன்னம் . . . பூவணைமேல் துதைந்தெழு செம்பொடியாடி" (திவ். பெரியாழ். 4.9:9).

[செம் + பொடி]

**செம்பொடி**[2] *šem-bodi*, பெ. (n.) 1. நீலக்கல் (யாழ்.அக.); blue stone. 2. சிந்தூரம்; red oxide of mercury. "செம்பொடிப் புரத்திக் கயங்களை" (தக்கயாகப். 496).

[செம் + பொடி]

**செம்பொத்தி** *šem-botti*, பெ (n.) ஆடைவகை (சிலப். 14:108, உரை); a kind of cloth.

[செம் + பொத்தி. பொத்தி = ஆடை வகை]

**செம்பொருள்** *šem-boruḷ*, பெ (n.) 1. நேர் பொருள்; natural, correct meaning. 2. உண்மைப்பொருள் (சி.போ.பா. 6:2, பக். 319); true significance. 3. சிறந்த பொருள்; object of supreme worth or excellence. "மெய்ந்நிறைந்த செம்பொருளாம் வேதத்தின்" (பெரியபு. திருஞான. 102). 4. முதற்பொருளான கடவுள்; God. "செம் பொருள் காண்ப தறிவு" (குறள், 358). 5. அறம்; virtue. "செம்பொருள் கண்டார்" (குறள், 91).

[செம் + பொருள்]

**செம்பொருளங்கதம்** *šem-boruḷ-aṅgadam*, பெ. (n.) வாய்கரவாது சொல்லிய வசைப் பாட்டு (தொல்.பொருள்.437,உரை); open, undisguised lampoon.

[செம்பொருள் + அங்கதம். அங்கதம் = வசைப்பாட்டு]

**செம்பொறி** *šem-boṟi*, பெ. (n.) அரசமுத்திரை (அக.நி.); royal seal.

[செம் + பொறி]

**செம்பொன்** *šem-boṉ*, பெ. (n.) சிறந்த பொன்; superior gold. "செம்பொன் விளக்கொடு சேடியர் முந்துற" (பெருங். உஞ்சைக். 33:189).

ம. செம்பொன்னு; க. செம்பொன்

[செம் + பொன்]

**செம்பொன்வரை** *šem-boṉ-varai*, பெ. (n.) மேருமலை; Mt. Mēru, as golden. "கல்விச் செம்பொன் வரையினா ரளவில்லா வளவு சென்றார்" (திருக்கோ. 308).

[செம் + பொன் + வரை. வரை = மலை.]

**செம்போக்கு** *šem-bōkku*, பெ. (n.) உயிர், உயர் பிறவிகளிற் சென்று கொண்டிருக்கை; upward progress of souls in higher births. "இது செம்போக்கி னியல்பு" (மணிமே.27: 157).

[செம் + போக்கு. செம்மை = உயர்ந்தது]

**செம்போத்து**[1] *šem-bōttu*, பெ. (n.) உடல் கறுப்பாகவும் இறக்கை பாக்கு நிறமாகவும் இருக்கும் காக்கை அளவிலான பறவை (பிங்.); crow pheasant.

மறுவ. செண்பகம்

ம. செம்போத்து; க. செம்போது, கெம்போது

[செம் + போத்து. போத்து = பறவை]



செம்போத்து

**செம்போத்து**[2] *šem-bōttu*, பெ. (n.) செண்பகம் (யாழ்.அக.); champak tree.

**செம்போத்துக்காரி** *šembōttu-k-kāri*, பெ. (n.) சில இடங்களில் வெளுத்தும் சில இடங்களிலும் கறுத்துமுள்ள எருது (இ.வ.); bull partly grey and partly black in colour.

[செம்போத்து + காரி]

**செம்போதகர்** *šem-pōdagar*, பெ. (n.) அருகரில் ஒரு பகுதியார் (சி.சி. ஆசீவகன் மறுதலை, 2, பர.); a class of Arhats.

Skt. bōdhaka

[செம் + போதகர்]

**செம்மகள்**[1] *šem-magaḷ*, பெ. (n.) 1. திருமகள்; Lakshmi, as beautiful. "முளரி நிறை செம்மகள் முன்னி யாடுக" (கல்லா. 39: 4).

[செம் + மகள். செம்மையான, அழகான திருமகள்]

**செம்மகள்**[2] *šem-magaḷ*, பெ. (n.) பட்டறிவற்ற (அனுபவமற்ற) பெண்; artless, inexperienced girl. "செம்மகண் மாலை யிம்முறை யென்றால் (கல்லா. 5:31).

[செம் + மகள்]

**செம்மட்டி** *šem-maṭṭi*, பெ. (n.) 1. ஒரு வகைச் சிப்பி; a kind of mussel or oyster. 2. மரமஞ்சள் (மலை.); tree turmeric.

[செம் + மட்டி. மட்டி = சிப்பிமீன்]

**செம்மண்**[1] *šem-maṇ*, பெ. (n.) மட்பாண்டங்கள் மீது பூசவும், சாலைகள் அமைக்கவும் பயன்படும் ஒருவகைச் சிவப்பு நிற மண் (சிலப். 16:5, உரை); a kind of red earth, red soil.

ம. செம்மண்ணு; க., பட. கெம்மண்ணு; துட. கெம்மொண்

[செம் + மண்]

**செம்மண்**[2] *šem-maṇ*, பெ. (n.) மாணிக்கக் குற்றங்களுள் ஒன்று (திருவாலவா. 25:14); a flow in rubies, one of māṇikka-k-kuṟṟam.

[செம் + மண்]

**செம்மண்சிலை** *šem-maṇ-šilai*, பெ. (n.) காவிக்கல் (யாழ்.அக.); red ochre.

[செம்மண் + சிலை.]

**செம்மண்நிலம்** *šem-maṇ-nilam*, பெ. (n.) சிவந்த மண்ணையுடைய நிலப்பகுதி; red soil area; laterite soil.

[செம்மண் + நிலம்]

**செம்மண்பட்டை** *šem-maṇ-paṭṭai*, பெ. (n.) நற்காலங்களில் கோயில், மதில், திண்ணை முதலியவற்றில், சுண்ணாம்புப்பட்டையை இடையிட்டு அடிக்கும் சிவப்புப்பட்டை; stripes of red wash alternating with white, made on festive occasions on the side walls, as of temples, of raised platform at the entrance of house, etc.,

[செம்மண் + பட்டை]

**செம்மண்பூச்சு** *šem-maṇ-pūccu*, பெ. (n.) மண் சுவரின் மீது குழைத்த செம்மண் கொண்டு பூசி மெழுகியது; finishing the mud wall with red earth. என் வீட்டிற்கு நேற்று செம்மண் பூச்சு பூசினார்கள் (உ.வ.).

[செம்மண் + பூச்சு]

**செம்மண்பூமி** *šem-maṇ-pūmi*, பெ (n.) செம்மண்நிலம் பார்க்க; see *šem-maṇ-nilam*.

[செம்மண் + பூமி]

**செம்மணத்தக்காளி** *šem-maṇa-t-takkāḷi*, பெ (n.) செம்மணித்தக்காளி (M.M.) பார்க்க; see *šem-maṇi-t-takkāḷi*.

[செம்மணித்தக்காளி → செம்மணத் தக்காளி]

**செம்மணத்தி** *šem-maṇatti*, பெ. (n.) செம்புளிச்சை,1 (மலை) பார்க்க; see *šem-puḷiccai,1*.

**செம்மணற்பாறை** *šem-maṇaṟ-pāṟai*, பெ (n.) மணற்பாறை வகைகளுள் ஒன்று; a kind of sand-stone in red colour.

[செம்மணல் + பாறை]

**செம்மணி** *šem-maṇi*, பெ (n.) 1. மாணிக்கம் (பிங்.); ruby. 2. பதுமராகம், குருவிந்தம், குருந்தக்கல், மாம்சகந்தி, பவளம் என்ற ஐம்மணிகளில் ஒன்று (யாழ்.அக.); any of the red gems, viz., padumarāgam, kuruvindam, kurundakkal, māmšagandi, pavaḷam. 3. சிவப்புமணி; red bead. 4. கண்ணின் கருமணியைச் சூழ்ந்துள்ள செந்நிற வட்டம் (யாழ்ப்); a redddish circle round the pupil of the eye.

[செம் + மணி]

**செம்மணிச்சை** *šem-maṇiccai*, பெ. (n.) மரவகை (தெ.க.தொ. 3, 408); a tree.

[செம் + (மணிச்சிகை→) மணிச்சை]

**செம்மணித்தக்காளி** *šem-maṇi-t-takkāḷi*, பெ. (n.) செடிவகை; a variety of Indian hounds-berry.

[செம்மணி + தக்காளி]

**செம்மந்தாரை** *šem-mandārai*, பெ. (n.) மந்தார மரவகை (L.); purple variegated mountain ebony.

*[செம் + மந்தாரை]*

**செம்மயிற்கொண்டை** *šemmayir-kondai*, பெ. (n.) செம்மயிற்கொன்றை (வின்.) பார்க்க; see *šem-mayir-konrai*.

*[செம்மயிற்கொன்றை → செம்மயிற் கொண்டை]*

**செம்மயிற்கொன்றை** *šem-mayir-konrai*, பெ. (n.) கொன்றை வகை (L.); scarlet peacock flower tree.

*[செம் + மயிற்கொன்றை]*

**செம்மரம்** *šem-maram*, பெ. (n.) 1. மரவகை; Coromandal red-wood-Soymida febrifuga. 2. மரவகை (L.); a kind of tree. 3. செஞ்சந்தனம் (L.); red-sanders. 4. அழிஞ்சில் (மலை.); sage-leaved alangium. 5. மஞ்சாடி (L.); barbadoes pride. 6. தேவதாரு (L.); red cedar.

ம. செம்மரம்

*[செம் + மரம்]*

**செம்மரிசி** *šem-m-ariši*, பெ. (n.) செந்நெல்லில் இருந்து எடுக்கப்பட்ட அரிசி (நன்னி. க.தொ.2. கல்.2. தொ.எண். 254-32); a kind of rice taken from red paddy.

*[செம் + அரிசி]*

**செம்மருதம்** *šem-marudam*, பெ. (n.) கட்டடப் பணிக்குப் பயன்படும் கெட்டியான மருதமரம், பூமருது; hard country wood for building works.

ம. செம்மருத

*[செம் + மருதம்]*

**செம்மருதர்** *šem-marudar*, பெ. (n.) நல்ல வேளாளர்; good farmers or cultivators. செம்மருதர் குடியாக (T.A.S.).

*[செம் + மருதர்]*

**செம்மருது** *šem-marudu*, பெ. (n.) செம்மருதம் பார்க்க; see *šem-marudam*.

ம. செம்மருது

*[செம் + மருது]*

**செம்மல்**[1] *šemmal*, பெ. (n.) 1. தலைமை; greatness, excellence, superiority. "அருந் தொழில் முடித்த செம்மற் காலை" (தொல். பொருள். 146). 2. வலிமை (பிங்.); power. 3. தருக்கு; haughtiness. "செயிர்ப் பவர் செம்மல் சிதைக்கலாதார்" (குறள், 880). 4. பெருமையிற் சிறந்தோன், தலைவன் (திவா.); great person, as king. சீர்திருத்தச் செம்மல். 5. இறைவன் (திவா.); god. "சித்தன் பெரியவன் செம்மல்" (சிலப். 10:183). 6. சிவன் (சூடா.); Šiva. 7. அருகன் (சூடா.); Arhat. 8. மறவன் (வீரன்) (திவா.); warrior, hero. 9. பெருமையுள்ள மகன்; son. "பருதிச் செல்வன் செம்மலுக்கு" (கம்பரா. அனும. 18).

ம. செம்மு

*[செம் → செம்மல்]*

தலைவன் அல்லது அரசன் செம்மல் எனப்பட்டது, நேர்மையான ஆட்சியால்; சிவன் செம்மல் எனப்பட்டது, செந்நிறத்தால்

**செம்மல்**[2] *šemmal*, பெ. (n.) 1. சாதிப்பூ (குறிஞ்சிப். 82); large flowered jasmine. 2. வாடிச்சிவந்த பழம்பூ (திவா.); faded flower "உதிர்ந்த . . . செம்மன் மணங்கமழ" (சிலப். 7, பாடல், 39). 3. வாடாப்பூ (அக.நி.); ever-fresh flowers.

*[செம் → செம்மல்]*

**செம்மல்**[3] *šemmal*, பெ (n.) நீர் (அக.நி.); water.

*[செம் → செம்மல்]*

**செம்மல்லிகை** *šem-malligai*, பெ. (n.) செம் முல்லை (இ.வ.); golden jasmine.

*[செம் + மல்லிகை]*

**செம்மலை**[1] *šemmalai*, பெ. (n.) செங்கரடு பார்க்க; see *šeṅ-garadu*.

**செம்மலை**[2] *šemmalai*, பெ. (n.) ஆவிரை; tanner's senna.

**செம்மலைப்பாலை** *šem-malai-p-pālai*, பெ. (n.) பாலைப் பண் வகை (சங்.அக.); a secondary melody-type of the pālai class.

**செம்மறி** *šem-mari*, பெ. (n.) கம்பளிப் போர்வைக்குத் தேவையான முடியைப் பொறுவதற்காகவும், இறைச்சிக்காகவும் வளர்க்கப்படும் ஒருவகைப் செம்பழுப்பு நிற ஆடு (திவா.); common brown sheep.

ம. செம்மரி

*[செம் + மறி]*




**செம்மறிப்புருவை** *šem-mari-p-puruvai*, பெ. (n.) 1. பெண்ணாடு (நாஞ்.); she sheep, ewe. 2. செம்மறியாட்டுக்குட்டி (வின்.); lamb.

[செம்மறி + புருவை]

**செம்மறியாடு** *šem-mari-y-āḍu*, பெ. (n.) செம்மறி பார்க்க; see *šem-mari*.

**செம்மன்திருக்கை** *šemmaṉ-tirukkai*, பெ. (n.) பழுப்பு நிறமும், 25 விரலம் நீளம் வளரும் உடலும், 72 விரலம் நீளம் வளரும் வாலுமுள்ள, மீன்வகை; sting ray, brown, attaining 25 in. in length besides a tail 72 in. long, trigon bleekeri.

[செம் → செம்மன் + திருக்கை]




**செம்மா¹-தல்** *šemmā-*, 6 செ.கு.வி. (v.i.) செம்மையாதல்; to be right, to become proper. "என் கண்ணன் கள்வ மெனக்குச் செம்மாய் நிற்கும்" (திவ். திருவாய். 9. 6:6).

ம. செம்மாக்குக (அழகாக்குதல், நேராக்குதல்)

[செம் + ஆ - செம்மா-.]

**செம்மா²-த்தல்** *šemmā-*, 6 செ.கு.வி. (v.i.) 1. இறுமாத்தல்; to be elated with pride, to be haughtly, to assume superiority "மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ்' (குறள், 1074). 2. மிகக் களித்தல்; to be over-joyed, intoxicated with joy. "மதுவுண்டு செம்மருந் தண்கரும்பு" (பெரியபு. ஆனாய. 20). 3. வீறுபெறுதல்; to be majestic in manner or bearing. "அண்ணல் செம்மாந் திருந்தானே" (சீவக. 2358).

[செம் → செம்மா-.]

**செம்மாத்தி** *šemmātti*, பெ. (n.) காலணித் தொழிலாளர் குலப்பெண்; woman of the shoe-maker caste.

[செம்மான் (ஆ.பா.) → செம்மாத்தி (பெபா.)]

**செம்மாப்பு** *šemmāppu*, பெ. (n.) 1. அகமலர்ச்சி (திவா.); exultation. 2. இறுமாப்பு (சூடா.); pride, haughtiness. 3. வீற்றிருக்கை (சூடா.); majestic bearing or manner.

[செம்மா-² → செம்மாப்பு]

**செம்மார்புக்குக்குறுவான்** *šemmārbu-kuk-kuṟuvāṉ*, பெ. (n.) பச்சை நிறவுடலும், மஞ்சள் நிறத் தொண்டையும் சிவப்பு நிறமார்பும் கொண்ட பறவை; coppersmith barbet.

[செம்மார்பு + குக்குறுவான்]

சாலை ஓரமரங்கள், தோட்டங்கள், பூங்காக்கள் ஆகியவற்றில் காணப்படும் பறவை.

**செம்மாரா** *šem-m-ārā*, பெ. (n.) மஞ்சள் அல்லது இளஞ்சிவப்பு நிறமுள்ள கடல்மீன் வகை; sea-fish, yellow or rosy.

[செம் + (ஆரால் →) ஆரா]

**செம்மாளி** *šemmāḷi*, பெ. (n.) செம்படவர் அணியும் செருப்பு வகை (இ.வ.); a kind of sandals used by fishermen.

தெ. சம்மாளிகலு.

[செம்மான் → செம்மாளி]

**செம்மான்** *šemmāṉ*, பெ. (n.) காலணி செய்வோன் (சூடா.); shoe-maker, one who works in leather.

ம. செம்மான்

[செம் → செம்மான்]

Skt. carman

**செம்மானம்** *šem-māṉam*, பெ. (n.) 1. செக்கர் வானம்; roseate sky. "செம்மானத் தொளியன்ன மேனியான் காண்" (தேவா. 711. 1). 2. மழைப் பெய்தலைக் குறிக்கும் வானம் (தஞ்சை); copper sky.

ம. செம்மானம்; க. கெம்பார

[செம் + (வானம் →) மானம்]

**செம்மிளகி** *šem-miḷagi*, பெ. (n.) சம்பாநெல் வகை (A.); a species of šambā paddy.

[செம் + மிளகி. மிளகி = நெல் வகை]

**செம்மீன்**[1] *šem-mīṉ*, பெ. (n.) 1. அருந்ததி; the star Arundadi "செம்மீ னனைய ணின்றொன்னகர்ச் செல்வி" (பதிற்றுப். 31:28). 2. செவ்வாய்; Mars. செம்மீ னிமைக்கு மாக விசும்பின் (புறநா. 60:2). 3. யாழ்விண்மீன் (திருவாதிரை) (புறநா. 60, உரை); the 6th star.

ம. செம்மீன்

[செம்(மை) + மீன். மீன் = விண்மீன்]

**செம்மீன்**[2] *šem-mīṉ*, பெ. (n.) 1. பெருந்தலைத் திமிங்கலம் (M.M.345); sperm whale. 2. இறால் மீன்; prawns.

ம. செம்மீன்

[செம் + மீன்]

**செம்மீன்வயிரம்** *šem-mīṉ-vayiram*, பெ. (n.) மீனம்பர் என்னும் மருந்துப்பண்டம் (வின்.); ambergris as found in the intestines of the sperm whale.

[செம்மீன் + வயிரம்]

செம்மீன் வயிற்றில் காணப்படுவது

**செம்மு**[1]**-தல்** *šemmu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. மூடுதல்; to shut, close, as door. "திண்கதவஞ் செம்மி" (திவ்.இயற். 3:12). 2. தூர்த்தல்; to close up, fill up "தூளி . . . யானை மதத்தொளை செம்மிற் றன்றே" (கம்பரா. எழுச். 52). 3. மருந்துப் பண்டங்களைப் புடமிடும் பொழுது சீலை மண்கட்டுதல் (வின்.); to apply lute to a cloth covering a medicinal substance, before heating. 4. பையை நிறைத்து வாயைத் தைத்தல் (வின்.); to stuff and fill, as pillow or bag, and sew up the end. 5. புண்ணைக் கீறிவிடுதல்; to open, as a sore. 6. புடைத்தல் (இ.வ.); to beat soundly, thrash. 7. கிட்டித்தல்; to consolidate. தோண்டிய குழிக்குள் தூணை நிறுத்திச் சுற்றிலும் சல்லி மண் முதலியன இட்டுச் செம்மினார்கள்.

[செம் → செம்மு]

**செம்மு**[2]**-தல்** *šemmu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. கலங்குதல்; to be disturbed, agitated. 2. கண் கலங்கி வீங்குதல் (வின்.); to be swollen and bleared, as the eyes. 3. வயிறு பொருமுதல் (வின்.); to be hard, as belly through indigestion. 4. நிறமுதலியன பரவுதல் (வின்.); to spread, as colour.

[செம் → செம்மு]

**செம்முதுகுக்கீச்சான்** *šem-mudugu-k-kīccāṉ*, பெ. (n.) பெரிய தலையோடு பருத்த வளைந்த அலகும், செம்மையான முதுகும் கொண்ட பறவை; rufous-backed shrike.

[செம்முதுகு + கீச்சான்]

இது ஓணான், தவளை போன்றவற்றைப் பிடித்து முள்மரங்களில் குத்தி வைத்து பின் ஓய்வாகத் தின்னும் இயல்புடையது.

**செம்முருங்கை** *šem-muruṅgai*, பெ. (n.) மரவகை; a kind of tree.

ம. செம்முரிங்ங

[செம் + முருங்கை]

**செம்முல்லை** *šem-mullai*, பெ. (n.) முல்லை வகை (L.); golden jasmine.

[செம் + முல்லை]

**செம்முள்ளி** *šem-muḷḷi*, பெ. (n.) 1. சமுத்திராப் பழவகை (L.); Andaman Indian oak. 2. முட்செடிவகை; a thorny plant. 3. வெள்ளை நீலாம்பரம் (L.); crested purple nail dye.

ம. செம்முள்ளி

[செம் + முள்ளி]

**செம்மூக்கன்** *šem-mūkkaṉ*, பெ (n.) 1. *முதலை வகை (யாழ்ப்.);* a species of alligator. 2. *எலி வகை (சங்.அக.);* a species of rat.

*[செம் + மூக்கன்]*

**செம்மேவல்** *šem-mēval*, பெ. (n.) *இணங்குகை (யாழ்ப்.);* agreement, reconciliation .

*[செம் + மேவு + அல்]*

**செம்மை** *šemmai*, பெ. (n.) 1. *சிவப்பு (திவா.);* redness, ruddiness. கதிரவன் மறையும் நேரத்தில் வானம் செம்மை பூசியிருந்தது. 2. *செவ்வை (திவா.);* goodness, soundness, good condition. 3. *நேர்மை;* spotlessness, directness, rectitude "செம்மையி னிகந் தொரீஇ" *(கலித்.14).* வறுமையிலும் செம்மை வேண்டும். 4. *மனக் கோட்டமின்மை;* fairness, impartiality. "செம்மையுஞ் செப்பும்" *(தொல்.பொருள். 209).* 5. *ஒற்றுமை (யாழ்ப்.);* unity, concord, agreement. 6. *பெருமை (திவா.);* excellence, eminence, greatness. "செம்மை சான்ற காவிதி மாக்களும்" *(மதுரைக். 499).* 7. *தூய்மை (வின்.);* fineness, neatness, cleanliness. 8. *அழகு;* beauty, grace, elegance. 9. *செங்கோள் (கேது) (சூடா.);* moon's descending node. 10. *கந்தகம்;* sulphur. "செம்மை முன்னிற்பச் சுவேதம் திரிவபோல்" *(திருமந். 2455).* 11. *கருத்தும் சொல்லும் செயலும் தம்முள் மாறாமை (குறள், அதி 11, பரிமே.);* no change in thought, word and deed.

ம. செம்ம

*[செய்ம்மை → செம்மை]*

**செம்மைக்கல்** *šemmai-k-kal*, பெ. (n.) *செந்நிறமான கானகக்கல்;* a variety of red stone containing ore.

*[செம்மை + கல்]*

**செம்மைகட்டு-தல்** *šemmai-kaṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. *ஒழுங்குபடுத்துதல்;* to adjust, settle. 2. *அமைதி (சமாதான)ப் படுத்துதல்;* to reconcile, as parties. 3. *ஏற்றுக் கொள்ளச் (சம்மதிக்கச்) செய்தல்;* to induce consent.

*[செம்மை + கட்டு-]*

**செம்மைப்படுத்து-தல்** *šemmai-p-paḍuttu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. *ஒழுங்குபடுத்துதல்;* to put in order, adjust, arrange, make ready, rectify. 2. *தூய்மையாக்குதல் (உ.வ.);* to cleanse. 3. *நிறைவு செய்தல்;* to finish, complete. 4. *அழகு படுத்துதல்;* to dress, decorate. 5. *மேம்படுத்துதல்;* to improve. 6. *சீர்படுத்துதல்;* to reform. நிர்வாகத்தைச் செம்மைப்படுத்தச் சில திட்டங்கள் போட வேண்டும்.

*[செம்மை + படுத்து-.]*

**செம்மைபண்டாரக்கல்** *šemmai-paṇḍārakkal*, பெ. (n.) *பொன்னை அளவிட உதவும் பண்டைய கல்;* an old weighing stone to weigh gold. 'தென்னாட்டுத் (தி) ருவ (ரை)ச் சங்கரனிரனை சிங்கன் நந்தாவிளக் கொன்றி னுக்குத் தந்த பொன் செம்மை பண்டாரக் கல்லால் 79 இவனெய்' *(தெ.க.தொ.4, கல். 519/1986).*

*[செம்மை + பண்டாரக்கல்]*

**செம்மையாக** *šemmai-y-āga*, வி.எ. (adv.) *கடுமையாக;* severely. அதிகாரியிடம் செம்மையாக வாங்கிக் கட்டிக் கொண்டான்.

*[செம்மை → செம்மையாக]*

**செம்மொழி**[1] *šem-moḻi*, பெ. (n.) 1. நல்ல சொல்; good, spotless words. "செம்மொழி மாதவர்" *(சிலப். 30:32).* 2. தொகை மொழியல்லாத ஒரு மொழி; simple, inseparable word; word that cannot be split up. opp.to piri-moḻi. 'தாமரை யென்பது செம்மொழியும் பிரிமொழியுமானாற் போலவும்' *(பி.வி. 5, உரை).*

*[செம் + மொழி]*

**செம்மொழி**[2] *šem-moḻi*, பெ. (n.) தொன்மையும் சிறப்பும் இலக்கிய வளமும் கொண்ட செவ்வியமொழி; classical language. இந்திய அரசின் செம்மொழிப் பட்டியலில் இன்னும் தமிழ் இடம் பெறவில்லை.

*[செம் + மொழி]*

**செம்மொழிச்சிலேடை** *šem-moḻi-c-cilēḍai*, பெ. (n.) *பிரிக்கப்படுதலின்றியே பலபொருள் பயக்குஞ் சொற்களாலாகிய தொடர் (தண்டி. 75 உரை);* paronomasia in šem-moḻi, caused without splitting up words, one of two šilēḍai.

"செங்கரங்க ளானிரவு நீக்கத் திறம் புரிந்து
பங்கய மாதர் நலம்பயிலப் -பொங்குத்

தேராழி வெய்யோ னுயர்ந்த நெரியொழுகும்
நீராழி நீணிலத்து மேல்"
இப்பாடலில் ஆதித்தச் சோழனுக்குப் பகலவன் சிலேடையாக குறிப்பிடப்பட்டுள்ளது காண்க.

[செம்மொழி + சிலேடை]

**செமக்கையிறால்** *šemakkai-y-iṟāl*, பெ. (n.) இறால் வகை; a kind of prawn.

[செம் + கை + இறால்]

**செமதி** *šemadi*, பெ. (n.) மிகுதி; abundance.

[செம் → செமதி]

**செமி¹-த்தல்** *šemi-*, 4 செ.குன்றாவி. (v.t.) செரித்தல்; to digest. "நஞ்சையுண்டு செமிப்பீரையா" (திருக்குற் ஊடற். 19. செந். 25, 392).

[சரி → செரி- → செமி-.]

**செமி²-த்தல்** *šemi-*, 4 செ.குவி. (v.i.) செரிமான மாதல்; to be digested. 'உண்டது செமியாமே' (ஈடு).

[செமி¹ → செமி²-.]

**செமி³-த்தல்** *šemi-*, 4 செ.குவி. (v.i.) பிறத்தல்; to be born. "செமித்த தெத்தனை" (திருப்பு. 242).

**செமியாக்குணம்** *šemi-yā-k-kuṇam*, பெ (n.) செரியாமை; indigestion.

[செமி- → செமியா + குணம்]

**செய்¹-தல்** *šey-*, 1 செ.குன்றாவி. (v.t.) 1. இயற்றுதல்; to do; perform, make, create, accomplish. "செயப்படு பொருளைச் செய்தது போல" (தொல். சொல். 248). செய்வதைத் திருந்தச் செய். 2. உண்டாக்குதல்; to cause, effect. "செறிந்தேர் முறுவலாள் செய்தவிக் காமம்" (கலித். 140). 3. பொருளீட்டுதல் (சம்பாதித்தல்); to acquire. "ஈதற்குச் செய்க பொருளை" (திரிகடு. 90). 4. ஒத்தல்; to resemble "வேனிரை செய்த கண்ணி" (சீவக. 2490).

ம. செய்யுக; க. கெய், தெய்; தெ. சேயு; து. கைபினி; கோத. கெய்; துட. கிய்; பிரா. கன்னிங்க்; குட. கெய்; கோண். கீபானா; கூ. கிவ, கிய; குவி. சீனை; நா. அக்; கொலா. கக்; கட. கெய்; பட. கீய்

[கல் → செல் → செள் → செய்-.]

**செய்²-** *šey-*, பெ. (n.) 1. செய்கை; deed, act, action. "களிறு களம்படுத்த பெருஞ்செய் யாடவர்" (நெடுநல். 171). 2. வயல்; field, especially wet field. "செய்யிற் பொலம்பாப்புஞ் செய்வினை" (பரிபா. 10:128).

ம. செயி; க. கெய்

[செய்¹ → செய்²]

**செய்³** *šey*, பெ. (n.) 1. 1¾ ஏக்கர் கொண்ட நன்செய் அல்லது புஞ்சை நிலவளவு; a unit of field measure = 276 ft x 276 ft = 76, 176 sq. ft = 1¾ acres of wet land (R.P.) 2. பெருங்குழி, 100 சிறு குழி கொண்ட நிலவளவை (G.Sm.D. I, i. 288); peru-ṅ-kuḻi, a land measure consisting of 100 ciṟu-kuḻi.

[செள் → செய். (ஒ.மொ. 169)]

**செய்⁴** *šey-*, பெ. (n.) சிவப்பு (தைலவ.); redness.

[சுல்(சிவப்பு) → செல் → செள் → செய்]

**செய்க்கடன்** *šey-k-kaḍaṉ*, பெ. (n.) நிலவரி; land tax. "பழஞ் செய்க்கடன் வீடுகொண்டது" (புறநா. 35).

[செய் + கடன்]

**செய்கடன்** *šey-kaḍaṉ*, பெ. (n.) 1. கடமைச் செயல்; duty, religious, social or moral. "தீர்த்தமாடிச் செய்கட னினிது முற்றி" (தணிகைப்பு, அகத். 131). 2. முன்னோர்க்குச் செய்யும் கடன் (வின்.); funeral obsequies, rites for the manes. 3. நேர்த்திக்கடன்; votive offering as to a deity. "தெய்வம் நொந்தேஞ் செய்கட னேர்ந்தேம்" (மனோன். 1, 3:168). 4. ஏற்கனவே ஒருவர் செய்த கொடை, அன்பளிப்பு போன்றவற்றைத் திருப்பிச் செய்தல்; returning the donation or gift to other when the occasion occurs.

[செய் + கடன்]

**செய்கரை** *šey-karai*, பெ. (n.) 1. வரப்பு; artificial bank, ridge in fields. "மண் . . . சுமந்து சென்றச் செய்கரை சிந்தி" (திருவாத.பு.மண்சுமந்த 37). 2. பாலம் (சூடா.); causeway, bridge. "அதுவே காட்சிச் செய்கரை யாகப் போகி" (இரகு. திக்குவி. 70). 3. செயற்கையாய் உண்டாக்கப்பட்ட தடுப்புக் கரை; dykes.

[செய் + கரை]

**செய்காடு** *šey-kāḍu*, பெ. (n.) குறுங்காடு (திருக்கோ. 148, உரை.); thickest.

*[செய்² + காடு]*

**செய்காரியஅட்டவணை** *šey-kāriya-aṭṭavaṇai*, பெ. (n.) கோயிலில் நடக்க வேண்டிய காரியங்களைக் காட்டும் பட்டி (இ.வ.); index of items of work to be done in temple service.

*[செய் + காரியம் + அட்டவணை]*

**செய்காரியம்** *šey-kāriyam*, பெ. (n.) 1. செய்யப் பட்ட வேலை; thing done, deed, act. 2. வல்லமை (சமாளிப்பு); economical management.

*[செய் + காரியம்]*

**செய்கால்[1]** *šey-kāl*, பெ. (n.) 1. பயிர் செய்யும் நிலம்; cultivated or arable land. 'தரிசு கிடந்த தரையைச் செய்காலாம்படி திருத்துவாரைப் போலே' (ஈடு, 2. 7:4). 2. சோலை (பிங்.); grove.

*[செய்² + கால்.]*

**செய்கால்[2]** *šey-kāl*, பெ. (n.) 1. நற்காலம்; happy occasion, opp. to pari-kāl. செய்கால் பரிகால் மட்டுந் தென்புறத்துத் திண்ணை விடுகிறது (இ.வ.)

*[செய் + கால் = காலம்]*

**செய்கால்[3]** *šey-kāl*, பெ. (n.) நிலத்தில் பயிர் செய்வதற்கு வேண்டிய வுழைப்பு (தஞ்சை.); labour necessary for the cultivation of lands.

*[செய் + கால்]*

**செய்கால்சாகுபடி** *šey-kāl-šāgupaḍi*, பெ. (n.) நன்செய் நிலத்தில் புன்செய்ப்பயிர் செய்கை (இ.வ.); cultivation of dry crops in wet lands.

*[செய்கால் + சாகுபடி]*

**செய்கால்பரிகால்** *šeykāl-parikāl*, பெ. (n.) நற்காலமும் தீக்காலமும்; occasions of joy and sorrow. செய்கால் பரிகால் மட்டுந் தென்புறத்துத் திண்ணை விடுகிறது (இ.வ.)

*[செய்கால் + பரிகால்]*

**செய்காற்கரம்பு** *šeykāṟ-karambu*, பெ (n.) தரிசாகவிடப்பட்ட சாகுபடி நிலம்; arable land, allowed to lie fallow or waste, one of two karambu.

*[செய்கால் + கரம்பு]*

**செய்காற்றரிசு** *šeykāṟṟarišu*, பெ (n.) செய்காற் கரம்பு பார்க்க; see *šeykāṟ-karambu.*

*[செய்கால் + தரிசு]*

**செய்குற்றம்** *šey-kuṟṟam*, பெ (n.) பிழை (யாழ்ப்.); fault, error commission (of a crime sin etc,.).

*[செய் + குற்றம்]*

**செய்குறை** *šey-kuṟai*, பெ. (n.) 1. பிழை; non-performance of duty, fault, error, mistake. 2. அரைகுறை வேலையாயிருப்பது; incomplete thing, that which is in an unfinished state.

*[செய் + குறை]*

**செய்குன்றம்** *šey-kuṉṟam*, பெ. (n.) செய்குன்று பார்க்க; see *šey-kuṉṟu.* "சேணோங் கருவி தாழ்ந்த செய்குன்றமும்" (மணிமே. 28: 62)

*[செய் + குன்றம்]*

**செய்குன்று** *šey-kuṉṟu*, பெ. (n.) செல்வமக்கள் விளையாடற் பொருட்டு அமைக்கப்படும் கட்டுமலை; artificial mound, elevated place for high-born persons to play on. "செய்குன் றுவையிவை சீர்மலர் வாவி" (திருக்கோ. 223)

*[செய் + குன்று]*

**செய்கூலி** *šey-kūli*, பெ. (n.) 1. செய்த வேலைக்குப் பெறுங்கூலி (உ.வ.); wages for labour. 2. பொற்கொல்லர் தச்சர் முதலியோர் பொருளின்விலை அல்லாமல் செய்த வேலைக்குப் பெறும்கூலி; labour charges. நகை வாங்கினால் செய் கூலி தள்ளுபடி செய்யப்படும்.

*[செய் + கூலி]*

**செய்கை** *šeygai*, பெ. (n.) 1. செயல்; act, deed, action. "மக்கள் மனம்வேறு செய்கையும் வேறு" (நாலடி., 127). அவர் செய்கை பலருக்கும் சினமூட்டியது. 2. மனம், பேச்சு, உடல் இவைகளிலுண்டாகும் இருவகை வினை-களாகிய நிலை; actions, physical and mental. "நின்றவுரு வேதனையே குறிப்புச் செய்கை நேர்நின்ற ஞான மென நிகழ்ந்த வைந்து மொன்றிய கந்தத்து" (பெரியபு. திருஞான. 916). 3. கருமம் (உ.வ.); karma. 4. வேலைப்பாடு; workmanship, work. "செய்கை யழிந்து சிதன்மண்டிற் றாயினும்" (நாலடி.147). 5. ஒழுக்கம்; conduct. "பேரருளாளர் தத்தஞ் செய்கையிற்

பிழைப்பதுண்டோ" (கம்பரா. விபீடண. 128). 6. உடன்படிக்கை; agreement, contract, as a solemn act. "ஆதிசைவ னாரூரன் செய்கை" (பெரியபு. தடுத்தாட். 59). 7. செயற்கைப் பொருள்; artificial product, artifact, that which is manufactured. இந்தச் சரக்கு செய்கை. 8. செய்கைச் சூத்திரம் பார்க்க (நன்.20, உரை); see šeygai-c-cūttiram. 9. செய்வினை (பில்லி சூனியம்); witchcraft, sorcery. இந்த நோய் செய்கையாலானது. 10. வேளாண்மை (யாழ்ப்.); cultivation of land, agricultural labour. 11. அரசின் அனுமதியாற் பெற்றுப் புதிதாகப் பண்படுத்திப் பயிரிடப் பெற்ற காட்டு நிலம் (யாழ்ப்.); forest land newly broken up, enclosed and cultivated, held by grant or permission from Government.

[செய் → செய்கை (முதா. 177)]

**செய்கைக்காணி** *šeygai-k-kāṇi*, பெ. (n.) 1. பற்றடைப்பு நிலம்; land held by a cultivator who renders a certain share of the produce to the owner. 2. ஆவணக்காணி (சாசன காணி); hereditary property held under a royal grant.

[செய்கை + காணி]

**செய்கைக்காரன்** *šeygai-k-kāraṉ*, பெ. (n.) 1. குத்தகைக்காரன் (யாழ்ப்.); cultivator who is a sharer in the produce. 2. நல்ல வேளாளன்; good cultivator. 3. மந்திரஞ் செய்வோன்; sorcerer. 4. வேலைக்காரன் (யாழ்அக.); servant.

[செய்கை + காரன்]

**செய்கைக்குறைச்சல்** *šeygai-k-kuṟaiccal*, பெ. (n.) 1. வேளாண் தாழ்வு; shortage of labour in cultivation. 2. நடத்தைத் தவறு; misdeed, bad conduct.

[செய்கை + குறைச்சல்]

**செய்கைகாண்(ணு)-தல்** *šeygai-kāṇ-*, 12 செ.குன்றாவி. (v.i.) நிலம் வயலாகத் திருத்தப்படுதல் (யாழ்ப்.); land to be newly brought under cultivation.

[செய்கை + காண்-.]

**செய்கைச்சரக்கு** *šeygai-c-carakku*, பெ. (n.) செயற்கைப் பொருள்; that which in manufactured.

[செய்கை + சரக்கு]

**செய்கைச்சீட்டு** *šeygai-c-cīṭṭu*, பெ. (n.) மேல் வாரச் சாகுபடி ஒப்பந்தம் (யாழ்ப்.); cultivation deed, written contract between owner and cultivator.

செய் = நிலம்

[செய் → செய்கை + சீட்டு]

**செய்கைச்சூத்திரம்** *šeygai-c-cūttiram*, பெ. (n.) புணர்ச்சி நெறி (விதி) முடிபு நெறி (விதி) முதலியவற்றை முடித்துக்காட்டும் நெறி (விதி); sūtra containing directive rules on sandhi, syntax etc., corresponding to vidi šūtras in Šanskrit

[செய்கை + சூத்திரம்]

**செய்கைச்சூழ்ச்சி** *šeygai-c-cūḻcci*, பெ. (n.) தந்திரச்செயல்; stratagem, trick, secret, device. "கையிகந்து பெருகிய செய்கைச் சூழ்ச்சியுள்" (பெருங். இலாவாண. 17:67).

[செய்கை + சூழ்ச்சி]

**செய்கைத்தரை** *šeygai-t-tarai*, பெ. (n.) பண்படுத்தின நிலம் (யாழ்அக.); field prepared for sowing.

[செய்கை + தரை]

**செய்கைத்தளை** *šeygai-t-taḷai*, பெ. (n.) 1. நன்றாகப் பண்படுத்தப்பட்ட நிலம்; field well ploughed and richly manured. 2. பட்டயக் காணி; land held from Government for cultivation.

[செய்கை + தளை]

**செய்கைத்தாழ்ச்சி** *šeygai-t-tāḻcci*, பெ. (n.) 1. மேற்பார்வைக் குறைவு; mismanagement. 2. தொழிற்குறைவு; deficiency in the amount of labour required. 3. வயலின் செம்மைக் குறை (தஞ்சை.); defect in the nature of the field.

[செய்கை + தாழ்ச்சி]

**செய்கைத்தேர்** *šeygai-t-tēr*, பெ. (n.) ஊர்வலத்தில் பயன்படுத்தும் தேர்வகை (யாழ்ப்.); a kind of car used in procession.

[செய்கை + தேர்]

**செய்கைப்பங்கு** *šeygai-p-paṅgu*, பெ. (n.) 1. பயிரிடுவோனுக்குரிய வாரம் (யாழ்ப்.); share of the cultivator or planter. 2. செய்நேர்த்தி யான நிலம்; land made suitable for cultivation.

[செய்கை + பங்கு]

**செய்கைபண்ணு-தல்** *šeygai-paṇṇu-*, 5 செ. குன்றாவி. (v.t.) உழவு முதலிய பயிர்த் தொழில் செய்தல் (யாழ்ப்.); to cultivate, till, manure.

[செய்கை + பண்ணு-.]

**செய்கையாட்சி** *šeygai-y-āṭci*, பெ. (n.) பட்டயத்தாற் பெற்ற நில உரிமை (யாழ்ப்.); possession of land for cultivation held under a written grant from Government.

[செய்கை + ஆட்சி]

**செய்கையுப்பு** *šeygai-y-uppu*, பெ. (n.) காய்ச்சியெடுக்கப்படும் உப்பு (யாழ்ப்.); manufactured salt.

மறுவ. செயற்கை உப்பு

[செய்கை + உப்பு]

**செய்கையொப்பம்** *šeygai-y-oppam*, பெ. (n.) நில உரிமைச் சீட்டு (பட்டா); written grant by Government for cultivation.

[செய்கை + ஒப்பம்]

**செய்சுனை** *šey-šuṉai*, பெ. (n.) அகழ்ந்து உண்டாக்கப்பட்ட நீர்நிலை; tank or pond, as formed by human labour. "கையமைத் தியற்றிய செய்சுனை தோறும்" (பெருங். இலாவாண. 15:18).

[செய் + சுனை]

**செய்தி** *šeydi*, பெ. (n.) 1. செய்கை[1] பார்க்க; see *šeygai*[1]. "குடிப்பொருளன்று நுஞ்செய்தி" (புறநா. 45: 7). 2. தொழில் (இறை. 1:18); occupation. 3. ஒழுக்கம் (சூடா.); behaviour, conduct. 4. செய்ந்நன்றி (புறநா. 34:6) பார்க்க; see *šey-n-naṉṟi*. 5. குறிப்பிட்டுச் சொல்லும்படியான நிகழ்ச்சி பற்றிய விளக்கம்; தெரிவிக்கப்படத் தகுதியுள்ள விளக்கம் (செய்தி); news, tidings, information. "பாத்திர தானமும் பைந்தொடி செய்தியும்" (மணிமே. 19:49). அவனுக்குப் பணம் கிடைத்த செய்தி எனக்குத் தெரியாது. 6. நிலைமை; state, condition.

ம. செய்தி; க., பட. சுத்தி; தெ. செயிதமு

[செய் → செய்தி]

**செய்திக்காக** *šeydi-k-kāga*, வி.அ. (adv.) கவனத்திற்காக (தகவலுக்காக); for guidance; for information.

[செய்தி + ஆக]

**செய்திக்குறிப்பு** *šeydi-k-kuṟippu*, பெ. (n.) 1. ஓர் அமைப்பு தனது நடவடிக்கைகளைப் பொதுமக்களுக்கு அறிவிக்கும் முகமாகச் செய்தித்தாள், வானொலி போன்றவற்றுக்கு அனுப்பிவைக்கும் எழுத்து வடிவச் செய்தி; press release. பொங்கலுக்குச் சேலை வழங்கப்படும் என்று அரசின் செய்திக் குறிப்புக் கூறுகிறது. 2. சிறுவிளத்தத் தொகுப்பு; a note. இதைக் கட்டுரை என்பதை விடச் செய்திக்குறிப்பு எனலாம்.

[செய்தி + குறிப்பு.]

**செய்திகள்** *šeydigaḷ*, பெ. (n.) வானொலி, தொலைக்காட்சி ஆகியவற்றில் படிக்கப்படும் செய்தித் தொகுப்பு; news over the radio or television. செய்திகள் வாசிப்பது செல்லையா.

[செய்தி → செய்திகள்.]

**செய்திகொல்(லு)-தல்** *šeydi-kol-*, 13 செ.கு.வி. (v.i.) செய்ந்நன்றிகொல்(லு)-தல் பார்க்க; see *šey-n-naṉṟi-kol-*. "செய்தி கொன்றோர்க் குய்தி யில்லெண" (புறநா. 34:6).

[செய்தி + கொல்-.]

**செய்தித்தாள்** *šeydi-t-tāḷ*, பெ. (n.) 1. செய்தியிதழ் பார்க்க; see *šeydi-y-idaḻ*. 2. நாள்தோறும் செய்திகள் அச்சடிக்கப்பட்டு, விற்பனைக்கு வரும், நாட்டு நடப்பைக் காட்டும் இதழ் (பத்திரிக்கை); news paper.

[செய்தி + தாள்.]

**செய்தித்துணுக்கு** *šeydi-t-tuṇukku*, பெ. (n.) கவனத்தை ஈர்க்கும் வகையில் செய்தியிதழ்களில் வெளியாகும் சுவையான சிறு செய்திகள்; titbits in periodicals. அந்தச் செய்தியிதழில் செய்தித் துணுக்குகள் அதிகம் வெளிவருகின்றன.

[செய்தி + துணுக்கு]

**செய்திப்படம்** *šeydi-p-paḍam*, பெ. (n.) செய்திகளை வெளியிடும் முறையில் எடுக்கப்படும் செய்தித் திரைப்படம்; documentary film.

[செய்தி + படம்]

**செய்திப்பிழை** *šeydi-p-piḻai*, பெ. (n.) அறியாமல் செய்த தவறு; unconscious mistake; slip. "எப்பொழுதுந் தன்மணத்துக் கேற்க நடப்பார்க்கொரு செய்திப்பிழை வாராதோ தினகரா" (தினகரவெண்பா, 85).

[செய்தி + பிழை.]

**செய்திமடல்** *šeydi-maḍal*, பெ. (n.) ஒரு துறை அல்லது கழகத்தின் செய்திகள் அடங்கிய இதழ்; news letter of a department or association journal.

*[செய்தி + மடல்]*

**செய்திமெய்ப்பு** *šeydi-meyppu*, பெ. (n.) செய்தித்தாள் அச்சாகுமுன் தயாரிக்கப்படும் மெய்ப்பு; news proof; gally proof.

*[செய்தி + மெய்ப்பு]*

**செய்தியறிக்கை** *šeydi-y-aṟikkai*, பெ. (n.) வானொலி, தொலைக்காட்சிகளில் குறிப்பிட்ட நிகழ்ச்சி பற்றிய சிறப்பு அறிக்கை; news bulletin. தேர்தல் பற்றிய செய்தியறிக்கை மணிக்கொருமுறை நாள் முழுதும் வழங்கப்படுகிறது.

*[செய்தி + அறிக்கை]*

**செய்தியாளர்** *šeydi-y-āḷar*, பெ. (n.) செய்தித் தாள், வானொலி, தொலைக்காட்சி முதலியவற்றின் நிருபர்; reporter, newsperson. செய்தியாளர் கூட்டத்தில் முதல்வர் பேசினார்.

*[செய்தி → செய்தியாளர்.]*

**செய்தியிதழ்** *šeydi-y-idaḻ*, பெ. (n.) நாளிதழ், வார இதழ், மாத இதழ் மற்றும் பருவ இதழ் ஆகியனவற்றின் பொதுப் பெயர்; a common name for the daily, weekly, monthly and periodical newspaper.

*[செய்தி + இதழ்]*

**செய்திவள்ளுவன்பெருஞ்சாத்தன்** *šeydi-vaḷḷuvaṉ-peruñjāttaṉ*, பெ. (n.) குறுந்தொகை 228ஆம் பாடலின் ஆசிரியர்; author of Kuṟundogai-228.

*[செய்தி + வள்ளுவன் + பெருஞ்சாத்தன்]*

**செய்திறம்**[1] *šeydiṟam*, பெ. (n.) மருத யாழ்த் திறத்துள் ஒன்று (பிங்.); a secondary melody-type of the Marudam class.

*[செய் + திறம்]*

**செய்திறம்**[2] *šendiṟam*, பெ. (n.) வினைத்திறம்; செயல்படக்கூடிய திறமை; the technique of doing things in a perfect manner.

*[செய் + திறம்]*

**செய்துகோள்** *šeydu-kōḷ*, பெ. (n.) தானே உண்டாகாது செய்து கொள்ளப்பட்டது (நம்பியகப். 1, பக்.36); artificiality.

*[செய் → செய்து + கோள்.]*

**செய்தே** *šeydē*, இடை. (part.) வினை நிகழ்ந்து கொண்டிருத்தலைக் குறித்தற்குச் செயவென் எச்சத்துடன் வரும் ஒரு துணைவினை; an auxiliary verbal participle added to verbal participles for denotng continuity of action. "குணவிசிஷ்ட வஸ்து தோற்றா நிற்கச் செய்தேயும்" (ஈடு, 1. 1:6).

*[செய் → செய்தே]*

**செய்தொழில்** *šey-doḻil*, பெ. (n.) 1. செய்கை; action, deed "கீழ்களைச் செய்தொழிலாற் காணப்படும்" (நாலடி, 350). 2. செய்கின்ற வேலை; the work having done. 3. வேளாண் பயிர்த்தொழில்; agriculture.

*[செய் + தொழில்]*

**செய்ந்நன்றி** *šey-n-naṉṟi*, பெ. (n.) 1. உதவி; act of benevolence "செய்ந்நன்றி கொன்ற மகற்கு" (குறள், 110). 2. நன்றியறிவு; gratitude.

*[செய் + நன்றி]*

**செய்ந்நன்றிக்கேடு** *šey-n-naṉṟi-k-kēḍu*, பெ. (n.) பிறன்செய்த உதவியை மறக்கை (கலித். 149, உரை.); ingratitude.

*[செய்ந்நன்றி + கேடு]*

**செய்ந்நன்றிகொல்(லு)-தல்** *šey-n-naṉṟi-kol-*, 13 செ.கு.வி. (v.i.) நன்றி மறத்தல்; to be ungrateful. "செய்ந்நன்றி கொல்லன் மின்" (சிலப். 30:191).

*[செய்ந்நன்றி + கொல்]*

**செய்ந்நன்றியறிதல்** *šey-n-naṉṟi-y-aṟidal*, பெ. (n.) தனக்குப் பிறர் செய்த நன்மையை மறவாமை; to remember the help done to one, the act of gratitude.

*[செய்ந்நன்றி + அறிதல்]*

**செய்நீர்** *šey-nīr*, பெ. (n.) மருந்துச் சரக்கினின்று இறக்கப்படுஞ் சத்துநீர் (இ.வ.); tincture.

*[செய் + நீர்]*

**செய்நேர்த்தி**[1] *šey-nērtti*, பெ. (n.) 1. குற்றங் குறைபாடில்லாத நில விளைவு (C.G.16); proper cultivation of land, as by manuring, weeding in season, etc., 2. பயிர்வைப்பதற்கு முன் நிலத்திற் செய்யுஞ் சீர்திருத்தம்; improvement effected on land before actual cultivation; reclamation of waste land. 3. சரியான ஊட்டம்; proper nourishment. செய்நேர்த்தி யில்லாத பிள்ளை (தஞ்சை).

*[செய் + நேர்த்தி. நேர்த்தி = திறமை, அழகு]*

**செய்நேர்த்தி**[2] *šey-nērtti*, பெ. (n.) 1. சிறப்பான செயல்; great action. 2. நுட்பமான செயல்; very fine work. இந்த அணைக்கட்டு செய் நேர்த்தி மிக்கது (உ.வ.). 3. அழகான (நகாசு) வேலை; fine decorative work. இந்த அணிகலன் செய்நேர்த்தி மிக்கது (உ.வ.).

*[செய் + நேர்த்தி. நேர்த்தி = திறமை, அழகு]*

**செய்பவன்** *šeybavan*, பெ. (n.) செயற்படுபவன் (கருத்தா); subject of an active verb. "செய்பவன் கருவி நிலஞ் செயல்" (நன். 320).

*[செய் → செய்பவன்]*

**செய்பாகம்** *šey-bāgam*, பெ. (n.) 1. மருந்து செய்யும் முறை; medical process, skill in preparing medicines. செய்பாகங் கைபாகம் அறியவேண்டும். 2. கருத்து முற்றுதற்கு ஏற்ற வழி (வின்.); proper means to effect an object. 3. ஒழுங்கு முறை; methodical arrangement.

*[செய் + பாகம். பாகம் = வழி]*

**செய்பாவை** *šey-pāvai*, பெ. (n.) 1. திருமகள்; Lakshmi. "செய்பாவை யன்னார்" (சீவக. 2338). 2. பொம்மை; doll, image.

*[செய் + பாவை]*

**செய்பொருள்** *šey-porul*, பெ. (n.) 1. செயப்படு பொருள் (நன். 320); object. 2. மனித வாழ்வின் குறிக்கோள்; objects of human pursuit. "அவரவர் செய்பொருட் கரணமு நீயே" (பரிபா. 4:73). 3. ஆக்கும் பொருள்; manufactured products; produce.

*[செய் + பொருள்.]*

**செய்ம்மெழுகு** *šey-m-meḷugu*, பெ. (n.) அரக்கு (இவ.); lac.

*[செய் + மெழுகு]*

**செய்ம்மை** *šeymmai*, பெ. (n.) செம்மை (சிவப்பு); redness.

*[சல் → செல் → சென் → செய் → செய்ம்மை]*

**செய்முறை** *šey-murai*, பெ. (n.) 1. பணிநிரல்; procedure, process, method. கணக்குத் தேர்வில் செய்முறைக்கும் மதிப்பெண் வழங்கப்படுகிறது. ஆய்வகச் சோதனைகளில் முதலில் செய்முறையை எழுதிக்கொள்ள வேண்டும். 2. இறந்தவருக்கு உறவினர் சடங்காகச் செய்ய வேண்டிய கடமை; ritual obligations imposed on close relations on occasions like funeral, etc., சம்பந்திக்கு செய்முறை செய்ய வேண்டும்.

*[செய் + முறை]*

**செய்முறைப்பயிற்சி** *šey-murai-p-payirci*, பெ. (n.) 1. எடுத்துக்காட்டாக நிகழ்த்தப்படும் விளக்கம்; demonstration. வேளாளர்களுக்கு வேளாண்மைத் துறைவழி செய்முறைப் பயிற்சி அளிக்கப்படுகிறது (உ.வ.). 2. மாணவர்களை ஆய்வு செய்யப் பாடத்தின் பின்பகுதியில் கொடுக்கப்பட்டிருக்கும் வினாப்பட்டியல்; exercise in a text book. பாடத்தின் பின்பகுதியில் கொடுக்கப்பட்டிருக்கும் செய்முறைப் பயிற்சிகளைச் செய்து வரவேண்டும். 3. கருவிகள் கொண்டு நிகழ்த்திக் காட்டும் பயிற்சி; experiments in a school etc., in science subjects; demonstration. பள்ளியில் செய்முறைப் பயிற்சி வகுப்புகள் நடக்கின்றன.

*[செய்முறை + பயிற்சி]*

**செய்ய** *šeyya*, பெ.எ. (adj.) 1. சிவந்த; red. "செய்ய தாமரைக ளெல்லாம்" (கம்பரா. நீர்விளை.3). 2. செப்பமான, நேர்மையான; correct, perfect, sound "செய்ய சிந்தைப் பேரருளாளர்." (கம்பரா. விபீடண. 128).

ம. செய்ய

*[செய்[4] → செய்ய]*

**செய்யல்** *šeyyal*, பெ. (n.) 1. ஒழுக்கம் (பிங்.); behaviour, conduct. 2. செய்தொழில் (சூடா.); work, occupation. 3. காவல்; protection, watch. 4. சேறு (திவா.); mire, slush. "பலத்தின் செய்யலி னடந்து" (இரகு. தேனுவ. 22).

[செய் → செய்யல்]

**செய்யவள்** *šeyyavaḷ*, பெ. (n.) சிவந்த திருமகள்; Lakshmi "செய்யவள் தவ்வையைக் காட்டிவிடும்" (குறள், 167).

[செய்ய → செய்யவள்]

**செய்யவன்** *šeyyavan̲*, பெ. (n.) 1. சிவந்தவன்; person of red or brown complexion. 2. சிவன்; Šivan̲. "செய்யவனே சிவனே" (திருவாச. 6:7). 2. செவ்வாய்க் கோள் (விதான. குணாகுண. 12); Mars. 3. பகலவன்; Sun.

ம. செய்யவன்

[செய்ய → செய்யவன்]

**செய்யன்**[1] *šeyyan̲*, பெ. (n.) செந்நிறமான முருகன்; Murugan̲. "செய்யன் சிவந்த வாடையன்" (திருமுரு. 206). 2. நேர்மையானவன்; just, impartial person. "செய்யரைச் சேர்ந்துளாரும்" (கம்பரா. கோலங்.9).

[செம் → செய் → செய்யன்]

**செய்யன்**[2] *šeyyan̲*, பெ. (n.) பாம்புவகை (சித்தர். சிந்து); a species of snake.

[செய் → செய்யன்]

**செய்யாக்கோலம்** *šeyyā-k-kōlam*, பெ. (n.) இயற்கையழகு; natural beauty "செய்யாக் கோலமொடு வந்தீர்க்கு" (சிலப். 16: 11).

[செய் + ஆ + கோலம்]

**செய்யாமொழி** *šeyyā-moḻi*, பெ. (n.) (செய்யப்படாத மொழி) மறை (வேதம்); the Vēda, as uncreated. "செய்யா மொழிக்குந் திருவள்ளுவர் மொழிந்த பொய்யா மொழிக்கும்" (வள்ளுவமா. 23).

[செய் + ஆ + மொழி]

**செய்யார்** *šeyyār*, பெ. (n.) பகைவர்; enemies. "செய்யார் தேஎம்" (பொருந. 134).

[செய் → செய்யார்]

**செய்யாள்** *šeyyāḷ*, பெ. (n.) 1. திருமகள் (செந்நிற முடையவள்); Laksmi, as being red. "செய்யாட் கிழைத்த திலகம் போல்" (பரிபா 22:4, பக்.175). 2. தாயின்தங்கை; சின்னம்மா அல்லது சித்தி (தஞ்சை.); mother's younger sister.

ம. செய்யாள்

[செய்யவள் → செய்யாள்]

**செய்யான்**[1] *šeyyān̲*, பெ. (n.) செய்யன் பார்க்க; see *šeyyan̲*.

**செய்யான்**[2] *šeyyān̲*, பெ. (n.) 1. சிவந்தவன்; person of red or brown complexion. 2. சிவன்; Šivan̲. "செய்யானை வெண்ணீ றணிந்தானை" (திருவாச. 8:13). 3. செம்பூரான்; red, venomous centipede.

[செய் → செய்யான்]

**செய்யில்** *šeyyil*, பெ. (n.) சமம் செய்யப்பட்ட விளைநிலம் (தெ.க.தொ. 3, கல்.210); modified and cultivated land.

[செய் + இல்]

**செய்யுட்கணம்** *šeyyuṭ-kaṇam*, பெ. (n.) சிற்றிலக்கியம் இயற்றத் தொடங்கும் போது செய்யுண்முதற்கண் வருதற்குரிய நிலக்கணம், நீர்க்கணம், மதிக்கணம் அல்லது சந்திரகணம், இயமானக்கணம் அல்லது இந்திரகணம் என்ற நற்கணம் நான்கும், சூரியகணம், தீக்கணம், வாயுகணம் அல்லது மாருதகணம், அந்தர கணம் அல்லது ஆகாயகணம் என்ற தீக் கணம் நான்குமாகிய எண்கணங்கள் (திவா.) (பிங்.); the eight varities of trisyllabic feet viz., nila-k-kaṇam, nīr-k-kaṇam, madi-k-kaṇam or šandira-kaṇam, iyamāṇa-k-kaṇam, or indira-kaṇam, šūriya-kan̲am, tī-k-kaṇam, vāyu-kaṇam or māruda-kaṇam, andara-kaṇam or āgāya-kaṇam of which the first four are considered auspicious at the beginning of a poem and the rest inauspicious.

[செய்யுள் + கணம்]

**செய்யுட்கலம்பகம்** *šeyyuṭ-kalambagam*, பெ. (n.) பலவகைப் பாடற்றிரட்டு; anthology of different kinds of verses.

மறுவ. செய்யுட் கோவை

[செய்யுள் + கலம்பகம்]

**செய்யுட்கிழமை** *šeyyuṭ-kiḻamai,* பெ. (n.) ஆறாம்வேற்றுமைப் பொருள்களுள், இன்னாரது பாட்டு என, ஆக்கியோனுக்கும் அவன் பாட்டுக்கும் உள்ள உரிமையாகிய பொருள் *(குறள், 6, உரை.);* the relation of an author to his work, denoted by the possessive case.

*[செய்யுள் + கிழமை]*

**செய்யுட்கோவை** *šeyyuṭ-kōvai,* பெ. (n.) செய்யுட்கலம்பகம் பார்க்க; see *šeyyuṭ-kalambagam.* சிதம்பரச் செய்யுட் கோவை.

*[செய்யுள் + கோவை]*

**செய்யுட்சொல்** *šeyyuṭ-šol,* பெ. (n.) செய்யுளில் மாத்திரம் வழங்கும் சொல்; word used only in poetry. 'இது செய்யுட்சொல் லாதலால் வந்தது' *(திருக்கோ. 1, உரை).*

*[செய்யுள் + சொல்]*

**செய்யுட்டாரணை** *šeyyuṭ-ṭāraṇai,* பெ. (n.) ஒன்பது தாரணையுள் ஒன்று (வின்.); one of navadāraṇai.

*[செய்யுள் + தாரணை]*

**செய்யுட்பாடு** *šeyyuṭ-pāḍu,* பெ. (n.) அசை நிலை (ஈடு.); expletive particle.

*[செய்யுள் + பாடு]*

**செய்யுட்பொருத்தம்** *šeyyuṭ-poruttam,* பெ. (n.) செய்யுண் முதன்மொழிப் பொருத்தம் பார்க்க; see *šeyyuṇ-mudaṉmoḻi-p-poruttam.*

*[செய்யுள் + பொருத்தம்]*

**செய்யுட்போலி** *šeyyuṭ-pōli,* பெ. (n.) கத்திய வகை இரண்டனுள் ஒன்று (வீரசோ. யாப். 6, உரை.); one of the two divisions of kattiyam dist. fr. katturai-p-pōli.

*[செய்யுள் + போலி]*

**செய்யுண்முடிபு** *šeyyuṇ-muḍibu,* பெ. (n.) செய்யுளில் மட்டும் வழங்குஞ் சொல் வழக்கு; peculiar forms which words assume in poetry. "என்மனாரென்பது செய்யுண் முடிபெய்தி நின்றதோர் . . . சொல்" *(தொல்.சொல். 1, சேனா.)*

*[செய்யுள் + முடிபு. முடிவு → முடிபு]*

**செய்யுண்முதன்மொழிப்பொருத்தம்** *šeyyuṇ-mudaṉ-moḻi-p-poruttam,* பெ. (n.) மங்கலப் பொருத்தம், சொற் பொருத்தம், எழுத்துப் பொருத்தம், தானப் பொருத்தம், பாற் பொருத்தம், உண்டிப் பொருத்தம், வருணப் பொருத்தம், நாட்பொருத்தம், கதிப்பொருத்தம், கணப் பொருத்தம் என்று பத்து வகையாய்க் காவியத்தின் முதற்செய்யுள் முதன்மொழியிற் பார்த்தற்குரிய பொருத்தம் *(வெண்பாப். முதன்.1);* rules of propriety regarding the initial word or letter of a poem ten in number, viz. maṅgala-p-poruttam, šoṟ-poruttam, eḻuttu-p-poruttam, tāṉa-p-poruttam, pāṟ-poruttam, uṇḍi-p-poruttam, varuṇa-p-poruttam, nāṭ-poruttam, kadi-p-poruttam and kaṇa-p-poruttam.

*[செய்யுள் + முதன்மொழி + பொருத்தம்]*

**செய்யுணடை** *šeyyuṇaḍai,* பெ. (n.) செய்யுளில் வழங்கும் நடை; poetic style.

*[செய்யுள் + நடை]*

**செய்யும்படி** *šeyyum-paḍi,* பெ. (n.) ஆணை; order, instruction. *'பிரசாதஞ் செய்தருளி வந்த செய்யும்படிப் படி' (தெ.க.தொ. 3, 211)*

*[செய் → செய்யும் + படி]*

**செய்யுள்** *šeyyuḷ,* பெ. (n.) *1.* செய்கை; action. *'பாய்த்துள் விக்குள் என்றாற் போலச் செய்யுள் என்பதூஉம் தொழிற்பெயர்' (தொல்.பொருள். 439, உரை).* 2. யாப்பு தவறாது அடிவரையறையுடன் எழுதப்படுவது, பாட்டு; stanza, verse. "செய்யுளுறுப் பென . . . வகுத்துரைத்தனரே" *(தொல்.பொருள். 313)* 3. காப்பியம்; poetic composition, poem. "உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள்" *(சிலப். பதி. 87).* 4. உரை; commentary. "யாதொரு செய்யுள் கேட்டாற் றோன்றிய புளக மெய்யுந் துளிபடு கண்ணு முண்டோ வான்றவச் செய்யுள்" *(திருவாலவா. 19:6).* 5. விளைநிலம் (சங்.அக.); cultivated field.

*[செய் → செய்யுள்]*

இலக்கணம் பிழைபாமற் கூற வேண்டுதலானும், ஒரு பொருளைக் குறித்து. செய்யப்படுதலானும் செய்யுளாம் *(தொல். பொருள். செய். 166, இளம்.).* செய்யுளாவது அடிவரையறை யுள்ளனவும், அடிவரையறையில்லனவும் என இருவகைப்படும். அடிவரையுள்ளன ஆசிரியம். வஞ்சி, வெண்பா, கலி, தாழிசை துறை விருத்தம் என்பன அடிவரையில்லன.

**செய்யுள்வழக்கு** *šeyyuḷ-vaḻakku*, பெ. (n.) செய்யுளில் வழங்குஞ் சொல்; poetic or literary usage opp. to ulaga-vaḻakku. 'திரிசொல் திசைச்சொல் வடசொல்லாகிய செய்யுள் வழக்கையும்' (நன். 267, உரை).

மறுவ. இலக்கிய வழக்கு

[செய்யுள் + வழக்கு]

**செய்யுள்வழு** *šeyyuḷ-vaḻu*, பெ. (n.) யாப்பிலக் கணத்தோடு பொருந்தாத இயல்பினையுடைய குற்றம் (தண்டி. 112); defect in versification.

[செய்யுள் + வழு]

**செய்யுள்விகாரம்** *šeyyuḷ-vigāram*, பெ. (n.) வலித்தல், மெலித்தல், நீட்டல், குறுக்கல், விரித்தல், தொகுத்தல், முதற்குறை, இடைக் குறை, கடைக்குறை எனச் செய்யுளிற் சொற்கள் பெறும் ஒன்பதுவகை மாறுபாடு (நன். 155, உரை); changes in words allowed as poetic licence, nine in number viz. valittal, melittal, nīṭṭal, kuṟukkal, virittal, toguttal, mudaṟ-kuṟai, iḍai-k-kuṟai, kaḍai-k-kuṟai.

[செய்யுள் + விகாரம்]

Skt. vi-kāra → த. விகாரம்

**செய்யுளியல்** *šeyyuḷ-iyal*, பெ. (n.) இலக்கண நூல்களில் யாப்பிலக்கணங் கூறும் பகுதி; a section in grammatical works, dealing with prosody.

[செய்யுள் + இயல்]

**செய்யுளுறுப்பு** *šeyyuḷ-uṟuppu*, பெ. (n.) எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை என்ற செய்யுள் பகுதிகள்; constituent elements of a stanza, viz. eḻuttu, ašai, šīr, taḷai, aḍi, toḍai.

[செய்யுள் + உறுப்பு]

**செய்யோள்** *šeyyōḷ*, பெ. (n.) 1. செந்நிற முள்ளவள்; ruddy or fair-complexioned woman. "எய்யா விளஞ்சூற் செய்யோள்" (பொருந. 6). 2. செய்யாள்,1 பார்க்க; see *šeyyāḷ*,1. "செய்யோள் சேர்ந்த நின்மாசி லகலம்" (பரிபா. 2:31).

[செய் → செய்யோள்]

**செய்யோன்** *šeyyōṉ*, பெ. (n.) 1. செந்நிற முள்ளவன்; ruddy or fair-complexioned person. "செய்யோ னகளங்கன்" (பெருந்தொ. 817). 2. செவ்வாய்; Mars "மீனத்து மந்தன் செய்யோன் மதியெழ" (விதான. சுர்ப்பா. 10). 3. அருகன் (சூடா.); Arhat. 4. கதிரவன் (சீவக, 2322, உரை); Sun.

[செய் → செய்யோன்]

**செய்வகை** *šey-vagai*, பெ. (n.) 1. செய்யுமுறை; method. 2. செய்முறை நுட்பம்; technological procedure, process of manufacture.

[செய் + வகை]

**செய்வது** *šeyvadu*, பெ. (n.) 1. செய்யத்தக்கது; that which ought to be done. "செய்வது தெரிந்திசிற் றோழி" (அகநா. 281). 2. கருத்தா; agent, doer of an action. "வினையே செய்வது செயப்படு பொருளே" (தொல்.சொல். 112).

[செய் → செய்வது]

**செய்வினை**[1] *šey-viṉai*, பெ. (n.) 1. செய்யுந் தொழில்; work, undertaking. "செய்வினை தூய்மை" (குறள், 455). 2. முற்பிறப்பிற் செய்த செயல்; karma. "சீலமில்லாச் சிறியனேனுஞ் செய்வினையோ பெரிதால்" (திவ்.திருவாய். 4. 7:1). 3. கருத்தா செய்யும் செயலை உணர்த்தும் வினைச் சொல், வினைமுதல் வினை (இலக். கொத். 67); verb in active voice.

[செய் + வினை]

**செய்வினை**[2] *šey-viṉai*, பெ. (n.) மந்திர தந்திரத்தால் பிடிக்காதவர் மீது ஏவல் போன்ற வினைகளைச் செய்கை; mystic acts done against the enemy people by black magic. செய்வினை செய்து அவனைக் கொன்று விட்டனர்.

[செய் + வினை]

**செய்வினைமடி-தல்** *šey-viṉai-maḍi-*, 2 செ.கு.வி. (v.i.) உரியதொழிலிற் சோம்புதல்; to shirk or delay one's appointed work, to fail in one's duty. "செய்வினை மடிந்தோற் சேர்ந்துறை விலளே . . . மலர்மகள்" (பெருங். இலாவாண. 17:39).

[செய்வினை + மடி-.]

**செயங்கொண்டான்** *šeyaṅ-goṇḍāṉ*, பெ. (n.) ஒருவகை நெல்; a kind of paddy. "சித்திரக் காலிவாலன் செயங்கொண்டான் மணல்வாரி" *(முக்கூடற். 97).*

**செயநீர்** *šeya-nīr*, பெ. (n.) **சுண்ணாம்பும் எரியுப்பும்** (நவச்சாரமும்) **கலந்த நீர்** (பதார்த்த. 1488); medicinal preparation of lime and sal-ammoniac.

*[செய் + நீர்]*

**செயநீர்க்கருத்தன்** *šeya-nīr-k-karuttaṉ*, பெ. (n.) *எரியுப்பு (நவச்சாரம்) (மூ.அ.);* sal-ammoniac.

*[செயநீர் + கருத்தன்]*

**செயப்படுபொருள்** *šeya-p-paḍu-poruḷ*, பெ. (n.) *1.* **வினை, முதலது தொழிலின்பயனை அடைவது;** object of a verb. "வினையே செய்வது செயப்படு பொருளே" *(தொல். சொல். 112).* 'நான் வண்டியை ஓட்டினேன்' என்பதில் 'வண்டி' என்பது செயப்படுபொருள். *2.* **நூலாசிரியன் கூறப்புகும் நூற்பொருள்;** subject of a treatise required to be mentioned by its author at the commencement. 'தெய்வ வணக்கமுஞ் செயப்படு பொருளும்' *(யாப். வி. கடவுள்வா. உரை).*

*[செய் + படு + பொருள்]*

**செயப்படுபொருள்:**

வினைமுதற் றொழில் பயனுறுவது. *(சேனா. தொல்.சொல். 71)* இயற்றப்படுவதும், வேறு படுக்கப்படுவதும், எய்தப்படுவதுமென செயப்படுபொருள் மூன்றாம். இயற்றுதலாவது முன்னில்லதனை உண்டாக்குதல், வேறு படுத்துதலாவது முன்னுள்ளதைத் திரித்தல்; எய்தப்படுதலாவது, இயற்றுதலும், வேறு படுத்தலுமின்றி, தொழிற் பயனுறுந் துணையாய் நிற்றல். *(தொல். சொல். 71, சேனா).*

செயப்படுபொருள்தான் இல்லதொன்றாய் உண்டாக்கப்படுதலும், உள்ளதொன்றாய் உடல் வேறுபடுக்கப்படுவதும், உள்ள தொன்றாய் ஒரு தொழில் உறுவிக்கப்படுவதும், உள்ளதொன்றாய் ஒன்றனாலுறப் படுவதும் எனப் பல வகையாம். *(தொல்.சொல். 73, கல்.)* வினை முதற்றொழில் பயனுறுவது, செயப்படு பொருள். செய் பொருள், கருமம், காரியம் என்பன ஒரு பொருட்சொற்கள். அச் செயப்படு பொருள், கருத்தினின்றிச் செயப்படுவதும், கருத்துடன் செய்யப்படுவதும், இருமையிற் செய்யப் படுவதும் என மூவகைப்படும். அச் செயப்படு பொருள் அகநிலையாகவும் தானே கருத்தாவாகவும் வரும். *(நன். 296, ஆறு).*

**செயப்படுபொருள்குன்றாதவினை** *šeya-p-paḍu-poruḷ-kuṉṟāda-viṉai*, பெ. (n.) **செயப்படு பொருளை ஏற்கும் வினைச்சொல்** (நன். 320, சடகோப.); transitive verb.

எகா: சுரண்டு (சுரண்டினான்) உரை(உரைத்தான்)

*[செயப்படுபொருள் + குன்றாத + வினை]*

**செயப்படுபொருள்குன்றியவினை** *šeya-p-paḍu-poruḷ-kuṉṟiya-viṉai*, பெ. (n.) **செயப்படு பொருளை ஏற்காத வினைச்சொல்** (நன். 320, சடகோப.); intranstive verb.

எ.கா.: ஓடு (ஓடினான்), நில் (நின்றான்)

*[செயப்படுபொருள் + குன்றிய + வினை]*

**செயப்பாட்டுவினை** *šeyappāṭṭu-viṉai*, பெ. (n.) *1.* **படு ஈறு புணர்ந்த முதனிலையுடையதாய்ச் செயப்படுபொருளை எழுவாயாகக் கொண்ட வினை** (இலக். கொத். 67); verb in the passive voice. *2.* **பழவினை;** karma. "செயப்பாட்டு வினையாற் றெரிந்துணர் வரியது" *(மணிமே. 23: 77).*

எ.கா. பாடல் பாடப்பட்டது சோறு உண்ணப்பட்டது.

*[செயப்பாட்டு + வினை]*

**செயர்** *šeyar*, பெ. (n.) **வீட்டுவரி, சந்தைவரி உரிமக் கட்டணம், ஆயத்தீர்வை முதலிய பலவகை வருவாய்** (R.T); current or customary sources of revenue other than the land-tax as customs, transit duties, licence-fees, house-tax, market-tax, etc.

க. சயர்

**செயல்** *šeyal*, பெ. (n.) *1.* **உறுப்புகளை இயக்குவதன் மூலம் ஒன்றைச் செய்வது, தொழில்;** act, action, performance, work, operation. "கழலிணை கடந்தருளுஞ் செயலை" *(திருவாச. 11:17).* கள்ளக் கடத்தல் ஒரு குற்றமான செயலாகும். *2.* **பொருள் தேடுகை;** acquisition, as of wealth. "மலையிறந்து செயல் சூழ்ந்த பொருள்" *(கலித்.2.).* *3.* **இழைப்பட வேலை;** engraving, carving; setting work in jewellery. 'வயிரச் செயல்தாலி மணிவடம்' *(தெக.தொ. 2,16).* *4.* **வேலைப்பாடு;** fine workmanship. 'இந்தச் சங்கிலி செயலாக உள்ளது' (இ.வ.). *5.* **காவல்** (பிங்.); safeguard, protection, watch. "செயலைச் செற்ற பகைதெறுவான்" *(கம்பரா. வாலிவதை. 86).* *6.* **ஒழுக்கம்** (சூடா.); behaviour, conducts.

7. வலிமை; power, energy. இப்போது அவனுக்கு நடக்கச் செயலில்லை. 8. செல்வாக்கு (உ.வ.); influence. 9. நிலைமை; state, circumstance. அவன் நல்ல செயலில் இருக்கிறான். 10. செய்யல்,4 பார்க்க (அக.நி.); see šeyyal,4.

ம. செயல்

[செய் → செயல்]

**செயல்தலைவர்** *šeyal-talaivar*, பெ. (n.) செயலை நிறைவேற்றுவதில் தலைமை வகிப்பவர்; chief executive.

[செயல் + தலைவர்]

**செயல்திட்டம்** *šeyal-tiṭṭam*, பெ. (n.) ஒரு குறிப்பிட்ட கால எல்லைக்குள் செய்து முடிக்க வேண்டிய பெரிய திட்டத்தின் நடைமுறைச் செயற்பாடு; action programme. இரண்டாயிரம் வீடுகள் கட்டித் தருவதாக அரசு செயல்திட்டம் வகுத்துள்ளது.

[செயல் + திட்டம்]

**செயல்திறன்** *šeyal-tiṟaṉ*, பெ. (n.) கால, பண இழப்பு இல்லாமல் செலவழிக்கப்படும் ஆற்றலின் முழுமையான பயன்பாடு; efficiency. செயல்திறன் அதிகரித்தால் நாட்டின் வளம் பெருகும்.

[செயல் + திறன்]

**செயல்மாள்(ளு)-தல்** *šeyal-māḷ-*, 16 செ.கு.வி. (v.i.) செயலறு-தல் பார்க்க; see *šeyal-aṟu-*. "கலகமிடு மஞ்சும் வேரறச் செயல்மாள" (திருப்பு. 194).

[செயல் + மாள்-.]

**செயல்முறை** *šeyal-muṟai*, பெ. (n.) இயங்கும் அல்லது செயற்படும் முறை; mode of functioning. தொழிற்சாலைகள் உற்பத்தியைப் பெருக்குவதற்கான செயல்முறையைப் பற்றிக் கலந்து பேசினார்கள்.

[செயல் + முறை]

**செயல்வடிவம்** *šeyal-vaḍivam*, பெ. (n.) செயற்படுத்துவதற்குரிய வழிமுறை; implementation. முதலமைச்சரின் கருத்து உடனடியாகச் செயல் வடிவம் பெற்றது.

[செயல் + வடிவம்]

**செயல்விளக்கம்** *šeyal-viḷakkam*, பெ. (n.) எவ்வாறு செய்வது அல்லது மேற்கொள்வது என்பதை நிகழ்த்திக்காட்டும் முறை; demonstration. சிறுதொழில் வளர்ச்சியைப் பெருக்கச் செயல் விளக்கக் கூட்டங்கள் அடிக்கடி நடைபெறுகின்றன.

[செயல் + விளக்கம்]

**செயல்வீரர்** *šeyal-vīrar*, பெ. (n.) குறிக்கோளை அடைவதில் ஏற்படும் தடைகளையெல்லாம் கடந்து நடைமுறையில் நிறைவேற்றி முடிப்பவர்; man of action. இயக்கத்தின் செயல் வீரர்களுக்குப் பாராட்டுக் கூட்டம் நடந்தது.

[செயல் + வீரர்]

**செயலகம்** *šeyalagam*, பெ. (n.) உயர்நிலை நிருவாக அலுவல்கள் நடைபெறும் இடம்; secretariat. அரசுச் செயலகத்தில் ஆலோசனைக் கூட்டம் நடந்தது.

[செயல் + அகம்]

**செயலர்** *šeyalar*, பெ. (n.) ஒரு துறையின் நிருவாகப் பொறுப்புள்ள தலைமை அதிகாரி; secretary to departments, ministry.

[செயல் → செயலர்]

**செயலலுவலர்** *šeyal-aluvalar*, பெ. (n.) செயல் நிறைவேற்றுவோர்; executive.

[செயல் + அலுவலர்]

**செயலலுவலர்துறை** *šeyal-aluvalar-duṟai*, பெ. (n.) செயல் நிறைவேற்றுத்துறை; executive department.

[செயல் + அலுவலர் + துறை]

**செயலழி-தல்** *šeyal-aḻi-*, 2 செ.கு.வி. (v.i.) செயலறு,1 பார்க்க; see *šeyal-aṟu,1*. "செயலழிந்து ழன்று" (திருப்பு. 89). வணிகத்தில் கைமுதல் இழந்ததும் அவன் செயலழிந்தான் (உ.வ.).

[செயல் + அழி-.]

**செயலற்ற** *šeyal-aṟṟa*, பெ.எ. (adj.) சடமான; இயக்கமற்ற; inactive functionless.

[செயல் + அற்ற]

செயலற்ற நிலையைச் சிவம் என்பர்; இயங்கு நிலையைச் சத்தி என்பர். உடற்கூற்று நூல்களில் மூளை இயங்கினும் உடல் இயங்கா நிலையைச் செயலற்ற (கோமா) நிலை என்பர்.

**செயலறவு** *šeyal-aṟavu*, பெ. (n.) *வலியின்மை;* prostrate condition, helplessness.

*[செயல் + அறவு]*

**செயலறு-தல்** *šeyal-aṟu-*, 4 செ.கு.வி. (v.i.) *1.* வலியழிதல் (சூடா.); to be powerless, to be laid prostrate; to be helpless. *2.* ஒழுக்கங் கெடுதல் (உ.வ.); to swerve or go astrey from the path of virtue. *3.* அழகழிதல் (இ.வ.); to lose beauty, to be in disorder.

*[செயல் + அறு-.]*

**செயலாளர்** *šeyal-āḷar*, பெ. (n.) செயலர் பார்க்க; see *šeyalar.* கட்சியின் கொள்கை பரப்புச் செயலாளர்.

*[செயல் + ஆளர்]*

**செயலாற்று-தல்** *šeyal-āṟṟu-*, 5 செ.கு.வி. (v.i.) *செயல்படுதல்;* function; act; work. தனக்கென்று இல்லாமல் நாட்டுக்கென்று செயலாற்றவே விருப்பம்.

*[செயல் + ஆற்று-.]*

**செயலிழ-த்தல்** *šeyal-iḻa-*, 3 செ.கு.வி. (v.i.) *செயற்படும் திறனை இழத்தல்;* become impaired. பக்கவூதையால் ஒரு கையும் காலும் செயலிழந்து விட்டது.

*[செயல் + இழ-.]*

**செயலூரிளம்பொன்சாத்தன்கொற்றனார்** *šeyalūr-iḷambon̠-šāttan̠-koṟṟan̠ār*, பெ. (n.) *அகநானூறு 177ஆம் பாடலைப் பாடிய புலவர்;* author of Agam 177.

*[செயலூர் + இளம்பொன் + சாத்தன் + கொற்றனார்]*

**செயலை** *šeyalai*, பெ. (n.) *சிவந்த அடியையுடைய அசோகமரம்;* Indian mast-tree. "செயலைத் தண்டளிர்" (திருமுருகு. 207)

*[செய் → செயல் → செயலை]*

**செயவெனெச்சம்** *šeyaven̠-eccam*, பெ. (n.) *எச்சவகைகளுள் ஒன்று;* an infinite verb

*[செயவென் + எச்சம்]*

செயவெனெச்சம் = காரணகாரியப் பொருண்மை உணர்த்தும் வழியில்லது. செயவெனெச்சம் இறந்தகால முணர்த்தாது. (தொல்.சொல். 457, சேனா.) நிகழ்காலத்தின் கண் இது நிகழாநிற்க இது நிகழ்ந்த தென்னும் பொருட்டாயும், இறந்த காலத்திற் காரணப் பொருட்டாயும் எதிர்காலத்தில், காரியப் பொருட்டாயும் வரும்.

மழை பெய்யக், குளம் நிறைந்தது - காரண காரியத்தால் இறந்த காலம் உணர்த்திற்று.

பக்தி பெருக, வானுலகம் அடையலாம் - எதிர்காலம் உணர்த்திற்று.

**செயற்கட்டளைகள்** *šeyaṟ-kaṭṭaḷaigaḷ*, பெ. (n.) *செயல்வரைவு ஆணைகள்;* instructions.

*[செயல் + கட்டளைகள்]*

**செயற்கரிய** *šeyaṟkariya*, பெ.எ. (adj.) *எளிதில் செய்ய முடியாத;* not easily achieved; extra ordinary. அவர் யாராலும் செய்ய முடியாத ஒரு செயற்கரிய காரியத்தைச் செய்து முடித்தார்.

*[செயல் + அரிய → செயற்கரிய]*

**செயற்குழு** *šeyaṟkuḻu*, பெ. (n.) *திருவாகத்திற்காக தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர் குழு;* executive committee. பொதுக்குழுவின் செயற்பாடுகளைச் செயற்குழு நடைமுறைப்படுத்தும்.

*[செயல் + குழு]*

**செயற்கை** *šeyaṟkai*, பெ. (n.) *1.* தொழில்; action. "இயற்கை யல்லன செயற்கையிற் றோன்றினும்" (புறநா. 35:28). *2.* இயற்கையாகக் காணப்படும் அல்லது பெறப்படும் ஒன்றிற்கு மாற்றாக மனிதனால் உண்டாக்கப்படுவது; artificiality. *3.* செயற்கைப்பொருள் பார்க்க; see *šeyaṟkai-p-poruḷ*. *4.* தன்மை; characteristic, property. "இயற்கைய வாகுஞ் செயற்கைய வென்ப" (தொல். எழுத்து. 197). *5.* செய்பொருள்; manufactured products.

*[செயல் + செயற்கை]*

**செயற்கைக்கோள்** *šeyaṟkai-k-kōḷ*, பெ. (n.) *நிலவுலகை அல்லது ஒரு கோளைச் சுற்றி வரும்படி செலுத்தப்பட்ட அறிவியல் கருவி (சாதனம்);* satellite. இந்தியா பல செயற்கைக் கோள்களை விண்ணில் ஏவி வருகிறது.

*[செயற்கை + கோள்]*

**செயற்கைச்சாக்காடு** *šeyarkai-c-cākkādu,* பெ. (n.) பொய்ச்சாவு; feigned or pretended death. "செயற்கைச் சாக்காடு தெளியக் காட்ட" (பெருங். இலாவாண. 9: 254)

[செயற்கை + சாக்காடு]

**செயற்கைப்பொருள்** *šeyarkai-p-poruḷ,* பெ. (n.) 1. கரணியத்தால், தன்மைதிரிந்த பொருள்; object whose nature or character is changed by artificial means. "செயற்கைப் பொருளை யாக்கமொடு கூறல்" (தொல். சொல்.20). 2. உண்டாக்கப்பட்ட பொருள்; manufactured article; artifact. நம்நாட்டு இயற்கைப் பொருள்கள் அயல்நாடு சென்று செயற்கைப் பொருள்களாகத் திரும்புகின்றன (உ.வ.).

[செயற்கை + பொருள்]

**செயற்கைமூச்சு** *šeyarkai-mūccu,* பெ. (n.) மூச்சு தடைபட்டுத் திணறும் நிலையில் உள்ள ஒருவர் மீண்டும் சீரான முறையில் மூச்சு விடுவதற்கான உயிர் வலியைச் செலுத்தி அளிக்கும் சிகிச்சை; artificial respiration.

[செயற்கை + மூச்சு]

**செயற்கைமுத்து** *šeyarkai-muttu,* பெ. (n.) கடலில் உண்டாகும் இயற்கை முத்துக்கு மாறாக மனித முயற்சியால் ஆய்வகத்தில் உண்டாக்கும் முத்து; artificial pearl cultured in a laboratory.

[செயற்கை + முத்து]

**செயற்கையழகு** *šeyarkai-y-aḻagu,* பெ. (n.) பட்டாலும் பகட்டாலும் மெருகேற்றிப் புணைந்துண்டாக்கிய எழில்; the beauty caused by silk and various cosmetics artificial beauty.

[செயற்கை + அழகு]

**செயற்கையிரை** *šeyarkai-y-irai,* பெ. (n.) 1. செயற்கையாகத் தரப்படும் உணவு; artificial food. 2. மீன் பிடிக்க உதவும் உணவு; the food material used to catch fish.

[செயற்கை + இரை]

**செயற்கையளபெடை** *šeyarkai-y-aḷabedai,* பெ. (n.) செய்யுளின் ஓசை நிரம்பப் புலவர் செய்து கொள்ளும் அளபெடை (தொல். பொருள். 329, உரை); long vowel or consonant lengthened for the sake of metre.

[செயற்கை + அளபெடை]

செய்யுட்குப் புலவர் செய்து கொண்டது (தொல். பொருள். 330, பேரா. தொல். எழுத்து. 6, நச்.) செய்யுட்குப் புலவர் ஓசை கருதிச் செய்து கொண்டது செயற்கை அளபெடை (தொல். சொல். 17, செய்).

**செயற்கையறிவு** *šeyarkai-y-arivu,* பெ. (n.) இயல்பாகவன்றிக் கல்வி முதலியவற்றால் உண்டாகிய அறிவு; acquited knowledge.

[செயற்கை + அறிவு]

**செயற்கைவாசனை**[1] *šeyarkai-vāšanai,* பெ. (n.) உண்டாக்கப்பட்ட நறுமணம்; artificial fragrance.

[செயற்கை + வாசனை]

**செயற்கைவாசனை**[2] *šeyarkai-vāšanai,* பெ. (n.) சேர்க்கைக் குணம் (இ.வ.); habits acquired from company.

[செயற்கை + வாசனை]

**செயற்படு-தல்** *šeyar-padu-,* 20 செ.கு.வி. (v.i.) செயல் நிகழ்த்தி இயங்குதல்; function; operate; work. நாளை அலுவலகம் வழக்கம் போல் செயற்படும்.

[செயல் + படு-.]

**செயற்படுத்து-தல்** *šeyar-pāduttu-,* 5 செ.கு.வி. (v.i.) ஒரு திட்டம் செயல் முதலியவற்றை நடை முறைப்படுத்துதல்; to implement a scheme. இந்தியா, மொழிவழி மாநிலங்களாகத் திருத்தியமைக்கப்பட்டவுடனேயே, தமிழ்நாட்டில் தமிழ் ஆட்சிமொழியாகச் செயற்படுத்தப்பட்டது.

[செயல் + படுத்து-.]

**செயற்பாடு** *šeyar-pādu-,* பெ. (n.) செயற்படுகின்ற முறை; style of functioning. ஆட்சியின் அடக்குமுறைச் செயற்பாட்டைக் கண்டித்துப் பேசினார்.

[செயல் + பாடு.]

**செயிர்**[1]**-த்தல்** *šeyir-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. வெகுளுதல்; to be angry with, to show signs

of anger. "செற்றன் றாயினுஞ் செயிர்த்தன் றாயினும்" *(புறநா. 226).* 2. *வருத்துதல்;* to afflict, cause pain. "*சிரறியவன்போற் செயிர்த்த நோக்கமொடு" (பொருந. 124).*

*[செய் → செயிர்-. செயிர்¹-த்தல் பார்க்க]*

**செயிர்²-த்தல்** *šeyir-*, 4 செ.கு.வி. (v.i.) 1. *சிவத்தல்;* to show sign of red. 2. *குற்றஞ்செய்தல்;* to commit an offence. "செயிர்தீதெழு தெவ்வர்" *(பொருந. 120).*

*[செய் → செயிர் → செயிர்-த்தல் (முதா. 153)]*

கறுத்தற்பொருளும், சிவத்தற்பொருளும், சினத்தற்பொருளையும் குறிக்கும். "கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள" *(தொல்.உரி. 74).* செயிர்த்தலாகிய சிவத்தல் சினத்தலையும் குறித்தது. சினத்தால் குற்றஞ்செய்தலும் உண்டு.

**செயிர்³** *šeyir*, பெ (n.) 1. *சினம்;* anger, rage. "செயிர்தீர் செங்கட் செல்வ" *(பரிபா. 4:10).* 2. *குற்றம்;* fault, defect, blemish "செயிர் தீரண்ணல்" *(பரிபா. 1:27).* 3. *போர்;* battle, fight. "செயிர்மேற் கனல் விழிப்பச் சீறி" *(பு.வெ. 7:4).* 4. *வருத்துகை;* affliciting, oppressing. "செயிர்த்தொழின் முதியோன்" *(சிலப். 27:7).* 5. *நோய்;* disease "செயிருடம்பிற் செல்லாத்தீ வாழ்க்கையவர்" *(குறள், 330).*

*[செயிர்¹ → செயிர்²]*

**செயிர்ப்பு** *šeyirppu*, பெ. (n.) 1. *சினம்;* anger. "சிவப்பு ளுறுத்துச் செயிர்ப்பு முந்துறீஇ" *(பெருங் இலாவாண. 16:18).* 2. *குற்றம்;* fault. "செயிர்ப்பொடு சிவந்து நோக்கி" *(சீவக. 1624).*

*[செயிர் → செயிர்ப்பு]*

**செயிரியர்** *šeyiriyar*, பெ. (n.) *பாணர் (பிங்.);* minstrels. "செயிரியர் மகரயாழின் றேம்பிழி தெய்வகீதம்" *(கம்பரா. கார்முக. 40).*

*[செயிர் → செயிரியர்]*

**செயிற்றியம்** *šeyiṟṟiyam*, பெ. (n.) *செயிற்றியனார் என்ற புலவர் இயற்றிய நாடக விலக்கண நூல் (சிலப். பக்9);* a treatise on dramaturgy by Šeyiṟṟiyaṉār.

*[செயிற்றியன் → செயிற்றியம்]*

**செயிற்றியன்** *šeyiṟṟiyaṉ*, பெ. (n.) *செயிற்றியம் என்னும் நாடக நூலின் ஆசிரியர்;* author of *šeyiṟṟiyam.*

*[செயிற்றியம் → செயிற்றியன்]*

**செரி-த்தல்** *šeri-*, 4 செ.கு.வி. (v.i.) *குடலினால் உறிஞ்சப்படுவதற்கு ஏந்தாக உணவில் உள்ள சத்துகள் வயிற்றுத் தசைகளினால் அரைக்கப்பட்டுக் கூழாதல் (சீரணமாதல்);* to be digested. "புவனஞ் செரிக்கு மென்றே" *(அஷ்டப். திருவரங். மா. 98).* தின்ற சோறு செரிக்கவாவது வேலை செய்ய வேண்டும். 2. *நிலையாகப் பெறுதல்;* to be permanently acquired. கோயில் சொத்து உனக்குச் செரிக்காது.

*[சிதை → செரி-. சிதைத்தல் = நிலை குலைதல், தன்மை கெடுதல்]*

**செரிப்பி-த்தல்** *šerippi-*, 4 செ.குன்றாவி. (v.t.) *செரிக்கச் செய்தல்;* to help or promote digestion by medicine. 2. *இடையூற்றை நீக்குதல்;* to remove a difficulty. 3. *நிலைநிறுத்தல்;* to maintain successfully. உன் வாதத்தைச் செரிப்பிக்க முடியுமா?

*[செரி → செரிப்பி-]*

**செரிமானநெதி** *šerimāṉa-nedi*, பெ. (n.) *செரிக்க உதவும் நீர்மப்பொருள்;* protein catalyst of a specific bio-chemical reaction, namely enzyme.

*[செரிமானம் + நெதி]*

**செரிமானம்** *šerimāṉam*, பெ. (n.) *செரிக்கை (இ.வ.);* digestion. செரிமானத்திற்கு மாவுப் பொருள் பெரிதும் உதவுகிறது.

*[செரி + மானம். மானம் சொல்லாக்க ஈறு]*

**செரியாப்படுவன்** *šeriyā-p-paḍuvaṉ*, பெ. (n.) *நோய்வகை (யாழ்.அக.);* a disease.

*[செரி + ஆ + படுவன்]*

**செரியாமாந்தம்** *šeriyā-māndam*, பெ. (n.) *செரிமானம் ஆகாத் தன்மைகளை உண்டாக்கும் நோய்;* dyspepsia.

*[செரி + ஆ + மாந்தம்]*

**செரு¹-த்தல்** *šeru-*, 4 செ.குன்றாவி. (v.t.) *அழித்தல்;* to destroy, ruin. "செருத்தது தக்கனை வேள்வி" *(தேவா. 139, 4)*

தெ. செருகு

*[செறு → செரு]*

**செரு**[2] *šeru*, பெ. (n.) 1. போர்; battle, fight. "மதந்தபக் கடந்து செருமேம் பட்ட" *(பரிபா. 1:27)* 2. ஊடல்; love-quarrel between husband and wife. "தீர்விலதாகச் செருவுற்றாள்" *(பரிபா. 7:75)*.

மறுவ. அமர், சமர், சண்டை

ம. செரு; க. கெரன் (சினப்படுதல்); தெ. சிராகு (சினம்)

*[சுள் → செள் → செறு → செரு]*

**செருக்கடு-த்தல்** *šerukkaḍu-*, 4 செ.கு.வி. (v.i.) இறுமாப்புக் (அகந்தைக்) கொள்ளுதல்; to become proud, haughty. "செருக்கடுத்தன்று திகைத்தவரக்கரை" *(திவ்.திருவாய். 1.4:7)*.

*[செருக்கு + அடு-.]*

**செருக்கம்**[1] *šerukkam*, பெ. (n.) மாதுளை (மலை.); pomegranate.

Skt. karaka

**செருக்கம்**[2] *šerukkam*, பெ. (n.) கள் முதலியன குடிப்பதால் வரும் மயக்கம்; intoxication "கட்கழி செருக்கத்தன்ன" *(நற்.35)*.

ம. செருக்கம், சொருக்கம்

*[செருக்கு → செருக்கம்]*

**செருக்கல்** *šerukkal*, பெ. (n.) குடிமயக்கம்; intoxication.

ம. சொருக்கல்

*[செருக்கம் → செருக்கல்]*

**செருக்கல்வரகு** *šerukkal-varagu*, பெ. (n.) மயக்கத்தை உண்டாக்கும் வரகுவகை; a kind of millet that causes dizziness.

*[செருக்கல் + வரகு]*

**செருக்களம்** *šeru-k-kaḷam*, பெ. (n.) போர்க்களம் (பிங்.); field of battle. "செருக்களத் துருத்தெய் யாதே" *(கம்பரா. வாலிவ. 116)*.

மறுவ. அடுகளம், சமர்க்களம், படுகளம்

ம. செருக்களம்

*[செரு + களம்]*

**செருக்களவஞ்சி** *šerukkaḷa-vañji*, பெ. (n.) போர்க்களத்தைச் சிறப்பித்து அகவற்பாவாற் பாடப்படும் சிற்றிலக்கியம்; battle-piece, a poem in agaval verse describing the field of battle. "செருக்களங் கூறிற் செருக்கள வஞ்சி" *(இலக்.வி. 869)*.

*[செருக்களம் + வஞ்சி]*

**செருக்கற்பாக்கு** *šerukkaṟ-pākku*, பெ. (n.) மயக்கத்தை உண்டாக்கும் பாக்கு வகை; a kind of areca-nut having narcotic properties.

*[செருக்கல் + பாக்கு]*

**செருக்கறு-தல்** *šerukkaṟu-*, 4 செ.கு.வி. (v.i.) வாடுதல்; to fade, wilt, as flower. "செருக்கற்ற பஞ்சி மலர்ச் சீறடி" *(சீவக. 2339)*.

*[செருக்கு + அறு-.]*

**செருக்கன்** *šerukkaṉ*, பெ. (n.) இறுமாப் புள்ளவன்; vain, self-conceited person. 'செருக்கனாயிருக்கும் ராஜபுத்ரனுக்கு' *(ஈடு, 10. 3:1)*.

*[செருக்கு →செருக்கன்]*

**செருக்கு**[1]**-தல்** *šerukku-*, 5 செ.கு.வி. (v.i.) 1. இறுமாப்புக் (அகந்தை) கொள்ளுதல்; to be proud, vain, self-conceited. "மீளி மொய்ம்பின், மிகுவலி செருக்கி" *(பொருந. 140)*. 2. பெருமித முறுதல்; to be elated with self pride. "செருக்கியே தவங்கள் செய்வீர்" *(இராமநா. ஆரணிய. 4)*. 3. மதர்த்தல்; to be gay, lively "செருக்கிய நெடுங்கண் சேப்ப" *(சீவக. 2657)*. 4. களித்தல்; to exult. "கடாஅஞ் செருக்கிக் கால்கிளர்ந்து" *(மணிமே. 19:22)*. 5. மயங்குதல்; to be infatuated. "மொய்வளஞ் செருக்கி" *(பதிற்றுப். 49:8)*.

ம. செருக்குக; க. செர்கு, செக்கு; தெ. செருவு; து. சுக்கனி; கோண். சோடீநானா; கூ. சோம்ப; நா. சோன்; கொலா. சொந்க்; பர். சோங்க; கட. சிக்த்; மா. க்வெரெ; குரு. கெர்னா

*[செரு → செருக்கு-.]*

**செருக்கு**[2]**-தல்** *šerukku-*, 5 செ.குன்றாவி. (v.t.) மிகுத்தல்; to increase, nurse, cherish, as anger. "செங்குட்டுவன் சினஞ் செருக்கி" *(சிலப்.29, உரைப்பாட்டு)*. 2. நன்கு நுகர்தல் (அனுபவித்தல்); to enjoy to the full. "நன்னிலப் பகுதியிற் பெருவளஞ் செருக்கி" *(உபதேசகா. சிவபுராண. 50)*.

*[செரு → செருக்கு-.]*

**செருக்கு**[3] *šerukku*, பெ. (n.) 1. பிறரை மதிக்காத போக்கு, இறுமாப்பு (அகந்தை); haughtiness, pride, arrogance, self-conceit. "செருநர் செருக்கறுக்கு மெஃகு" (குறள், 759). 2. மகிழ்ச்சி; cheer exultation, elation. "செருக்கொடு நின்ற காலை" (பொருந. 89). 3. ஆண்மை; daring, intrepidity, courage, as of an army. படைச் செருக்கு (குறள், 78, அதி.). 4. மயக்கம்; infatuation; intoxication. "யானென தென்னுஞ் செருக்கறுப்பான்" (குறள், 346). 5. செல்வம்; wealth. "விறலீனும் ... வேண்டாமை யென்னுஞ் செருக்கு" (குறள், 180). 6. செல்லம் (இ.வ.); luxury, indulgence, as in bringing up a child. செருக்காய் வளர்த்த பிள்ளை.

ம. சொருக்கு; க. சொர்கு, சொக்கு; தெ. சொக்கு; து. சொர்கு

[செரு → செருக்கு]

**செருக்கு**[4]**-தல்** *šerukku-*, 5 செ.கு.வி. (v.i.) பாக்கு முதலியன தொண்டையில் அடைத்துக் கொள்ளுதல்; to be choked, as by a bone or a piece of areca-nut.

[செருகு → செருக்கு]

**செருக்கு**[5] *šerukku*, பெ. (n.) செருகு கொண்டை பார்க்க (இ.வா.); see *šerugu-kondai*.

**செருக்கொடு-த்தல்** *šeru-k-kodu-*, 4 செ.கு.வி. (v.i.) எதிர்த்து போர் செய்தல்; to give battle. "தூதனு மெதிரே செருக்கொடுத்தான்" (கம்பரா. அதிகாய. 177).

[செரு + கொடு-.]

**செருகு**[1]**-தல்** *šerugu-*, 5 செ.குன்றாவி. (v.t.) ஒரு பிடிப்பில் நிற்கும்படி ஒன்றை நுழைத்தல் அல்லது திணித்தல்; to insert, to slide into. "திருகிச் செருகுங் குழன்மடவீர்" (கலிங். 30). பேனாவைப் பையில் செருகினான்.

[சொருகு → செருகு]

**செருகு**[2]**-தல்** *šerugu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. பசி, மயக்கம், வலி முதலியவற்றால் கண் சொருகுதல்; to roll sideways, as eyeballs. "கண்கள் செருகின வன்றே" (கம்பரா. நாகபாச. 287). பசியால் கண் செருகி வீழ்ந்தான். 2. செரிமானமாகாத தின்பண்டம் வயிற்றிற் சிக்கிக்கொள்ளுதல்; to get held up in stomach, as indigestible matter. 3. வயிற்றில் திருகுவலியுண்டாதல்; to have colic pains.

[சொருகு → செருகு]

**செருகுகொண்டை** *šerugu-kondai*, பெ. (n.) முடிக்குங் கொண்டைவகை (யாழ்.அக.); a mode of dressing the hair.

[செருகு + கொண்டை]

**செருகுபூ** *šerugu-pū*, பெ. (n.) இடையிடையே வைத்துத் தொடுக்கப்பட்ட பூ (யாழ்.அக.); flowers inserted singly in making wreaths.

[செருகு + பூ]

**செருத்தணி** *šeruttaṇi*, பெ. (n.) திருத்தணிகை (கந்தபு. வள்ளி. 216); Tiruttaṇigai.

மறுவ. திருத்தணி

[செரு + தணி. செரு = போர், சினம்]

**செருத்தல்** *šeruttal*, பெ (n.) மாட்டுமடி; udder as of a cow. "குடம்புரை செருத்தல் ... எருமை" (சீவக.2102). செருத்தல் பருத்திருந்தும் பால் குறைவாகத் தருகிறதே (உவ.).

க. கெச்சல்

[செறு் → செரு → செருத்தல்]

**செருத்தி** *šerutti*, பெ. (n.) வெற்றிக்கொடி (வின்.); banner of victory; badge of distinction.

[செரு → செருத்தி. செரு = போர்]

**செருத்துணைநாயனார்** *šeruttuṇai-nāyaṉār*, பெ. (n.) நாயன்மார் அறுபத்து மூவருள் ஒருவர் (பெரியபு.); a canonized Šaiva saint one of 63.

**செருத்தொழிலோர்** *šeru-t-toḻilōr*, பெ. (n.) செருநர்,1 பார்க்க; see *šerunar,1*.

[செரு + தொழிலோர்]

**செருதண்ணை** *šerudaṇṇai*, பெ. (n.) மரக் கலத்தைக் கட்டுதற்குரிய சிறுமரப் பலகை; small plank to tie the boats.

**செருந்தி** *šerundi*, பெ. (n.) *1.* *வாட்கோரை;* a kind of sedge. "*களிறுமாய் செருந்தியொடு*" *(மதுரைக். 172).* *2.* **சிலந்தி என்னும் மரம்;** panicled golden-blossomed pear tree. "*செருந்தி காலையே கனகம் மலர்கின்ற சாய்க்காடே*" *(தேவா. 40, 9).* 3. **மணித்தக்காளி** (மலை.); Indian hounds-berry. *4.* *குறிஞ்சி யாழ்த்திறத்தொன்று (பிங்.);* a secondary melody-type of the kuriñji class.

*[சிலந்தி → செருந்தி]*

**செருந்து** *šerundu*, பெ. (n.) *1.* **பூ முதலியவற்றின் இதழ்;** petal. "செருந்தவிழ் துளபமாலை" *(பாரத. எட்டாம். 15).* 2. செருந்தி,2 பார்க்க; see *šerundi,2.* "பரிமளப்பூஞ் செருந்தொன்று சோலை" *(தஞ்சைவா. 9).*

*[செருந்தி → செருந்து]*

**செருநர்** *šerunar*, பெ. (n.) *1.* *படைவீரர் (பிங்.);* soldiers, warriors. *2.* *பகைவர்;* enemies. "கதம்பெற் றார்க்குஞ் செருநர்" *(கலிங். 548).*

ம. செருநர்

*[செரு → செருநர்]*

**செருப்படி**[1] *šeru-p-paḍi*, பெ. (n.) *1.* செருப்பு *என்னும் காலணியால் கொடுக்கும் அடி;* blow given through sandals. *அண்ணன் தம்பியர் சண்டையில் ஒருவருக்கொருவர் செருப்படி கொடுத்துக் கொண்டனர் (உ.வ.).*

ம. செருப்படி

*[செருப்பு + அடி]*

**செருப்படி**[2] *šeru-p-paḍi*, பெ. (n.) செருப்படை[2] *பார்க்க;* see *šeru-p-paḍai*[2].

*[செருப்படை → செருப்படி]*

**செருப்படிநாயன்** *šeru-p-paḍi-nāyaṉ*, பெ. (n.) *செருப்படை*[2] *பார்க்க;* see *šeruppaḍai*[2].

**செருப்படை**[1] *šeru-p-paḍai*, பெ. (n.) *சிறந்த போர் வீரர்களைக் கொண்ட போர்ப்படை;* army of tried soldiers. "செருப்படையான் பல புகழ் பாடி" *(பு.வெ. 9:31).*

*[செரு + படை]*

**செருப்படை**[2] *šeruppaḍai*, பெ. (n.) **படர்கொடி வகை;** a diffuse prostrate herb.

ம. செருப்படி

**செருப்பளிச்சம்பா** *šeruppaḷi-c-cambā*, பெ (n.) *சரப்பளிச்சம்பா என்னும் நெல் வகை;* a kind of šambā-paddy.

*[சரப்பளிச்சம்பா → செருப்பளிச்சம்பா]*

**செருப்பு** *šeruppu*, பெ. (n.) *1.* **காலில் பொருத்தி நிற்கும்படி சிறுபட்டை வைத்துத் தைத்த அடிப்பகுதியுடைய காலணி;** leather sandals, slippers, shoe. "மணியழுத்திச் செய்த தெனினுஞ் செருப்புத்தன் காற்கேயாம்" *(நாலடி. 347).*

மறுவ. மிதியடி, அடிபுதையரணம்.

ம. செரிப்பு, செருப்பு; க. கெர, கெரவு, கெரகு, கெர்பு; தெ. செப்பு; து. செப்பளு; பட. கெருவு; கோத. கெர்ப்; துட. கெர்வு; கோண். சுர்பு; குவி. ஜெப்பு; கெலா., நா. கெர்ரி; பர். செருப்

*[சரு → செரு→ செருப்பு]*

செருப்பு, தொடுதோல் என்ற பெயரில் வழங்கப்படுகிறது. செருப்பைத் தொட்டுக் கொண்டு போனார் என்பது கொங்குநாட்டு வழக்கு.

**செருப்பு**[2] *šeruppu*, பெ. (n.) **பூழிநாட்டிலுள்ள** தோர் மலை; a mountain in Pūḻi-nāḍu. "மிதியற் செருப்பிற் பூழியர் கோவே" *(பதிற்றுப். 21:23).*

*[பொருப்பு → செருப்பு]*

**செருப்புக்கட்டை** *šeruppu-k-kaṭṭai*, பெ. (n.) தேய்ந்த செருப்பு (வின்.); worn-out sandals.

*[செருப்பு + கட்டை]*

**செருப்புக்கடி** *šeruppu-k-kaḍi*, பெ. (n.) **செருப்பு அழுத்துவதால் உண்டாய புண்;** shoe-bite. செருப்புக்கடியால் உண்டான புண் ஆற அவனுக்கு ஆறுமாதம் ஆகியது *(உ.வ.).*

*[செருப்பு + கடி]*

**செருப்புத்தின்னி** *šeruppu-t-tiṉṉi*, பெ (n.) **தோற் செருப்பைத் தின்னும் நாய் (யாழ்ப்.);** a dog as sandals eater.

*[செருப்பு + தின்னி]*

**செருப்புநெருஞ்சி** *šeruppu-neruñji*, பெ (n.) **சிவப்பு நெருஞ்சி முள்;** red cow-thorn.

*[சிவப்பு + நெருஞ்சி]*

**செருப்பூசி** *šeruppūši*, பெ (n.) செருப்புத் தைக்கும் ஊசி; shoemaker's awl.

*[செருப்பு + ஊசி]*


செருப்பூசி

**செருமகள்** *šeru-magaḷ*, பெ (n.) போர்க்குரிய பெண் தெய்வம் (துர்க்கை) (இலக். அக.); Durgā, as the war Goddess.

*[செரு + மகள்]*

**செருமரம்** *šeru-maram*, பெ (n.) கடலில் மீன் பிடிக்கச் செல்வதற்குரிய கட்டுமரம்; a kind of cata-maram.

*[சறுக்குமரம் → செருமரம்]*

**செருமல்** *šerumal*, பெ (n.) தொண்டையைத் தூய்மையாக்கக் கனைக்கை; hemming, clearing the throat.

க. கெம்மு

*[செருமு → செருமல்]*

**செருமலையரியன்** *šerumalai-y-ariyaṉ*, பெ (n.) ஒருவகை நெல்; a kind of paddy.

**செருமு-தல்** *šerumu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. நிரம்புதல்; to be full, replete. "கருனை வாசமும் . . . அகிற் புகை வாசமுஞ் செருமி" (சீவக. 130). 2. நெருக்கமாயிருத்தல்; to be close and crowded. பயிர் செருமிப் போனதினால் கதிர்க்குலை வாய்க்கவில்லை (நாஞ்). 3. பதிதல்; to sink; to pierce through. "மருமங்களினும் புயங்களினுஞ் . . . செருமும்படி வெங்கணை மாரி சிந்தி" (பாரத. மூன்றாம். 12). 4. இருமுதல், கனைத்தல்; to hem, cough. "செந்தேனே மெல்லச் செருமுவேன்" (விறலிவிடு. 293). கிழவர் செருமிவிட்டுச் சளியைத் துப்பினார். 5. விக்குதல்; to get choked. "தருப்பணஞ் செருமித் தன்னுயிர் வைத்தனன்" (பெருங். இலாவாண. 9:239).

ம. செருமல்

*[இருமு → செருமு-.]*

**செருமு²-தல்** *šerumu-*, 5 செ.குன்றாவி. (v.t.) அடைத்தல் (யாழ்ப்.); to crowd in, stuff or cram in, fill up.

*[இருமு → செருமு-.]*

**செருமுனை** *šeru-muṉai*, பெ (n.) 1. போர்க் களம்; field of battle. "செருமுனையுள் வைகி" (பு.வெ. 1:6). 2. போர்புரியும் படை; fighting army. "செருமுனைமேல் வாள்சென்றன்று" (பு.வெ. 4:7, கொளு).

*[செரு + முனை]*

**செருவஞ்செய்-தல்** *šeruvañ-jey-*, 1 செ.கு.வி. (v.i.) மாறுபடுதல்; to attack. "செருவஞ் செய்தற்கு" (பரிபா. 8:87).

மறுவ. போர்புரிதல், தாக்குதல்

*[செரு → செருவம் + செய்-.]*

**செருவாடி** *šeruvāḍi*, பெ. (n.) சிறுவாடு; petty savings in money. 'செருவாடி போகம் கொண்டு' (தெ.க.தொ. 5, 285).

*[சிறுவாடு → செருவாடி]*

**செருவிச்சினவி** *šeruvi-c-ciṉavi*, பெ (n.) மிகு சினம் (கோபம்); tremendous anger.

*[செரு → செருவி + சினவி]*

**செருவிடைவீழ்தல்** *šeru-v-iḍai-vīḻdal*, பெ. (n.) அகழினையும் காவற்காட்டையுங் காத்துப் பட்ட வீரரது வெற்றியைப் புகழும் புறத் துறை (பு.வெ. 5:4); theme celebrating the heroic death of the warriors who defended the moat round a city and the adjoining forest.

*[செரு + இடை + வீழ்தல்]*

**செருவிளை** *šeru-viḷai*, பெ. (n.) வெள்ளைக் காக்கணம் (குறிஞ்சிப். 68); white-flowered mussel-, shell creeper.

*[செரு + விளை]*

**செருவுறு-தல்** *šeru-v-uṟu-*, 5 செ.கு.வி. (v.i.) **ஊடுதல்;** to quarrel; to sulk. *"தீர்விலதாகச் செருவுற்றாள்" (பரிபா. 7:75).*

**செல்[1](லு)-தல்** *šel-*, 13 செ.கு.வி (v.i.) *1.* **போதல்;** to go, flow, pass, to traverse, as the eye, mind. "சென்ற தேஎத்து" *(தொல்.பொருள்.146).* *2.* **நிகழ்தல்;** to occur. "செல்லாஅநின்ற வித்தாவர சங்கமத்துள்" *(திருவாச. 1:30).* 3. **வீழ்தல்;** to fall, as on the ground. "படியிற் செல்லும்படி" *(கம்பரா. நிகும்பலை. 23).* 4. **ஆதல்;** to become, form. "புண்செல்வன வல்லால்" *(கம்பரா.நிகும் பலை.107).* 5. **பரவுதல்;** to spread, as fame. "உரைசெல முரசுவெளவி" *(புறநா. 26:7).* 6. **பயனுறுதல்;** to be effective; to have influence. "செல்வர்வாய்ச் சொற்செல்லும்" *(நாலடி, 115).* 7. **நிலைத்திருத்தல்;** to last, endure, exist. "செல்லாதவ் விலங்கை வேந்தர்க் கரசென" *(கம்பரா. இந்திரசித். 56).* 8. **செலாவணியாதல்;** to pass, as coin. "சந்தையினிற் செல்லாப் பணஞ் செல்லுமோ" *(தனிப்பா.).* 9. **வேண்டியதாதல்;** to be required; to cost. இந்தக் காரியத்தை முடிக்க ஆயிர உருபா செல்லும் *(உ.வ.).* 10. **பொருந்துதல்;** to be suitable; to be acceptable. உலகம் . . . தோற்றுவா னொருவனை உடைத்தாதல் செல்லாது *(சி.போ.சிற். 1:2, பக். 17).* 11. **விரும்பி யேற்றுக் கொள்ளப்படுதல்;** to be acceptable to the system. நோயாளிக்கு உணவு செல்லவில்லை. 12. **அடைதற்குரியதாதல்;** to be due, as money; to appertain to, as a right. இந்தப் பணம் எனக்குச் செல்ல வேண்டியது. 13. **கழிதல்;** to pass away, lapse, expire, as time. "சென்றன சென்றன வாழ்நாள்" *(நாலடி, 4).* 14. **தணிதல்;** to disappear, diminish, as anger. "செலியரத்தை நின் வெகுளி" *(புறநா. 6:23).* 15. **கெடுதல்;** to perish, to be ruined. "செல்லா நல்லிசை" *(மலைபடு. 388).* 16. **இறத்தல்;** to die. "செல்லுநாளைந்து புலனு மயர்ந்த பின்னர்" *(உபதேசகா. சிவநாம. 3).*

*ம.* செல்லுக; *க.* சல், செல்; *தெ.* செல், செல்லு; *து.* சல்லுனி; *கோண்.* கன்தாரை, சொனானா; *கூ.* சல்பா; *நா.*ச; *கொலா.* செர்; *பர்.* செல், செல்; *கட.* செல்

*[சல் → செல்.]*

'சல்' பார்க்க

šel, to go, to proceed. This is unquestionably a Dravidian root, and abounds in derivatives e.g. šel, the white ant; šel-avu, expenditure, šel-vam, prosperity. It forms its preterite also in a manner which is peculiar to pure Dravidian verbs. It is obviously allied to the Sanskrit šal, to go or move; šel, to move, to trumble; chal and char, to go, to shake, to totter; and also to the Hindustani derivative chal, to go, close as these analogies are, šel appears to bear an equally close resemblance to cel, the obsolete Latin root, signifying to go, from which are formed celer and also ex-cell-o and pre-cell-o the same root is in Greek kel- e.g. kel-ēs, a runner; and kellō, to urge on (CGDFL. 594).

**செல்(லு)[2]-தல்** *šel-*, 8 செ.குன்றாவி. (v.t.) *1.* **கிட்டுதல்;** to approach. *"செல்வரைச் சென்றிர வாதார்" (நாலடி, 296).* 2. **அடைதல்;** to become, trun into, attain. "கலங்கலைச் சென்றவன்றும்" *(திருக்கோ. 24).*

*[சல் → செல்-.]*

**செல்[3]** *šel*, பெ. (n.) *1.* **விரைந்து போகை;** career, swift course. "செல்லொன்று கணையால்" *(கம்பரா. இராவணன்வதை. 15).* 2. **வாங்கிய கடனுக்குச் செலுத்திய தொகை;** payment of loan. இந்தப் பத்திரத்துக்குச் செல் உருபா ஐம்பது *(உ.வ.).* 3. **கடன்;** loan, debt. கணக்குப் பார்த்ததில் அவனுக்கு ஆயிர உருபா செல் இருக்கிறது. 4. **கடன் செலுத்தியதற்கு ஆவணத்திலெழுதுங் குறிப்பு;** note of payment. கொடுத்த உருபாவைச் செல் வைத்திருக்கிறதா? *(உ.வ.).* 5. **சென்ற கால வளவு;** period that has elapsed. சூரிய புத்தியின் செல் நான்கு ஆண்டு. *6.* **மஞ்சு** *(பிங்.);* cloud. 7. **வானம்** *(அக.நி.);* sky. 8. **இடி;** thunder bolt. "வான் முழக்குச் செல்" *(பரிபா. 13: 44).* 9. **வேல்** *(அக.நி.);* javelin.

*[சல் → செல்]*

**செல்[4]** *šel*, பெ. (n.) **கறையான்** *(பிங்.);* white ant. "செல்லரித்திடவு மாண்டெழாதாள்" *(கம்பரா. காட்சி. 15).* செல்லரித்த புத்தகம்.

*[சிதல் → செல்]*

**செல்கதி** *šel-kadi*, பெ. (n.) *1.* **புகல்;** the ultimate or last refuge. "எங்கள் செல்கதி வந்தது" *(கம்பரா. கங்கை. 10).* 2. **உய்வு;** salvation. "செல்கதி யுண்டோ தீவினை யேற்கென்று" *(மணிமே. 13:88).*

வ. கதி

*[செல் + கதி]*

**செல்காரியம்** *šel-kāriyam*, பெ. (n.) நடத்தப் பெறுங் காரியம் (வின்.); the matter on hand.

*[செல் + காரியம்]*

**செல்காலம்** *šel-kālam*, 1. செல்வாக்குள்ள காலம்; time of one's influence. 2. சென்ற காலம்; past time. "வருகாலஞ் செல்கால மாயினானை" (தேவா. 716, 3).

மறுவ. இறந்த காலம், கடந்த காலம்.

*[செல் + காலம்]*

**செல்கை** *šelgai*, பெ. (n.) செல்வாக்கு பார்க்க (இ.வ.); see *šel-vākku*.

*[செல் + காரியம்]*

**செல்சார்** *šel-šār*, பெ. (n.) பற்றுக்கோடு; support. "இரப்பவர்க்குச் செல்சாரொன்றீ வோர்" (நான்மணி. 39).

*[செல் + சார். சார் = சார்தல்]*

**செல்சார்வு** *šel-šārvu*, பெ. (n.) செல்சார் பார்க்க; see *šelšār*. "சிறைகொளப் பட்டியான் செல்சார் வுறுத்த பின்" (பெருங். இலாவாண. 10:126).

*[செல் + சார்வு]*

**செல்சுடர்** *šel-šudar*, பெ. (n.) மறையும் பகலவன்; declining Sun. "செல்சுடர் நோக்கி" (நாலடி, 394).

மறுவ. அடை ஞாயிறு; மறையும் ஞாயிறு படி ஞாயிறு.

*[செல் + சுடர்]*

**செல்பாக்கி** *šel-bākki*, பெ. (n.) சிற்றூர்களின் வரவு செலவுப் பாக்கிக் கணக்கு; statement of demand, collection and balance of revenue in a village.

*[செல் + பாக்கி]*

**செல்ல** *šella*, வி.எ. (adv.) 1. அகல; at a distance, out of the way. "செல்லப்போய் நிற்பாள்திரு" (அபி.சிந். 277:தனிப்பா.). 2. சிறிது காலங் கழித்து; after some time. 'செல்ல வா' (வின்.). 3. முடிய; to the very end. 'சடைக்கு மேல் கேசாந்தத் தளவுஞ் செல்ல' (தெ.க.தொ. 2, 175).

*[செல் → செல்ல]*

**செல்லக்கட்டு-தல்** *šella-k-kattu-*, 5 செகுன்றாவி. (v.t.) 1. திட்டமாய் முடித்தல்; to accomplish. 2. வயப்படுத்துதல்; to bring round, as a person. அவனைச் செல்லக் கட்டி விட்டேன். 3. கடன் தீர்த்தல் (வின்.); to liquidate loan, pay up arrears.

*[செல் → செல்ல + கட்டு-.]*

**செல்லக்கலியாணம்** *šella-k-kaliyāṇam*, பெ. (n.) சிறு குழந்தைகளாக இருக்கும்போதே செய்யும் திருமணம்; child-marriage.

மறுவ. சிறுவர் திருமணம், குழந்தை மணம்

*[செல்லம் + கலியாணம்]*

**செல்லக்குடை** *šella-k-kuḍai*, பெ. (n.) மிகு செல்வம் (இ.வ.); immense wealth.

*[செல்வம் → செல்லம் + குடை]*

**செல்லக்குந்தாணி** *šella-k-kundāṇi*, பெ. (n.) செல்லமாக வளர்க்கப்பட்ட பிள்ளை (இ.வ.); boy or girl very indulgently brought up, used in contempt.

*[செல்வம் → செல்லம் + குந்தாணி]*

**செல்லங்கொஞ்சு-தல்** *šellaṅ-goñju-*, 5 செ.குவி. (v.i.) குழந்தை பெண்டிர் முதலியவருடன் கொஞ்சிப் பேசுதல்; to prattle; to use gestures, as a humoured child or woman; to fondle, dally with a woman.

*[செல்வம் → செல்லம் + கொஞ்சு-.]*

**செல்லங்கொடு-த்தல்** *šellaṅ-goḍu-*, 4 செ.குவி. (v.i.) அன்பு மேலீட்டால் குழந்தைகட்கு அதிக இடங்கொடுத்தல்; to be indulgent, as to a child.

*[செல்வம் → செல்லம் + கொடு-.]*

**செல்லச்சிரிப்பு** *šella-c-cirippu*, பெ. (n.) புன்சிரிப்பு (வின்.); delicate, gentle smile.

மறுவ. சிறுநகை, முறுவல், புன்னகை, குறுஞ் சிரிப்பு.

*[செல்லம் + சிரிப்பு]*

**செல்லச்சோறு** *šella-c-cōṟu*, பெ. (n.) செல்லத்தால் சிறிது சிறிதாக அடிக்கடி கொடுக்கும் உணவு (வின்.); food repeatedly

given in small quantities, as to children brought up indulgently, dainties

[செல்லம் + சோறு]

**செல்லடி[1]-த்தல்** *šel-l-adi-*, 4 செ.குன்றாவி. (v.t.) செல்லரி (இ.வ.) பார்க்க; see *šel-l-ari.*

**செல்லடி[2]-த்தல்** *šell-adi-*, 4 செ.குன்றாவி. (v.t.) செல்வை பார்க்க; see *šel-vai.*

**செல்லத்தனம்** *šella-t-tanam*, பெ. (n.) செல்லம் (யாழ்ப்.) பார்க்க; see *šellam.*

[செல்வம் → செல்லம் + (தன்மை) தனம்]

**செல்லத்தீனி** *šella-t-tīni*, பெ. (n.) செல்லச் சோறு (யாழ்.அக.) பார்க்க; see *šella-c-cōru.*

[செல்லம் + தீனி]

**செல்லத்தொந்தி** *šella-t-tondi*, பெ. (n.) செல்வச் செழிப்பில் இளமையிற் பெருத்த வயிறு; paunch belly due to luxurious living.

[செல்லம் + தொந்தி]

**செல்லத்தொப்பை** *šella-t-toppai*, பெ. (n.) செல்லத்தொந்தி பார்க்க; see *šella-t-tondi.*

[செல்லம் + தொப்பை]

**செல்லநடை** *šella-nadai*, பெ. (n.) 1. குழந்தை முதலியோரின் தளர்நடை; gentle, graceful gait, as of children. 2. மந்தநடை; slow, loitering walk.

[செல்லம் + நடை]

**செல்லநரை** *šella-narai*, பெ. (n.) செல்வமாக வளர்வதால் இளமையில் உண்டாம் நரை (யாழ்ப்.); premature grey hairs, supposed to result from luxurious living.

[செல்வம் + நரை]

**செல்லப்பசி** *šella-p-paši*, பெ. (n.) குழந்தைகட்கு அடிக்கடி உண்டாகும் பசி (வின்.); frequent hunger as of children.

[செல்வம் + பசி]

**செல்லப்பிள்ளை** *šella-p-pillai*, பெ. (n.) 1. செல்லம் கொடுத்து வளர்க்கப்பட்ட அருமைக் குழந்தை; child brought up delicately, petted child. கடைக்குட்டிதான் அவனுக்குச் செல்லப் பிள்ளை. 2. செல்வமாக வாழ்பவர் (சுகவாசி); person living in luxury and ease. 3. நாடக மாந்தர்களில் முருகன் வேடம்பூண்டு வரும் இரண்டாம் மாந்தன் (வின்.); the second character in comedy, supposed to have been originally a representation of Murugan.

ம. செல்லப்பிள்ளை

[செல்லம் + பிள்ளை]

**செல்லப்பிள்ளைக்காய்ச்சல்** *šella-p-pillai-k-kāyccal*, பெ. (n.) 1. ஒருவகைக் காய்ச்சல்; a kind of fever. 2. பள்ளிக்குப் போவதற்கு அஞ்சி, செல்வச் சிறுவர் நடிக்கும் போலி காய்ச்சல் பாவனை; action of children of rich people as if they are in fever - only to avoid to go to school.

மறுவ. பாசாங்குக் காய்ச்சல்

[செல்லம் + பிள்ளை + காய்ச்சல்]

**செல்லப்பிள்ளைவிளையாட்டு** *šella-p-pillai-vilaiyāttu*, பெ. (n.) இன்ப வாழ்விலிருப் பவனது கருதலற்ற நடத்தை (உ.வ.); thoughtless, extravagant conduct of a person given to luxurious and easy life. முதாதையர் சேர்த்து வைத்திருந்த செல்வத்தை, இவன் செல்லப்பிள்ளை விளையாட்டில் தொலைத்து விட்டான் (உ.வ.).

[செல்லப்பிள்ளை + விளையாட்டு]

**செல்லப்பிள்ளைவேட்டி** *šella-p-pillai-vētti*, பெ. (n.) சிறுவர் அணியும் சிற்றுடை (தஞ்சை.); a small cloth usually worn by children.

மறுவ. சித்தாடை, குறுவேட்டி

[செல்லம் + பிள்ளை + வேட்டி]

**செல்லப்பெட்டி** *šella-petti*, பெ. (n.) வெற்றிலைப் பாக்கு வைக்கும் பெட்டி; metallic box for keeping betel leaves and areca-nut.

மறுவ. வெற்றிலைச் செல்லம்

ம. செல்லப்பெட்டி

[செல்லம் + பெட்டி]


செல்லப்பெட்டி

**செல்லப்பெண்** *šella-p-peṇ*, பெ. (n.) அருமைப் பெண்; female child or girl brought up delicately; petted girl.

*[செல்வம் + பெண்]*

**செல்லப்பேச்சு** *šella-p-pēccu*, பெ. (n.) 1. மழலைச்சொல்; child's prattle or lisp. 2. மகளிரின் கொஞ்சற் பேச்சு; soft, winning talk, as of a woman.

மறுவ. கிள்ளைப் பேச்சு, மழலை மொழி, காதற் பேச்சு.

*[செல்வம் + பேச்சு]*

**செல்லம்** *šellam*, பெ. (n.) 1. பொருள்; opulence, prosperity, fortune. 'செல்லஞ் செருக்குகிறது, வாசற்படி வழுக்குகிறது' (வின்.). 2. சொந்தக் கருவூலம்; private treasury, as of a king. 3. செல்லப்பேச்சு,2 பார்க்க; see *šella-p-pēccu,2* இந்தச் செல்லமெல்லாம் இங்கே நடக்காது. 4. புதுமை (வினோதம்); novelty, amusement, pastime. 5. வெற்றிலை பாக்கு எடுத்துச் செல்லும் செல்லப் பெட்டி (தஞ்சை.); metal box to carry betal leaves and areca-nuts. அந்த வெற்றிலைச் செல்லத்தைக் கொண்டுவா (உ.வ.). 6. இளக்காரம் (இ.வ.); indulgence. 7. இளமை; youth. செல்லக்குட்டி.

ம. செல்லம்

*[செல்வம் → செல்லம்]*

**செல்லம்பொழி-தல்** *šellam-poḻi-*, 2 செ.கு.வி. (v.i.) 1. செல்வமாய் இருத்தல் (இ.வ.); to be happy and prosperous. அந்த ஊர் செல்லம் பொழிகிறது (உ.வ.). 2. மகிழ்ந்து விளையாடுதல்; to play merrily; to be frolic-some, jovial.

*[செல்லம் + பொழி-]*

**செல்லமடி** *šella-maḍi*, பெ. (n.) இளமையிற் பெருத்த கன்று மடி (யாழ்ப்.); premature udder of a heifer.

*[செல்லம் + மடி]*

**செல்லமடிப்பு** *šella-maḍippu*, பெ. (n.) செல்வச் செழிப்பில் விழும் வயிற்று மடிப்பு; folds of the abdomen, due to luxurious living.

மறுவ. தொந்தி, மடிப்பு

*[செல்லம் + மடிப்பு]*

**செல்லரி-த்தல்** *šel-l-ari-*, 4 செ.கு.வி. (v.i.) கறையானால் தின்னப்படுதல்; to be eaten by white ants. "செல்லரித்த வோலை செல்லுமோ" (அஷ்டப். திருவரங். கலம். 53).

*[செல் + அரி-.]*

**செல்லரித்துப்போன** *šel-l-arittu-p-pōṉa*, பெ.எ. (adj.) மதிப்பிழந்துவிட்ட அல்லது பயன் இல்லாமல் போன; old and worn-out; moth-eaten. செல்லரித்துப் போன சடங்குகளை இன்னும் சிலர் அப்படியே பின்பற்றி வருகின்றனர்.

*[செல் + அரித்து + போன]*

**செல்லல்**[1] *šellal*, பெ. (n.) 1. துன்பம் (தொல். சொல். 302); sorrow, suffering, afflicition. 2. வெறுப்பு (வின்.); disgust.

*[செல் → செல்லல்]*

**செல்லல்**[2] *šellal*, பெ. (n.) மூன்று விரல நீளமும் மஞ்சணிறமும் உள்ள நன்னீர் மீன்வகை; fresh water fish, yellowish, attaining 3 in. in length.

தெ. ஜெல்ல

*[சேல் → செல் → செல்லல்]*

**செல்லவண்டி** *šella-vaṇḍi*, பெ. (n.) செல்லத்தொந்தி பார்க்க; see *šella-t-tondi.*

*[செல்லம் + வண்டி. பண்டி → வண்டி.]*

**செல்லவயிறு** *šella-vayiṟu*, பெ. (n.) செல்லத் தொந்தி பார்க்க; see *šella-t-tondi.*

*[செல்லம் + வயிறு]*

**செல்லவை-த்தல்** *šella-vai-*, 4 செ.குன்றாவி. (v.t.) செல்லாத காசைச் (நாணயத்தைச்) செலாவணி யாக்குதல்; to pass, as a base coin.

*[செல் + வை-.]*

**செல்லன்** *šellaṉ*, பெ. (n.) 1. செல்லப்பிள்ளை 1,2 பார்க்க; see *šella-p-piḷḷai,1,2.* 2. செல்வ முள்ளவன் (உ.வ.); wealthy person. செல்லன் சொல்லுக் கஞ்சான், அழகன் நடைக்கஞ்சான் (உ.வ.).

[செல்லம் → செல்லன்.]

**செல்லா-தல்** *šel-lā-*, 6 செ.குன்றாவி. (v.i.) 1. கடன் தொகை செலுத்தப்படுதல்; to be paid or discharge, as loan. 2. இறந்து போதல்; to be dead and gone. அவர் செல்லானார் (இ.வ.).

[செல்[2] + ஆ-.]

**செல்லாக்காசு** *šellā-k-kāšu*, பெ. (n.) 1. செலாவணியாகாத பணம்; coin that will not pass, base coin. 2. செல்வாக்கும் மதிப்பும் இழந்தவன் (வின்.); one who has lost credit or influences. அவன் அரசியலில் செல்லாக்காசு ஆகிபோனான் (உ.வ.). 3. செல்லல்,3 பார்க்க; see *šellal,3.* 4. மருந்துப் பச்சிலை வகை; a medicinal herb. செல்லாக்காசில் வைத்துச் சிறுசெருப்படியைக் கொடுக்க.

ம. செல்லாக்காசு; க. சல்லத காசு

[செல் + ஆ + காசு]

**செல்லாக்காசோலை** *šellā-k-kāšōlai*, பெ. (n.) பணம் மறுக்கப்பட்ட காசோலை; dis-honoured cheque.

[செல்லா + காசோலை. செல்லா = செல்லாத]

**செல்லாக்காலம்** *šellā-k-kālam*, பெ. (n.) செல்வாக்கு நீங்கின காலம்; time when one's influence is gone, as by loss of office, reputation etc. அந்தக் கட்சிக்கு இப்போது செல்லாக்காலம் (உ.வ.). 2. தள்ளாத கிழப் பருவம்; decrepit, old age.

[செல் + ஆ + காலம்]

**செல்லாநெறி** *šellā-neṟi*, பெ. (n.) செல்லுதற்கரிய வானம்; aerial region, as impassable. "செல்லா நெறி யேறினர்" (அரிச். பு.விவாக. 59).

[செல் + ஆ + நெறி]

**செல்லாமை[1]** *šellāmai*, பெ. (n.) 1. பிரிந்து போகாமை; remaining, stopping. "செல்லாமை யுண்டே லெனக்குரை" (குறள், 1151). 2. வறுமை; poverty. "செல்லாமை செவ்வனேர் நிற்பினும்" (நாலடி, 148). 3. வலியின்மை (இ.வ.); inability. 4. செய்யாதிருக்கக் கூடாமை; unavoidable necessity, inevitability. 'என் செல்லாமையாலே ஏத்தினேன்' (ஈடு, 4. 3:10).

[செல் + ஆ + மை. ஆ = எதிர்மறை இடைநிலை]

**செல்லாமை[2]** *šellāmai*, பெ. (n.) ஆற்றாமை; powerlessness to control oneself. 'பெரிய திருவடியுடைய செல்லாமையாலும் தன் செல்லாமை யாலும் . . . அழகு செண்டேறக் கடவதாயிறே யிருப்பது' (திவ்.திருநெடுந். 6, வியா, பக். 50).

[செல் → செல்லாமை]

**செல்லாயி** *šellāyi*, பெ. (n.) ஊர்த் தெய்வம்; a village goddess.

[செல்லியாயி → செல்லாயி]

**செல்லாவாழ்க்கை** *šella-vāḻkkai*, பெ. (n.) வறுமை வாழ்வு; wretched life, life of poverty. "சில்விலைக் கிடுஉஞ் செல்லா வாழ்க்கையர்" (பெருங். உஞ்சைக். 55:49). செல்லா வாழ்க்கை வாழ்வதிலும் உயிர் துறப்பதே நன்று (உ.வ.).

[செல் + ஆ (எதிர்மறை) + வாழ்க்கை]

**செல்லாவிடம்** *šellā-v-iḍam*, பெ. (n.) 1. வறுமைக் காலம்; straitened circumstances. "செல்லா விடத்துங் குடிப்பிறந்தார் செய்வன" (நாலடி, 149). 2. தகுதியில்லாத இடம்; improper place. "செல்லா விடத்துச் சினந்தீது" (குறள். 302).

[செல் + ஆ + இடம்]

**செல்லாறு** *šel-l-āṟu*, பெ. (n.) 1. கைக்கொள்ளும் முறை; the proper or advisable course, the correct or the right path. "இருளற விளங்குஞ் செல்லா றிதுவென" (பெருங். நரவாண, 7:90 -91). 2. செல்லும் வழி; the way one goes.

[செல் + ஆறு]

**செல்லானகணக்கு** *šel-l-āṉa-kaṇakku*, பெ. (n.) தீர்ந்துபோன கணக்கு; paid-off account.

[செல்[2] + ஆ(ன) + கணக்கு]

**செல்லி** *šelli*, பெ. (n.) *1.* செல்லப்பெண் பார்க்க; see *šella-p-peṇ*. "தங்கையான செல்லி மங்கையர்க்குள் நல்லி" *(இராமநா. ஆரணி. 12).* *2.* செல்லாயி பார்க்க; see *šellāyi*.

*[செல்லம் → செல்லி]*

**செல்லிடம்** *šel-l-iḍam*, பெ. (n.) *1.* பொருளுள்ள காலம்; prosperous circumstances "செல்லிடத்துஞ் செய்யார் சிறியவர்" *(நாலடி, 149).* *2.* தகுதியான இடம்; proper place. "செல்லிடத்துக் காப்பான் சினம் காப்பான்" *(குறள், 301).* *3.* செல்லுகின்ற இடம்; the place to which one goes.

*[செல் + இடம்]*

**செல்லியம்** *šelliyam*, பெ. (n.) கோழி; fowl.

*[சேவல் → சேல் → செல் → செல்லியம்]*

**செல்லியாயி** *šelli-y-ayi*, பெ. (n.) சிற்றூர்த் தெய்வம்; village goddess.

*[செல்லி + ஆயி. ஆய் → ஆயி]*

**செல்லு**[1] *šellu*, பெ. (n.) செல்[2] பார்க்க; see *šel*[2].

**செல்லு**[2] *šellu*, பெ. (n.) செல்[3] பார்க்க; see *šel*[3].

**செல்லுங்காசோலை** *šelluṅ-gāšōlai*, பெ. (n.) செல்லுபடியான காசோலை, தீர்வான காசோலை; valid cheque honoured.

*[செல்லும் + காசோலை]*

**செல்லுச்சீட்டு** *šellu-c-cīṭṭu*, பெ. (n.) பற்றுச்சீட்டு (ரசீது); receipt or acquittance in evidence of payment.

தெ. செல்ல சீட்டு

*[செல்லு + சீட்டு]*

**செல்லுஞ்சீட்டு** *šelluñ-jīṭṭu*, பெ. (n.) *1.* உண்மையான கையெழுத்து; authentic signature. *2.* செலாவணியான ஆணை (பத்திரம்) முதலியன; bill or bond that is valid and honoured. *3.* செல்லுச்சீட்டு பார்க்க; see *šellu-c-cīṭṭu*.

*[செல் → செல்லும் + சீட்டு]*

**செல்லுஞ்செலவுக்கு** *šelluñ-jelavukku*, கு.வி.எ. (adv.) இன்றியமையாத செலவுக்குப் போதியதாக (இ.வ.); sufficiently for actual or necessary expenses.

*[செல் → செல்லும் + செலவுக்கு]*

**செல்லுஞ்சொல்** *šelluñ-jol*, பெ. (n.) *1.* செல்வாக்கு பார்க்க; see *šel-vākku*. *2.* பிறர்க் கேற்க உரைக்கும் சொல்; word acceptable to others; winsome or convincing words. "செல்லுஞ்சொல் வல்லா னெதிர் தம்பியும்" *(கம்பரா. நகர்நீங். 139).*

*[செல் + உம் + சொல்]*

**செல்லுப்புலையர்** *šellu-p-pulaiyar*, பெ. (n.) உப்பு விற்கும் பிரிவினர்; people who sell salt. "தறிக்குறையுழு கோடு செல்லுப் புலையரும்" *(பாண்டிய செபத். பக். 29, பாலி. செ.).*

**செல்லுபடி** *šellu-paḍi*, பெ. (n.) செல்லான தொகை (உ.வ.); the amount paid.

*[செல் + படி.]*

**செல்லுபடியாகு-தல்** *šellu-paḍi-y-āgu*, 5 செ.கு.வி. (v.i.) உரிய மதிப்பையும் பயனையும் பெற்று நடைமுறையில் ஏற்கப்படுதல்; be valid; be in force. உன் அதிகாரமெல்லாம் இனி செல்லுபடியாகாது.

*[செல்லுபடி + ஆகு-.]*

**செல்லுபாக்கி** *šellu-pākki*, பெ. (n.) செல்பாக்கி பார்க்க; see *šel-pākki*.

*[செல் + பாக்கி]*

**செல்லும்புள்ளி** *šellum-puḷḷi*, பெ. (n.) *1.* கொடுக்கல் வாங்கல் செய்யத் தகுதியுள்ளவன்; a man capable of money transaction. *2.* கொடுக்க வேண்டிய கடன் (நெல்லை.); liabilities, debt.

*[செல் + உம் + புள்ளி]*

**செல்லும்பேச்சு** *šellum-pēccu*, பெ. (n.) செல்லுஞ்சொல் பார்க்க; see *šelluñ-jol*.

*[செல் + உம் + பேச்சு]*

**செல்லுமதி** *šellu-madi*, பெ. (n.) செல்லாக வேண்டிய தொகை; balance due.

*[செல் + மதி. மதி = அறிவு, செல்வம்]*

**செல்லுலகு** *šel-l-ulagu*, பெ. (n.) மக்கள் செல்லுதற்குரிய உலகம், மறுமை; heaven, as the goal of humanity. "செல்லு லகறிந் தோர்" (மணிமே. 23: 134).

*[செல் + உலகு]*

**செல்லூர்க்கிழார்மகனார்பெரும்பூதங் கொற்றனார்** *šellūr-k-kilār-maganār-perumbūdan-gorranār*, பெ. (n.) அகநானூறு 250, குறுந்தொகை 218, 358, 368, நற்றிணை 30 ஆகிய பாடல்களின் ஆசிரியர்; a Sangam poet, author of Agam 250, Kurundogai 218, 358, 368 and Narrinai-30.

*[செல்லூர்க்கிழார் + மகனார் + பெரும்பூதம் + கொற்றனார்]*

**செல்லூர்க்கோசிகன்கண்ணனார்** *šellūr-k-kōšigan-kannanār*, பெ. (n.) அகம் 66ஆம் பாடலின் ஆசிரியர்; author of Agam 66.

*[செல்லூர் + கோசிகன் + கண்ணனார்]*

**செல்லெண்ணெய்** *šel-l-ennai*, பெ. (n.) மரத்தைக் கறையான் அரிக்காமல் பாதுகாக்கப் பூசும் எண்ணெய்; anti termite oil for wood.

*[செல் + எண்ணெய்]*

**செல்லெழுத்து** *šel-l-eluttu*, பெ. (n.) உண்டியல் ஆவணம் முதலியவற்றில் வரவு வைக்கும் கையொப்பம் (இவ.); endorsement of payment, as on bonds.

*[செல் + எழுத்து]*

**செல்லெழுது-தல்** *šel-l-eludu-*, 5 செ.கு.வி. (v.i.) ஆவணத்தில் (பத்திரத்தில்) கடன் தீர்ந்ததாக எழுதிக் கொடுத்தல்; to cancel, as a bond, by super-scription.

*[செல் + எழுது-]*

**செல்லொப்பம்** *šel-l-oppam*, பெ. (n.) ஆவணம் (பத்திரம்) முதலியவைகளில் இடம்பெறும் மேல் ஒப்பம் (யாழ்ப்.); counter-signature.

*[செல் + ஒப்பம்]*

**செல்லொளி** *šel-l-oli*, பெ. (n.) வைடூரியம் (யாழ்.அக.); cat's eye.

*[செல் + ஒளி]*

**செல்வக்கடி** *šelva-k-kadi*, பெ. (n.) பருங்கடி (யாழ்.அக.); biting, in playfulness.

*[செல்வம் + கடி]*

**செல்வக்களிப்பு** *šelva-k-kalippu*, பெ. (n.) செல்வச் செழிப்பால் உண்டாகும் திமிர் (வின்.); joy or elation due to prosperity.

*[செல்வம் + களிப்பு]*

**செல்வக்கிடப்பு** *šelva-k-kidappu*, பெ. (n.) செல்வமிகுதி; aboundance of wealth. '. . . தன்னை எழுதிக் கொடுத்தால் பின்னை செல்வக்கிடப்புக் காட்டி மீட்க வொண்ணாதாப் போலே' (ஈடு, 1. 3:1).

*[செல்வம் + கிடப்பு]*

**செல்வங்காசி** *šelvangāši*, பெ. (n.) மதகிரி வேம்பு; Chittagong wood.

**செல்வச்சிரஞ்சீவி** *šelva-c-ciranjīvi*, பெ. (n.) (நீடுழி வாழ்க என சொல்லும்) ஒரு வாழ்த்துரை; a term of blessing.

*[செல்வம் + சிரஞ்சீவி]*

**செல்வச்செருக்கு** *šelva-c-cerukku*, பெ. (n.) செல்வ மிகுதியால் உண்டாகும் இறுமாப்பு; haughtiness due to wealth. செல்வச்செருக்கால் அழிந்தோர் பலர்.

மறுவ. பணத்திமிர்

*[செல்வம் + செருக்கு]*

**செல்வந்தன்** *šelvandan*, பெ. (n.) மிகுந்த செல்வம் படைத்தவன்; rich person, plutocrat.

*[செல்வன் → செல்வந்தன்]*

**செல்வநூல்** *šelva-nūl*, பெ. (n.) செல்வப் பொருளைப் பற்றிய நூல் (இக்.வ); economics, political economy.

*[செல்வம் + நூல்]*

**செல்வப்பிள்ளை** *šelva-p-pillai*, பெ. (n.) செல்லப்பிள்ளை பார்க்க; see *šella-p-pillai*. "அடியேனை நின் செல்வப் பிள்ளை யாக்கினையே" (அருட்பா, 4, திருவருட்பேறு 1, பக்622).

*[செல்வன் + பிள்ளை]*

**செல்வப்பெண்** *šelva-p-peṇ*, பெ. (n.) செல்லப் பெண் பார்க்க; see *šella-p-peṇ*. "வியனகரிடத்திற் செல்வப் பெண் விளையாடும்" *(பிரபுலிங். ஆரோகண. 39).*

*[செல்வம் + பெண்]*

**செல்வப்பொருள்** *šelva-p-poruḷ*, பெ. (n.) கல்வியின் மாறான பொருட் செல்வம்; wealth, riches, dist. from education.

*[செல்வம் + பொருள்]*

**செல்வம்** *šelvam*, பெ. (n.) 1. மதிப்புள்ள உடைமைகளின் தொகுப்பு; சொத்து; பொருள் வளம்; wealth, riches. "துகடீர் பெருஞ் செல்வம்" *(நாலடி. 2).* எவ்வளவு செல்வம் இருந்து என்ன பயன். 2. செழிப்பு, வளமை; immensity, prosperity, flourishing state; "சேனையின் செல்வ நோக்கி" *(திருவிளை. மெய்க்கா. 29).* 3. அழகு; beauty. "தேவரிற் பெற்றநஞ் செல்வக்கடி" *(திருக்கோ. 14).* 4. நுகர்ச்சி (தொல்.பொருள். 259, உரை); enjoyment, pleasure, experience of happiness. 5. மேலுலகம் (துறக்கம்) (அக.நி.); Indra's heaven. 6. கல்வி (அக.நி.); learning. 7. குழந்தை; child. உங்கள் செல்வங்களின் வளமான வாழ்க்கைக்குச் சொத்துச் சேருங்கள்.

ம. செல்வம்; க. செல்வ, செல்வு (அருள்); தெ. செலுவமு, செலுவு (அழகு); து. செலுவிகெ (அழகு)

*[செல் → செல்வம்]*

**செல்வமட்டி** *šelvamaṭṭi*, பெ. (n.) கொடி வகை; a kind of creeper.

**செல்வர்** *šel-var*, பெ. (n.) திருமால் கோயிலிலுள்ள திருபலி மூர்த்தி (இவ.); Šri-pali in Viṣṇu temple.

*[செல்வம் → செல்வர்]*

**செல்வராட்சி** *šelvar-āṭci*, பெ. (n.) பணக்காரர் மட்டுமே பங்கு பெறும் ஆட்சி; timocracy.

*[செல்வர் + ஆட்சி]*

**செல்வழி** *šel-vaḻi*, பெ. (n.) போகும்பாதை (இவா); royal road.

ம. செல்வழி

*[செல் + வழி]*

**செல்வன்** *šelvaṉ*, பெ. (n.) 1. செல்வமுள்ளவன் பொருளுடையவன்; wealthy man. "செல்வர் சிறுநோக்கு நோக்குங்கால்" *(நாலடி, 298).* 2. இறைவன்; lord. "ஆலமர் செல்வற்கு" *(சிறுபாண். 97).* 3. புத்தன் (சூடா.); Buddhaṉ. 4. மகன்; son. "செங்கதிர்ச் செல்வன் செய்த வென்றியை" *(கம்பரா. மகுடபங்க. 45).* 5. மணமாகாத இளைஞனின் பெயருக்கு முன் சேர்த்து வழங்கும் சொல்; a form of address for an unmarried young man.

*[செல்வம் → செல்வன்]*

**செல்வாக்கு** *šel-vākku*, பெ. (n.) பணம், மதிப்பு, பதவி முதலியவற்றால் பிறரைத் தன் விருப்பத்திற்கு ஏற்ப நடக்கச் செய்ய அல்லது வழிநடத்த இருக்கும் திறன், நாடெங்குங் கிடைக்கும் பெருமதிப்பு (இவ.); influence. நாளுக்குநாள் அவன் செல்வாக்குப் பெருகிடவே, அவன் தனிக்கட்சியைத் தொடங்கினான் *(உ.வ.).*

*[செல் + வாக்கு]*

**செல்வானம்** *šel-vāṉam*, பெ. (n.) சில்லறை; small change.

*[சில்வானம் → செல்வானம்]*

**செல்வி** *šelvi*, பெ. (n.) 1. திருமகள் (திவா.); Lakshmi, as Goddess of Wealth. 2. பொருள் உள்ளவள்; wealthy woman. 3. தலைவி; lady of rank. "செல்வீ... உனக்குண்மை யியம்பினேமால்" *(காஞ்சிப்பு. தலவி. 29).* 4. மகள்; daughter. 5. மணமாகாத பெண்ணைச்சுட்டும் முன்னடை; miss.

*[செல்வம் → செல்வி]*

**செல்விக்கை** *šelvikkai*, பெ. (n.) 1. செல்வம்; luxury, affluence. 2. செட்டு; thriftiness.

*[செல்வம் → செல்விக்கை]*

**செல்விராசகேசரி** *šelvi-rāšakēšari*, பெ. (n.) 1. திருவல்லம் 'சிவன் கோயிலில் நெல் அளக்கப் பயன்பட்ட மரக்காலின் பெயர்; name of a measure for paddy, use in the Šivaṉ temple at Tiruvallam. "காசொன்றுக்குச் செல்விராஜ கேஸரியால் நெல்லு நாற்கலமாக" *(தெ.க.தொ. 3: கல். 57).*

*[செல்வி + (அரச →) ராச + கேசரி]*

அளவுக் கருவிகளுக்கு அரசர், இறைவர் பெயர் சூட்டும் பண்டைப் பழக்கத்தின் அடிப்படையில் எழுந்த பெயர்.

**செல்வு** *šelvu*, பெ. (n.) செல்வம் பார்க்க; see šelvam. "கோனாகி வீற்றிருந்து கொண்டாடுஞ் செல்வறியேன்" (*திவ். பெருமாள். 4:7*).

[*செல்வம் → செல்வு*]

**செல்வுழி** *šel-v-uḻi*, பெ. (n.) செல்லுதற்குரிய இலக்கு; destination, goal. "தாஞ்செல்வுழி யெண்ணாத" (*நாலடி, 8*).

[*செல் + உழி*]

**செல்வை-த்தல்** *šel-vai-*, 4 செ.கு.வி. (v.i.) கடன் முதலியவற்றிற்குத் தொகை செலுத்தி ஆவணத்தில் பதிதல்; to enter a credit in account; to endorse payment.

[*செல் + வை-.*]

**செலக்குரு** *šelakkuru*, பெ. (n.) செலக்கூர்மை பார்க்க; see *šela-k-kūrmai*.

**செலக்கூர்மை** *šela-k-kūrmai*, பெ. (n.) எரியுப்பு (நவச்சாரம்) (சங்.அக.); sal-ammoniac.

**செலகம்** *šelagam*, பெ. (n.) மல்லிகை; Arabian jasmine.

**செலதம்** *šeladam*, பெ. (n.) கோரைக் கிழங்கு; fragrant tuber of Cyprus rotundus.

**செலந்தன்** *šelandaṉ*, பெ. (n.) ஒரு வகை மீன் ; a kind of fish.

**செலவடை** *šelavaḍai*, பெ. (n.) செலவு; expenses. அவனுக்கு ஒருநாள் செலவடை பத்து உருபா (*உ.வ.*).

[*செலவு + (அடு →) அடை*]

**செலவயர்-தல்** *šelavayar-*, 2 செ.கு.வி. (v.i.) செல்ல விரும்புதல்; to desire to go. "சீர்மிகு நல்லிசை பாடிச்செலவயர்தும்" (*பு.வெ. 12, வென்றிப். 1*).

[*செலவு + அயர்-.*]

**செலவழி¹-தல்** *šelavaḻi-*, 2 செ.கு.வி. (v.i.) 1. பணம், பொருள், நேரம் முதலியன செலவாய்ப் போதல் (உ.வ.); to be spent, used up, consumed. 2. சாதல் (இ.வ.); to die. அவன் செலவழிந்து விட்டான்.

ம. செலவழியுக

[*செலவு + அழி-,*]

**செலவழி²-த்தல்** *šelavaḻi-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. செலவிடுதல்; to spend, consume, use up, as stores. 2. கொடுத்துவிடுதல்; to give away, dispose of. 3. பொருளையழித்தல்; to squander, waste. மலையளவு சொத்தைச் செலவழித்ததால் அவன் இன்று இரங்கத்தக்க நிலையில் உள்ளான் (*உ.வ.*).

ம. செலவழிக்குக

[*செலவு + அழி-.*]

**செலவழிவு** *šelavaḻivu*, பெ. (n.) 1. செலவழிகை; disbursement and expenditure. 2. ஊதியமும் இழப்பும் (இலாப நட்டம்); gain and loss.

[*செலவு + அழிவு*]

**செலவழுங்கு-தல்** *šelavaḻuṅgu-*, 5 செ.கு.வி. (v.i.) தலைவன் தலைவியிடமிருந்து பிரிதலைத் தவிர்த்தல்; to desist from parting from one's love. 'தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கியது' (*அகநா. 191*).

[*செலவு (பயணம்) + அழுங்கு (நிறுத்தம்)-.*]

**செலவா-தல்** *šelavā-*, 6 செ.கு.வி. (v.i.) செலவழி¹-தல் பார்க்க; see *šelavaḻi-*.

[*செலவு + ஆ-.*]

**செலவாளி** *šelavāḷi*, பெ. (n.) செலவுகாரன் பார்க்க; see *šelavu-kāraṉ*.

ம. செலவாளி; தெ. செலவுகாடு

[*செலவு + ஆளி*]

**செலவிடு¹-தல்** *šelaviḍu-*, 18 செ.குன்றாவி. (v.t.) கூலி கொடுத்தல், பொருள் வாங்குதல் போன்ற வற்றிற்காகப் பணத்தை வழங்குதல்; to spend. 2. பணம் போன்றே நேரம் முதலியவற்றையும் செலவிடுதல்; to spend time like money etc. ஆய்விற்காக அவன் தன் வாழ்நாளின் பெரும்பகுதியைச் செலவிட்டான் (*உ.வ.*). 3. பொருளையழித்தல்; to squander, waste.

ம. செலவிடுக

[*செலவு + இடு-.*]

**செலவிடு²-தல்** *šelaviḍu-*, 18 செ.குன்றாவி. (v.t.) அனுப்புதல்; to send, send forth. "சிந்தை மகிழ்வுற வுரைத்து மணநேர்ந்து செலவிட்டார்" (*பெரியபு. மானக்கஞ். 17*). கலைப் பொருட்களின் நேர்த்தியில் அவர் தம் சிந்தையைச் செலவிட்டார் (*உ.வ.*).

[*செல் + விடு-.*]

**செலவினம்** *šelavinam*, பெ. (n.) வெவ்வேறு பணிகளுக்கான செலவு வகை; items of expenditure. மருத்துவச் செலவு உட்பட எல்லாச் செலவினங்களும் கணக்கில் காட்டப்படுகின்றன.

*[செலவு → செலவினம்]*

**செலவு** *šelavu*, பெ. (n.) *1.* போக்கு; going, passing. "செலவினும் வரவினும்" *(தொல். சொல். 28). 2.* ஓட்டம்; running, flowing. "வெருவருஞ் செலவின் வெகுளி வேழம்" *(பொருந. 172). 3.* நடை; manner or mode of walk. "சாமனார் தம்முன் செலவு காண்க" *(கலித். 94). 4.* குதிரை (கதி) நடை அல்லது ஓட்டம்; pace of a horse. "ஐந்து செலவொடு மண்டிலஞ் சென்று" *(பு.வெ.12, வென்றிப். 14). 5.* பயணம்; journey. "நீளிடைச் செலவொழிந்தனனால்" *(கலித். 10). 6.* படையெடுப்பு; expedition of an army. 'நாடிய நட்புப் பகை செலவு' *(பு.வெ. 9:37, உரை). 7.* நீட்சியளவு; full height. "ஒளிநிற வண்ணனைச் செலவு காணலுற்றா ரங்கி ருவரே" *(தேவா. 1209). 8.* கலைத் தொழில் எட்டனுள் ஒன்றாகிய அலுக்கம் (ஆலாபனம்); elaboration of a tune on the yāḻ one of eight *kalai-t-toḻil*. 'ஆளத்தியிலே நிரம்பப்பாடுதல் செலவு' *(சீவக. 657, உரை). 9.* வழி (திவா.); way, passage, route, street. "செஞ்ஞாயிற்றுச் செலவும்" *(புறநா. 30). 10.* ஒழுக்கம்; conduct, behaviour. "தன் செலவிற் குன்றாமை" *(திரிகடு. 29). 11.* பணச்செலவு; expense, charges. "தாங்குகோடி தனஞ்செல வென்பவே" *(சிவரக. சுகமுனி. 41). 12.* வீட்டுக்கு வேண்டிய உணவுப் பண்டம்; provisions needed for consumption. கடைக்குப்போய்ச் செலவு வாங்கி வந்தேன் *(உ.வ.).* *13.* தேவை (இவ.); demand, necessity, need. இந்தத் துணிக்கு வீட்டில் செலவில்லை. *14.* மொய் (இ.வ.); marriage presents. *15.* காலம், பண்டம் முதலியவற்றின் கழிவு; expenditure, as provisions, lapse, as of time of life, etc. *16.* இறந்த காலம்; past tense. "பாந்தஞ் செலவொடு வரவும்" *(நன். 145). 17.* சாவு; death. ஊரில் செலவு அதிகம் (இ.வ.). *18.* பிரிவு; separation, departure. "செலவழுங்கியது" *(அகநா. 191). 19.* ஆணை; permission, leave, order. செலவு பெற்றுக் கொள்கிறேன். *20.* எலி முதலிவற்றின் வளை; hole, as of rat. எலிச் செலவாயினுந் தனிச்செலவு வேண்டும் *(யாழ்ப்.).*

ம. செலவு; க., தெ., பட. செலவு; கோத. சல்வ், செல்வ்; துட. சல்வ்

*[செல் → செலவு]*

**செலவுகாரன்** *šelavū-kāran*, பெ. (n.) *1.* தாராளமாய்ச் செலவிடுபவன்; one who spends freely. *2.* மட்டுக்கு மிஞ்சிச் செவழிப்போன்; spendthrift, extravagant person. *3.* குடும்பச் செலவுமிக்கவன்; one who has large expenses.

ம. செலவுகாரன்; தெ. செலவுகாடு; பட. செலவுகார

*[செலவு + காரன்]*

**செலவுகொடு-த்தல்** *šelavu-koḍu-*, 4 செ.கு.வி. (v.i.) *1.* அனுமதி கொடுத்தல்; to give leave. *2.* இழப்பீடு கொடுத்தல்; to pay costs, as in a suit; to recompense. செலவு கொடுக்கும்படி முறை மன்றத்தில் தீர்ப்பாயிற்று *(உ.வ.).*

*[செலவு + கொடு-.]*

**செலவுசிற்றாயம்** *šelavu-šiṟṟāyam*, பெ. (n.) *1.* நாள் செலவுக்கு வேண்டும் பணம்; money required for daily expenses. செலவு சிற்றாயத்திற்கு என்ன செய்வாய். *2.* நாளுக்கும் வேண்டிய உணவுப் பண்டம்; provisions for daily consumption.

*[செலவு + சிற்றாயம்]*

**செலவுசெய்-தல்** *šelavu-šey-*, 1 செ.குன்றாவி. (v.t.) பணம், பொருள், நேரம் போன்றவற்றைத் தீர்த்தல்; to spend, consume, use up.

ம. செலவு செய்யுக

*[செலவு + செய்-.]*

**செலவுசொல்(லு)-தல்** *šelavu-šol-*, 13 செ.கு.வி. (v.i.) வாங்கிய தொகையிற் செலவிட்டதற்குக் கணக்கு ஒப்பித்தல்; to account for sum received. *2.* செலவிடுதற்கு விளத்தம் சொல்லுதல்; to give directions for the expenditure of a sum.

*[செலவு + சொல்]*

**செலவுபாக்கு** *šelavu-pākku,* பெ. (n.) செலவிடுதற்குப் பயன்படும் தாழ்தரமான பாக்கு; areca-nuts for distribution, generally of an inferior quality.

[செலவு + பாக்கு]

**செலவுபெயர்-தல்** *šelavu-peyar-,* 2 செ.கு.வி. (v.i.) போதலைத் தவிர்தல் (கலித். 17); to give up one's journey.

[செலவு + பெயர்-.]

**செலவுமுன்பணம்** *šelavu-munpaṇam,* பெ. (n.) திட்டச் செலவிற்கு அளிக்கப்படும் முன் பணம்; advance for planning expenditure.

[செலவு + முன்பணம்]

**செலவுவாங்கு[1]-தல்** *šelavu-vāṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) விடைபெறுதல்; to take leave, get leave.

[செலவு + வாங்கு-.]

**செலவுவாங்கு[2]-தல்** *šelavu-vāṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) மசாலைப் பண்டம் வாங்குதல்; to buy provisions, as curry stuffs.

[செலவு + வாங்கு-.]

**செலவுவை-த்தல்** *šelavu-vai-,* 4 செ.குன்றாவி. (v.t.) செலவழிக்கச் செய்தல்; make one spend. மகனின் படிப்பு அவருக்கு நிறையச் செலவு வைத்து விட்டது

[செலவு + வை-.]

**செலவெடு-த்தல்** *šelavedu-,* 4 செ.கு.வி. (v.i.) பண்ட சாலையிலிருந்து உணவுப் பண்டங் கொள்ளுதல் (யாழ்ப்.); to purchase provisions from a store.

[செலவு + எடு-.]

**செலவோடு-தல்** *šelavōdu-,* 5 செ.கு.வி. (v.i.) புண் புரையோடுதல் (வின்.); to run deep, as a fistula, an ulcer.

[செலவு + ஓடு-.]

**செலாமணி** *šelāmaṇi,* பெ. (n.) 1. செல்லக் கூடியது; that which can be passed, as coin, that which is a legal tender. 2. செல்வாக்கு (இ.வ.); influence. இப்போது அவருக்கு அவ்வளவு செலாமணி யில்லை.

U. clāoṇi

[செலாவணி → செலாமணி]

**செலாவணி[1]** *šelāvaṇi,* பெ. (n.) பணப் புழக்கம்; currency. அணா காசுகள் இப்போது செலாவணியில் இல்லை.

[செலவாணி → செலாவணி]

**செலாவணி[2]** *šelāvaṇi,* பெ. (n.) செலாமணி பார்க்க; see *šelāmaṇi.*

**செலாவணிச்சீட்டு** *šelavaṇi-c-cīṭṭu,* பெ. (n.) செல்லக் கூடிய உண்டியல் முதலியன (செந். xii, 283); negotiable instrument like demand draft, cheque etc.

மறுவ. கேட்பு ஓலை, வரைவு ஓலை

[செலாவணி + சீட்டு]

**செலியம்** *šeliyam,* பெ. (n.) இலாமிச்சை (மலை.); cuscuss grass.

**செலு[1]** *šelu,* பெ. (n.) 1. மீன் செதிள்; small fins of a fish. "செலுவுட் கரந்தவாழி" (அஷ்டப். திருவரங். மா. 22). 2. சிலாம்பு; splinter. "பௌவமுற்றுமோர் செலுவுட் சென்று" (பாகவத. 8. 8:17).

[சுல் → சில் = சிறியது. சில் → சிலு → செலு = சிறு செதிள்]

**செலு[2]** *šelu,* பெ.எ. (adj) மெலிந்த; thin, poor, puny. செலுநாய்.

க. சிலு

[சில் → சில்லு → செலு]

**செலுத்து-தல்** *šeluttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. செல்லச் செய்தல்; to cause to go or proceed, despatch, circulate, deliver. "மாதலியைச் செலுத்தி" (கம்பரா. இராவணன் வதை. 203). 2. எய்தல்; to discharge, as a missile. அம்பைச் செலுத்தினான். 3. ஓட்டுதல்; to drive, impel, push forward, propel. "ஓராழி கொண்டு செலுத்துதேர்" (பாரத பதினாறாம். 40) 4. ஆணை நடத்துதல்; to execute, as orders; to administer, as justice. "தனியரசு செலுத்து நாள்" (உபதேசகா.

விபூதி. 104). 5. நடத்துதல்; to perform, observe, as charity, to fulfil, as a promise, vow. 'இத்தன்மம் முட்டாமை செலுத்துவோமானோம்' (தெ.க.தொ. 3, 95). 6. இறுத்தல்; to pay, as tribute, debt. வரி செலுத்தியாயிற்று. 7. போகவிடுதல், திருப்பிவிடுதல்; to direct; turn. பந்தை அவர் இடப்பக்கமாகச் செலுத்திய முறை சிறப்பாக இருந்தது. 8. ஏற்றுதல், உட்செலுத்துதல்; to transfuse; give, infect. நோயாளிக்கு உடனடியாக அரத்தம் செலுத்த வேண்டும். 9. காட்டுதல், மேற்கொள்ளுதல்; to show, exercise. அவர் மீது அன்பு செலுத்த ஆளில்லை.

ம. செலுத்துக

*[செல் → செலுத்து-.]*

**செலுந்தி** *šelundi*, பெ. (n.) மெலிந்தது; thin, slim person or animal; small, stunted tree.

*[செலு² → செலுந்தி]*

**செலுந்தில்** *šelundil*, பெ. (n.) செலுந்தி பார்க்க (யாழ்ப்.); see *šelundi*.

*[செலு → செலுந்தில்]*

**செலுப்பட்டி** *šelu-p-patti*, பெ. (n.) மீன்வகை; flat fish, olive-brown.

*[செலு + பட்டி]*

**செலுப்பு**[1] *šeluppu*, பெ. (n.) நீர்க்கோப்பு (இ.வ.); cold.

தெ. த்ஜலுபு

*[சல் → செல் → செலு → செலுப்பு]*

**செலுப்பு**[2] *šeluppu*, பெ. (n.) 1. சிறுதுண்டு; a little piece. 2. பாக்குச் சீவல் (யாழ்ப்.); slices or parings of areca-nut.

*[செலு² → செலுப்பு]*

**செலுப்பை** *šeluppai*, பெ. (n.) கருவாலி (L.); Ceylon tea.

**செலும்பு** *šelumbu*, பெ. (n.) 1. சிறுதுண்டு; a little piece. 2. பாக்குச்சீவல்; parings of areca-nut for use with betel.

*[செலு² → செலும்பு]*

**செலுமுரல்** *šelu-mural*, பெ. (n.) மீன்வகை (யாழ்.அக.); a kind of fish.

*[செலு + முரல்]*


செலுமுரல்

**செலுவல்** *šeluval*, பெ. (n.) செத்தல் பார்க்க (யாழ்.அக.); see *šettal*.

*[செலு → செலுவல்]*

**செலுவன்** *šeluvan*, பெ. (n.) மெலிந்தவன் (யாழ்.அக.); lean person.

க. செலுவ, சலுவ (அழகன்)

*[செலு² → செலுவன்]*

**செலை** *šelai*, பெ. (n.) சிலைவாகை (G.Tj.D.I,115); fragrant sirissa.

*[சிலை → செலை. சிலை = வாகை மரம்]*

**செவ்வகத்தி** *šev-v-agatti*, பெ. (n.) மரவகை (பதார்த்த. 521); red flowered West Indian pea-tree. 2. செடிவகை (L.); scarlet-flowered pea-tree of Texas.

க. செம்பகசெ

*[செம் → செவ் + அகத்தி]*

**செவ்வகம்** *šev-v-agam*, பெ. (n.) நீண்ட சதுரம்; rectangle.

*[செம் → செவ் + அகம்]*

**செவ்வகில்** *šev-v-agil*, பெ. (n.) தூணாமரம்; moulmein cedar.

க. செம்பகிலு

*[செம் + அகில்]*

**செவ்வட்டை**[1] *šev-v-attai*, பெ. (n.) உடலின் ஓரத்தில் சிவப்புப் பட்டைகள் கொண்டதும் சிறு கால்களால் ஊர்ந்து செல்வதுமான அட்டை வகை; a species of leech; "மரவட்டை, செவ்வட்டை" (விறலிவிடு. 620).

க. கெம்பட்டெ

*[செம் → செவ் + அட்டை]*

**செவ்வட்டை**[2] *ševvaṭṭai*, பெ. (n.) 1. சருக்கரை வள்ளிக் கொடிக்கு வரும் நோய்; a blight affecting sweet potato. 2. நெற்பயிரின் தோகையில் எள் வடிவத்தில் பழுப்பு நிறப் புள்ளிகளாகத் தோன்றிப் பச்சையத்தைச் சிதைக்கும் பூசண நோய்; helmin thosporium.

**செவ்வண்** *šev-vaṇ*, பெ. (n.) செங்குத்து (யாழ்அக.); steepness.

*[செம் → செவ் → செவ்வண்]*

**செவ்வண்டு**[1] *šev-vaṇḍu*, பெ. (n.) 1. தென்னையின் குருத்தைக் கெடுக்கும் ஒரு வகை வண்டு; red beetle which damages the tender shoots of coconut trees. 2. வீட்டின் சல தாரைப் பகுதியில் திரியும் செந்நிறப் பூச்சி; cockroach.

*[செம் + வண்டு]*

**செவ்வண்டு**[2] *ševaṇḍu*, பெ. (n.) சிவப்பு இண்டஞ் செடி; a red variety of sensitive tree.

**செவ்வணம்** *šev-vaṇam*, கு.வி.எ. (adv.) செவ்வனம் பார்க்க; see *ševvaṇam*. 'இதனைச் செவ்வணங் கூறாமையின் அமைத்தார்' (தொல்.பொருள். 242, உரை).

*[செம் → செவ் → செவ்வணம்]*

**செவ்வணி** *šev-v-aṇi*, பெ. (n.) தலைமகற்குத் தலைவியின் பூப்பு உணர்த்தற் குறியாகத் தோழியணிந்து கொள்ளுஞ் செங்கோலம்; red garment and red flowers, worn by the confidante to indicate to the hero that the heroine is in her periods. "செவ்வணி யணிந்து சேடியை விடுப்புழி" (நம்பியகப். 205).

*[செம் → செவ் + அணி]*

**செவ்வணில்** *ševvaṇil*, பெ. (n.) சீமைச்சிவப்பு அணில்; red squirrel of Europe.

*[செம் → செவ் + அணில்]*

**செவ்வத்தை** *šev-v-attai*, பெ. (n.) 1. செடிவகை (K.R.); globular-flowred neem. 2. கொடி வகை (L); a species of silverweed.

**செவ்வந்தி** *šev-v-andi*, பெ. (n.) 1. செவ்வந்தி நேரத்தில் பூக்கும் பூச்செடிவகை; garden chrysanthemum. 2. சாமாந்தி; wild chammomile.

ம. செவ்வந்தி, சேமந்தி, சேமந்திக; க. சேவந்திகெ, த. செவ்வந்தி → Skt. šēvati

*[செம் → செவ் + அந்தி - செவ்வந்தி = செவ்வான மாலை, அவ்வேளையில் மலரும் பூ]*

**செவ்வந்திக்கல்** *ševvandi-k-kal*, பெ. (n.) ஒருவகைச் செந்நிறமணி (வின்.); amethyst.

*[செவ்வந்தி + கல்]*

**செவ்வந்திப்புராணம்** *ševvandi-p-purāṇam*, பெ. (n.) எல்லப்ப நாவலர் இயற்றிய திருச்சிராப்பள்ளிப் புராணம்; a Purāṇa on the Šiva shrine at Trichirāppaḷḷi by Ellappa Nāvalar.

*[செவ்வந்தி + புராணம்]*

Skt. புராணா → த. புராணம்

**செவ்வநிறம்** *ševvaniṟam*, பெ. (n.) மாந்துளிர் கல்; a red stone of the colour of tender mango leaf (சாஅக.).

*[செம் → செவ் + நிறம்]*

**செவ்வம்மான்பச்சரிசி** *šev-v-ammāṉ-paccariši*, பெ. (n.) ஒருவகைப் பூடு (மூஅ.); red spurge.

*[செம் → செவ் + அம்மான் பச்சரிசி]*

**செவ்வரக்கு** *šev-v-arakku*, பெ. (n.) 1. சாதிலிங்கம்; vermilion. "பருவிரும்பு பிணித்துச் செவ்வரக் குரீஇ" (நெடுநல். 80). 2. செம்பரக்கு; red lac.

*[செம் + அரக்கு]*

**செவ்வரத்தம்** *šev-v-arattam*, பெ. (n.) 1. செவ்வரத்தை பார்க்க; see *šev-v-arattai*. "கூத்தன் குதம்பை செவ்வரத்த முயரசோகம்" (சங்அக: திருநாகைக்கா. புண்ட இரண்5). 2. மிகு சிவப்பு; crimson colour. "செவ்வரத்த வுடையாடை" (திவ். பெரியதி. 8. 1:7).

மறுவ. கருஞ்சிவப்பு

*[செவ்வரத்தை → செவ்வரத்தம்]*

**செவ்வரத்தமணி** *šev-v-aratta-maṇi*, பெ. (n.) தாழ்ந்த தரமான ஒருவகை மணி (சங்அக.); an inferior ruby.

*[செம் → செவ் + அரத்தம் + மணி]*

**செவ்வரத்தை** *šev-v-arattai*, பெ. (n.) செம்பரத்தை (உரி.நி.); shoe-flower.

*[செம்பரத்தை → செவ்வரத்தை]*

**செவ்வரளி** *šev-v-araḷi*, பெ. (n.) **சிவப்பு நிறப் பூப்பூக்கும் அரளி;** oleander rose bay.

*[செம் → செவ் + அரளி]*

**செவ்வரி** *šev-vari*, பெ. (n.) **கண்ணின் சிவந்த கோடுகள்;** red streaks in the eye. "செவ்வரி யொழுகிய செழுங்கடை மழைக்கண்" *(சிலப். 11: 184).* **2. நாரை வகை** *(பதிற்றுப். 23:21, அரும்.)*; a species of ibis.

ம. செவ்வரி; க. கெம்பரி

*[செம் → செவ் + வரி]*

**செவ்வரியாடு** *ševvari-y-āḍu*, பெ. (n.) **ஆடுவகை** *(தெ.க.தொ. 5, 265)*; a kind of sheep.

*[செம் → செவ் + வரி + ஆடு]*

**செவ்வல்** *ševval*, பெ. (n.) *1.* **செந்நிறம்;** redness. "செவ்வலங் குன்றம்" *(களவழி. 10).* **2. செம்மண் நிலம்;** soil of light red colour.

*[செம் → செவ் → செவ்வல்]*

**செவ்வல்நார்** *ševval-nār*, பெ. (n.) **செவ்வாம்பல்** (மலை.) பார்க்க; see *šev-v-āmbal.*

*[செவ்வல் + நார்]*

**செவ்வல்லி**[1] *šev-valli*, பெ. (n.) *1.* **செவ்வள்ளி** (தைலவ.தைல. 59) பார்க்க; see *šev-vaḷḷi.* **2. மஞ்சிட்டி;** Indian madder.

*[செவ்வள்ளி → செவ்வல்லி]*

**செவ்வல்லி**[2] *šev-v-alli*, பெ. (n.) **செவ்வாம்பல்** (பிங்.) பார்க்க; see *šev-v-āmbal.*

*[செம் → செவ் + அல்லி]*

**செவ்வலரி** *šev-v-alari*, பெ. (n.) **செவ்வரளி** பார்க்க; see *šev-v-araḷi.*

*[செம் → செவ் + அலரி]*

**செவ்வவரை** *šev-v-avarai*, பெ. (n.) **அவரை வகை** (M.M. 206); hyacinth bean.

*[செம் → செவ் + அவரை]*

**செவ்வழலை** *šev-vaḻalai*, பெ. (n.) **மனைப் பாம்பு;** common brown snake.

*[செம் → செவ் + அழலை]*

**செவ்வழி** *šev-vaḻi*, பெ. (n.) *1.* **நல்ல வழி;** good way, path of virtue. "கைதவந் திருப்பாச் செவ்வழி நிறீஇ" *(பெருங். மகத. 15: 19).* **2. பெரும் பண்களுள் ஒன்றாகிய முல்லைப் பண்;** a primary melody-type of the *mullai class.* "சீறியாழ் செவ்வழி பண்ணி" *(புறநா. 144).*

*[செம் → செவ் + வழி]*

**செவ்வழிப்பாலை** *šev-vaḻi-p-pālai*, பெ. (n.) **பாலையாழ்த் திறத்தொன்று;** a secondary melody-type of the *pālai* class. "தீந்தொடைச் செவ்வழிப் பாலை" *(சிலப். 7: 47, பக்.218).*

*[செவ்வழி + பாலை]*

**செவ்வழிபாடு** *šev-vaḻi-pāḍu*, பெ. (n.) **முற்றும் அடங்கியொழுகுகை;** absolute obedience, as of a pupil towards his teacher. "செவ்வழிபாட ராகிச் சிலைத் தொழில் சிறுவர் கற்ப" *(சீவக. 1758).*

*[செம் → செவ் + வழிபாடு]*

**செவ்வழியாழ்** *ševvaḻi-yāḻ*, பெ. (n.) **பெரும்பண்களுள் ஒன்றாகிய முல்லைப்பண்;** a primary melody-type of the *mullai class.* 'வண்டுகள் செவ்வழியாழ்ப் பண்ணினைப் பாடும்' *(சிலப். 11:88, உரை).*

*[செவ்வழி + யாழ்]*

**செவ்வள்ளி** *šev-vaḷḷi*, பெ. (n.) **வள்ளிக்கொடி வகை** (தைலவ. தைல. 94:24); purple yam.

ம. செவ்வள்ளி; Skt. tāmravallī

*[செம் → செவ் + வள்ளி]*

**செவ்வன்** *ševvaṉ*, கு.வி.எ. (adv.) **செவ்வனம்** பார்க்க; see *ševvaṉam.* "செவ்வனிறை காக்கு மிவ்வுலகில்" *(பு.வெ. 10, முல்லைப். 9).*

*[செவ்வனம் → செவ்வன்]*

**செவ்வனம்** *ševvaṉam*, கு.வி.எ. (adv.) **செவ்வையாக;** rightly, properly, correctly, directly, completely. "செவ்வனஞ் செல்லுஞ் செம்மை தானிலள்" *(மணிமே. 3:81).*

*[செம் → செவ் → செவ்வனம்]*

**செவ்வனார்** *ševvaṉār*, பெ. (n.) **செவ்வாம்பல்** (மலை.) பார்க்க; see *šev-v-āmbal.*

*[செம் → செவ் → செவ்வன் → செவ்வனார்]*



செவ்வல்லி





செவ்வரளி



செவ்வாமணக்கு

**செவ்வனிறை** *ševvan-irai,* பெ. (n.) நேர்விடை; direct answer. 'உயிர் எத்தன்மைத்து என்று வினாயவழி, உணர்தற்றன்மைத்து என்றல் செவ்வனிறையாம்' (தொல்.சொல். 13, சேனா.).

*[செம் → செவ் → செவ்வன் + இறை]*

**செவ்வனே** *ševvanē,* கு.வி.எ. (adv.) செம்மையாக; most properly. இந்த ஓவியம் காந்தாரக் கலைமரபில் செவ்வனே அமைந்துள்ளது.

*[செம் → செவ் → செவ்வனே]*

**செவ்வாக்கு** *šev-vākku,* பெ. (n.) நீண்ட வளைவு (யாழ்.அக.); long curve.

*[செம் + வாக்கு. வங்கு (=வளைவு) → வாங்கு → வாக்கு]*

**செவ்வாப்பு** *ševvāppu,* பெ. (n.) 1. செவ்வாப்புக் கட்டி பார்க்க; see *ševvāppu-k-katti.* 2. காமாலை வகை (M.L.); cyanosis.

*[செம் → செவ் + ஆப்பு]*

**செவ்வாப்புக்கட்டி** *ševvāppu-k-katti,* பெ. (n.) குழந்தைகளுக்குத் தலையிலுண்டாகும் சிவப்புக் கட்டி; a kind of erysipelas affecting the head, especially of children.

*[செவ்வாப்பு + கட்டி]*

**செவ்வாப்புக்கட்டிக்களிம்பு** *ševvāppu-k-katti-k-kalimbu,* பெ. (n.) ஒரு ஏனத்தில் தேன் மெழுகை உருக்கி நெய்விட்டுப் பருத்திப் பஞ்சைச் சுட்ட சாம்பல் போட்டுக் கிளறி, இதனுடன் வசம்புசுட்ட சாம்பல், வறுத்த துருசும்' சேர்த்துக் கிளறி ஆறவைத்துச் சீலை யிலூட்டிக் கட்டிக்குப் போடும் மருந்து; a medicinal preparation comprising melted bees wax, cow's ghee, ashes of cotton, sweet flag and fried copper sulphate. This is smeared over the affected part, as a sure cure for such boils.

*[செவ்வாப்பு + கட்டி + களிம்பு]*

**செவ்வாப்பெண்ணெய்** *ševvāppenney,* பெ. (n.) மருந்தெண்ணெய் வகை; a medicinal oil.

*[செவ்வாப்பு + எண்ணெய்]*

**செவ்வாம்பல்** *šev-v-āmbal,* பெ. (n.) செந்நிறமான அல்லிவகை (பிங்.); red Indian water lily.

மறுவ. சேதாம்பல், அரக்காம்பல், செங்குமுதம், செவ்வல்லி.

*[செம் → செவ் + ஆம்பல்]*

**செவ்வாமகம்** *ševvāmagam,* பெ. (n.) சிவப்புக் காசி தும்பை; a red variety of Benares toombay.

**செவ்வாமணக்கு** *šev-v-āmanakku,* பெ. (n.) சிவப்பாமணக்கு (பதார்த்த.531); variety of castor-plant.

*[செம் → செவ் + ஆமணக்கு]*

**செவ்வாமிகம்** *šev-v-āmigam,* பெ. (n.) சிவப்புக் கொன்றை; red cassia tree.

**செவ்வாய்[1]** *ševvāy,* பெ. (n.) 1. கதிரவனில் இருந்து நாலாவதாகவும் நிலவுலகையடுத்தும் உள்ள,ஒன்பது கோள்களுள் ஒன்று; the planet Mars, as red, one of *nava-k-kiragam.* 2. செவ்வாய்க்கிழமை பார்க்க; see *ševvāy-k-kilamai.* "ஞாயிறு திங்கள் செவ்வாய்" (தேவா. 1171,1).

*[செம் → செவ் + வாய்]*

**செவ்வாய்[2]** *ševvāy,* பெ. (n.) பிடாரி கோயில் திருவிழா; festival in a *Pidāri-temple.*

**செவ்வாய்[3]** *ševvāy,* பெ. (n.) ஒரு வகைப் பாறை மீன்; a kind of pārai fish.

**செவ்வாய்க்கிழமை** *ševvāy-k-kilamai,* பெ. (n.) கிழமை ஏழனுள் மூன்றாவது; Tuesday, the third day of the week.

*[செவ்வாய் + கிழமை]*

**செவ்வாய்நோன்பு** *ševāy-nōnbu,* பெ. (n.) ஆண்டிற்கு இருமுறை செவ்வாய்க்கிழமை நள்ளிரவில் ஆண்கள் யாரும் அறியா வண்ணம் வேளாள மகளிர் மேற்கொள்ளும் நோன்பு; ceremony performed in secret by Vēlāla women twice a year on Tuesday mid-nights when no male, not even a babe in arms is allowed to be present.

*[செவ்வாய் + நோன்பு]*

**செவ்வாய்ப்பிள்ளையார்** *ševvāy-p-piḷḷaiyār*, பெ. (n.) செவ்வாய்நோன்பு (இ.வ.) பார்க்க; see *ševvāy-nōṉbu.*

*[செவ்வாய் + பிள்ளையார்]*

**செவ்வாய்ப்பாகம்** *ševvāy-p-pāgam*, பெ. (n.) சுவரை ஒன்பதாகப் பிரித்தால் அதில் மூன்றாம் பாகம்; the third part of the wall, where it was divided into 9 parts.

*[செவ்வாய் + பாகம்]*

**செவ்வாயன்** *ševvāyaṉ*, பெ. (n.) செம்போத்து பார்க்க; see *šem-bōttu.*

*[செவ்வாய் + பாகம்]*

**செவ்வாயாட்சி** *ševvāy-āṭci*, பெ. (n.) செவ்வாயின் சொந்த ஓரைகளான மேழம் நளி (விருச்சிகம்) ஆகியன (விதான.); Aries and Scorpio, the signs of the zodiac belonging to Mars.

*[செவ்வாய் + ஆட்சி]*

**செவ்வாரம்** *ševvāram*, பெ. (n.) நில உடைமையாளரும் பயிரிடுவோரும் பிரித்துக் கொள்ளும் சரிவாரம் (இ.வ.); equal division of the produce of a field between the owner and the cultivator.

ம. செவ்வாரம்

*[செம் → செவ் + வாரம்]*

**செவ்வாரை** *šev-v-ārai*, பெ. (n.) ஆரைப் பூடுவகை (வின்.); a red pseudo fern.

*[செம் → செவ் + ஆரை]*

**செவ்வால்** *šev-vāl*, பெ. (n.) அரணை; horse lizard.

*[செம் → செவ் + வால்]*

**செவ்வாலம்பழம்** *šev-v-ālam-paḻam*, பெ. (n.) ஆலமரத்தின் பழம்; fruit of banyan tree.

*[செம் → செவ் + ஆலம்பழம்]*

**செவ்வாலிக்கெண்டை** *ševvāli-k-keṇḍai*, பெ. (n.) ஆறு விரல (ஆறங்குல) நீளமும் வெண்ணிறமு முள்ள கடல் மீன் வகை; sea-fish, silvery, attaining 6 in. in length.

**செவ்வாவிரை** *šev-v-āvirai*, பெ. (n.) ஆவிரை வகை; red cassia.

*[செம் → செவ் + ஆவிரை]*

**செவ்வாழை** *šev-vāḻai*, பெ. (n.) மூன்று ஆண்டிற்கொரு முறை 60 முதல் 120 வரை, செந்நிறமும் நன்மணமுமுள்ள காய்கள் கொண்ட குலையினை ஈனும் வாழை வகை (G.Sm. D.I, i. 215); a kind of plantain tree yielding red fruits of delicate flavour once in three years in large bunches of 60 to 120.

ம. செவ்வாழ

*[செம் → செவ் + வாழை]*

**செவ்வாளம்** *šev-v-āḷam*, பெ. (n.) நேர்வாளம்; Indian croton seed.

*[செம் → செவ் + வாளம்]*

**செவ்வானம்** *šev-vāṉam*, பெ. (n.) 1. செக்கர் வானம், செந்நிறமான அந்திவானம்; red evening sky. 2. செந்நிறமுகில்; red clouds. "செவ்வானத்து வனப்புப் போன்றன" (புறநா. 4:2).

*[செம் → செவ் + வானம்]*

**செவ்வி**[1] *ševvi*, பெ. (n.) நேர்முகம் (யாழ்ப்.); interview. செய்தியாளர் அரசுத் தலைவரைச் செவ்வி கண்டார்.

*[செம் → செவ் → செவ்வி]*

**செவ்வி**[2] *ševvi*, பெ. (n.) 1. காலம்; time. 2. தகுந்த சமயம்; season, appropriate occasion. "கதங் காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி" (குறள், 130). 3. காட்சி; audience. "செவ்வியுங் கொடா னிவ்வியல் புரிந்தனன்" (பெருங். இலாவாண. 9:198). 4. மலரும் பருவத்துள்ள பேரரும்பு (பிங்.); bud about to blossom. 5. விளைச்சற் பருவம்; mature condition. "முதிர்ந்த செவ்வித் தினையினை" (கந்தபு. வள்ளி. 158). 6. புதுமை; newness; freshness. 'காயா மலருஞ் செவ்விப்பூப்போல' (பு.வெ. 9:4. உரை). 7. அழகு; beauty, fairness. "வண்டுறை கமலச் செவ்வி வாண்முகம்" (கம்பரா. சூர்ப்ப. 2). 8. சுவை; taste. "நாய்பாற்சோற்றின் செவ்விகொளா றேற்றா தாங்கு" (நாலடி., 322). 9. மணம்; smell. "நாவிய செவ்விநாற" (கம்பரா. கார்கால. 35). 10. தன்மை (வின்.); state. condition. 11. செம்மை; propriety. "செவ்வியிற் றொடர்ந்த வல்ல செப்பலை" (கம்பரா. இராவணன்வதை. 210).

*[செம் → செவ் → செவ்வி]*



செவ்வாயன்



செவ்விறகுக் கொண்டைக் குயில்





செம்முதுகுக் கீச்சான்



செதில் வயிற்று மரங்கொத்தி





செம்பகம்

செம்மார்புக் குக்குறுவான்

**செவ்விஞ்சி** *šev-v-iñji*, பெ. (n.) எலுமிச்சஞ் சாற்றில் ஊறின இஞ்சி (சீவக. 2682, உரை); ginger pickled in lime-juice.

*[செம் → செவ் + இஞ்சி]*

**செவ்விண்டு** *šev-v-indu*, பெ. (n.) இண்டுவகை; a species of sensitive tree.

*[செம் → செவ் + இண்டு]*

**செவ்விதின்** *ševvidin*, வி.எ. (adv.) செவ்வனம் பார்க்க; see *ševvanam*.

*[செம் → செவ் → செவ்விதின்]*

**செவ்விது**[1] *ševvidu*, பெ. (n.) நேரானது; that which is right, good, proper.

*[செம் → செவ் → செவ்விது]*

**செவ்விது**[2] *ševvidu*, பெ. (n.) நன்று; expr. meaning 'very well'. "செவ்விதென் றவனுநேர" (கம்பரா. வேள்வி. 3).

*[செம் → செவ் → செவ்விது]*

**செவ்விந்தியர்** *ševvindiyar*, பெ. (n.) அமெரிக்கக் கண்டத்தில் வாழும் பழங்குடி மக்கள்; red Indian in America.

*[செவ் → செம் + இந்தியர்]*

இந்தியாவிற்குக் கடல் வழித் தேடிவந்த கொலம்பசு என்ற மாலுமி முதலில் அமெரிக்காவை அடைந்தபோது இந்தியா எனப் பிறழ உணர்ந்தததால், அமெரிக்கப் பழங்குடிகளும் இந்தியர் எனப்பட்டனர். அவர்களின் நல்ல சிவப்புப் பூச்சு, அவர்களைச் செவ்விந்தியர் என அழைக்க ஏதுவாயிற்று.

**செவ்விநிறம்** *ševvi-niram*, பெ. (n.) செவ்வநிறம் பார்க்க; see *ševvaniram*.

*[செவ்வநிறம் → செவ்விநிறம்]*

**செவ்விபார்-த்தல்** *ševvi-pār-*, 4 செ.குவி. (v.i.) ஒருவன் தக்க சமயத்தை எதிர்பார்த்து நிற்றல்; to await one's convenience for audience. "செருவேன் மன்னர் செவ்விபார்த் துணங்க" (மணிமே. 25:80).

*[செவ்வி + பார்-.]*

**செவ்விய**[1] *ševviya*, பெ.எ. (adj.) நேர்மையான; guile-less, righteous, regular. "செவ்விய தீவிய சொல்லி" (கலித். 19). 2. வாழ்க்கை, வழிமுறைகள் முதலியவற்றைக் குறிக்கையில் சிறந்த; most proper, excellent. செவ்விய வாழ்விற்குத் திருவள்ளுவரின் அறவுரைகளே போதுமானவை (உ.வ.).

*[செம் → செவ் → செவ்விய]*

**செவ்விய**[2] *ševviya*, பெ.எ. (adj.) சிவந்த; red. அவளின் செவ்விய இதழ்களும் நீண்ட விரல்களும் கவர்ச்சியாக இருந்தன.

*[செம் → செவ் → செவ்விய]*

**செவ்வியம்** *ševviyam*, பெ. (n.) 1. ஐம் மூலத்தொன்று; one of the five meidicinal roots. 2. மிளகுக் கொடி; black pepper creeper. 3. மலை வெற்றிலைக் கொடி; mountain beteal creeper. 4. கடைச்சரக்குகள் 64ல் ஒன்று; one of the 64 bazaar drugs as contemplated in Tamil medicine.

ம. செவியம்

*[செம் → செவ் → செவ்வியம்]*

**செவ்வியல்** *ševviyal*, பெ. (n.) மரபு வழிப்பட்ட சிறந்த கலை அல்லது இலக்கியம்; classicalism.

*[செம் → செவ் → செவ்வியல்]*

**செவ்வியன்** *ševviyan*, பெ. (n.) நேர்மையானவன்; good, upright perrson, virtuous man a family man. "செவ்விய ரல்லார் செவிகொடுத்துங் கேட்கலார்" (நாலடி., 322).

*[செம் → செவ் → செவ்வியன்]*

**செவ்வியான்** *ševviyān*, பெ. (n.) செவ்வியன் பார்க்க; see *ševviyan*. "செவ்வியான் கேடும்" (குறள், 169).

*[செம் → செவ் → செவ்வியன் → செவ்வியான்]*

**செவ்வியோன்** *ševviyōn*, பெ. (n.) செவ்வியன் பார்க்க; see *ševviyan*. "செவ்வியோர்க் களித்தலும்" (புறநா. 29:9).

*[செவ்வியன் → செவ்வியோன்]*

**செவ்வியைபு** *šev-v-iyaibu*, பெ. (n.) யாப்பிலக்கண நெறி (விதி)களுள் ஒன்று; a grammatical point in composing poems.

*[செம் → செவ் + இயைபு]*

**செவ்விரியன்** *šev-viriyaṉ*, பெ. (n.) சிவப்பு விரியன் பாம்பு; red viper snake.

*[செம் → செவ் + விரியன்]*

**செவ்விருக்கைநாடு** *šev-virukkai-nāḍu*, பெ. (n.) ஆழ்வார்திருநகரிக்கு அருகிலிருந்த பழைய நாட்டுப் பெயர்; name of small country near Aḻvār-dirunagari. "செவ்விருக்கை நாட்டு சக்கரபாணி நல்லூர்" (தெ.க.தொ. 26, கல். 492-4).

*[செம் → செவ் + இருக்கை + நாடு]*

**செவ்விரும்பகக்களிமண்** *šev-v-irumbaga-k kaḷimaṇ*, பெ. (n.) செந்நிற இரும்புக் களிமண் கலந்த மண்; laterite.

*[செம் → செவ் + இரும்பக + களிமண்]*

**செவ்விருள்** *šev-v-iruḷ*, பெ. (n.) சிவப்பு இருள மரம்; a red variety tree.

*[செம் → செவ் + இருள்]*

**செவ்விலைக்கள்ளி** *šev-v-ilai-kaḷḷi*, பெ. (n.) சிவப்பு இலைக்கள்ளி; a kind of milk hedge with red leaves used for rejuvenation.

*[செம் → செவ் + இலை + கள்ளி]*

**செவ்விழிநோய்** *šev-viḻi-nōi*, பெ. (n.) கண் சிவந்து காணும் கண்நோய்; redness of the eye disease.

*[செம் → செவ் + விழிநோய்]*

**செவ்விளகி** *šev-viḷagi*, பெ. (n.) செவ்விறகி (வின்.) பார்க்க; see *šev-v-iṟagi*.

**செவ்விளநீர்** *šev-v-iḷanīr*, பெ. (n.) செந்தெங்கின் இளங்காய்; tender coconut of red or yellow colour. "செவ்விள நீருந் தேர்வென்" (கம்பரா. நாடவிட்ட 43).

க. கெம் பெளநீர்

*[செம் → செவ் + இளநீர்]*

**செவ்விளிம்பன்** *šev-viḷimbaṉ*, பெ. (n.) சிவக்கத் தோய்ந்த விளிம்பினையுடைய ஆடை (வீரசோ.தொகை.8), சிவப்புக் கரையினை யுடைய ஆடை; red-bordered cloth.

*[செவ் + விளிம்பன்]*

**செவ்விளை** *šev-v-iḷai*, பெ. (n.) செவ்விளநீர் பார்க்க; see *šev-v-iḷanīr*.

**செவ்விளைக்கெவுளி** *ševviḷai-k-kevuḷi*, பெ. (n.) உட்புறம் சிவந்தும் வெளிப்புறம் வெளுத்தும் உள்ள காய்களைக் கொண்ட தென்னை வகை; a kind of coconut tree which yields nuts of white in outter portion and red in inner portion.

*[செவ்விளை + கெவுளி]*

**செவ்விறகி** *šev-v-iṟagi*, பெ. (n.) கழுதைவண்டு (வின்.); a kind of large beetle.

*[செம் → செவ் + இறகி. இறகு → இறகி]*

**செவ்விறகுக்கொண்டைக்குயில்** *šev-v-iṟagu-k-koṇḍai-k-kuyil*, பெ. (n.) செம்பழுப்பு நிற இறக்கைகளையுடையதும், தலையில் கொண்டை போன்ற அமைப்பை யுடையதுமான பறவை; red-winged crested cuckoo.

*[செவ்விறகு + கொண்டைக்குயில்]*

இது சுடலைக் குயிலைப் போன்ற தோற்றம் உடையது. முதுகு பளபளப்பான கருப்பு நிறத்துடனும் மேவாய், தொண்டை, மேல் மார்பு ஆகியன துருச் சிவப்பு நிறத்துடனு:ம காணப்படும்.

**செவ்வினையாளர்** *šev-viṉai-y-āḷar*, பெ. (n.) நற்செய்கை யுடையோர்; men of virtuous deeds. "செவ்வினையாளர் சேரார் நம்பதிக்கு" (பெருங். உஞ்சைக் 49:52).

*[செம் → செவ் + வினையாளர்]*

**செவ்வு**[1] *ševvu*, பெ. (n.) 1. செம்மை (யாழ்.அக.); redness. 2. நேர்மை; straightness. "ஆருயிர் செவ்விராது" (கம்பரா. காட்சி.29). 3. திக்கு; direction. இந்தச் செவ்வுக்குப் போனால் கோயிலைக் காணலாம் (நாஞ்.).

ம. செவ்வு; க. சுய், செய், செய்; தெ. சசி; து. சச்சி

*[செம் → செவ் → செவ்வு]*

**செவ்வு**[2] *ševvu*, பெ. (n.) முத்துக்களின் அளவு வகை; a unit in counting pearls.

*[செம் → செவ் → செவ்வு]*

**செவ்வெண்** *šev-v-eṇ*, பெ. (n.) பெயர் வினைகளுள் எண்ணிடைச் சொல் தொக்கு வருந்தொடர்; noun or verbs used co-ordinately in a sentence without conjunctive particles. "பெயர்க்குரி மரபிற் செவ்வெ ணிறுதியும்" (தொல்.சொல்.290).

[செம் → செவ் + எண்]

**செவ்வெண்ணெய்** *šev-v-eṇṇey*, பெ. (n.) பிறந்தவுடன் குழந்தையின் வாயில் தடவும் தேன் அல்லது சருக்கரை கலந்த ஆமணக் கெண்ணெய்; castor oil, sweetened with honey or cane-sugar and applied to the tongue and lips of an infant, at birth.

[செம் → செவ் + எண்ணெய்]

**செவ்வெருக்கு** *šev-v-erukku*, பெ. (n.) சிவப்புப் பூப்பூக்கும் மலையெருக்கு; mountain mader yielding red flower.

[செம் → செவ் + எருக்கு]

**செவ்வெலி** *šev-v-eli*, பெ. (n.) சிவப்பு நிறமுடைய எலி வகை; antelope rat.

[செம் → செவ் + எலி]

**செவ்வெள்ளையிறுங்கு** *šev-veḷḷai-y-iṟuṅgu*, பெ. (n.) சோள வகை (விவசாய. 3); a kind of mazie.

[செம் → செவ் + வெள்ளை + இறுங்கு. இறுங்கு = சோளம்]

**செவ்வே** *ševve*, கு.வி.எ. (adv.) 1. நன்றாக; rightly, correctly. "செவ்வே நெஞ்சா னினைப்பரிதால்" (திருவிருத். 98). 2. நேரே; directly, straightly. "செவ்வே பாரிற்செல்கின்ற வறுமையை நோக்கினன்" (கம்பரா. முதற்போர். 216). 3. நிலைக்குத்தாக; perpendicularly, straight up. "நீறு செவ்வே யிடக்காணில்" (திவ். திருவாய்.4.4:7).

ம. செவ்வே

[செம் → செவ் → செவ்வே]

**செவ்வேள்** *šev-vēḷ*, பெ. (n.) முருகக்கடவுள்; god Murugan. "வென்றிச் செவ்வேள் வேலன் பாணியும்" (சிலப். 25:25).

[செம் → செவ் → செவ்வேள்]

**செவ்வை** *ševvai*, பெ. (n.) 1. நேர்மை; correctness, straightness. "தேமொழி யுரைத்தது செவ்வை நன்மொழி" (சிலப்.வழக். 68). 2. மிகுதி; abundance. செவ்வையாய்க் கொடுத்தான். 3. வழி முதலியவற்றின் செப்பம்; evenness, smoothness, "அந்த வழி செவ்வையாக உள்ளது. 4. சரியான நிலை; sound condition, as of mind, body, etc., அவனுக்கு உடம்பு செவ்வையில்லை. 5. சீர்மை, சிறப்பு; proper manner or order. ஒவ்வொன்றையும் தனித்தனியாக விளக்கினார்.

ம. செவ்வ

[செம் → செவ் → செவ்வை]

ševv-ei, equal, level, correct; base šev or še. A nasalised, adjectival form of the same root is šen- e.g., šen-Damiḻ, correct Tamiḻ, the classical dialect of the Tamil language. From še, šev, or šen. is formed šemme-ei (šem-mei), an abstract of the same meaning as sevvei. Comp. Heb. šhāvāh; Chald. shevā (biliteral base shav) or shev to be equal, to be level. If the Sanskrit sama, even is at all connected with Tamil šev or šen, the connnection is remote; whereas the Tamiḻ and the Hebrew words seem to be atmost identical (CGDFL. 608).

**செவ்வைக்கேடு** *ševvai-k-kēḍu*, பெ. (n.) ஒழுங்கீனம்; unrighteous conduct. "அவன் செவ்வைக்கேட்டுக்கு ஈடாகத் தானுஞ் செவ்வைக் கேடனாய்க் கொண்டபடி" (ஈடு, 4. 8:6).

[செவ்வை + கேடு]

**செவ்வைச்சூடுவார்** *ševvai-c-cūḍuvār*, பெ. (n.) ஆரியப்பப்புலவரால் இயற்றப்பட்டதாகத் தவறி வழங்கும் தமிழ்த் தொன்மம் (பாகவத புராணம்) பாடியவரும், இராமநாதபுரம் மாவட்டம் வேம்பத்தூரில் வாழ்ந்தவருமான புலவர்; a native of Vēmbattūr in Ramnad District, author of the Tamil Bāgavadam, wrongly ascribed to a fictitous poet Āriyappa-p-pulavar.

**செவ்வைப்பூசல்** *ševvai-p-pūšal*, பெ. (n.) அறப்போர்; righteous warfare. "வழியல்லா வழியிலே இளைப்பிக்கை யன்றிக்கே செவ்வைப் பூசல் செய்து இளைப்பித்த படி' (ஈடு,7.4:1).

[செவ்வை + பூசல்]

**செவ-த்தல்** *ševa-*, 3 செ.கு.வி. (v.i.) *சிவத்தல்; செந்நிறமாதல்;* redden, to be red.

*[சிவ → செவ-.]*

**செவகி** *ševagi*, பெ. (n.) *நிலக்குமிழ்;* small Cashmere tree.

**செவணை** *ševaṇai*, பெ. (n.) செவிடு (இவ.); deafness.

*[செவி + அணை]*

**செவத்தம்** *ševattam*, பெ. (n.) ஒருவகை *முருங்கை மரம்;* a kind of moringa tree.

**செவந்தரை** *ševandarai*, பெ. (n.) துலை (ஐப்பசி), நளி (கார்த்திகை) சிலை (மார்கழி) மாதங்கள் ஒன்றில் கோலாட்டத்துடன் இளம் பெண்கள் கொண்டாடும் ஒரு *விழா;* a festival celebrated by girls with kōlāṭṭam.

**செவந்தன்** *ševandaṉ*, பெ. (n.) *பூவன் வாழை;* a kind of plantain tree.

*[செம் → செவ் → செவ → செவந்தன்]*

**செவந்தி** *ševandi*, பெ. (n.) செவ்வந்தி பார்க்க; see *ševvandi.*

ம. செவ்வந்தி; க. சேவந்தி; தெ. சேமந்தி.

*[செம் → செவ் + அந்தி - செவ்வந்தி → செவந்தி]*

த. செவந்தி → Skt. šēvatī

**செவரியாடு** *ševari-y-āḍu*, பெ. (n.) செவ்வரியாடு பார்க்க; see *ševvari-y-āḍu.*

*[செவ்வரியாடு → செவரியாடு]*

**செவல்** *ševal*, பெ. (n.) 1. *சிவலை;* ruddy person or animal. 2. *செம்மண் நிலம்;* soil of light red colour. செவனிலம்.

*[செம் → செவ் → செவல்]*

**செவல்காடு** *ševal-kāḍu*, பெ. (n.) *செம்மண் நிலம்;* red soil. கடலை விளைச்சலுக்கு செவல்காடு சிறந்தது *(உ.வ.).*

மறுவ. செவ்வல், செவல்தரை, செம்மண் (பூமி) நிலம்.

*[செவல் + காடு]*

**செவல்தரை** *ševal-tarai*, பெ. (n.) செம்மண் *நிலம்;* red soil.

மறுவ. செவல்காடு, செவ்வல்

*[செவல் + தரை]*

**செவலை** *ševalai*, பெ. (n.) 1. *செந்நிறமான விலங்கு;* reddish animal, as a bull. செவலைக்காளை. 2. *சிவப்பான ஆள்;* person of light complexion. 3. *சிவப்பு நிறமுள்ளது;* that which is red.

*[சிவலை → செவலை]*

**செவி**[1] *ševi*, பெ. (n.) (ஒலி முதலியவற்றை) கேட்பதற்குப் பயன்படும் உடல் உறுப்பு; ear. "ஐந்தறி வதுவே யவற்றொடு செவியே" *(தொல். பொருள். 582)* செவிகிழிவது போல ஓசை வருகிறது. 2. கேட்கை; hearing. 3. ஏனத்தின் காது வளையம்; ear shaped handle of a vessel. "விழுத்தகு மணிச் செவி . . . படியகம்" *(சீவக. 2472).* 4. வீணையின் *முறுக்காணி;* the screw of a lute.

மறுவ. காது

ம. செவி; க. கிவி, கிமி; தெ. செவி; து. கெபி; கோத. கெவ்; துட. கிவ்ய்; குட. கெவின்; கோண். கவீ; கூ. க்ரிள; நா. கெவ்; பர். கொகொன்; குரு. கெம்தா; மா. க்வெத்வு; பிரா. கப்; பட. கிவி

ševi, Tam; chevi. Mal. - Tel., the ear; Can. kivi, Tulu keppi. Comp. šrava, the ear, Sans., from šru, to hear (CGDFL. 584).

*[செவின் → செவி.]*

**செவி**[2] *ševi*, பெ. (n.) ஒருவிரல *மழை;* a unit of rainfall one inch.

**செவிக்கட்டி** *ševi-k-katti*, பெ. (n.) காதில் உண்டாகும் அழற்சி; abscess or boil of the ear.

*[செவி + கட்டி]*

**செவிக்கரப்பன்** *ševi-k-karappaṉ*, பெ. (n.) காதிலுண்டாகும் கரப்பான் நோய்; eczema of the ear.

*[செவி + கரப்பான்]*

**செவிக்காயம்** *ševi-k-kāyam*, பெ. (n.) காதுக் குறும்பி (இவ.); ear wax.

மறுவ. காதுப்பீ, காதழுக்கு

*[செவி + காயம். காயம் = செறிவான அழுக்கு]*

**செவிக்குத்து** *ševi-k-kuttu*, பெ. (n.) காது நோவு; ear-ache.

ம. செவிக்குத்து.

*[செவி + குத்து]*

**செவிக்குழல்** *ševi-k-kuḻal*, பெ. (n.) *செவிக்குள் வழி;* ear cavity.

*[செவி + குழல்]*

**செவிக்குழி** *ševi-k-kuḻi*, பெ. (n.) *காதினுட் பக்கமுள்ள பள்ளம்;* labyrinth of the ear.

*[செவி + குழி]*

**செவிக்குறடு** *ševi-k-kuṟaḍu*, பெ. (n.) *காதிற்குள் செலுத்துங்கருவி;* ear forceps for extracting foreign bodies.

*[செவி + குறடு]*

**செவிக்கெட்டு-தல்** *ševikkeṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) *கேள்வியிற்படுதல்;* to reach one's ears.

*[செவி(க்கு) + எட்டு-.]*

**செவிக்கேறு-தல்** *šhevikkēṟu-*, 5 செ.கு.வி. (v.i.) *1. கேள்வியிற்படுதல் (யாழ்அக.);* to reach one's ears. *2. கேட்டற் கினிதாயிருத்தல் (இ.வ.);* to be pleasing to one's ears. புலவர் பேச்சை அவன் செவிக் கேற்றினான் *(உ.வ.).*

*[செவி(க்கு) + ஏறு-.]*

**செவிகடி-த்தல்** *ševi-kaḍi-*, 4 செ.குன்றாவி. (v.t.) செவிதின்னு- பார்க்க; see *ševi-diṉṉu-.*

*[செவி + கடி-.]*

**செவிகொடு-த்தல்** *ševi-koḍu-*, 4 செ.கு.வி. (v.i.) *கேட்டற்குக் காது கொடுத்தல்;* to give ear, attend, listen. "செவி கொடுத்துங் கேட்கலார்" *(நாலடி, 322).* ஆசிரியரின் உரைக்குச் செவி கொடுக்க வேண்டும் *(உ.வ.).*

ம. செவிகொடுக்க

*[செவி + கொடு-.]*

**செவிகொள்(ளு)-தல்** *ševi-koḷ-*, 13 செ.குன்றாவி. (v.t.) *1. கேட்டல்;* to hear, listen to. "கட்டுரை .. செவிகொளா" *(நீதிநெறி, 31).* பெரியோர் சொல்லைச் செவி கொள்ள வேண்டும் *(உ.வ.).*

*[செவி + கொள்-.]*

**செவிச்சுவை** *ševi-c-cuvai*, பெ. (n.) *செவியால் நுகரப்படும் இருவகைச் சுவை;* two kinds of pleasure heard by the ear.

*[செவி + சுவை]*

*'செவியால் நுகரப்படும் சுவைகளாவன': சொற்சுவையும், பொருட்சுவையும். அவற்றுள் சொற்சுவை குணம், ஒப்பனை (அலங்காரம்) என இரு வகைத்து. பொருட்சுவை காமம், நகை, இரக்கம், வீரம், உருத்திரம், அச்சம், இழிப்பு, வியப்பு, அமைதி என ஒன்பது வகைத்து' (குறள், 420 உரை.).*

**செவிச்செல்வம்** *ševi-c-celvam*, பெ. (n.) *கேள்வியறிவாகிய பெருஞ்செல்வம்;* the wealth of knowledge acquired through the ear. "செல்வத்துட் செல்வஞ் செவிச் செல்வம்" *(குறள், 411).*

*[செவி + செல்வம்]*

**செவிச்சொல்** *ševi-c-col*, பெ. (n.) *காதில் கமுக்கமாக (இரகசியமாக) ஓதுகை;* whispering.

*[செவி + சொல்]*

**செவிசாய்-த்தல்** *ševi-šāy-*, 4 செ.கு.வி. (v.i.) *1. சொல்வதைக் கேட்கச் செவி தாழ்த்தல்;* to incline one's ear. "இகுத்த செவி சாய்த் தினியிளிப் பட்டன" *(கலித். 95).* தொழிலாளர்களின் கோரிக்கைக்கு நிருவாகம் செவி சாய்க்க மறுக்கிறது. *2. விருப்பமுடன் கேட்டல்;* hearing with interest. பெரியோர் கூற்றுக்குச் செவி சாய்க்கவேண்டும் *(உ.வ.).*

*[செவி + சாய்-.]*

**செவிட்டாம்பாம்பு** *ševiṭṭām-bāmbu*, பெ. (n.) செவியான் பார்க்க; see *ševiyāṉ.*

*[செவிடு → செவிட்டான் + பாம்பு]*

**செவிட்டு[1]-தல்** *ševiṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) *கொல்லுதல் (பிங்.);* to crush, destroy, kill.

மறுவ. கோறல், சாகடித்தல்

*[சவட்டு → செவிட்டு-.]*

**செவிட்டு[2]-தல்** *ševiṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) *கூர்ந்து நோக்குதற்குக் கண் முதலியவற்றை ஒரு பக்கமாகச் சாய்த்தல்;* to incline to one side, as one's eyes in examining closely. "விசயனென்பான் வெங்கணை செவிட்டி நோக்கி" *(சீவக. 2191).*

மறுவ. தலை சாய்த்தல், சிறக்கணித்துக் கேட்டல்.

*[சாய் → சார் → சார்த்து → சாட்டு → செவிட்டு-.]*

**செவிட்டு**[3] *ševiṭṭu-*, பெ. (n.) *கன்னம்;* cheek.

*[செவிடு → செவிட்டு]*

**செவிட்டுப்பயல்** *ševiṭṭu-p-payal*, பெ. (n.) செவிடன் *பார்க்க;* see *ševiḍaṉ.*

*[செவிடு + பயல்]*

**செவிட்டுவிரியன்** *ševiṭṭu-viriyaṉ*, பெ. (n.) *விரியன் பாம்புவகை;* russell's viper.

*[செவிடு + விரியன்]*

**செவிடன்** *ševiḍaṉ*, பெ. (n.) *காது கேளாதவன்* (திவா.); deaf man.

ம. செவிடன், செகிடன்; தெ. செவிடி; க., பட. கிவட்; கோத. கெவ்டன்; கொலா. செவட்க்

*[செவிடு + அன்]*

**செவிடி** *ševiḍi*, பெ. (n.) *காது கேளாதவள்;* deaf woman.

க. கிவுடி; பட. கிவடி

*[செவிடன் → செவிடி]*

**செவிடு**[1] *ševiḍu*, பெ. (n.) *1. கேட்கும் திறன் இல்லாமை, காது கேளாமை;* deafness. "செவிடா யொழிகென் செவி" *(பு.வெ. சிறப்.3).* விபத்தில் அவனுக்குக் காது செவிடாகி விட்டது. *2. காது கேளாதவன்-வள்-து;* deaf person or animal. "கூனுங் குறளு மூமுஞ் செவிடும்" *(மணிமே. 12:97).* சத்தமாகச் சொல்ல வேண்டாம், நான் ஒன்றும் செவிடு இல்லை.

ம. செவிடு, செகிடு; க., பட. கிவடு

*[செவி → செவிடு]*

**செவிடு**[2] *ševiḍu*, பெ. (n.) *1. செவியை ஒட்டிய கன்னம்;* cheek. உன் செவிட்டிலே அடிப்பேன் *(இ.வ.). 2. காதணி வகை;* an ear-ornament.

*[செகிள் → செவிள் → செவிடு]*

**செவிடு**[3] *ševiḍu*, பெ. (n.) *ஆழாக்கில் ஐந்தில் ஒன்றாகிய அளவு* (தொல். எழுத்து. 165, உரை); a small measure consisting of 360 grains of paddy = 1/5 ollock. "மிளகமுது இரண்டரைச் செவிடும்" *(தெ.க.தெ¡. 154).*

ம. செவிடு

*[சவடு → செவிடு. சவடு = அளவு]*

**செவிடுசெல்(லு)-தல்** *ševiḍu-šel-*, 13 செ.குவி. (v.i.) செவிடுபடு- *பார்க்க;* see *ševiḍu-paḍu-.* "செவிடுசெல்லக் கிழிந்தன திசைகள்" *(கம்பரா. நாகபாச. 104).*

*[செவிடு + செல்(லு)-.]*

**செவிடுபடு-தல்** *ševiḍu-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) *1. ஓசை மிகுதியால் காது கேளாது போதல்;* to be deafened with noise. "செவி செவிடுபடுபு முடிக ளதிர" *(பரிபா.2:39). 2.* **செவிடெறி-** *பார்க்க;* see *ševiḍeṟi-.*

தெ. செவுடுபடு.

*[செவிடு + படு-.]*

**செவிடெறி-தல்** *ševiḍeṟi-*, 2 செ.கு.வி. (v.i.) *உரத்த வோசையால் அலைவுறுதல்;* to be stunned with deafening noise. "திசைகளோடு மலை செவி டெறிந்து" *(கம்பரா. நாகபாச. 61).*

*[செவிடு + எறி-.]*

**செவித்துறண்டி** *ševi-t-tuṟaṇḍi*, பெ. (n.) குறும்பி வாங்கி (இ.வ.); ear-pick.

ம. செவித்தோண்டி

*[செவி + துறண்டி]*

**செவிதின்(னு)-தல்** *ševi-diṉṉu-*, 14 செ.குன்றாவி. (v.t.) *கமுக்கமாக (இரகசியமாக) ஓதுதல்* (வின்.); to whisper.

*[செவி + தின்-.]*

**செவிநிறக்கல்** *ševi-niṟa-k-kal*, பெ. (n.) *மாந்தளிர்க்கல்* (வின்.); a stone.

*[செவ்வி → செவி + நிறக்கல்]*

**செவிப்படு-தல்** *ševi-p-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) *கேட்கப்படுதல்;* to be heard. "ஆபரண வொலி செவிப்படா நின்றது" *(ஈடு, 10. 6:6, வியா. பக். 200).*

*[செவி + படு-.]*

**செவிப்படுத்து-தல்** *ševi-p-paḍuttu-*, 5 செ.குன்றாவி. (v.t.) *காதில் மெல்ல அறிவித்தல்;* to inform, as news.

*[செவி + படுத்து-.]*

**செவிப்பண்** *ševi-p-paṇ*, பெ. (n.) *நீர்க்கரகத்தை அடக்கி வைக்கப் பயன்படும் பிரம்புக் கூடை* (வின்.); a cane basket for keeping water-ewer.

*[செவ்வி → செவி + பண்]*

**செவிப்பறை** *śevi-p-paṟai*, பெ. (n.) உட்பகுதியில் ஒலியை உணர்வதற்காக இருக்கும் மெல்லிய தோலாலான உறுப்பு; eardrum.

*[செவி + பறை.]*

**செவிப்பறைபறை-தல்** *śevi-p-paṟai-paṟai-*, செ.குன்றாவி. (v.t.) மந்திர முதலியவற்றைப் பிறர் செவியிற்படாது கமுக்கமாக (இரகசியமாக) ஒதுதல்; to mutter inaudibly, as mantras. 'செவிப்பறை பறைந்து ஜபிக்கிறது என்ப' (ஈடு, 3. 5:5.).

*[செவிப்பறை + பறை-.]*

**செவிப்பாடு**[1] *śevi-p-pāḍu*, பெ. (n.) காதிற் புகுகை (ஈடு, 9. 9:1); entering the ear.

*[செவி + பாடு]*

**செவிப்பாடு**[2] *śevi-p-pāḍu*, பெ. (n.) கேள்வி யின்பம்; harmony, as of music. 'இசைக்கு எவ்வளவு செவிப்பாடுண்டு அவ்வளவும் பாதகமாம்' (ஈடு, 9. 9:1).

*[செவ்வி + பாடு.]*

**செவிப்பாம்பு**[1] *śevi-p-pāmbu*, பெ. (n.) செவியான் (இ.வ.) பார்க்க; see *śeviyāṉ*.

ம. செவிப்பாம்பு

*[செவி + பாம்பு]*

**செவிப்பாம்பு**[2] *śevi-p-pāmbu*, பெ. (n.) மாட்டுக் குற்றவகை (பெரிய மாட். 20); a blemish in cattle.

**செவிப்புலன்** *śevi-p-pulaṉ*, பெ. (n.) காதாலுணரும் ஓசையுணர்வு; sense of hearing.

*[செவி + புலன்]*

**செவிப்புற்று** *śevi-p-puṟṟu*, பெ. (n.) காதுநோய் வகை (வின்.); a kind of eruption about the ears.

*[செவி + புற்று]*

**செவிப்பூ** *śevi-p-pū*, பெ. (n.) மகளிர் காதணி வகை; an ear-ornament of women. "தோடே செவிப்பூவே" (திவ். திருப்பா. 27).

*[செவி + பூ]*

**செவிப்பூரான்** *śevi-p-pūrāṉ*, பெ. (n.) செவியான் (வின்.) பார்க்க; see *śeviyāṉ*.

ம. செவிப்பூரம்

*[செவி + பூரான்]*

**செவிபடுவாதம்** *śevi-paḍu-vādam*, பெ. (n.) காது கேளாமற் போகச் செய்யும் நோய் வகை (வின்.); disease of the ear causing deafness.

*[செவி + படு + வாதம்]*

**செவிபிடி-த்தல்** *śevi-p-piḍi-*, 4 செ.குன்றாவி. (v.t.) விளையாட்டில் வெற்றிக் குறியாகத் தோற்றவன் காதைப்பிடித்தல் (வின்.); to seize one by the ear in token of winning, as in games.

*[செவி + பிடி-.]*

**செவிமடல்** *śevi-maḍal*, பெ. (n.) காதின் வெளி யுறுப்பு; external ear. திருடன் அவள் செவிமடலோடு நகையை அறுத்துக் கொண்டு போய் விட்டான். 2. செவிமலர் (இ.வ.) பார்க்க; see *śevi-malar*.

*[செவி + மடல்]*

**செவிமடு-த்தல்** *śevi-maḍu-*, 4 செ.குன்றாவி. (v.t.) கேட்டல்; to drink in by the ears, hear. "மாருதி வினய வார்த்தை செவிமடுத் தமிழ்தின் மாந்தி" (கம்பரா. விபீடண. 106). அந்த இனிய பாடலைக் கொஞ்சம் செவிமடுத்துக் கேள்.

*[செவி + மடு-.]*

**செவிமத்திபம்** *śevi-mattibam*, பெ. (n.) செவி மந்தம் (இவ.) பார்க்க; see *śevi-mandam*.

*[செவி + மத்திபம்]*

**செவிமந்தம்** *śevi-mandam*, பெ. (n.) காதுமந்தம் (யாழ்.அக.); dullness of hearing, deafness.

*[செவி + மந்தம்]*

**செவிமலர்**[1] *śevi-malar*, பெ. (n.) 1. மகளிர் காதணி வகை (சூடா.); an ear-ornament of women. 2. தெய்வத்திருமேனிகளில் அணிவிக்கும் செவியணி; gold or silver ears put on idols on special occasions. 3. காதுநோய் நீங்கியது பற்றி வேண்டுதலாகச் செலுத்தும் செவியுருவம்; gold or silver ears presented as votive offerings by persons recovering from diseases of the ear.

*[செவி + மலர்]*

**செவிமலர்**[2] *śevi-malar*, பெ. (n.) உட்செவி (நெல்லை.); inner ear.

*[செவி + மலர்]*

**செவிமலர்ப்பூ** *ševi-malar-p-pū,* பெ. (n.) *மகளிர் காதணி வகை;* an ear-ornament of women.

*[செவி + மலர்ப்பூ]*

**செவிமறை** *ševi-maṟai,* பெ. (n.) *செவியில் மறுவையுடைய எருது;* bull having a spot in its ears. "செவிமறை ... நுண்பொறி வெள்ளை" *(கலித். 101).*

*[செவி + மறை]*

**செவிமாட்டு-தல்** *ševi-māṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *பிறர் காதில் வலிய நுழைத்தல்;* to force into one's ear. *"கற்றன கல்லார் செவி மாட்டி" (நீதிநெறி. 25).*

*[செவி + மாட்டு-.]*

**செவியடி[1]-த்தல்** *ševi-y-aḍi-,* 4 செ.கு.வி. (v.i.) *செவியினை ஆட்டுதல் (வின்.);* to flap the ears, as an elephant.

*[செவி + அடி-.]*

**செவியடி[2]** *ševi-y-aḍi,* பெ. (n.) *1. காதின் அடிப்பகுதி;* temple, the part about the front of the ear. "கண்டிடுஞ் செவியடிப்பேர் சூளிகை" *(சூடா. 3:8). 2. களத்தில் கதிரடித்தவுடன் நெற்பட்டரை வைத்திருந்த இடம் (தஞ்சை.);* place where grain is temporarily stored on the threshing-floor immediately after it is threshed.

*[செவி + அடி]*

**செவியம்[1]** *ševiyam,* பெ. (n.) *செவ்வியம் (வின்.) பார்க்க;* see *ševviyam.*

ம. செவ்வியம்

*[செவ்வியம் → செவியம்]*

**செவியம்[2]** *ševiyam,* பெ. (n.) *செவி;* ear.

*[செவி → செவியம்]*

**செவியறிவு** *ševi-y-aṟivu,* பெ. (n.) *செவியறிவுறூஉ பார்க்க;* see *ševi-y-aṟivuṟūu.* "ஒண்பாச் செவியறி வென்றிப் பொருண்மிசை" *(காரிகை. செய். 15).*

*[செவி + அறிவு]*

**செவியறிவுறுத்து-தல்** *ševi-y-aṟivuruttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *நல்லறிவு புகட்டுதல்;* to give active, counsel. "மந்திரத்தை நல்கி . . . செவியறிவுறுத்தல் செய்தான்" *(கந்தபு. அசுரர்யாக.33).*

*[செவியறிவு + உறுத்து-.]*

**செவியறிவுறூஉ** *ševi-y-aṟivuṟūu,* பெ. (n.) *1. அரசர் முதலியோர்க்குச் செவிக்கண் நிற்கக் கூறும் அறம்;* instruction in the path of virtue, given to kings, etc. "வாயுறை வாழ்த்தே செவியறிவுறூஉ" *(தொல். பொருள். 423). 2. அரசர்க்கு நல்லறிவு புகட்டுதலைக் கூறும் புறத்துறை (பு.வெ. 9:33);* theme of instructing the king in the path of virtue. 3. *செவியறிவுறூஉ மருட்பா* (தொன். 283) *பார்க்க;* see *ševi-y-aṟi-v-uṟūu-maruṭ-pā.*

*[செவியறிவு + உறூஉ]*

**செவியறிவுறூஉமருட்பா** *ševi-y-aṟiv-uṟūu-maruṭ-pā,* பெ. (n.) *அரசர்க்கு அறமுறைகளைக் கூறுவதும் மருட்பாவால் அமைந்ததுமாகிய ஒரு சிற்றிலக்கிய வகை (காரிகை, செய். 15, உரை);* a kind of poem in maruṭpā metre instructing the king in the path of virtue.

*[செவியறிவு + உறூஉ + மருட்பா]*

**செவியறை** *ševi-y-aṟai,* பெ. (n.) *1. காது அறுபட்டவன் (நன். 139, மயிலை);* one whose ear has been cut off or mutilated. *2. காது கேளாதவன் (வின்.);* a deaf person.

மறுவ. செவிடன்

*[செவி + அறை. அறு → அறை]*

ஒ.நோ. கண்ணறை, மூக்கறை

**செவியன்** *ševi-yaṉ,* பெ. (n.) *நீண்ட செவியுடைய முயல் (நாஞ்.);* hare.

*[செவி → செவியன்]*

**செவியான்** *ševiyāṉ,* பெ. (n.) *காதுக்குள் புகுந்து துன்புறுத்தும் சிறு பூரான் வகை;* a kind of small centipede believed to get into the ears and cause pain.

*[செவி → செவியான்]*

**செவியிலி** *ševi-y-ili,* பெ. (n.) *செவியறை (நன். 283, மயிலை.) பார்க்க;* see *ševi-y-aṟai.*

*[செவி + இலி. ஒ.நோ. கண்ணிலி]*

**செவியுறு-தல்** *ševi-y-uṟu-,* 4 செ.குன்றாவி. (v.t.) *கேட்டல், காதுகொடுத்துக் கேட்டல்;* to hear, listen to. "யாது மொன்று செவியுற்றிலார்" *(கம்பரா. நாகபாச. 68).*

வ. ச்ரு

*[செவி + உறு-.]*

**செவியுறை** *ševi-y-uṟai*, பெ. (n.) 1. *காதுக்கிடும் மருந்து;* medicine for the ear. 2. *அரசர் முதலியோர்க்குச் செவிக்கண் நிற்கக்கூறும் அறம் (நீதி);* instruction in the path of virtue, given to kings etc. "செவியுறை தானே, பொங்குதலின்றிப் புரையோர் நாப்ப, ணவிதல் கடனெனச் செவியுறுத் தன்றே" *(தொல்.பொருள். 426).*

*[செவி + உறை]*

**செவியுறையங்கதம்** *ševi-y-uṟai-y-aṅgadam,* பெ. (n.) *அரசர்க்கு உறுதி கூறும் நோக்குடன் அறிஞர் கூறும் வசைச் செய்யுள் (தொல். பொருள். 440, உரை);* a kind of derisive verse reproving a king for his faults with a view to reclaiming him to a sense of his duty.

*[செவியுறை + அங்கதம்]*

**செவியேறு** *ševi-y-ēṟu,* பெ. (n.) *கேள்வி;* hearsay. 'அவன் சொல்லக் கேட்ட செவியேற்றாலே சொல்லுகிறாளிறே' *(ஈடு, 10. 3:1).*

*[செவி + ஏறு]*

**செவிரம்** *ševiram,* பெ. (n.) *ஒரு வகைப் பாசி (திவா.);* a class of aquatic plant.

**செவிலி**[1] *ševili,* பெ. (n.) 1. செவிலித்தாய் பார்க்க; see *ševili-t-tāy.* "தாயெனப் படுவோள் செவிலி யாகும்" *(தொல். பொருள் 124).* 2. *முன்பிறந்தாள் (பிங்.);* elder sister.

**செவிலி**[2] *ševili,* பெ. (n.) **நோயர்களைப் பேணுதல், மருத்துவர்க்குதவுதல் போன்ற பணிகளைச் செய்யும் ஊழியர்;** nurse. *அறுவைச் சிகிச்சையின் போது பல செவிலியர் உதவி புரிந்தனர்.*

**செவிலித்தாய்** *ševili-t-tāy,* பெ. (n.) *ஐவகைத் தாயருள் வளர்ப்புத் தாய் (பிங்.);* foster-mother, one of *ai-vagai-t-tāyar.*

*[செவிலி + தாய்]*

**செவிவழிசெய்தி** *ševi-vaḻi-šeydi,* பெ. (n.) *ஒருவர் கூற மற்றவர் கேட்பது என்ற முறையால் வழங்கிவரும் செய்தி;* that which is orally transmitted. செவிவழிச் செய்தியில் உண்மை உருமாறியிருக்கும்.

*[செவிவழி + செய்தி]*

**செவிலியர்**[1] *ševiliyar,* பெ. (n.) *குழந்தையின் வளர்ப்புத் தாயர்;* those who bring up children of rich people.

மறுவ. செவிலித்தாய்

*[செவிலி → செவிலியர்]*

**செவிலியர்**[2] *ševiliyar,* பெ. (n.) செவிலி[2] பார்க்க; see *ševili.*

மறுவ. செவிலித்தாய்

*[செவிலி → செவிலியர்]*

**செவிள்** *ševiḷ,* பெ. (n.) *காதின் மேற்புறத் துறுப்பு;* tragus.

ம. செள்ள

*[செகில் → செவிள்]*

**செவுரொட்டி** *ševur-oṭṭi,* பெ. (n.) *மண்ணீரல் (இங்வை. 42);* spleen.

*[சுவரொட்டி → செவுரொட்டி]*

**செவுள்** *ševuḷ,* பெ. (n.) *மீனின் மூச்சுறுப்பு (வின்.);* gills.

ம. செளுக்க

*[செகிள் → செவுள்]*

நீரிலுள்ள காற்றை இழுப்பதற்கு மீனுக்கு இயற்கையாகவே அமைந்த மூச்சுறுப்பு. இது அதன் கழுத்தின் இரண்டு பக்கமும் இருக்கும்.

**செவுள்சிதைவு** *ševuḷ-šidaivu,* பெ. (n.) *செவுள் சிதைவதால் வரும் நோய்;* branchial disease.

*[செவுள் + சிதைவு]*

இந்நோய் மீன்களுக்கு மட்டும் வரும்.

**செவுள்மூடி** *ševuḷ-mūḍi,* பெ. (n.) *மீனின் செவுள் பகுதிகளை மூடும் உறுப்பு;* operculum.

*[செவுள் + மூடி]*

**செவுள்வலை** *ševuḷ-valai,* பெ. (n.) *மீன் பிடிக்கும் வலைகளில் ஒன்று;* gill net.

*[செவுள் + வலை]*

**செவேரெனல்** *ševēr-eṉal,* பெ. (n.) *சிவந்திருத்தற் குறிப்பு;* expr. denoting redness.

*[செம் → செவ் → செவ்வேர் + எனல்]*

இரட்டுரையாகச் செக்கச் செவேரென்று என்ற வழக்கும் வழக்கில் உள்ளது. ஓநோ. கன்னங் கரேலென்று. பிறந்த குழந்தை, செக்கச் செவேரென்று இருந்தது. *(உ.வ.).*

**செவை** *ševai*, பெ. (n.) செவ்வை பார்க்க; see *ševvai*. 'நீ செவைக்கு வரமாட்டாய்' (வின்.).

*[செவ்வை → செவை]*

**செழி¹-த்தல்** *šeli-*, 4 செ.கு.வி. (v.i.) 1. தழைத்தல்; to thrive, flourish, grow well, as vegetation. மழைக்குப் பின் செடி நன்கு செழித்து வளர்ந்துள்ளது. 2. சிறப்புற்ற நிலையில் இருத்தல்; to prosper, as a kingdom family, country. "அடியேனுஞ் செழிக்க" (திருப்பு 218). 3. வளமிகுதல்; to be fertile. செழித்த சீமை. 4. அளவுக்கு மிஞ்சியிருத்தல் (இ.வ.); to be superabundant.

ம. செழிக்க

*[செழு → செழி-.]*

**செழி²-த்தல்** *šeli-*, 4 செ.கு.வி. (v.i.) முகமலர்ச்சியுறுதல்; to be cheerful, as countenance. செழித்தமுகமுள்ளவன்.

*[செழு → செழி-.]*

**செழி³-தல்** *šeli-*, 2 செ.கு.வி. (v.i.) வளர்தல்; to grow; to increase. "செழிகின்ற தீப்புகு விட்டிலின்" (திருவாச. 6:5).

*[செழு → செழி-.]*

**செழிச்சி** *šelicci*, பெ. (n.) செழிப்பு (வின்.) பார்க்க; see *šelippu*.

*[செழி → செழிச்சி]*

**செழிஞர்** *šeliñar*, பெ. (n.) செழியன் பார்க்க; see *šeliyan*.

*[செழியன் → செழிஞர்]*

**செழித்தகல்** *šelitta-kal*, பெ. (n.) சுக்கான்கல் (வின்.); lime-stone.

*[செழி → செழித்தல் + கல்]*

**செழிப்பம்** *šelippam*, பெ. (n.) செழிப்பு பார்க்க; see *šelippu*.

மறுவ. வளமை, செழுமை.

*[செழிப்பு → செழிப்பம்]*

**செழிப்பு** *šelippu*, பெ. (n.) 1. வளம்; fertility, flourishing, condition, prosperity. 2. பொருள் நிறைவு; plenteousness, abundance, fulness.

ம. செழிப்பு

*[செழி → செழிப்பு]*

**செழிம்பு** *šelimbu*, பெ. (n.) செழிப்பு பார்க்க; see *šelippu*.

*[செழிப்பு + செழிம்பு]*

**செழியவாணியர்** *šeliya-vāniyar*, பெ. (n.) தொண்டைமண்டலத்தில் வாழ்ந்திருந்த ஒருவகை எண்ணெய்ச் செக்கார்; a class of oil mongers who lived at Tondai-mandalam. "குன்றத்தூர் செழிய வாணியர்களோ மானோம்" (தெ.க.தொ. 12, ப-1, கல். 53).

*[செழியன் + வாணியர்]*

**செழியன்** *šeliyan*, பெ. (n.) பாண்டியன்; king of the Pāndya country. "வென்வேற் செழிய" (புறநா. 19:4).

*[செழு → செழி → செழியன். செழு = செழுமை]*

**செழு-த்தல்** *šelu-*, 4 செ.கு.வி. (v.i.) 1. மிகுதல்; to become abundant. 2. வளர்தல்; to grow. 3. செழித்தல்; to be fertile.

*[செள் → செழு-.]*

**செழுகம்** *šelugam*, பெ. (n.) அட்டை; leech. "செழுகம்போலச் சுருங்கியும் விரிந்தும்" (சி.போ.பா. 4: 2, பக்.264).

*[செழு → செழுகம்]*

**செழுகாதனம்** *šelugādanam*, பெ. (n.) ஓக வகை (தத்துவப். 109, உரை.); a yogic posture.

**செழுகை** *šelugai*, பெ. (n.) சாணளப்பான் புழு; a worm. "திரணுறுஞ் செழுகைபோல்" (சிவதரு. 8:88).

**செழுசெழு-த்தல்** *šelu-šelu*, 4 செ.கு.வி. (v.i.) மிகுவளப்பமாதல் (நன். 395, மயிலை.); to be extremely fertile.

*[செழு + செழு-.]*

**செழுஞ்சோறு** *šelu-ñ-jōru*, பெ. (n.) கொழுத்த உணவு; rich, sumptuous meal. "தீப்பசி மாக்கட்குச் செழுஞ்சோ றீத்து" (மணிமே. 18:117).

*[செழு + சோறு]*

**செழுத்து** *šeluttu*, பெ. (n.) வளமை; fertility. "செழுத்தாலதிர்த் தெழுந்து" (கோயிற்பு. பாயி. 9).

*[செழு → செழுத்து]*

**செழுது** *šeḻudu*, பெ. (n.) செழிப்பு பார்க்க; see *šeḻippu*. "செழுது மாதவி மலர்திசை மணக்க" (அருட்பா, 2, அவலத்தழு. 4).

[செழு → செழுது]

**செழுந்து** *šeḻundu*, பெ. (n.) செழிப்பு,2 பார்க்க; see *šeḻippu,2*. ஆயிரமரக்காற் செழுந்துபடச் செந்நெனி றைத்து" (சீவக. 2489).

[செழு → செழுந்து]

**செழுப்பம்** *šeḻuppam*, பெ. (n.) செழிப்பு; prosperity.

[செழு → செழுப்பு → செழுப்பம்]

**செழும்பல்** *šeḻumbal*, பெ. (n.) செழிப்பு, வளமை; fertility. 'செழும்பலான பயிர்' (வின்.).

[செழுப்பு → செழும்பு → செழும்பல்]

**செழுமறை** *šeḻumaṟai*, பெ. (n.) நெருப்பு (வின்.); fire.

**செழுமை** *šeḻumai*, பெ. (n.) 1. செழிப்பு (பிங்.); fertility. "செழுமிடற்றின் மைவந்த கோன்" (திருக்கோ. 212). 2. மாட்சிமை (பிங்.); greatness, excellence. 3. அழகு (பிங்.); beauty. 4. தழைவு (வின்.); verdancy verdure.

[செழி → செழு → செழுமை]

**செழுவர்** *šeḻuvar*, பெ. (n.) பள்ளர் வகையினர்; a sub-division of the Paḷḷar caste.

**செழுவிதின்** *šeḻuvidiṉ*, வி.எ. (adv.) செம்மையாக; correctly, fully. "செழுவிதி னுணர்த்தி" (திருக்காளத். பு. 33: 15).

[செழு → செழுவிதின்]

**செள்ளு** *šeḷḷu*, பெ. (n.) 1. தெள்ளுப் பூச்சி (வின்.); flea. 2. உண்ணிவகை; tick.

ம. செள்ளு; க. சிக்காடு; பட. சிக்கட்டு; கோத. செக்; துட. தொள்; குட. செள்ளி

[தெள்ளு → செள்ளு]

**செளிம்பன்** *šeḷimbaṉ*, பெ. (n.) சண்டித்தன முள்ளவன் (வின்.); obstinate, unruly fellow.

[செளிம்பு → செளிம்பன்]

**செளிம்பு** *šeḷimbu*, பெ. (n.) 1. களிம்பு; verdigris, rust. 2. விடாபிடி; obstinacy.

க. சிலுபு; தெ. சிலுமு

[களிம்பு → சளிம்பு → செளிம்பு]

**செளிம்பூறல்** *šeḷimbūṟal*, பெ. (n.) களிம்புப் பற்று (யாழ்ப்.); green rust on copper.

[செளிம்பு + ஊறல்]

**செளுகம்** *šeḷugam*, பெ. (n.) செழுகம் (உரி. நி.) பார்க்க; see *šeḻugam*.

[செழுகம் → செளுகம்]

**செளுகை** *šeḷugai*, பெ. (n.) செழுகம் பார்க்க; see *šeḻugam*. "செளுகையு முடலட வொருவழி யறிவிலர் செறிவார்" (சிவதரு. 7: 56).

[செழுகம் → செளுகம் → செளுகை]

**செளைப்பு** *šeḷaippu*, பெ. (n.) சோர்வு; weariness, fatigue. "செளைப்பில்லாமலே வருஞ் சேனைகளை" (இராமநா. உயுத். 78).

[சளை → செளை → செளைப்பு]

**செற்பம்** *šeṟbam*, பெ. (n.) வாய்ப்பும் (அநுகூலமும்) வாய்ப்பின்மையு (பிரதி கூலமும்)மான கருவிகள் இரண்டுமுள்ளதன் கண் வெல்லும் வேட்கையுடையோன் கதை (தருக். சங். நீலகண். 205); a form of polemical discussion, the aim of which is victory over opponents.

**செற்றம்** *šeṟṟam*, பெ. (n.) 1. மனக்காழ்ப்பு (திவா.); rancour, hatred. "செற்ற நீக்கிய மனத்தினர்" (திருமுருகு. 132). 2. வெறுப்பு; aversion. "ஆர்வமுஞ் செற்றமு நீக்கிய வச்சுதனே" (திருநூற். 20). 3. தணியாச்சினம் (பிங்.); irrepressible anger. 4. ஊடற்சினம்; love-quarrel. "செற்றமுன் புரிந்ததோர் செம்மல்" (கம்பரா. உண்டாட்டு. 30).

[செறு → செற்று → செற்றம்]

**செற்றல்** *šeṟṟal*, பெ. (n.) 1. கொல்லுகை (பிங். MSS); killing. 2. கேடு (அக.நி.); destruction. 3. செறிவு (திவா.); denseness, closeness. 4. ஈ முட்டை; eggs of fly. "புண்மேற் செற்றலேறி" (திவ். பெரியாழ். 4. 5:2).

ம. செற்றார்

[செறு → செற்று → செற்றல்]

**செற்றலர்** *šeṟṟalar*, பெ. (n.) செற்றார் பார்க்க; see *šeṟṟār*. "செற்றலரை வென்ற திருமலைராயன்" *(தனிப்பா. 1, 27:49).*

ம. செற்றலர்

*[செற்றல் → செற்றலர்]*

**செற்றவர்** *šeṟṟavar*, பெ. (n.) செற்றார் பார்க்க; see *šeṟṟār*. "செற்றவர் புரங்கண் மூன்றுந் தீயெழச் செறுவர் போலும்" *(தேவா. 476:3).*

*[செறு → செற்றவர்]*

**செற்றார்** *šeṟṟār*, பெ. (n.) பகைவர்; enemies. "செற்றார் செயக்கிடந்த தில்" *(குறள், 446).*

ம. செற்றார்

*[செறு → செற்று → செற்றார்]*

**செற்று[1]-தல்** *šeṟṟu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. கொல்லுதல் (பிங். MSS); to kill. 2. அழித்தல்; to destroy. 3. செதுக்குதல் (ஈடு, 9. 9: 1); to cut, chisel. 4. பதித்தல்; to set, as a jewel. "மணி செற்றுபு குயிற்றி" *(கம்பரா. கையடை. 5).*

ம. செற்றுக; து. கெர்பினி; பர். கெத் (வேட்டையாடுதல்); மா. கெர்மெ.

*[செறு → செற்று-.]*

**செற்று[2]-தல்** *šeṟṟu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. செறிதல்; to gather in crowds. 'பெருங் களிறுகள் செற்றிவந்து சேர்ந்தன' *(சீவக. 277, உரை).* 2. அழுந்துதல்; to sink deep. "உரத்தினுகிர் செற்றும் வகை குத்தி" *(கம்பரா. மகுட. 8).*

*[செறு → செற்று-.]*

**செற்று[3]** *šeṟṟu-*, பெ. (n.) நெருக்கம் (பிங்.); thickness.

*[செறு → செற்று]*

**செற்றை** *šeṟṟai*, பெ. (n.) 1. சிறுதூறு; thicket, bush. "செற்றை வாயிற் சிறுகழிக் கதவின்" *(பெரும்பாண். 149).* 2. கூட்டம்; crowd. "சேய்விடுத்த செற்றை" *(கந்தரந். 22).* 3. நன்னீரில் வாழும் மீன்வகை; a fresh water fish. "செற்றைவரும் பழனம்" *(கந்தரந். 22).*

ம. செற்ற; க. சூதெ, சூத்தெ, செதகெ (குப்பை); தெ. செத்த (அழுக்கு)

*[செற்று[3] → செற்றை]*

**செற்றோர்** *šeṟṟōr*, பெ. (n.) செற்றார் பார்க்க; see *šeṟṟār*. "செற்றோர் கொலக்கொலக் குறையாத் தானை" *(பதிற்றுப். 82:12).*

*[செறு → செற்றோர்]*

**செறல்** *šeṟal*, பெ. (n.) 1. சினம், வெகுட்சி; anger, open hatred. "செறனோக்கின். . . களிறு" *(புறநா. 15: 8).* 2. கொல்லுகை, அழிக்கை (தொல். சொல். 72, சேனா.); killing, destroying.

*[செறு → செறல்]*

**செறி[1]-தல்** *šeṟi-*, 2 செகுவி. (v.i.) 1. நெருங்குதல்; to be thick, as foliage, hair; to be dense, crowded. "செறிந்த மணிமுடி" *(திவ். பெரியாழ். 3. 10:1).* 2. திண்ணிதாதல்; to be hard and strong. "மாப்படை சிந்தின தெறித்துகச் செறிந்த தோளினான்" *(கம்பரா. கான். 41).* 3. இறுகலாய் இருத்தல்; to be tight, close fitting, as bangles. "செறிவளை நெகிழ்த்தோன்" *(ஐங்குறு. 199).* 4. அடங்குதல்; to be controlled. "செறியாப் பரத்தை யிவன்றந்தை" *(கலித். 84).* 5. எல்லை கடவாதிருத்தல்; to keep within bounds. "செறி கடலே" *(திருக்கோ. 179).* 6. மறைதல்; to hide, disappear. "அன்னம் . . . நளிமலர்ச் செறியவும்" *(சிலப். 2:55-6).* 7. மிகுதல்; to increase. "செயிர்சினஞ் செறிந்து" *(கலித். 102).* 8. கலத்தல் (வின்.); to mix. 9. திரளுதல்; to accumulate. 10. பொருந்துதல்; to be joined, accompanied. "மகளிரொடு செறியத் தாஅய்க் குழலகவ" *(பட்டினப். 155).*

*[சுள் → செள் → செறி → செறி-தல் = கூடுதல், நெருங்குதல்]*

இருபொருள்கள் ஒன்றை ஒன்று அணுகுதல் நெருங்குதலும், பலபொருள் ஒன்றை யொன்றணுகுதல் செறிதலும் ஆகும். நெருங்கலினும் செறிவு, மிக அணுக்கமாகும்.

**செறி[2]-தல்** *šeṟi-*, 2 செகுன்றாவி. (v.t.) புணர்தல்; to cohabit with. "செறிதொறுஞ் சேயிழை மாட்டு" *(குறள், 1110).*

*[செறி[1] → செறி[2]-.]*

**செறி[3]-த்தல்** *šeṟi-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. சேர்த்தல்; to unite. 2. அடைத்தல்; to shut, close, block up. "தாழ்செறி கடுங்காப்பில்" *(கலித். 48).* 3. அடக்குதல்; to hold in reserve, as one's opinion. "செப்பல் வன்மையிற் செறித்தியான் கடவலின்" *(குறிஞ்சிப். 12).* 4. திணித்தல்; to stuff. "வாய்செறித் திட்ட மாக் கடிப்பிதுவே" *(கல்லா.6).* 5. அடைவித்தல்; to cause to obtain.

"சிவமந்திரமே சித்தி செறிக்கும்" (சிவரக. காயத்திரி.14). 6. இறுக்குதல்; to tighten. "நிறைத்தாழ் செறித்து" (நீதிநெறி. 99). 7. திரட்டுதல்; to hoard up, store up. 8. நெரித்தல் (வின்.); to press, crush. 9. கொல்லுதல் (பிங்.); to kill. 10. பதித்தல்; to set, enease.

[சுள் → செள் → செறி → செறி-த்தல். சுள் = அணுகல், நெருங்கல்]

**செறி⁴-த்தல்** *šeṟi-*, 4 செ.கு.வி. (v.i.) 1. மூழ்குதல் (திவா.); to immerse, dive, plunge into water. 2. மூடுதல்; to close, shut, as eyes. "கண்ணையும் செறித்து" (திவ்.திருப்பல். 3, வியா, பக்.40).

[செறி¹ → செறி⁴-]

**செறி⁵** *šeṟi*, பெ. (n.) நெருக்கம் (சூடா.); closeness. denseness.

[செறி¹ → செறி⁵]

**செறிஞர்** *šeṟiñar*, பெ. (n.) உறவினர் (இலக். அக.); relations.

[செறி → செறிஞர்]

**செறிப்பு** *šeṟippu*, பெ. (n.) 1. நெருக்கம்; thickness. "செறிப்பில் பழங்கூரை" (நாலடி, 231). 2. இற் செறிவு; restraining the heroine from meeting her lover. "சிறைப்புறமாகச் செறிப்பறிவுறுத்தல்" (தஞ்சைவா. 151).

[செறி → செறிப்பு]

**செறிமை** *šeṟimai*, பெ. (n.) நெருக்கம்; thickness. "செறிமையுற" (கோயிற்பு. வியா. 6).

[செறி → செறிமை]

**செறிவன்** *šeṟivaṉ*, பெ. (n.) 1. எல்லாவுயிர் கட்கும் இதமான அருகன்; Arhat, as All-merciful Being. 2. சலியாதவன், கலங்காதவன் (சிலப். 10: 177, உரை); person of perfect equanimity.

[செறிவு → செறிவன்]

**செறிவு** *šeṟivu*, பெ. (n.) 1. நெருக்கம்; thickness, denseness, closeness. "செறிவுடை மும்மதில்" (திருவாச. 9: 5). 2. மிகுதி; abundance. "அரும் புலத்தின் செறிவு மீதே" (கம்பரா. உருக்காட்டு. 111). 3. கூட்டம்; union, combination. "இம்மூன்றன் செறிவுடையான் செல்க வினைக்கு" (குறள், 684). 4. உறவு; relationship. "செறிவெனப் படுவது கூறியது மாறாமை" (கலித். 133). 5. கலப்பு (வின்.); diffusion. 6. உள்ளீடு; kernel, as attached to the shell of a nut. 'நுங்கினது இனியசெறிவை அயில' (புறநா. 225, உரை). 7. தன்னடக்கம்; self-restraint, modesty. "முதுவருள் முந்துகிளவாச் செறிவு" (குறள், 715). 8. எல்லை கடவா நிலைமை (திருக்கோ. 179, உரை.); conformity to rules, as of properiety.

ம. செறிவு

[செறு → செறி → செறிவு]

**செறிழிக்கதவு** *šeṟiḻi-k-kadavu*, பெ. (n.) கழிகளை நெருக்கமாக வைத்துக், குறுக்குச் சட்டம் இட்டுச் செய்யப்பட்ட கதவு; a door with sticks arranged closely with a cross bar.

[செறி + கழி + கதவு → செறிழிக்கதவு]

**செறு¹-தல்** *šeṟu-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. அடக்குதல்; to control, as the senses. "ஆறுஞ் செற்றதில் வீற்றிருந்தானும்" (தேவா. 84:9). 2. தடுத்தல்; to hinder, prevent. 'வரையா வாயிற் செறாஅது" (மதுரைக். 748). 3. சினத்தல்; to be angry with. "அரசர் செறின் வவ்வார்" (நாலடி, 134). 4. வெறுத்தல்; to hate, dislike, detest. "செற்றாரெனக் கைவிட லுண்டோ" (குறள், 1245). 5. வருத்துதல்; to cause pain, torment. "செலினந்திச் செறிற்சாம்பும்" (கலித். 78). 6. வெல்லுதல்; to overcome. "இருநால் வினையுஞ் செற்றவற்கு" (திருநூற். 46.). 7. அழித்தல்; to kill, destroy. "புரங்கள் மூன்றுந் தீயெழச் செறுவர் போலும்" (தேவா. 476:3).

[சுள் → (சுறு) → செறு-]

**செறு²-தல்** *šeṟu-*, 4 செ.கு.வி. (v.i.) வேறுபடுதல்; to change as one's mind. "அன்பிற் செறப்பட்டா ரில்லம் புகாமை" (ஆசாரக். 80).

[செறு¹ → செறு²-]

**செறு³-த்தல்** *šeṟu-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. அடக்குதல்; to suppress 2. தடுத்தல்; to prevent. "நாயேனைப் பொருட்படுத்துச் செறுத்தாய்" (தேவா. 31, 3). 3. செறிதல், உள்ளடங்கச் செய்தல்; to comprise, contain as ideas. "செறுத்த செய்யுள்" (புறநா. 53:11). 4. தூர்த்தல்; to fill up. "கடலைச்செறாஅ அய்வாழிய நெஞ்சு" (குறள், 1200). 5. வெறுத்தல் (திவா.); to detest. 6. வெல்லுதல்; to overcome.

"பாடல் பயின்றோரைப் பாணர் செறுப்பவும்" (பரிபா. 9:73). 7. கொல்லுதல் (பிங்.); to kill. "செறுத்தறுத் துழக்கி" (கலித். 104). 8. நெருக்குதல் (வின்.); to narrow. 9. சினத்தல்; to be angry.

ம. செறுக்குக; க. கிர்; தெ. செற (சிறை); து. செறெ (சிறை); கோண். கெக்தான; கொலா. செறு (ஏரி); பர். கெத்ப்; கோத. செர் (தடுத்தல்); துட. செர் (சிறை).

[(சுறு) → செறு-.]

**செறு**[4] *šeṟu*, பெ. (n.) 1. சினம்; anger. "யாண்டுஞ் செறுவொடு நிற்குஞ் சிறுமை" (திரிகடு. 14). 2. வயல்; field. "செதுமொழி சீத்த செவி செறுவாக" (கலித். 68). 3. குளம்; tank. 4. பாத்தி; garden plot, division in a field. "இருங்கழிச் செறுவின் வெள்ளுப்புப் பகர்நரொடு" (மதுரைக். 117).

ம. செறு (போர்); க. கொன் (சினப்படுதல்); தெ. சிறாகு

[செறு ' → செறு[4].]

**செறுதொழில்** *šeṟu-doḻil*, பெ. (n.) வெறுக்கத் தக்கச் தீயசெயல்; evil deed, as reprehensible. "செறுதொழிலிற் சேணீங்கியான்" (பு.வெ. 8:10, கொளு).

[செறு + தொழில்]

**செறுநர்** *šeṟunar*, பெ. (n.) பகைவர்; foes, enemies. "செறுநர் செருக்கறுக்கு மெஃகு" (குறள், 759).

[செறு → செறுநர்]

**செறுப்பனை** *šeṟu-p-paṉai*, பெ. (n.) தொந்தரவு; trouble, worry.

[சிறுப்பனை → செறுப்பனை]

**செறுப்பு** *šeṟuppu*, பெ. (n.) 1. கட்டுப்பாடு; restriction. 'அச்செறுப்புத்தீர . . . போந்த இடமிறே இது' (ஈடு, 5. 8:2). 2. நெருக்கம் (வின்.); narrowness. 3. கொலை; killing.

[செறு → செறுப்பு]

**செறுப்புநோய்** *šeṟuppu-nōy*, பெ. (n.) நோய்வகை (கடம்ப.பு.இலீலா. 111); a disease.

[செறு → செறுப்பு + நோய். செறுத்தல் = வருத்துதல், அழித்தல்]

**செறும்பு**[1] *šeṟumbu*, பெ. (n.) மனக்காழ்ப்பு; rancour. 'மனத்திடைச் செறும்பு நீக்கி' (சீவக. 947).

க. சுறும்பு

[செறு → செறும்பு]

**செறும்பு**[2] *šeṟumbu*, பெ. (n.) பனஞ்சிறாம்பு; fibres of palmyra palm. "செறும்பிற் பிறங்கிச் செறி . . . மயிர்" (கம்பரா. கங்கை. 33).

[சில் (= சிறியது) → சிலும்பு → செறும்பு]

**செறும்புக்காரன்** *šeṟumbu-k-kāraṉ*, பெ. (n.) மனத்திற்கறுக் கொண்டவன் (வின்.); malicious person.

[செறும்பு + காரன்]

**செறுமர்** *šeṟumar*, பெ. (n.) மலையாள (கேரள) நாட்டுப் பழங்குடிகளுள் ஒருவகையினர்; a kind of tribal people in Kēraḷa state.

மறுவ. செறுமக்கள்

**செறுமு-தல்** *šeṟumu-*, 5 செ.கு.வி. (v.i.) கனைத்தல், உறுமுதல்; to hem, grunt. "செறுமுமந்தச் சன்னை யறிந்து" (விறலிவிடு. 759). 2. தேம்பியழுதல்; to sob agitatedly.

[செறு → செறுமு-.]

**செறுவர்** *šeṟuvar*, பெ. (n.) பகைவர்; foes. "செறுவர் நோக்கிய கண்" (புறநா. 100: 10).

மறுவ. செறுநர்

[செறு → செறுவர்]

**செறுவு** *šeṟuvu*, பெ. (n.) திருத்திய நிலம்; developed lands. "பவழவாய்ச் செறுவு தன்னுள்" (சீவக. 379).

[செறு → செறுவு]

**சென்ற** *šeṉṟa*, பெ.எ. (adj.) கடந்த; last. சென்ற ஆண்டு திருவிழா நடந்தது.

மறுவ. கழிந்த, முடிந்த, கடந்த.

[செல் → சென்ற]

**சென்றஞான்றை** *šeṉṟa-ñāṉṟai*, பெ. (n.) நேற்றைய நாள்; yesterday. "சென்ற ஞான்றைச் சென்றுபட ரிரவின்" (புறநா. 390: 10).

மறுவ. நேற்று

[செல் → சென்ற + ஞான்றை]

**சென்றது** *šeṉṟadu*, பெ. (n.) வினாவொடு சேர்த்து அடுக்கியும் அடுக்காதும் வரும்

அசைநிலை (தொல். சொல். 425); an expletive, used in its interrogative form, sometimes in pairs.

[செல் → சென்றது]

**சென்றுதேய்ந்திறுதல்** *šenru-tēyndirudal*, பெ. (n.) நூற்குற்றம் பத்தனுள் நூலின் அழகு வரவரக் குறைந்துகொண்டே வரும் குற்றம் (தொல். பொருள். 664, உரை); gradual loss of vigour and tone, one of ten *nūr-kurram*; defects of a literary work.

[செல் → சென்று + தேய்ந்து + இறுதல்]

**சென்றுபோ-தல்** *šenru-pō-*, 8 செ.கு.வி. (v.i.) இறத்தல்; to die. 'அவர் சென்றுபோனார்' (வின்.)

[சென்று + போ-.]

**சென்றுமுட்டு-தல்** *šenru-muttu-*, 5 செ.கு.வி. (v.i.) படையுடன் சென்று நேருக்கு நேர் மோதுதல்; to face the other directly in a fight. 'காரிப் பொருமாள் - எருமை தொரு எயினாட்டார் கொள்ளப் பாசாற்றூர் பூசலிடப்பூசல் சென்று கோவூர் நாட்டுச் சிற்றிடையாற்று முதுகொன்றை மூக்கின் மீடலை, அயங்கரையிற் சென்று முட்டி பட்டான்' (செங்கம் நடுகற்கள் - கம்பவர்மன் கிபி. 9 நூ.).

போரில் நேருக்கு நேர் மோதி இறப்பவனை சென்று முட்டி என்பர்.

[சென்று + முட்டு-.]

**சென்றுழுபாழ்** *šenrulu-pāl*, பெ. (n.) உழக்கூடிய சேரும் சகதியும் கொண்ட பாழ் நிலப்பகுதி; a kind of cultivable lying empty land.

**சென்னக்கூனி** *šenna-k-kūni*, பெ. (n.) சிறிய இறால் மீன் (வின்.); small shrimps.

[சில் → சின் → சின்ன → சென்ன + கூனி]

**சென்னசிறை** *šenna-širai*, பெ. (n.) பூடு வகை; a plant.

**சென்னடை** *šennadai*, பெ. (n.) நேர்த்தியான வழிபாட்டு முறைமை தொடர்பான செலவுகள்; expenditure towards regular worship in temples. 'சென்னடைக் கமைச்ச பூமியாவது' (T.A.S. 2; 1:23).

[செம் + நடை. செம்மையாக நடைபெறும் பூசைக்கு ஆகும் செலவைக் குறித்தது]

**சென்னடைக்கால்** *šennadai-k-kāl*, பெ. (n.) ஒரு முகத்தல் அளவை; a liquid measure. "பொலியூட்டு நெல்லுக் கலனெய் தூணியான பழநெல் சென்னடைக் காலால் நூற்றிருபதின் கலமுங் கொண்டு" (தெ.க.தொ. 4, கல். 517/1986).

[சென்னடை + கல்]

**சென்னப்பட்டணத்தான்** *šenna-p-pattanattān*, பெ. (n.) பழைய காசு வகை (பணவிடு. 117); an ancient coin.

[சென்னப்பட்டணம் → சென்னப் பட்டணத்தான்]

சென்னபட்டணத்தில் வழங்கிய காசு வகை

**சென்னப்பட்டணம்** *šenna-p-pattanam*, பெ. (n.) சந்திரகிரியரசன்கீழ்ச் சிற்றரசனாயிருந்த சென்னப்ப நாயக்கன் பெயரால் அமைந்த ஊர் (சீதக். நொண்டி. 7); Chennai, as the town of Sennappa-nāyakkan, a chief under the Raja of Chandragiri.

[சென்னப்பன் பட்டணம் → சென்னப் பட்டணம்]

Madras the chief city in the Tamil country, is also the chief city in the South Indian Presidency. The name by which it is known amongst natives everywhere is, not Madras, but Chennappa-pattanam abbreviated into Chenna-pattanam, a name which it derived from Chennappa Nāyakkar, father-in-law of the Nāyakkar of Chinglepat, a petty local chieftain, a feudatory of the Chandragiri Rājā, from whom the English obtained possession of a little fort on the coast which they converted into a fortified factory. The origin of the name by which it appears always to have been called by Europeans- Madras (officially Madraspatam) - has never been made out with certainty. Perhaps the most probable derivation is from the Telugu Madura (Tamil madil), the surrounding wall of a frot, a rampart.There is a neighbouring town, Sadras, originally a Dutch settlement, the name of which closely resembles Madras. Sadras is an European corruption from Sadurei, which is an abbreviation of Sadurangam (= Sans. Chaturanga) the four constituent arms of an army (-CGDFL. Int. p. 7-8).

**சென்னபாத்திரம்** *šeṉṉa-pāttiram*, பெ. (n.) தென்னை வகை (G.Sm.D.I, i, 214); a variety of coconut.

**சென்னபுரி** *šeṉṉa-puri*, பெ. (n.) சென்னப் பட்டணம் பார்க்க; see *šeṉṉa-p-paṭṭaṇam.*

**சென்னம்**[1] *šeṉṉam*, பெ. (n.) நீர்ப்பறவை வகை; an aquatic bird. "சென்னங் காகங் குணாலஞ் சிலம்புமே" (கம்பரா. ஊர்தே. 151).

**சென்னம்**[2] *šeṉṉam*, பெ. (n.) வடிவு (யாழ்.அக.); shape.

[சின்னம் → சென்னம்]

**சென்னமல்லையர்** *šeṉṉa-mallaiyar*, பெ. (n.) கி.பி. 1768-ல் சிவசிவ வெண்பா இயற்றிய புலவர்; the author of Šivašiva-veṇbā, 1768 A.D.

**சென்னல்** *šeṉṉal*, பெ. (n.) எட்டரை விரல நீளமும் கரும்பச்சை நிறமுமுள்ள பனையேறிக் கெண்டை மீன்; climber perila, rifle green, attaining $8^{1}/_{2}$ in. in length.

**சென்னவலை** *šeṉṉa-valai*, பெ. (n.) பெரு மீன்கள் பிடிக்க உதவும் வலைவகை; net for catching big fish.

**சென்னாக்கூனி** *šeṉṉā-k-kūṉi* பெ. (n.) சென்னக்கூனி (வின்.) பார்க்க; see *šeṉṉa-k-kūṉi.*

[சென்னக்கூனி → சென்னாக்கூனி]

**சென்னாக்கோனி** *šeṉṉā-k-kōṉi* பெ. (n.) சென்னக்கூனி (வின்.) பார்க்க; see *šeṉṉa-k-kūṉi.*

[சென்னக்கூனி → சென்னாக்கோனி]

**சென்னி**[1] *šeṉṉi*, பெ. (n.) 1. தலை; head. "நலம்பெறு கமழ்சென்னி" (கலித். 81). 2. உச்சி; top, summit, peak. "மைபடு சென்னிப் பயமலை நாடன்" (கலித். 43). 3. சிறப்பு; eminence. "உனைச் சென்னித்தலை கொண்டது தேர்கிலையோ" (கந்தபு. காமத. 28). 4. சோழன்; Cōḻa king. "சென்னி செங்கோ லதுவோச்சி" (சிலப். 7:2, பக். 205). 5. உண்கலமாகத் தலையோடு கொண்ட பாணன்; bard, lyrisist, as having skull-bowl to eat from. "செவ்வரை நாடன் சென்னிய மெனினே" (பெரும்பாண். 103). 6. குதிரையின் தலை போன்ற முதல் விண்மீன், இரலை (அச்சுவினி) (சூடா.); the first nakṣatra, as resembling horse's head.

**சென்னி**[3] *šeṉṉi*, பெ. (n.) கன்னம்; cheek.

[சென்னை[3] → சென்னி]

**சென்னிக்கோடு** *šeṉṉi-k-kōḍu*, பெ. (n.) சென்னிமலை பார்க்க; see *šeṉṉi-malai.* "ஓடுமழை கிழிக்குஞ் சென்னிக் கோடுயர் பிறங்கல் மலை கிழவோனே" (நற். 28)

[சென்னி + கோடு]

**சென்னிக்கோன்** *šeṉṉi-k-kōṉ*, பெ. (n.) ஏராளமான ஆநிரைகளையுடைய ஆயர் தலைவன்; a leader of shephards having numerous cows and goats. "இவ்வூர் மன்றாடிக் குடிமக்களில் சென்னிக்கோன்" (தெ.க.தொ. 12, 198).

[சென்னி + கோன்]

**சென்னிமலை** *šeṉṉi-malai*, பெ. (n.) ஈரோடு வட்டத்தில் மலை உள்ள ஒரூர்; a hill town in Erode dt. "சென்னிக் கோடுயர் பிறங்கள்..." (நற்.)

[சென்னி + மலை]

**சென்னியர்** *šeṉṉiyar*, பெ. (n.) கூத்தர் (அக.நி.); actors, dancers.

[சென்னி → சென்னியர்]

**சென்னீர்வெட்டி** *šeṉṉīr-veṭṭi*, பெ. (n.) வரிவகை (தெ.க.தொ. 3,300); a tax.

**சென்னீரமஞ்சி** *šeṉṉīra-mañji*, பெ. (n.) வரிவகை (தெ.க.தொ. 4, 155); a tax.

**சென்னை**[1] *šeṉṉai*, பெ. (n.) சென்னப்பட்டணம் பார்க்க; see *šeṉṉa-p-paṭṭaṇam.* "சென்னை நகர் வீற்றிருந்த விமலவாழ்வே" (விநாயகபு. 85:63).

**சென்னை**[2] *šeṉṉai*, பெ. (n.) மீன்வகை (பாலவா. 1085); a kind of fish.

[சென்னக்கூனி → சென்னை]

**சென்னை**[3] *šeṉṉai*, பெ. (n.) கன்னம்; cheek.

க. செந்நெ

[சென்னி → சென்னை]

**சென்னைப்பட்டினம்** *šeṉṉai-p-paṭṭiṉam*, பெ. (n.) சென்னப்பட்டணம் பார்க்க; see *šeṉṉa-p-paṭṭaṇam.*

# சே

**சே**[1] *cē/šē*, *சகரமெய்யும் ஏகார உயிரும் சேர்ந்த உயிர்மெய் எழுத்து;* the compound of c and ē.

*[ச் + ஏ – சே.]*

**சே[2]-த்தல்** *šē-*, 4 செ.கு.வி. (v.i.) 1. **தங்குதல்;** to dwell, abide. "வம்பலர் சேக்குங் கந்துடைப் பொதியில்" *(பட்டினப். 249).* 2. **கிடத்தல்;** to lie, remain. "கோழி சேக்குங் கூடுடைப் புதவின்" *(பெரும்பாண். 52).* 3. **உறங்குதல்;** to sleep. "பொய்கை நாரை போரிற் சேக்கும்" *(புறநா. 209).*

ம. சேருக; க. கே; கூ. கேக; கொலா. கெப்; மா. கிதெ

E. stay; OE. stag; OF. ester, stare; E. sommy-sleep; L. sommus.

*[சேய் → சே → சே-த்தல்]*

ஒருகா. த. சே → க்ஷி; வ. (இ.வே.). தங்கு, க்ஷி என்னுஞ் சொல்லினின்றே சேக்ஷித்ர என்னும் சொல் திரியும். வடமொழியில் "க்ஷேத்ர" என்னுஞ் சொல் 'தங்குமிடம்', 'மனை', 'நகர்', 'இடம்', 'திருவிடம்', என்னும் பொருளில் வழக்கூன்றியுள்ளது.

**சே[3]-த்தல்** *šē-*, 4 செ.குன்றாவி. (v.t.) **எய்துதல்;** to obtain. "கனவிற் றொட்டது . . . கனவிற் சேஎப்ப" *(பரிபா. 8:103-4).*

*[சேய் → சே → சே-த்தல்]*

**சே[4]-த்தல்** *šē-*, 4 செ.கு.வி. (v.i.) 1. **சிவப்பாதல்;** to redden. "அவன் வேலிற் சேந்து" *(கலித். 57).* 2. **முகம் சிவந்து சினத்தல்;** to get angry. "நித்திலமேந்திச் சேந்த போல்" *(சீவக. 329).*

*[சேய் → சே-.]*

**சே[5]** *šē*, பெ. (n.) 1. **சிவப்பு;** red, redness. "சேக்கொள் கண்ணை" *(கல்லா. 85:9).* 2. **சேங்கொட்டை** (மலை.) பார்க்க; see *šēṅgoṭṭai*. 3. **அழிஞ்சில்** (தொல். எழுத்து. 278); sage-leaved alangium.

*[சேய் → சே]*

**சே[6]** *šē*, பெ. (n.) 1. **காளை;** bull, bullock, ox. "சேவேறு சேவடிக்கே சென்றூதாய்" *(திருவாச. 10:1).* 2. **விடை ஓரை (இராசி)** *(விதான. நல். 12);* Taurus in the zodiac. 3. **குதிரை;** horse.

ம. சேக்காள

E. ox; OE. oxa; ON. uxi; G. ochs; S. ukshan.

*[சே[5] → சே]*

**சே[7]** *šē*, இடை. (int.) 1. **வெருட்டுங்குறி;** exclamation used in driving animals, etc. 2. **வெறுப்புக் குறி;** expr. meaning 'fie! shocking!' used in disgust. சே! போகாதே *(உ.வ.).*

**சேக்கரி-த்தல்** *šēkkari-*, 4 செ.கு.வி. (v.i.) **கொக்கரித்தல்** *(யாழ்.அக.);* to cackle, as a hen after laying eggs.

*[கெக்கரி → சேக்கரி-.]*

**சேக்காளி** *šēkkāḷi*, பெ. (n.). **தோழமையுள்ளவன்-ள்** *(நெல்லை.);* comrade, friend.

*[சேர்க்கை + ஆளி. ஆள் → ஆளி]*

**சேக்கிழார்** *šēkkiḻār*, பெ. (n.) 1. **தொண்டை நாட்டு வேளாளரின் குடிப்பெயருள் ஒன்று;** a family name among Vēḷāḷās in Toṇḍaimaṇḍalam. 'சேக்கிழார் கரிகால சோழப்பல்லவரையர்' : 'சேக்கிழார் பாலறாவாயர்' *(கல்வெட்.).* 2. **திருத்தொண்டர் மாக்கதை (பெரியபுராணம்) இயற்றிய ஆசிரியர்;** the author of Thiru-t-tondar makkadai (Periyapurāṇam).

*[செய்(நிலம்) + கிழார் → சேக்கிழார்]*

**சேக்கிழார்புராணம்** *šēkkiḻār-purāṇam*, பெ. (n.). **சேக்கிழாரின் வரலாற்றோடு, திருத்தொண்டர் புராண வரலாற்றையும் சேர்த்துக் கூறும் செய்யுள் நூல்;** a Tamil purāṇā, author of Koṟṟavan-kuḍi Umāpadi devar.

*[சேக்கிழார் + (Skt.) புராணம்]*

**சேக்கிழான்** *šēkkiḻāṉ*, பெ. (n.) **மாடு மனைகளையுடைய செல்வன்;** well to do person. 2. **ஆநிரைப் பண்ணையார்;** cattle wealth holder. "மேலூர்க் கோட்டத்துத் தன்கூற்று காவனூர் சேக்கிழான் சத்தி மலையனாகிய சோழ முத்தரையன்" *(தெ.க.தொ. 19. கல். 72).*

*[சேக்கிழார் → சேக்கிழான். சேக்கிழார் = வேளாளரின் குடிப்பெயர்]*

**சேக்கு**[1] *šēkku*, பெ. (n.) **முலைப்பால்** *(யாழ்.அக.);* breast milk.

*[சேக்கை[2] → சேக்கு]*

**சேக்கு**[2] *šēkku*, பெ. (n.) 1. **சீட்டாட்டத்தில் ஒருவர் கையில் ஒரு இனத்தில் தனித்து**

நிற்குஞ் சீட்டு; solitary card of any denomination in the hands of a player at a game of cards. 2. துருப்புச் சீட்டு; trump-card. சேக்குராசா (இ.வ.) (செ.அக.).

**சேக்கு**[3] *šēkku,* பெ. (n.) கன்னக் குடுமி (இ.வ.); side lock.

**சேக்குப்புள்ளி** *šēkku-p-pul̤l̤i,* பெ. (n.) உறவினரற்றுத் தனித்து இருப்பவன் (நாஞ்.); solitary person having no relations.

*[சேக்கு² + புள்ளி]*

**சேக்கை**[1] *šēkkai,* பெ. (n.) 1. கட்டில் முதலிய மக்கள் படுக்கை; cot, bed, thing to sleep on. "நுரைமுகந்தன்ன மென்பூஞ் சேக்கை" *(புறநா. 50.)* 2. விலங்கு முதலியவற்றின் படுக்கை (பிங்.); sleeping place of animals, roost of birds. 3. தங்குமிடம்; dwelling place. "புற்றடங் கரவிற் செற்றச் சேக்கை" *(மணிமே. 4:117).* 4. பறவைக் கூடு; bird's nest. "மாலுமயனு மூரும் படர்சிறைப் புண்மாகமிகந்து வந்திருக்குஞ் சேக்கை யெனவும்" *(பெரியபு. சண்டே. 4).* 5. வலை; net. "புளிஞர்... சேக்கைக் கோழிபோற் குறைந்து" *(சீவக. 449).*

ம. சேக்க; து. கேலு (பறையர் வாழிடம்)

*[சே² → சேக்கை. சே = தங்கியுறங்குதல்]*

**சேக்கை**[2] *šēkkai,* பெ. (n.) 1. முலை (பிங்.); woman's breast. 2. உடற்றழும்பு (பிங்.); scar.

*[சே² → சேக்கை]*

**சேக்கை**[3] *šēkkai,* பெ. (n.) 1. கடகவோரை (சூடா.); cancer in the zodiac. 2. நண்டு (யாழ்.அக.); crab, lobster.

*[சே² → சேக்கை]*

**சேக்கை**[4] *šēkkai,* பெ. (n.) 1. சேகை (பிங்.) பார்க்க; see *šēgai.* 2. செம்பசலை (மலை.); red Malabar night shade.

*[சே⁴ → சேக்கை]*

**சேக்கைப்பள்ளி** *šēkkai-p-pal̤l̤i,* பெ. (n.) படுக்கை; bed, mattress. "பல்பூஞ் சேக்கைப் பள்ளியுட் பொலிந்து" *(சிலப். 4:28).*

*[சேக்கை + பள்ளி]*

**சேக்கோள்** *šēkkōl̤,* பெ. (n.) ஆகோள்; capture of enemies', cattle. "சேக்கோ ளறையுந் தண்ணுமை" *(அகநா. 63).* ஆகோள் என்பது ஆநிரை கவர்தலைக் குறிக்கும்.

*[சே³ + கோள். கொள் → கோள்; சே=ஆ, எருது, கால்நடைகள். ஆகோள் பார்க்க]*

**சேக்பறுவான்** *šēkparuvān,* பெ. (n.) களமி மரத்தின் அடிக்கட்டைக்குக் குறுக்கே போடப்படும் கழி (M.Navi. 82); cross-jack yard.

**சேகடி** *šēkadi,* பெ. (n.) சாக்கடை நீர்த் தொட்டி (தெ. கோ. சா. 3. பகுதி 2); trough of waste water.

*[சாய்கடை → சேய்கடை → சேகடி]*

**சேகண்டி**[1] *šēgandi,* பெ. (n.) 1. காவலாளர் உறைவிடம் (யாழ்ப்.); patrol hut. 2. காவற் கூடம்; cell.

*[சேக்கை + (அண்டு →) அண்டி]*

**சேகண்டி**[2] *šēgandi,* பெ. (n.) கோல் கொண்டடிக்கும் வட்ட முறி (வெங்கல)த் தட்டு (சூடா.); gong.


சேகண்டி

**சேகண்டியடி**[1]**-த்தல்** *šēgandi-y-adi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. வீண்பேச்சுப் பேசிக் காலங் கழித்தல் (இ.வ.); to waste one's time in idle talk. 2. சேகண்டியை அடித்தல்; to strike a gong. 3. உணவுக்கு மிகவருந்தி முயலுதல் (இ.வ.); to work hard for livelihood.

*[சேகண்டி + அடி.]*

**சேகண்டியடி**[2]**-த்தல்** *šēgandi-y-adi-,* 4 செ.குன்றாவி. (v.t.) பலர் அறியக் கூறுதல் (இ.வ.); to proclaim widely.

*[சேகண்டி + அடி-.]*

**சேகண்டியில்வை-த்தல்** *šēgaṇḍiyil-vai-,* 4 செ.குன்றாவி. (v.t.) குற்றவாளியாகக் கருதி காவற் கூடத்தில் வைத்தல் (யாழ்ப்.); to arrest and detain a criminal suspect in the cell.

*[சேகண்டி[1] + இல் + வை-.]*

**சேகம்** *šēgam,* பெ. (n.) மரவைரம் (திவா.); hard core of a tree, central part of exogenous plant hardened by age, heart-wood.

க. சேகு; தெ. சே

*[சேகு → சேகம்]*

**சேகரம்[1]** *šēgaram,* பெ. (n.) மாமரம் (சூடா.); mango tree. "வெய்யோன்... சேகரமாகி நின்றான்" (கந்தபு. சூரபதுமன்வதை. 473).

**சேகரம்[2]** *šēgaram,* பெ. (n.) முருங்கை (யாழ். அக.); horse-radish tree.

**சேகரி[3]** *šēgari,* பெ. (n.) நாயுருவி (மலை.); Indian burr.

**சேகன்** *šēgaṉ,* பெ. (n.) வீரன்; soldier. "சேகா... குதிரையோ வீறியது" (கலித். 96).

ம. சேகன்

*[சே[6] → சேகன் = குதிரை வீரன். சேவல் = குதிரை.]*

**சேகில்** *šēgil,* பெ. (n.) சிவந்த ஏறு; tawny-coloured bull. "குரூஉச் சேகில் காணிகா" (கலித். 105.).

*[சேகு → சேகில்]*

**சேகிலி** *šēgili,* பெ. (n.) வாழை; plantain as having no heart-wood.

*[சேகு + இலி. சேகு = மரவயிரம்]*

**சேகு[1]** *šēgu,* பெ. (n.) 1. சிவப்பு; redness. "பாதங்கள் சேகு சேர்தர" (கம்பரா. உலா. 37). 2. சேகம் (பிங்.) பார்க்க; see *šēgam.* 3. திண்மை; solidity, hardness. "சேகு நோன்சிலையாரோடும்" (சீகாளத். பு. கண்ண. 72). 4. குற்றம்; fault. 'சேகறு மலருஞ் சாந்தும்' (கம்பரா. மூலபல. 233). 5. ஐயம்; doubt. "சேகறத் தெருட்டி" (கம்பரா. கும்பக. 127). 6. மரவயிரம்; heart-wood.

ம. சேகு; க. சேகு; தெ. சேகி;

*[சேவு → சேகு]*

**சேகு[2]** *šēgu,* பெ. (n.) 1. தழும்பு (யாழ்.அக.); scar. 2. செவ்வயிரம்; மரவயிரம்; heart-wood.

E. scar; OF. escare; L. eschara; Gk. escharā.

*[சேவு → சேகு]*

**சேகுணம்** *šēguṇam,* பெ. (n.) ஒரு நாடு; a country.

**சேகுணர்** *šēguṇar,* பெ. (n.) சேகுண நாட்டார் (கலிங்.318); people of šēguṇam.

**சேகுவயிரம்** *šēgu-vayiram,* பெ. (n.) செம்மையான உறுதி வாய்ந்த நன்கு முற்றிய மரம், மரவயிரம்; ripe, strong-wood.

*[சேகு + வயிரம்]*

**சேகை** *šēgai,* பெ. (n.) சிவப்பு; redness. "அண்டத் துயிர்களெலாம் வந்திறைஞ்சச் சேகையாய் மல்குந் திருத்தாள்" (கந்தபு. இரணியன்பு. 14.).

*[சே → சேகு → சேகை]*

**சேங்கலம்** *šēṅgalam,* பெ. (n.) சேமக்கலம் (இ.வ.); gong used in temples.

ம. சேங்ஙில, சேங்கல, சேங்கில, சேங்ஙல, சேங்ஙலம்

மறுவ. சேகண்டி.

*[சே + கலம் - சேக்கலம் → சேங்கலம்]*

**சேங்கன்று** *šēṅgaṉṟu,* பெ. (n.) ஆண்கன்று (உ.வ.); bull-calf.

*[சே + கன்று]*

**சேங்கார்** *šēṅgār,* பெ. (n.) நெல்வகை (A.); a kind of paddy.

*[சே + கார்]*

**சேங்கொட்டை** *šēṅ-goṭṭai,* பெ. (n.) 1. சேமரத்தின் கொட்டை (பதார்த்த. 1066); marking-nut. 2. மரவகை (மலை.); marking-nut tree.

*[சே + கொட்டை]*

**சேங்கொட்டைக்குறி** *šēṅ-goṭṭai-k-kuṟi,* பெ. (n.) சேங்கொட்டைப் பாலால் இடும் ஆடைக் குறி; marks on clothes made with the juice of the marking-nut.

*[சேங்கொட்டை + குறி]*

**சேச்சே** *śē-c-cē*, பெ. (n.) 1. அருவருப்புக் குறிப்பு; expr. meaning 'fie! shocking!', used in contempt. 2. அமர்த்துங் குறிப்பு (வின்.); meaning 'hush', silence.

சேச்சே = ஒலிக்குறிப்புச் சொல்

**சேச்சை** *śēccai*, பெ. (n.) 1. பாலை மலர் (மலை.); silvery-leaved ape flower. 2. முல்லை (மலை.); trichotomous flowering smooth jasmine.

**சேசூரணம்** *śē-cūraṇam*, பெ. (n.) செயற்கை நஞ்சு (கௌரி நஞ்சு) (மூ.அ.); a prepared arsenic.

*[சே + சூரணம். சே = சிவப்பு]*

**சேசேயெனல்** *śē-śē-y-eṉal*, பெ. (n.) 1. வெறுப்புக் குறிப்பு; expr. of contempt. 2. மாடு முதலியன வெருட்டற் குறிப்பு; expr. used in driving as of animals. 3. கூட்டத்தின் ஒலிக் குறிப்பு; onom. expr. denoting the tumultuous noise of a crowd. "சேசேயெனுஞ் சந்தடிக்குட் சிக்கினேன்" (விறலிவிடு. 1033).

**சேட்சி** *śēṭci*, பெ. (n.) தொலைவு; distance, remoteness. "சித்தமுஞ் செல்லாச் சேட்சியன் காண்க" (திருவாச. 3:41).

*[சேண் → சேட்சி]*

**சேட்டங்கெட்டவேளை** *śēṭṭaṅgeṭṭa-vēlai*, பெ. (n.) வறுமைக்காலம் (வின்.); hard times, straitened circumstances.

*[சேட்டம்¹ + கெட்டவேளை]*

**சேட்டம்**[1] *śēṭṭam*, பெ. (n.) 1. மேன்மை; eminence, greatness, excellence. 'சேட்ட மல்கிய பாதுகை (விநாயகபு. 80:278). 2. வலிமை; strength, power, capacity. "எழுந்திருக்கச் சேட்டமில்லை" (யாழ்ப்.). 3. செழிப்பு; luxuriance, fertility. 'சேட்டமாய் உண்டாக' (வின்.). 4. அழகு (வின்.); bloom, as of countenance.

ம. சேட்டம்

*[சேண் → சேடு → சேட்டம். ஒ.நோ. கோண் → கோடு → கோட்டம்]*

**சேட்டம்**[2] *śēṭṭam*, பெ. (n.) உடல்நலம்; body health. 'மேலுக்குச் சேட்டமில்லை' (உ.வ.).

*[சேட்டம்¹ → சேட்டம்³]*

**சேட்டம்**[3] *śēṭṭam*, பெ. (n.) ஆடவை (வைகாசி, காருவா (அமாவாசை) கழிந்த முதல்நாள் தொடங்கி மடங்கல் (ஆனி) காருவா (அமாவாசை) முடியவுள்ள திங்கள் சார்ந்த மாதம் (வின்.); the third lunar month from the day following the New Moon in the month of Vaigāsi to the end of the New Moon day in the month of Āṉi.

*[சேட்டம்¹ → சேட்டம்³]*

**சேட்டன்**[1] *śēṭṭaṉ*, பெ. (n.) 1. தமையன் (சூடா.); elder brother. 2. வயதில் மூத்தவன்; senior in age.

ம. சேட்டன்

*[சேண் → சேடு → சேட்டம் → சேட்டன்]*

**சேட்டன்**[2] *śēṭṭaṉ*, பெ. (n.) 1. பெரியோன்; person of eminence, or superior rank, great man. 'சேட்டராமுனிவோர்களும்" (விநாயகபு. 75:79). 2. உருத்திரருள் ஒருவர் (சி.போ.பா. 2:3, பக். 212); a Rudra.

*[சேட்டம் → சேட்டன்.]*

**சேட்டாதேவி** *śēṭṭā-dēvi*, பெ. (n.) மூதேவி (இலக்குமிக்கு மூத்தவள்); goddess of lazyness, as the elder sister of Lakṣmi.

மறுவ. பெரியவள், அக்காள், மூத்தாள்

*[சேட்டை → சேட்டா + தேவி.]*

**சேட்டி** *śēṭṭi*, பெ. (n.) தமக்கை (யாழ். அக.); elder sister.

*[சேட்டம் (ஆ.பா.) → சேட்டி (பெ.பா.)]*

**சேட்டுக்குழி** *śēṭṭu-k-kuḻi*, பெ. (n.) சேற்றுக் குழி; pit filled with mire, swampy hollow. 'சேட்டுக்குழியிற் சேற்றினுட் புக்கு அழுந்திய எருமை" (சிலப். 10:120, உரை).

*[சேறு + குழி → சேட்டுக்குழி]*

**சேட்டை**[1] *śēṭṭai*, பெ. (n.) 1. மூத்தவள் (திவா.); elder sister, elder woman. 2. மூதேவி (திவா.) (இலக்குமிக்கு மூத்தவள்); goddess of Misfortune, as the elder sister of Lakṣmī. 3. பெருவிரல்; thumb. "செறித்துவடந் தர்ச்சனி

மீதே செபிக்க வொலியைச் சேட்டையினால்" (சிவதரு. 3:3).

[சேண் → சேடு = உயரம், பெருமை. சேடு → சேட்டம் = மேன்மை. சேட்டம் → சேட்டன் = பெரியோன், மூத்தவன், தமையன். சேட்டன் (ஆ.பா.) - சேட்டை (பெ.பா.)]

**சேட்டை**[2] *šeṭṭai,* பெ. (n.) முறம் (திவா.); winnowing fan or basket.

மறுவ. சுளகு

தெ. சேட

**சேட்படு-தல்** *šēṭ-paḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) எதிர்ப்படுதல்; to meet, approach. "சிறுமி தந்தையுஞ் செல்வனை . . . சேட்பட்டானரோ" (சீவக. 1458).

[சேண் + படு → சேட்படு-.]

**சேட்படு-தல்** *šēṭ-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. தொலைவாதல் (தூரத்தாதல்); to be at a distance; to be aloof. "செவ்வியில ளென்றல் சேட்பட நிறுத்தல்" (திருக்கோ. 90, அவ.). 2. நெடுங்காலத்ததாதல்; to take a long time. "சென்று சேட்பட்ட தென் னெஞ்சு" (கலித். 143).

[சேண் + படு → சேட்படு-.]

**சேட்படுத்து-தல்** *šēṭ-paḍuttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) விரைய வரைந்து கோடல் கருதிக் களவுக் கூட்டத்திலுளவாம் இடையூறுகளை எடுத்துமொழிந்து அக்கூட்டத்திற் கியையாது தோழி மறுத்துக்கூறித் தலைவனை அகற்றுதல்; to put off a lover telling him of the insurmountable difficulties in the way of his clandestine meetings and urging him to expedite the marriage. 'இவை யெல்லாங் கூறிச் சேட்படுத்தப் பெறும் என்பது' (திருக்கோ. 97, உரை).

[சேட்படு- → சேட்படுத்து-.]

**சேட்படை** *šēṭ-paḍai,* பெ. (n.) 1. தொலைவி (தூரத்தி)லிருக்கை; being at a distance. "அப்போர் செய்யச் சேட்படையன்றி யெம்முன் சேர்தியால் வீர" (கந்தபு. சிங்கமுகா. வதை. 194). 2. விரைய வரைந்து கோடல்கருதிக் களவுக் கூட்டத்திலுளவாம் இடையூறுகளை எடுத்து மொழிந்து அதற்கியையாது மறுத்துத் தோழி தலைவனை யகற்றுங் கிளவிக் கொத்து வகை (திருக்கோ. 90, அவ.); theme of the companion-maid putting off the lover of her mistress telling him of the insurmountable difficulties in the way of his clande stine meetings and urging him to expedite the marriage.

[சேட்படு → சேட்படை]

**சேட்புலம்** *šēṭ-pulam,* பெ. (n.) தொலைவான (தூரமான) இடம்; distant place. "சேட்புலம் படர்ந்தோர்" (அகநா. 61).

[சேண் + புலம்]

**சேடக்கோல்** *šēḍa-k-kōl,* பெ. (n.) தூக்குக்கோல், எடை அளக்குங்கோல் (G.Sm.D.I, i, 284.); balance on the principle of the steelyard.

[சேடம்[2] + கோல்]

**சேடகப்பிண்டி** *šēḍaga-p-pinḍi,* பெ. (n.) கேடகம்பிடிக்கை; holding the shield. "செருவா ளாட்டுஞ் சேடகப் பிண்டியும்" (பெருங். உஞ்சைக். 37:32).

[சேடகம் + பிண்டி.]

**சேடகம்** *šēḍagam,* பெ. (n.) கேடகம்; shield. "மயிர்ப்புளக சேடகமு மேந்தி" (சூளா. அரசி. 159).

மறுவ. கேடயம், கிடுகு.

[கேடகம் → சேடகம்]

**சேடகவட்டம்** *šēḍaga-vaṭṭam,* பெ. (n.) வட்டவடிவக் கேடகம்; shield of round shape. "கோலுங் குந்தமுஞ் சேடக வட்டமும்" (பெருங். உஞ்சைக். 46:58).

[சேடகம் + வட்டம்]

**சேடம்**[1] *šēḍam,* பெ. (n.) 1. பெருமை; greatness. 2. மிகுதி; abundance. 3. மீதி; reminder.

[சேண் → சேடு → சேடம்]

**சேடம்**[2] *šēḍam,* பெ. (n.) எடை; weight.

**சேடல்** *śēḍal*, பெ. (n.) 1. பவளமல்லிகை (குறிஞ்சிப். 82.); night-flowering jasmine. 2. உச்சிச் செலுந்தில் என்னும் மரம் (சிலப். 13:153); a kind of tree.

*[சேடு² → சேடல்]*

**சேடவட்டில்** *śēḍa-vaṭṭil*, பெ. (n.) வட்ட வடிவ உண்கலம் (யாழ்அக.); plate for food in round shape.

*[சேடம் + வட்டில்]*

**சேடன்**[1] *śēḍaṉ*, பெ. (n.) 1. பெரியோன்; great man. "சேடனைக் காணிய சென்று" (சீவக. 2112). 2. கடவுள்; God. "செங்குன்றூர் நின்ற சேடனதாள்" (தேவா. 923, 7). 3. இளைஞன் (பிங்.) youth, lad. "குடந்தைக் கிடந்த சேடர் கொலென்று" (திவ். பெரியதி. 9.2:2).

*[சேடு² → சேடன்]*

**சேடன்**[2] *śēḍaṉ*, பெ. (n.) 1. தோழன் (பிங்.); companion, associate, friend. 2. பிரிந்திருந்த தலைவன் தலைவியரைச் சேர்த்து வைப்பதில் துணைபுரிபவன்; a companion who helps one in his love-affairs. "ஊடறீர்க்குஞ் சேடரின்" (சீவக. 852)

*[சேட்டன் → சேடன்]*

**சேடா** *śēḍā*, பெ. (n.) சடைப்பூரான் (நெல்லை.); centipede.

**சேடி**[1] *śēḍi*, பெ. (n.) 1. ஏவல் செய்பவள் (பிங்.); female servant. "சேடியர் செவ்வியி னேந்தினர்" (சிலப். 28:64). 2. தோழி (பிங்.); a lady's female companion; maid. 3. இளமையுடையாள் (யாழ்அக.); young woman.

*[சேடன் → சேடி]*

**சேடி**[2] *śēḍi*, பெ. (n.) 1. தெருச்சிறகு (சூடா.); side of a street. 2. விஞ்சையர் உலகு; the world of Vidyādaras. "மாசில் வாலொளி வடதிசைச் சேடி" (மணிமே. 17:21).

*[சேடு² → சேடி.]*

**சேடி**[3]**-த்தல்** *śēṭṭi-*, 4 செ.கு.வி. (v.i.) 1. எஞ்சுதல்; to be left over. "ஓரவிழுஞ் சேடியா தருந்தினன்" (பிரபுலிங். ஆரோகண. 29).

**சேடி**[4]**-த்தல்** *śēṭṭi-*, 4 செ.குன்றாவி. (v.t.) குறைத்தல் (வின்.); to deduct, diminish.

*[சேடு → சேடி-.]*

**சேடிகை** *śēḍigai*, பெ. (n.) 1. பணிப்பெண்; servant maid. 2. கன்னியோரை (வீமே. உள்.); Virgo in the zodiac.

*[சேடி → சேடிகை]*

**சேடியம்** *śēḍiyam*, பெ. (n.) ஊழியம்; service.

*[சேடி → சேடியம்.]*

**சேடு**[1] *śēḍu*, பெ. (n.) 1. தோழமை, நட்பு; friendship. 2. ஏவல்; command.

*[சேண் → சேடு]*

**சேடு**[2] *śēḍu*, பெ. (n.) 1. பெருமை (பிங்.); greatness. 2. திரட்சி (பிங்.); roundness, massiveness. 3. உயரம்; height, elevation. "சேடேறு பொழில்" (திவ். பெரியதி. 7. 8:9). 4. நன்மை (பிங்.); goodness, excellence. 5. அழகு (பிங்.); beauty, gracefulness, handsomeness. "சேடியல் வள்ளத்துப் பெய்த பால்" (கலித். 72). 6. இளமை (திவா.); youth, youthfulness. "சேட்டார் மைந்தர்கள்" (பிரமோத். பிரதோ. 13).

ம. சேடு

*[ஏண் → சேண் → சேடு]*

**சேடை**[1] *śēḍai*, பெ. (n.) மணமக்கள் மீது மஞ்சள் கலந்த அரிசி (அட்சதை) தூவும் திருமண நிகழ்ச்சி; part of the marriage ceremony which consists in throwing rice over the bride and bridegroom and blessing them. 2. சேடையரிசி பார்க்க; see *śēḍai-y-ariśi*. "சேடை நல்கி . . . போற்றி நின்றாள்" (பெரியபு. கண்ணப். 48).

க. சேச; தெ. சேட

*[சேடு → சேடை. சேடு = நன்மை]*

**சேடை**[2] *śēḍai*, பெ. (n.) தொளி யுழவுக்காக நீர்கட்டப்பெற்ற வயல் (இ.வ.); field filled with water with a view to preparing it for sowing.

*[செய் → சேய் → சேண் → சேடு → சேடை]*

**சேடைகட்டு-தல்** *śēḍai-kaṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) சேடைபாய்ச்சு- பார்க்க; see *śēḍai-pāyccu-*.

*[சேடை + கட்டு]*

**சேடைபாய்ச்சு-தல்** *śēḍai-pāyccu-*, 5 செ.கு.வி. (v.i.) வயலில் நீர் நிறைத்தல் (தஞ்சை.); to fill fields with water.

*[சேடை² + பாய்ச்சு-.]*

**சேடைபாய்தல்** *šēḍai-pāydal*, பெ. (n.) வயலில் தானே நீர் பாய்கை (தஞ்சை.); spontaneous flow of water into a field.

*[சேடை + பாய்தல்]*

**சேடையரிசி** *šēḍai-y-ariši*, பெ. (n.) மணமக்கள் மீது இடும் மஞ்சள் கலந்த மங்கல வாழ்த்தரிசி; rice sprinkled over bride and bridegroom, by the way of blessing them.

*[சேடை¹ + அரிசி]*

**சேடைவை-த்தல்** *šēḍai-vai-*, 4 செ.குன்றாவி. (v.t.) தொளியடித்தல் (இ.வ.); to fill a field with water and preparing it for sowing paddy.

*[சேடை² + வை-.]*

**சேண்** *šēṇ*, பெ. (n.) 1. சேய்மை; distance, remoteness. "சேண்விளங்கு சிறப்பின் ஞாயிறு" (புறநா. 174:2). 2. உயரம் (திவா.); height, loftiness. "சேண வந்தர நோக்கலும்" (கம்பரா. இராவணன் வதை. 38). 3. மலைமுகடு (பிங்.); mountain top, summit. 4. வானம்; sky. "சேணெல்லாம் புல்லொளி செலுத்தி" (கம்பரா. சூர்ப்பணகை, 20). 5. துறக்கம் (சுவர்க்கம்); heaven. "சேண் மகபதிக்கு நல்கி" (கந்தபு. திருநகர. 105). 6. அகலம் (பிங்.) (திருக்கோ.213,உரை); width, spaciousness.. 7. நீளம் (திவா.); length. "சேணுற நீண்டு மீண்டு" (கம்பரா. சூர்ப்பணகை. 46). 8. நெடுங்காலம்; long time. "சுற்றமொடு முழுதுசேண் விளங்கி" (புறநா. 2:19).

ம. சேணு

*[ஏண் → சேண்]*

**சேண்டிரவர்** *šēṇḍiravar*, பெ. (n.) சேணியன் (யாழ்அக.); weaver.

க. ஜேடரு; தெ. ஜேண்ட்ர

**சேண்மரம்** *šēṇ-maram*, பெ. (n.) அழிஞ்சில் மரம் (அக.நி.); a tree.

*[சே → சேண் + மரம்]*

**சேண** *šēṇa*, கு.வி.எ. (adv.) உயர; up. "சேண வெரிநிற் சிறந்தானோ டேறினாள்" (பரிபா. 12:48).

*[சேண் → சேண]*

**சேணம்¹** *šēṇam*, பெ. (n.) துறக்கம்; paradise. "சேணந் தருவது நீறு" (தேவா. 857, 4).

*[ஏண் → சேண் → சேணம். உயர்ச்சிக் கருத்தினின்று முகிழ்த்த இச்சொல் தவமுதல்வர் சம்பந்தர் காலத்தில் துறக்க உலகினையும் குறித்து வழங்கிய தெனலாம்]*

**சேணம்²** *šēṇam*, பெ. (n.) 1. மெத்தை (பிங்.); cushion, mattress. 2. குதிரை போன்ற விலங்குகளின் முதுகில் அமர்ந்து செல்வதற்குப் போடப்படுகிற தோல் அல்லது துணியினால் ஆன இருக்கை; saddle of cloth or leather pillion.

ம. சேணம்

*[சேண் → சேணம்]*

**சேணாடு** *šēṇāḍu*, பெ. (n.) துறக்கவுலகம் (சுவர்க்கம்) (வின்.); heaven, paradise.

ம. சேணாடு

*[சேண் + நாடு]*

**சேணி** *šēṇi*, பெ. (n.) 1. சேடி² பார்க்க; see *šēḍi*,². "விஞ்சையர் சேணி செலவிட்டு" (சூளா. சுயம். 192). 2. ஏணி (திவா.); ladder. 3. முறை (யாழ்அக.); order, arrangement. 4. குழு (யாழ்ப்.); party of workmen, set of players, company of travellers.

ம. சேணி; Pkt. sēṇi

*[சேண் → சேணி]*

த. சேணி → Skt. šrēṇi

**சேணியர்** *šēṇiyar*, பெ. (n.) வானுலகத்தார்; a class of celestials. "சேணியர் கோன் தோன்றல்" (சேதுபு. வேதாள. 14).

*[சேணி → சேணியர்]*

**சேணியன்¹** *šēṇiyaṉ*, பெ. (n.) 1. தேவர்கோன், இந்திரன்; Indraṉ. "சேணியனு மன்றே தெரிந்து" (தனிப்பா. 1, 60:120). 2. விஞ்சையன்; Vidyādaraṉ.

*[சேண் → சேணியன்]*

**சேணியன்²** *šēṇiyaṉ*, பெ. (n.) ஆடை நெய்வோர் (E.T. vi. 361); a class of weavers.

ம. சேணியன்; க. சடைசேட; தெ. சேண்ட்று; து. சாடெ, சாட்யெ

**சேனுவணன்** *šēṇuvaṇaṉ*, பெ. (n.) கொல்லங் கோவை; a climbing shrub.

*[சேண் + உவணன்]*

**சேணை**[1] *šēṇai,* பெ. (n.) பிறந்த குழந்தையின் வாயினில், தாய்மாமன் தன் விரலால் கொடுக்கும் ஒருவகை மருந்துப் பொருள் மற்றும் இனிப்பு கலந்த நீர்மப்பொருள்; a kind of liquid medicine given to the new born baby by the maternal uncle.

**சேணை**[2] *šēṇai,* பெ. (n.) தூளி, ஏணை; cradle.

*[ஏணை → சேணை]*

**சேணோன்** *šēṇōṉ,* பெ. (n.) 1. மலைவாசி; mountaineer. "சேணோ னகழ்ந்த மடிவாய்ப் பயம்பின்" *(மதுரைக். 294).* 2. மரத்தின் மேல் கட்டப்பட்டிருக்கும் பரணிலிருந்து விலங்குகள், பயிர்களை அழிக்கா வண்ணம் காப்பவன்; one who keeps watch over a field from a platform on a tree. "மரமிசைச் சேணோன் இழைத்த . . . இதணம்" *(குறிஞ்சிப். 40).*

*[ஏண் → சேண் → சேணோன். உயர்ச்சிக் கருத்தினின்று பிறந்த இச்சொல், காலப் போக்கில் மலையில் வாழும் மாந்தரையும் உயர்ந்த விடத்தினின்று காவல்புரிபவரையுங் குறித்து வழங்கலாயிற்று]*

**சேத்தாளி** *šēttāḷi,* பெ. (n.) சேக்காளி (தஞ்சை.) பார்க்க; see *šēkkāḷi.*

மறுவ. கூட்டாளி, நண்பன்.

*[சேர் + ஆளி → சேத்தாளி]*

**சேத்து**[1] *šēttu,* பெ. (n.) சிவப்பு (திவா.); red, crimson. "சேத்தகில் புழுகு சந்தம்" *(பாரத. பதினான். 219).*

*[சே[4] → சேது → சேத்து]*

**சேத்து**[2] *šēttu,* பெ. (n.) 1. ஒப்பு (திவா.); resemblance, similarity. "நகையொடு சேத்திற் காசு நாறுவ நித்திலம்" (இரகு. நாட்டு. 10). 2. கருத்து (திவா.); thought, idea.

*[சே[2] → சேத்து]*

**சேத்து**[3] *šēttu,* பெ. (n.) 1. உறுப்பு (அகநி.); limb, member, section. 2. நெருக்கம் (வின்.); closeness, compactness, thickness.

*[சேர் → சேத்து]*

**சேத்து**[4] *šēttu,* பெ. (n.) நிலம் (வின்.); field, plot of ground.

*H., U. kēth*

*[செய் → சேய் → சேத்து]*

**சேத்து**[5] *šēttu,* பெ. (n.) அசைச்சொல்; an cxpletive (செஅக.).

*[சே → சேத்து]*

**சேதக்காலன்** *šēda-k-kālaṉ,* பெ. (n.) கெடுதிக்காரன் (யாழ்ப்.); mischievious person.

*[சேதம் + (காரன் →) காலன்]*

**சேதகம்**[1] *šēdagam,* பெ. (n.) சிவப்பு (பிங்.); red.

*[செம் → சே → சேது → சேதகம்]*

**சேதகம்**[2] *šēdagam,* பெ. (n.) சேறு (திவா.); mud, slush. "குங்குமச் சேதகந் திமிர" (கம்பரா. வரைக்காட்சி. 56).

*[சேறகம் (சேறு + அகம்) → சேதகம்]*

**சேதபாதம்** *šēda-pādam,* பெ. (n.) கூத்து வகையுளொன்று (யாழ். அக.); a kind of dance.

*[சேதம் + பாதம்]*

**சேதம்** *šēdam,* பெ. (n.) 1. புயல், வெள்ளம் போன்றவற்றால் உயிர், பொருள் முதலியவற்றிற்கு ஏற்படும் அழிவு; loss of life, property, things. வெள்ளத்தால் பயிர்கள் சேதம். 2. கேடு (சூடா.); damage, ruin, waste, injury. 3. பிரிப்பு; splitting, dissecting. 4. வெட்டு; severance, cutting off. தலைச்சேதம். 5. துண்டு; part, piece, portion, section. 6. கீழ்வாயிலக்கம் (வின்); denominator of a fraction. 7. கூத்தின் ஓர் உறுப்பு (சிலப். 3:13. உரை, பக். 89); an element in dancing.

ம. சேதம்

*[ஏதம் → சேதம். ஏதம் = கேடு குற்றம்]*

**சேதனகி** *šēdaṉagi,* பெ. (n.) கடுக்காய் (சங்.அக.); chebulic myrobalan.

**சேதனம்** *šēdaṉam,* பெ. (n.) 1. பிளவு செய்கை; cutting, splitting. "சேதனப் படைஞரோடும்" (பாரத. பதினோ. 4.). 2. ஆண்குறியின் முன்றோலை எடுக்கும் விழா; circumcision.

*[சேதம் → சேதனம்]*

**சேதா** *šēdā*, பெ. (n.) சிவப்பு ஆன்; tawny coloured cow. "சிலம்பின் மேய்ந்த சிறு கோட்டுச் சேதா" *(நற். 359).*

*[சேது + ஆ - சேதா = செந்நிற ஆன்]*

**சேதாம்பல்** *šēdāmbal*, பெ. (n.) செவ்வாம்பல் (திவா.); red Indian water-lily. "சேதாம்பற் போதனைய செங்கனிவாய்" *(கம்பரா. நகர்நீங். 101).*

*[சேது + ஆம்பல்]*

**சேதாரம்**[1] *šēdāram*, பெ. (n.) தேமா (சூடா.); sweet mango.

**சேதாரம்**[2] *šēdāram*, பெ. (n.) *1.* இழப்பு; waste, as of commodities in traffic; loss, damage, as of crops by cattle trespassing. *2.* பொன்னாலேனும் வெள்ளியினாலேனும் நகை முதலியன செய்யும்போது உண்டாகும் தேய்மான இழப்பு; wastage of gold or silver in making jewels, due to filing, etc. புத்தாண்டை முன்னிட்டுச் செய்கூலி, சேதாரம் இன்றி மலிவாகப் பொன் கிடைக்கும் (உ.வ.).

ம. சேதாரம், சேதவாரம்; க. சேதார; தெ. சேதாரமு

*[சேதம் + ஆரம் - சேதாரம்]*

**சேதி**[1]**-த்தல்** *šēdi-*, 4 செ.குன்றாவி. (v.t.) *1.* வெட்டுதல்; to cut off, divide, sever, dissect. "தாதைதனைத் தாளிரண்டுஞ் சேதிப்ப" *(திருவாச. 15:7). 2.* அழித்தல்; to destroy. "மேலுலகுஞ் சேதித்தீர்" *(உபதேசகா. சூராதி. 50).*

L. caedere

*[சேதம் → சேதி-.]*

**சேதி**[2] *šēdi*, பெ. (n.) *1.* செய்தி; news, occurence. "இந்தச் சேதி யுரைக்க" *(இராமநா. பாலகா. 13). 2.* தன்மை; nature. "வாவறுங்குகின்ற சேதியென்ன" *(உத்தரரா. சம்புவன். 32).*

ம. சேதி

*[செய்தி → சேதி]*

**சேதி**[3] *šēdi*, பெ. (n.) *1.* 56 நாடுகளுள் ஒன்று; Chēdi, the region around Bilaspur and Jubbalpur, one of 56 countries. "சேதிப் பெருமான் சிசுபாலன்" *(பாரத. திரௌபதி. 42). 2.* திருக்கோவிலூர்ப் பகுதியான சேதிநாடு; part of Thirukkōvilūr country Šēthu nāḍu. "சேதி நன்னாட்டு நீடு திருக்கோவலூரில்" *(பெரியபு. மெய்ப்பொருள். 1). 3.* சேதியை ஆண்ட அரச குலம்; the dynasty that ruled Chēdi. "சேதிமா மரபோன்" *(பாரத. குருகுல. 104).*

**சேதிகை** *šēdigai*, பெ. (n.) மூங்கிலுழக்கு, நாழி முதலியவற்றின் அடிப்பகுதியால் குதிரை உடலிற் குத்தும் வண்ணத் தொழில்; coloured marking on a horse, made with the bottom of a bamboo measure. "வெதிருழக்கு நாழியாற் சேதிகைக் குத்தி" *(கலித். 96:27).*

**சேதிநாடு** *šēdi-nāḍu*, பெ. (n.) திருக்கோவலூரைத் தலைநகராகக் கொண்ட நடுநாடு (பெரியபு. மெய்ப்பொருள்.1); Naḍu-nāḍu in Tamil country, having Tirukkōvalūr as its capital.

*[சேதி + நாடு.]*

சோழநாட்டுக்கும் தொண்டை நாட்டுக்கும் இடையில் இருந்த பகுதி நடுநாடு. இந்நடு நாட்டின் ஒரு பகுதி சேதி நாடு. சேதியர் மரபினரால் ஆளப்பட்டதால் சேதிநாடு எனப்பட்டது.

**சேதிபன்** *šēdibaṉ*, பெ. (n.) *1.* சேதிநாட்டரசன்; the king of Chēdi. "சேதிபப் பெரும்பகை செகுத்தே" *(பாரத. இராசசூய. 152). 2.* நடு நாட்டரசன்; the king of Chēdi-nāḍu. "சேதியர் நற்கோவலூர் மலாட மன்னர்' *(புராணசாரம், 8, பெரியபு. பதிப்.).*

*[சேதி → சேதிபன்.]*

**சேதிமம்** *šēdimam*, பெ. (n.) சேதியம் (பிங்.) பார்க்க; see *šēdiyam.*

**சேதிமரம்** *šēdi-maram*, பெ. (n.) சமணக் கோயிலிலுள்ள புனிதமரம்; sacred tree in a Jaina temple. "சேதிமரங்களெட்டு" *(மேரு மந். 1063).*

**சேதியம்** *šēdiyam*, பெ. (n.) *1.* சமண புத்தரின் பள்ளி; Jain or Buddhist temple. "பகவற் கியற்றிய சேதியந் தொழுது" *(மணிமே. 28:175). 2.* தேவாலயம் (பிங்.); temple, shrine.

**சேதிராயர்** *šēdi-rāyar*, பெ. (n.) *1.* தமிழகத்தின் நடுநாட்டரசர்; the king of Naḍu- nāḍu in Tamiḷ country. *2.* திருவிசைப்பாவாசிரியருள் ஒருவரான சிவனடியார்; a Šaiva saint, one of the authors of Tiru-v-išaippā. *3.* கள்ளர் பட்டங்களிலொன்று; a title among Kaḷḷar caste.

*[சேதி + (அரையர் →) ராயர் - சேதிராயர். இவர் திருக்கோவலூர் மலையமான் வழித்தோன்றலுள் ஒருவராவர்]*

**சேது** *šēdu,* பெ. (n.) சிவப்பு (சூடா.); red.

*[சே → சேது]*

**சேது**[2] *šēdu,* பெ. (n.) 1. பாலம், செய்கரை (பிங்.); causeway, bridge, dam. "சேதுவை மேடுருத்தி வீதி சமைப்போம்" (பாரதி.). 2. இராமனது சேனைகள் இலங்கை செல்லுதற்கென இயற்றப் பெற்றதாகக் கருதப்படும் திருவணை; Adam's Bridge, a reef of sunken rocks connecting the north of Srilanka with the main land of India, 30 ft, wide with 3 or 4 ft. of water above it at high tide said to have been constructed to enable Rama's forces to cross over to Lanka. "சேடனென்னப் பொலிந்தது சேதுவே" (கம்பரா. சேதுப. 66). 3. இராமேசுவரம்; the island of Rāmēswaram. "சேதுவி னிராமநாதனை நிறுவிய காதையை" (சேதுபு. அவை. 1). 4. தனுக்கோடியில் உள்ள புனித நீராடுமிடம்; sacred bathing - ghat at Dhanuṣkōḍi.

*[செய் → (சேய்) → சேது. செய் = செய்தது]*

இராமேசுவரத் தீவின் கிழக்கு முனையான தனுக்கோடியிலிருந்து, இலங்கைத் தீவின் கிழக்கு முனையான மன்னார் துறையை இணைக்கும் நீர்ப்பகுதி ஆடம் பாலம் எனப்படும். சாற்றொப்ப 19மைல் நீளமும், 10 முதல் 12 அடி ஆழமும் உடையது. கடலடிப் பகுதி பவளப் பாறையாக அமைந்தது. வால்மீகி தென்னிந்தியப் பகுதியில் சுற்றுப் பயணம் செய்த காலத்தில், 4 அல்லது 5 அடி ஆழம் மட்டுமே இருந்திருக்கும். அக்காலத்தில் பாம்பன் பகுதி முழுதும் தரையாக இருந்தது. ஆழம் குறைவாக இருந்ததால், கற்பாறை கொண்டு மேடிட்டுப் பாலமாக்கும் எண்ணம் அவருக்குத் தோன்றியதெனலாம்

**சேதுகாவலன்** *šēdu-kāvalaṉ,* பெ. (n.) சேதுபதி பார்க்க; see šēdu-padi. 'சேதுகாவலன் திருவணைகாவலன்' (கல்.).

*[சேது + காவலன்]*

**சேதுபதி** *šēdu-padi,* பெ. (n.) இராமநாதபுர மன்னரின் பட்டப்பெயர்; hereditary title of the Rāja of Ramnad, as being guardians of Adam's Bridge. 'சேதுபதி ரகுநாதன்' (ஒருதுறைக்.).

*[சேது + பதி]*

**சேதுபுராணம்** *šēdu-purāṇam,* பெ. (n.) சற்றேறக்குறைய கி.பி. 16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த நிரம்பவழகிய தேசிகராற் பாடப் பெற்ற இராமேசுரப்புராணம்; a purāṇa on the shrine of Rāmēšvaram by Niramba-v-aḻagiya dēšigar. prob. 16th. c. "புகலு நூற்பெயர் சேதுபுராணமே" (சேதுபு. அவை. 10).

*[சேது + புராணம்]*

Skt. purāṇa → த. புராணம்

சேது அணைகட்டிய வரலாறு முதல் இராமேசுவரத்திலுள்ள நீராடும் துறையின் சிறப்பு வரை பல்வேறு செய்திகளைக் கூறும் சிறந்த நூல்.

**சேதுரான்** *šēdurāṉ,* பெ. (n.) சேதிராயர்-3 (இ.வ.) பார்க்க; see *šēdirāyar-3.*

*[சேது + (அரையன்) ராயன் → சேதுராயன் → சேதுரான்]*

**சேந்தங்கண்ணனார்** *šēndaṅ-kaṇṇaṉār,* பெ. (n.) கழகக் காலப்புலவர்; a Šaṅgam poet.

*[சேந்தன் + கண்ணனார்.]*

இவரின் தந்தை பெயர் சேந்தன் என்பது. இவரின் இயற்பெயர் கண்ணனார். இவர் நற்றிணையில் 54ஆம் பாட்டையும், அகநானூறில் 350ஆம் பாட்டையும் பாடியுள்ளார்.

**சேந்தம்பூதனார்** *šēndam-būdaṉār,* பெ. (n.) அகநானூறு 84, 207; குறுந்தொகை 90, 226, 247; நற்றிணை 69, 261 ஆகிய பாடல்களை இயற்றியவர்; author of the following verses: Agaṉāṉūṟu 84, 207; Kuṟundogai 90, 226, 247 and Narriṇai 69, 261.

*[சேந்தன் + பூதனார்]*

**சேந்தன்** *šēndaṉ,* பெ. (n.) 1. முருகன்; Murugaṉ. "சூர்தடிந்திட்ட சேந்தர்" (தேவா. 942, 6). 2. திவாகரஞ் செய்வித்த அம்பர்த் தலைவன்; patron of the author of Tivāgaram, chief of Ambar. 3. சேந்தனார் (திருவிசைப்.) பார்க்க; see *šēndaṉār.* 4. கடைக்கழகக்கால அரசன்; a king in Šaṅgam age. இவன் பரணரால் குறுந்தொகை 258ல் பாடப்பெறுபவன்.

*[சேத்து → சேந்து → சேந்தன்]*

**சேந்தன்கீரனார்** *šēndaṉ-kīraṉār,* பெ. (n.) குறுந்தொகை 311ஆம் பாடலை

இயற்றியவர்; author of verse no. 3ll of Kurundogai.

[சேந்தன் + கீரனார். சேந்தன் – தந்தையின் பெயர்.]

**சேந்தன்றிவாகரம்** *sēndanrivāgaram,* பெ. (n.) சேந்தன் என்ற புரவலரால் புரக்கப் பெற்றுத் திவாகரரால் இயற்றப் பெற்ற நிகண்டு நூல்; Tivāgaram, a Tamil lexicon composed under the patronage of Šēndan.

மறுவ. ஆதிதிவாகரம்

[சேந்தன் + திவாகரம்]

**சேந்தனார்** *sēndanār,* பெ. (n.) திருவிசைப்பா வாசிரியருள் ஒருவரும், திருப்பல்லாண்டு இயற்றியவருமாகிய சிவனடியார்; a Šaiva saint author of Tiru-p-pallāṇḍu and one of the author of Tiru-v-išaippā.

[சேந்தன் → சேந்தனார்]

இந்நூல் 12 தொகுதிகளையுடைடது. 9500 சொற்கள் பொருள் விளக்கம் செய்யப் பட்டுள்ளன. இதில் 384 பலபொருள் ஒரு சொற்களாகும். இந்நூல் கி.பி. 1835ல் வெளியிடப்பட்டது.

**சேந்தி**[1] *šēndi,* பெ. (n.) 1. சுவரில் அமைந்த பரண்; loft. 2. துலாக்கட்டைகளின் மீது பலகைகளைச் சேர்க்கும்போது இடைவெளி தெரியாமலிடும் பலகை (நாஞ்.); thin reapers running across the joints on which planks are laid. 3. களஞ்சியம் (மதுரை); granary.

ம. சேந்தி

[சேர் → சேந்து → சேந்தி]

**சேந்தி**[2] *šēndi,* பெ. (n.) கள்; toddy. சேந்திக்கடை (W.G.).

து. சேந்தி; U. sēndi.

[சேந்தி' → சேந்தி]

**சேந்து**[1]**-தல்** *šēndu-,* 5 செகுன்றாவி. (v.t.) 1. கயிறு முதலியவற்றை இழுத்தல் (வின்.); to draw, as a rope running over a pulley. 2. கிணற்றிலிருந்து தண்ணீர் இறைத்தல்; draw water from a well. அவள் கிணற்றிலிருந்து தண்ணீரைச் சேந்தினாள் (உவ.).

க. சேது; தெ. சேது

[சேர் (=திரட்டுதல்) → சேந்து-.]

**சேந்து**[2] *šēndu,* பெ. (n.) 1. சிவப்பு (பிங்.); redness. 2. தீ (யாழ். அக.); fire. "சேந்தினடைந்த வெலாஞ் சீரணிக்க (அருட்பா, 1, நெஞ்சறி, 689). 3. அசோகு (மலை.); mast-tree.

ம. சேந்து

[சேந்தன் → சேந்து. ஓ.நோ. வேந்தன் → வேந்து]

**சேந்துகிணறு** *šēndu-kiṇaṟu,* பெ. (n.) இறை கிணறு (இ.வ.); draw well.

[சேந்து ' + கிணறு]

**சேந்துபந்தம்** *šēndu-pandam,* பெ. (n.) அரக்கு (சங்.அக.); sealing-wax.

[சேந்து[2] + பந்தம்]

**சேந்துவலை** *šēndu-valai,* பெ. (n.) படகிலிருந்து சேந்தி இழுக்கப்படும் வலை; a kind of fishing net.

[சேந்து ' + வலை]

**சேந்தை** *šēndai,* பெ. (n.) கட்டிலின் மேற்கட்டி (யாழ்ப்.); canopy, tester.

[சேந்து [2] → சேந்தை]

**சேப்பங்கிழங்கு** *šēppaṅ-gilaṅgu,* பெ. (n.) உணவுக்குப் பயன்படும் வழுவழுப்புத் தன்மை கொண்ட பழுப்பு நிறக் கிழங்கு (M.M. 402); Indian kales root.

[சேப்பை + கிழங்கு. சேம்பு பார்க்க]

**சேப்பு**[1]**-தல்** *šēppu-,* 5 செகுவி. (v.i.) தங்குதல்; to abide, remain "அணங்குடைத் தடக்கையர் தோட்டி சேப்பி" (பதிற்றுப். 62).

*E. stay; OE. stadg; OF. estayer.*

[சே[2] → சேப்பு-.]

**சேப்பு**[2] *šēppu,* பெ. (n.) 1. சிவப்பு; red, redness. "ஊடலிற் செங்கண் சேப்பூர" (பரிபா. 7:70). 2. சிவப்புக் கல்; red gem.

ம. சேப்பு; க. கெம்பு; பட. கெப்பு

[செம் → சே → சேப்பு]

**சேப்பு**[3] *šēppu,* பெ. (n.) தாமரைக் கிழங்கு; root of the lotus. "பாசடைச் சேப்பினுள்" (கலித். 74).

[செம் → சே → சேப்பு]

**சேப்பை** *šēppai,* பெ. (n.) சேம்பு பார்க்க; see *sēmbu.*

**சேபாலம்** *šēbalam,* பெ. (n.) சேங்கொட்டை (மலை.); marking-nut.

*[சே + பாலம்]*

**சேபாலிகை**[1] *šē-bāligai,* பெ. (n.) கருநொச்சி (மூ.அ.); willow-leaved jusiticia.

**சேபாலிகை**[2] *šē-baligai,* பெ. (n.) சேபாலம் பார்க்க; see *šēbalam.*

**சேம்பி** *šēmbi,* பெ. (n.) மருதாணி; fragrant nail dye. (சா.அக.).

**சேம்பு** *šēmbu,* பெ. (n.) 1. நீர்ப்பாங்கான இடங்களில் வளரும் பெரிய இலைகளோடு கூடிய, கறிக்குதவும் கிழங்கைத்தரும் ஒரு வகைச் செடி; Indian kales. "சேம்புகால் பொர" (கம்பரா. நாட்டு. 35). 2. வறட்சேம்பு; a garden plant.

வ. கேமுக



சேம்பு

**சேம்புகா** *šēmbugā,* பெ. (n.) பொன்னூமத்தை; yellow dalura (சா.அக.).

**சேம்பை** *šēmbai,* பெ. (n.) சேம்பு (மலை.) பார்க்க; see *šēmbu.*

*[சேம்பு → சேம்பை]*

**சேமக்கலம்** *šēma-k-kalam,* பெ. (n.) சேகண்டி; gong used in temples.

ம. சேமங்ஙலம்

*[சேமம் + கலம்]*

**சேமக்காரன்** *šēma-k-kāran,* பெ. (n.) 1. காவற் காரன் (யாழ்ப்.); guard, watchman. 2. நம்பிக்கையுள்ளவன்; trust-worthy, confidential person. 3. சிக்கனமுள்ளவன்; thrifty, careful person. 4. வருமுன் காப்போன் (யாழ். அக.); prudent, cautious man.

*[சேமம் + காரன்]*

**சேமக்கிழங்கு** *šēma-k-kilangu,* பெ. (n.) சேப்பங்கிழங்கு; Indian kales root.

*[சேப்பங்கிழங்கு → சேமக்கிழங்கு]*

**சேமக்குழல்** *šēma-k-kulal,* பெ. (n.) எப் பொழுதும் திறந்திருக்கும் கன்னக் குழாயின் ஓர் பகுதி; that portion of the eaustachien tube which is always open-safety tube.

**சேமகாலம்** *šēma-kālam,* பெ. (n.) செழிப்புக் காலம்; time of prosperity or plenty, opp. to šāma-kālam (செ.அக.).

*[சேமம் + காலம்]*

**சேமங்கலம்** *šēmangalam,* பெ. (n.) சேமக்கலம் (இ.வ.) பார்க்க; see *šēma-k-kalam.*

ம. சேமங்ஙலம்

**சேமங்கொள்(ளு)-தல்** *šēman-gol-,* 16 செ.கு.வி. (v.i.) பிணத்தை வைத்து அழகுபடுத்தச் சாணத்தால் இடத்தைத் தூய்மைப்படுத்துதல் (யாழ்ப்.); to smear a place with cowdung in order to lay out a corpse and dress it for the funeral.

*[சேமம் + கொள்-.]*

**சேமஞ்செய்-தல்** *šēmañ-jey-,* 1 செ.குன்றாவி. (v.t.) மூடி வைத்தல்; to keep covered, protected. "செவிகளைத் தளிர்க்கையாலே சிக்குறச் சேமஞ்செய்தாள்" (கம்பரா. சடாயுவுயிர். 69).

*[சேமம் + செய்-.]*

**சேமண்டன்** *šēmandan,* பெ. (n.) தந்தையிலி; one who has lost his father.

*[சேமம் → சேமண்டன்]*

**சேமணி**[1] *šē-mani,* பெ. (n.) மாட்டுக்கழுத்திற் கட்டும் மணி (யாழ்.அக.); bell tied to the neck of a cow.



சேமணி

[சே + மணி]

சே = எருது. எனினும் பொதுவாக பெற்றத்தையும் எருதையும் குறிக்கும்.

**சேமணி**[2] *šēmaṇi*, பெ. (n.) சேகண்டி; gong used in temples.

[சேமம் + மணி]

**சேமத்தில்வை-த்தல்** *šēmattil-vai-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. பாதுகாப்புச் செய்தல் (வின்.); to keep in safe custody. 2. கோணிலை சரியற்ற குழந்தைகளைக் கணியன் (சோதிடன்) சொற்படி பெற்றோர் காணாதவாறு சிலகாலம் மறைத்து வைத்தல்; to keep away from parents children born under an unlucky star for a certain time fixed by astrologer.

[சேமத்தில் + வை-.]

**சேமத்தேர்** *šēma-t-tēr*, பெ. (n.) வைப்புத்தேர்; war-chariot kept in reserve. "சேயிரு மணிநெடுஞ் சேமத்தேர்" (கம்பரா. யுத்த. முதற்போர். 105).

[சேமம் + தேர்]

**சேமதருமம்** *šēma-darumam*, பெ. (n.) நிலை நிற்கும் வண்ணம் செய்யும் அறம் (வின்.); deeds of lasting benefit, opp. to māyā-darumam.

[சேமம் + தருமம்]

**சேமநலநிதி** *šēma-nalanidi*, பெ. (n.) பொது நலனுக்காகச் சேமித்து வைக்கப்படும் பணம்; welfare fund தொழிலாளர் சேம நலநிதி.

[சேமம் + நலநிதி]

**சேமநிதி** *šēma-nidi*, பெ. (n.) சேமப்பொருள் பார்க்க; see *šēma-p-poruḷ*.

[சேமம் + நிதி]

**சேமப்படை**[1] *šēma-p-paḍai*, பெ. (n.) வைப்புப் படை; army and weapons kept in reserve.

[சேமம் + படை]

**சேமப்படை**[2] *šēma-p-paḍai*, பெ. (n.) தேமல்; a yellow discolouration of the skin occuring in patches (சா.அக.).

[சே → சேமம் + படை]

**சேமப்பொருள்** *šēma-p-poruḷ*, பெ. (n.) 1. வைப்புப் பொருள்; riches kept in reserve, reserve funds. 2. தன் நன்மைக்காகப் பிறரிடம் வைக்கப்பட்ட பொருள்; deposit to meet one's needs in the future. 3. புதையல் (யாழ்.அக.); treasure-trove.

[சேமம் + பொருள்]

**சேமப்பிள்ளை** *šēma-p-piḷḷai*, பெ. (n.) அரசருடைய மெய்க்காப்பாளன்; body-guard of the king. 'வீரபாண்டிய தேவற்கு 4ஆவது நாயனார் சேமப்பிள்ளையார் அகம்படி முதலிகளில்' (புதுக்கோட்டைக் கல். 430)

[சேமம் + பிள்ளை]

**சேமம்**[1] *šēmam*, பெ. (n.) 1. நல்வாழ்வு; safety, well-being, welfare. "சேமமே யுன்றனக்கென் றருள்செய்தவன்" (தேவா. 1136, 9). 2. இன்பம் (சூடா.); happiness, pleasure.

Skt. kṣēma

[ஏமம் → சேமம்]

தங்குதலை அல்லது குடியிருத்தலைக் குறிக்கும் 'க்ஷி' என்னும் முதனிலையை வடவர் மூலமாகக் காட்டுவது பொருந்தாது.

**சேமம்**[2] *šēmam*, பெ. (n.) 1. காவல் (சூடா.); protection, preservation, security, defence, safe guard. "சேம வன்மதில்" (தேவா. 93, 4). 2. அரணான இடம்; stronghold, secure place. "காப்புச் சிந்தைசெய்துவே றிடத்தொரு சேமத்தின் வைத்தார்" (பெரியபு. அமர்நீதி. 16). 3. சிறைச் சாலை; prison, dungeon. "சேமந் திறந்தனை. . . எய்துதி" (உபதேசகா. சிவநாம. 90). 4. படைத் தொழில் ஐந்தனுள் பகைவரது அம்பு தன்மேற்படாமற் காக்குஞ் செயல்; act of a warrior protecting himself against hostile arrows; one of pañja-kiruttiyam. 'எய்தாற் கருவியாலே மறைத்துச் சேமஞ் செய்யு மாறும்' (சீவக. 1676, உரை.). 5. சவக்காப்பு (வின்.); binding and shrouding a corpse for burning or interment.

[ஏமம் → சேமம்]

**சேமம்**[3] *šēmam*, பெ. (n.) 1. புதைபொருள்; hoard, treasure-trove. "சேமம்போ வெடுப்பவர்" (பிரபுலிங். சித்தரா. 49). 2. ஓலைச் சுவடியின் கட்டு; tying of ola book. "புத்தகந்தன்னைச் சேமநீக்கின னோதினான்" (திருவாத பு. திருவடி. 20)

[ஏமம் → சேமம்]

**சேமம்**[4] *šēmam*, பெ. (n.) பலவகை அணுக்களின் சேர்க்கை; a unit of a group of atoms.

Skt. kshēma

[சேர்மம் → சேமம்]

**சேமம்போகிப்போகு-தல்** *šēmam-bōgi-pōgu-,* 5 செ.கு.வி. (v.i.) **பாதுகாப்பு இல்லாத போது களவு போகுதல்;** stolen when there was no proper security arragements. நாயனார் கோயில் எழுந்தருளுகிற நாயனார் இத்தேவர்க்கு ஏழாவது நாளில் சேமம் போகிப் போகையில் பின்பு இக்கோயிலுக்கு எழுந்தருளி விநாயகரையும் எழுந்தருளிவித்தான்" இராசராசன் 2, கி.பி. 1160, (தெ.க.தொ.8; கல். 201).

*[சேமம் + போகிப் போகு-.]*

**சேமரம்** *šē-maram,* பெ. (n.) 1. **அழிஞ்சில்** (பிங்.); sage leaved alangium. 2. **சேங்கொட்டை** (மலை.); marking nut tree.

*[சே + மரம்]*

**சேமவில்** *šēma-vil,* பெ. (n.) **உற்றகாலத்து உதவும்படி துணையாகக் கொள்ளும் வில்** (சிலப். 2:42, உரை.); bow kept in reserve.

*[சேமம் + வில்]*

**சேமவைப்பு** *šēma-vaippu,* பெ. (n.) **சேமப்பொருள் பார்க்க;** see *šēma-p-poruḷ.* "இராமானுச னென்றன் சேமவைப்பே" (திவ். இராமானுச. 22).

*[சேமம் + வைப்பு]*

**சேமறி** *šēmaṟi,* பெ. (n.) **மாட்டின் புணர்ச்சி** (வின்.); copulation of bull and cow.

*[சே + மறி]*

**சேமன்** *šēmaṉ,* பெ. (n.) **போக்கிலி;** cunning fellow; rogue. "இந்தச் சேமனை நீர். . . வெருட்டிடும்" (விறலிவிடு. 860).

*[சோம்பன் → சோமன் → சேமன்]*

**சேமனம்** *šēmaṉam,* பெ. (n.) **உணவு;** food.

*[சேமம் + சேமனம்]*

**சேமனவம்** *šēmaṉavam,* பெ. (n.) **சிவந்த மணி** (யாழ். அக.); red stone, ruby.

**சேமா** *šēmā,* பெ. (n.) **எருது;** bull. "சேமா போற் குப்புறாஉம்" (நாலடி., 377).

*[சே + மா. சே = எருது. மா = விலங்கு; ஒ.நோ: ஆமா]*

**சேமாளைச் சம்பா** *šēmāḷai-c-cambā,* பெ. (n.) **சம்பா நெல்வகை** (யாழ். அக.); a kind of šambā paddy.

*[செம்பாளை → சேமாளை + சம்பா]*

**சேமாறி** *šē-māṟi,* பெ. (n.) **விதையடிப்போன்** (நன். 138, மயிலை); gelder. 'எருதுகளுடைய பீசத்தை சேமாறிகளால் உடையும்படி செய்விக்கும் பொல்லாதவனும்" (சிவதரு. பாவ. 73, உரை.).

*[சே + மாறி. மாறு → மாறி.]*

**சேமாறு-தல்** *še-māṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) **எருதுக்கு விதையடித்தல்** (இலக். வி. 45, உரை); to geld a bull.

*[சே + மாறு - சேமாறு-.]*

**சேமி-த்தல்** *šēmi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. **போற்றி வைத்தல்;** to keep secure, preserve in safety. "தனதானியங்கள் சேமித்தல்" (விதான. பஞ்சாங்க. 19). 2. **புதைத்து வைத்தல்** (சூடா.); to hide underground, bury. 3. **நிறைத்தல்;** save money, water, etc., store blood, etc., for emergency. ஏரிகளை ஆழப்படுத்தி அதிகத் தண்ணீரைச் சேமித்து வைக்கலாம். 4. **எரிபொருள் முதலானவற்றைக் குறைந்த அளவில் பயன்படுத்திச் சிக்கனப் படுத்துதல்;** conserve energy, fuel, etc., எரிபொருளைச் சேமிக்கும் நுட்பத்தைத் தொழிற்சாலைகள் மேற்கொள்ள வேண்டும்.

*[சேமம் → சேமி-.]*

**சேமிப்பாவணம்** *šēmippāvaṇam,* பெ. (n.) **அரசு நேரடியாகவோ அஞ்சலகம் முதலிய அமைப்புகள் வழியாகவோ ஒருவர் சேமிப்பாகச் செலுத்தியத் தொகையைக் குறிப்பிட்ட கால முடிவில் வட்டியுடன் திருப்பித் தருவதாக எழுத்துமூலம் உறுதியளித்துத் தரும் ஆவணம்;** savings certificate. தேசிய சேமிப்புப் பத்திரம்/ அஞ்சலகச் சேமிப்புப் பத்திரம்.

*[சேமிப்பு + ஆவணம்]*

**சேமிப்பு** *šēmippu,* பெ. (n.) 1. **எதிர்காலத் தேவை கருதி வங்கி முதலியவற்றில்சிறிது சிறிதாகச் சேர்த்து வைத்திருக்கும் பணம்;** savings in a bank, etc. திடீர் செலவுகளுக்குச் சேமிப்புதான் கைகொடுக்கிறது. 2. **எதிர்காலத் தேவை கருதி உணவுப் பொருள் அரத்தம் முதலிய வற்றைப் பாதுகாப்பாக உரிய இடத்தில் சேர்த்தல்;** store of paddy etc; stock. நெல் சேமிப்புக்கிடங்கு, அரத்தச் சேமிப்பு நிலையம்.

*[சேமி → சேமிப்பு]*

**சேமிப்புப்பத்திரம்** *šēmippu-p-pattiram,* பெ. (n.) **சேமிப்பாவணம் பார்க்க;** see *šemippāvaṇam.*

*[சேமிப்பு + பத்திரம்]*

Skt. Patra → க. பத்திரம்

**சேமிப்புவங்கி** *šēmippu-vaṅgi,* பெ. (n.) சேமிப்புப் பொருளகம்; savings bank.

*[சேமிப்பு + வங்கி]*

**சேமை** *šēmai,* பெ. (n.) சேம்பு,1 பார்க்க; see *šembu,1.*

*[சேப்பை → சேமை]*

**சேய்**[1] *šēy,* பெ. (n.) 1. சிவப்பு; red ness. "சேயுற்ற கார்நீர் வரவு" (பரிபா. 11:114). 2. செவ்வாய் (பிங்.); Mars. 3. செந்நிற முருகன்; God Murugan. "சேஎய் குன்றம்" (பரிபா. 6:69).

*[செய்[4] → சேய்]*

**சேய்**[2] *šēy,* பெ. (n.) 1. மகன்; son. "தயரதன் சேய்" (திவ். பெரியதி. 3.10:6). 2. இளமை (திவா.); juvenility, youth. 3. பெருமை; greatness. "சேயுடம் பெய்துவை" (சீவக. 943) 4. முருகனை யொத்த மறவன், தலைவன்; cheif, lord. "பாரதப் போர் செற்றானுங் கண்டாயிச் சேய்" (நள. சுயம்வ. 137). 5. குழந்தை; child. தாயும் சேயும் நலம்.

*E. son; OE. sunu; OS. O.tris. sunu; ON. sonr; Dan. Swed. son; M.Du. sone; Du. zoon; OHG. sunn, son; MHG. sun; G. sohn; Goth. sunus; OG. sūnuh; Toch. A. se; Torcvh. B. soya; anestic: hunush; O. slov: synā; Lita: sunus; Gk. tos; Arm. ustre; Ogr. suta.*

*[செம் → சேய்]*

**சேய்**[3] *šēy,* பெ. (n.) 1. தொலைவு (சூடா.); distance, remoteness. 2. நீளம் (பிங்.); length. 3. மனையிடம் (யாழ்.அக.); house, site. 4. மூங்கில் (மலை.); bamboo.

*[சேண் → சேய்.]*

**சேய்குன்றம்** *šēy-kuṉṟam,* பெ. (n.) முருகக் கடவுள் வாழ்விடமாகிய திருப்பரங்குன்றம்; Tirupparaṅguṉṟam, as a residence of Murugaṉ. "நீரிற்றுவண்ட சேஎய் குன்றம்" (பரிபா. 6:69).

*[சேய்[2] + குன்றம்]*

**சேய்த்து**[1] *šēyttu,* பெ. (n.) செம்மை நிறமுடையது; that which is red. "அறங்கரிது சேய்த் தென்ப தியாது மறியார்" (சீவக. 2622).

*[சேய்[1] → சேய்த்து]*

**சேய்த்து**[2] *šēyttu,* பெ. (n.) 1. தொலைவானது; that which is at a distance. "சேய்த்தானுஞ் சென்று கொளல் வேண்டும்" (நாலடி., 218). 2. நீளமானது (வின்.); that which is long.

*[சேண் → சேய் → சேய்த்து]*

**சேய்து** *šēydu,* பெ. (n.) சேய்த்து[1] பார்க்க; see *šēyttu*[1]. "ஒள்ளொளி சேய்தா" (பரிபா. 16:40).

*[சேண் → சேய் → சேய்து]*

**சேய்நீர்** *šēynīr,* பெ. (n.) சுண்ணாம்பும் எரியுப்பும் (நவச்சாரமும்) கலந்த நீர்; medicinal preparation of lime and sal ammoniac.

*[செயநீர் → சேய்நீர்]*

**சேய்மரபு** *šēy-marabu,* பெ. (n.) இளமைப் பருவம்; youth. "சேய்மரபிற் கல்விமாண் பில்லாத மாந்தரும்" (திரிகடு. 84). 2. குழந்தைத் தன்மை; childishness.

*[சேய்[2] + மரபு]*

**சேய்மை** *šēymai,* பெ. (n.) 1. தொலைவு (சூடா.); distance, remoteness. "சேய்மையி னோக்குறு" (கம்பரா. சடாயுகாண். 5). 2. நீளம் (யாழ்.அக.); length.

*[சேய்[3] → சேய்மை]*

**சேய்மைவிளி** *šēymai-viḷi,* பெ. (n.) தொலைவி லுள்ளோரை அழைக்கும் விளி (நன்.313, விருத்.); vocative used to call a person at a distance.

*[சேய்மை + விளி]*

**சேயபரம்** *šēyaparam,* பெ. (n.) மரமஞ்சள்; tree turmeric.

**சேயம்** *šēyam,* பெ. (n.) கரை (யாழ். அக.); shore, bank.

E. shore; OE. schore; Du. schoor, schor.

*[சேய் → சேயம்]*

**சேயமம்** *šēyamam,* பெ. (n.) செய் (கௌரி வைப்பு) நஞ்சு (யாழ்அக.); a prepared arsenic.

**சேயவன்** *šēyavaṉ,* பெ. (n.) 1. செவ்வாய்க் கோள் (திவா.); Mars. 2. முருகக் கடவுள்; Lord Murugaṉ. "ஆறுமாமுகச் சேயவன்" (கந்தபு. தெய்வயா. 58).

*[சேய்[2] → சேயவன்.]*

**சேயன்**[1] *šēyaṉ,* பெ. (n.) தொலைவிலுள்ளவன்; one who is at a distance. "சேய னணியன்" (திவ். பெரியதி. 2. 1:8).

*[சேய்[3] → சேயன்]*

**சேயன்**[2] *šēyaṉ,* பெ. (n.) செந்நிறமுள்ளவன்; ruddy person. 'வண்ணமு மாயனவ னிவன் சேயன்' (தொல். பொருள். 307, உரை).

*[சேய்[1] → சேயன்]*

**சேயா** *šēyā*, பெ. (n.) கடுக்காய் (மலை.); chebulic myrobalan.

**சேயார்** *šēyār*, பெ. (n.) *1.* **தொலைவிலுள்ளவர்** (யாழ்.அக.); people at a distance. *2.* **பகைவர்;** enemies, foes.

*[சேய்³ → சேயார்]*

**சேயாறு** *šēyāṟu*, பெ. (n.) **தொண்டை நாட்டில் ஓடும் செய்யாறு என்னும் ஆறு;** a river flowing through Vellore and Kanchipuram districts. "சேயாற்றின் யாணரொரு கரை" (மலைபடு. 476.).

*[சேய் + ஆறு.]*

**சேயான்** *šēyaṉ*, பெ. (n.) **செந்நிற முடையவன்;** person of ruddy complexion.

*[சேய்¹ → சேயான்]*

**சேயிலம்** *šēyilam*, பெ. (n.) **இலுப்பை** (மலை.); South Indian mahua.

மறுவ. இருப்பை.

**சேயிழை** *šēy-iḻai*, பெ. (n.) **அழகிய அணிகலன்களை அணிந்த பெண்;** woman, as wearing beautiful ornaments. "சேயிழை கணவ" (பதிற்றுப். 88:36).

மறுவ. ஆயிழை.

*[செம் → சேய் + இழை]*

**சேயேபசம்** *šēyēpašam*, பெ. (n.) மரமஞ்சள் (மலை.); tree turmeric.

**சேயோன்¹** *šēyōṉ*, பெ. (n.) *1.* **முருகக்கடவுள்;** Lord Murugaṉ. "சேயோன் மேய மைவரை யுலகமும்" (தொல். பொருள். 5). *2.* **சிவன்** (யாழ்.அக.); Šivaṉ. *3.* **குழந்தை;** baby.

*[சேய்² → சேயோன் = முருகன், சிவன். முதற்காலத்தில் சேயோனும் சிவனும் ஒருவரே.]*

**சேயோன்²** *šēyōṉ*, பெ. (n.) **தொலைவில் இருப்பவன்;** one who is remote. "புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க" (திருவாச. 1:8).

*[சேய்³ → சேயோன்]*

**சேர்¹-தல்** *šēr-*, 2 செ.குவி. (v.i.) *1.* **ஒன்று கூடுதல்;** to become united, incorporated; to join together. "செம்பொன் செய்சுருளுந் தெய்வக் குழைகளுஞ் சேர்ந்து மின்ன" (கம்பரா. பூக்கொய். 5). நீ என்னோடு சேர்ந்தால் உனக்கும் நன்மை, எனக்கும் நன்மை. *2.* **கலத்தல்;** to become mixed, blended. நீரும் பாலுஞ் சேரும். *3.* **தொடர்புடையதாதல்;** to have connection, as with a society or an institution. *4.* **நட்பாதல்;** to be in close friendship or union. அவனோடு சேர்ந்து கொண்டான். *5.* **இயைதல்;** to fit, suit; to be adapted to, as the tenon to the mortise. *6.* **உரித்தாதல்;** to be incidental, co-existent; to appertain, as a quality. இந்த நிலம் அவனைச் சேர்ந்தது (உ.வ.). *7.* **சேர்த்தல்;** to be collected to become aggregated. நெய்க்கு வேண்டிய வெண்ணெய் சேர்ந்து விட்டது (உ.வ.). *8.* **திரளுதல்;** to be well-rounded plump. 'மால்வரை யொழுகிய வாழை . . . என . . . சேர்ந்து' (சிறுபாண். 20, உரை). *9.* **செறிதல்;** to be full, replete. "அருள் சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை" (குறள், 243). *10.* **கிடத்தல்;** to lie down. "மீக்கோ ளுடற் கொடுத்துச் சேர்தல் வழி" (ஆசாரக். 31). *11.* **உளதாதல்;** to exist; co-exist. "தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச் செல்வருஞ் சேர்வது நாடு" (குறள், 731). *12.* **செல்லுதல்;** to go, advance. "எண் சேர்ந்த நெஞ்சத்து" (குறள், 910).

ம. சேருக; க., குட. சேர்; தெ., பட. சேரு; து. சேருனி; கோத. சேர், சேட், சேத்; துட. சோர், சோத்; கோண். சேராணா; கூ. செர்னஆட; குவி. மகரினெ; நா. செத; கொலா. செர்(போ)

*[சுள் → செள் → செரு → சேர்.]*

**சேர்²-தல்** *šēr-*, 2 செ.குன்றாவி. (v.t.) *1.* **கூடுதல்;** to join, associate with. "தீயினஞ் சேரக்கெடும்" (நாலடி. 179). *2.* **பொருந்துதல்;** to be in contact with. "மழகளிறு கந்துசேர்பு" (புறநா. 22:9). *3.* **புணர்தல்;** to copulate. "அல்லில் வந்ததுண்டு சேர்ந்ததில்லை" (தனிப்பா. 1, 151:58) *4.* **அடுத்தல்;** to belong to; to be attached; dependent on, connected with. மன்னரைச் சேர்ந்தொழுகல். *5.* **பெறுதல்;** to obtain, acquire. "உறுதிசேர்ந் திவ்வுடம்பு நீட்டித்து நிற்குமெனின்" (நாலடி, 40). *6.* **சென்றடைதல்;** to reach, gain, arrive at. "நும்மரண் சேர்மின்" (புறநா. 9:5). *7.* **இடை விடாது நினைத்தல்** (தியானித்தல்); to unite in meditation. மாணடி

8. ஒப்பாதல்; to resemble, equal correspond with. "கனஞ்சேர் குழலி" (மருதூ. 25).

[சேர்¹ → சேர்²]

**சேர்³-தல்** *šēṟ-*, 2 செ.குன்றாவி. (v.t.) வெட்டுதல்; to cut. "வாழ்மரஞ் சேர்ந்தவை" (நீலகேசி. 389).

**சேர்⁴-த்தல்** *šēṟ-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. இயைத்தல்; to join. கம்பியின் இரு முனைகளையும் சேர். 2. தொடுத்தல் (வின்.); to append, piece together. பூக்களை நார் கொண்டு சேர்த்தாள். 3. கலத்தல்; to admix, incorporate, amalgamate. பாலொடு நீரைச் சேர்த்தான். 4. புணரச்செய்தல்; to cause sexual union. பசுவைத் தொழுவிற்குச் சேர்க்கக் கொண்டு போனான் (நாஞ்.). 5. கூட்டிக் கொள்ளுதல்; to admit to one's company or party, receive into friendship or service, bring under protection or shelter. வழிப் பயணத்துக்குத் துணையாக அவனையும் சேர்த்துக் கொள். 6. கட்டுதல் (வின்.); to tie, fasten, as with a rope or chain; to secure by fastening. எல்லாவற்றையும் சேர்த்து முடிச்சுப் போடு (உ.வ.). 7. கட்டடம் கட்டுதல் (நிருமித்தல்) (வின்.); to build, construct, make. 8. இடைச் செருகுதல்; to add, interpolate, insert. இல்லாததைச் சேர்த்துப் பேசுகிறான். 9. திரட்டுதல்; to collect, gather, muster, assemble, அறப்போருக்குத் தொண்டர்களைச் சேர். 10. ஈட்டுதல்; to aggregate; to add sum to sum, to amass, as wealth; to increase as riches. பாடுபட்டுச் சேர்த்த காசு. 11. தனதாக்குதல்; to appropriate, make one's own; annex. பகைவனாட்டைச் சேர்த்துக் கொண்டான். 12. அடைவித்தல்; to restore. அதை உரியவனிடம் சேர்த்து விட்டான்.

[சேர் → சேர்-தல் = அணைத்தல். வாய்க்காலிற் பக்கமாக வழிந்தோடும் நீரை மண்ணிட்டுத் தடுத்தலை அணைத்தல் என்பர் உழவர்.]

**சேர்⁵** *šēṟ*, பெ. (n.) 1. திரட்சி (தொல். சொல். 363); roundness, plumpness, globularity. 2. வைக்கோற் புரியாலமைந்த நெற்குதிர்; (G.Tj.D.i, 103); straw-receptacle for paddy. 3. களஞ்சியம் (இ.வ); granary. 4. ஒரேர் மாடு (யாழ்ப்.); yoke of oxen, pair or oxen yoked together. 5. இரண்டு மாடுகளின் முன்னங் கால்களைச் சேர்த்துக் கட்டுதல் (யாழ்ப்.); band joining the forelegs of a pair of cattle. 6. சேங்கொட்டை (நேமிநா.எழுத்து. 15. உரை); marking-nut tree.

ம. சேர்; க. கெரு;

[சேர்¹ → சேர்⁵]

**சேர்⁶** *šēr*, பெ. (n.) 1. எட்டுப்பலங் கொண்ட ஒரு நிறுத்தலளவை; a standard weight = 8 palams.ஒருசேர் கத்திரிக்காய் போடு (உ.வ.). 2. ஒரு முகத்தலளவை; dry or liquid measure = 1/24 paṟ-ai in Ceylon = 70cu. in. and upward in S.India.

க., து., சேரு; H. sēr

[சேர்¹ → சேர்⁶]

**சேர்க்காளி** *šērkkāḷi*, பெ. (n.) சேத்தாளி (இ.வ.) பார்க்க; see *šēttāḷi*.

[சேர்க்கை + ஆளி.]

**சேர்க்கை¹** *šērkkai*, பெ. (n.) 1. நட்பு, தொடர்பு; friendship, intimacy. உன் சேர்க்கைதான் உனக்குக் கேடு (உவ). 2. மற்றொரு பெண்ணை மனைவியாக ஏற்றுக் கொள்ளல்; taking a woman as a paramour. இவள் அவருடைய சேர்க்கை. 3. சீட்டு விளையாட்டு போன்றவற்றில் ஒத்த சீட்டுகளைச் சேர்த்தல்; collecting the equivalents, as in the playing card game. 4. புணர்ச்சி; sexual union.

[சேர் → சேர்க்கை]

**சேர்க்கை²** *šērkkai*, பெ. (n.) 1. திரளுகை; collecting, gathering. 2. ஒன்றோடொன்று சேர்ந்திருக்கும் நிலை, கூடுகை; combining, mixing. சுண்ணாம்பின் சேர்க்கையால் மஞ்சள் செந்நிறமடையும். 3. கலப்புப்பொருள்; compound, mixture. 4. கூட்டுறவு; fellowship; company; friendship; alliance. அவனுக்கு நல்ல சேர்க்கை வேண்டும். 5. ஒன்றிப்பு (வின்.); union. 6. வில்லையாகச் செய்த மணமூட்டும் கூட்டுச் சரக்கு (இ.வ.); scented substances mixed together and made into pills. 7. பள்ளி முதலியவற்றில் மாணவர் ஆவதற்கான பதிவு; admission to a school, etc., enrolment. திறந்தவெளிப் பல்கலைக்கழக மாணவர் சேர்க்கை அறிவிப்பு.

தெ. சேரிக; து. சேரிகெ.

[சேர் → சேர்க்கை]

**சேர்க்கைப்பல்லி** šērkkai-p-palli, பெ. (n.) நிலைப்பல்லி; lizard that chirps for a long time in one place. 'இது சேர்க்கைப்பல்லி போலே பணியன்றோ' (ஈடு, 4. 9:3).

*[சேர்க்கை + பல்லி]*

**சேர்க்கைமணம்** *šērkkai-maṇam,* பெ. (n.) பல வகைக் கூட்டுப் பொருளால் உண்டான மணம்; a fragrance coming out from the mixture of materials. 2. பலரது நட்பால் உண்டாகும் குணம்; habits acquired from company.

*[சேர்க்கை + மணம்]*

**சேர்க்கைமுலை** *šērkkai-mūlai,* பெ. (n.) சந்து மூலை (C.E.M.); hip.

*[சேர்க்கை + மூலை]*

**சேர்க்கைவாசனை** *šērkkai-vāšaṉai,* பெ. (n.) சேர்க்கைமணம் பார்க்க; see *šērkkai-maṇam.*

*[சேர்க்கை + வாசனை]*

**சேர்கட்டு-தல்** *šēr-kaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) தவசத்தை அளந்து சேரிலிடுதல்; to measure and store up paddy in straw receptacle or granary.

*[சேர் + கட்டு-.]*

**சேர்கந்தகம்** *šēr-kandagam,* பெ. (n.) 80 பட்டணம் படியளவுள்ள முகத்தலளவை (G.Sm. D.I,i, 287); a measure of capacity equal to about 80 Madras measures.

*[சேர் + கந்தகம்]*

**சேர்காய்** *šēr-kāy,* பெ. (n.) செங்காய் (நாஞ்.); fruit almost ripe.

*[சே → சேர் + காய்]*

**சேர்கால்** *šēr-kāl,* பெ. (n.) தளைகால் (யாழ்ப்.); clogged feet, as of animals.

*[சேர்¹ + கால்]*




**சேர்காலிடு-தல்** *šēr-kāl-iḍu-,* 20 செ.கு.வி. (v.i.) கால் தளைதல் (வின்.); to hamper the feet, clog.

*[சேர்கால் + இடு-.]*

**சேர்கொடு-த்தல்** *šēr-koḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) காட்டிக்கொடுத்தல்; to betray. "தென்புலர்க் கென்னைச் சேர் கொடான்" (திவ். பெரியதி. 7. 3: 3).

*[சேர் + கொடு-.]*

**சேர்ச்சி** *šērcci,* பெ. (n.) சேர்க்கை பார்க்க; see *šērkkai.* "சேர்ச்சியில் செய்கையொடு" (பெருங்.மகத. 24:84).

*[சேர் → சேர்ச்சி.]*

**சேர்ச்சை** *šērccai,* பெ. (n.) சேர்க்கை (நாஞ்.) பார்க்க; see *šērkkai.*

*[சேர் → சேர்க்கை.]*

**சேர்த்தி** *šērtti,* பெ. (n.) 1. சேர்க்கை பார்க்க; see *šērkkai.* 2. இசைவு; suitability, propriety. 3. ஒப்பு; resemblance, equality. "நித்திய சூரிகளுக்குந் தன்னோடு சேர்த்தி சொல்ல வொண்ணாத" (திவ்.திருவிருத். வியா.); 4. பொருத்தம்; consistency. "வந்தபடிக்கும் . . பேசுகிற பேச்சுக்கும் ஒரு சேர்த்தி கண்டிலோம்" (திருவிருத். 15:99). 5. சொல்லின் புணர்ப்பு (ஈடு); combination, as in words. 6. கடவுள் தேவியுடன் ஒருங்கு வீற்றிருக்கும் சமயம்; occasion when the god and goddess of a temple are seated together. "பெருமாள் சேர்த்தியை விட்டுப் புறப்பட்ட ருளினால்" (கோயிலொ. 96).

*[சேர் → சேர்த்தி.]*

**சேர்த்திக்கை** *šērttikkai,* பெ. (n.) சேர்த்தி, 1,2,3 (யாழ்.அக.) பார்க்க; see *šērtti, 1.2.3.*

*[சேர் → சேர்த்திக்கை]*

**சேர்த்து¹-தல்** *šērttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) சேர்² பார்க்க; see *šēr².*

*[சேர்² → சேர்த்து-.]*

**சேர்த்து²** *šērttu,* பெ. (adv.) கூட; also, in addition to. சிறைக் காவலுடன் சேர்த்து தண்டமும் (அபராதமும்) விதிக்கப்பட்டது.

*[சேர் → சேர்த்து.]*

**சேர்த்துக்கொள்(ளு)-தல்** *šērttu-k-koḷ-*, 13 செ.குன்றாவி. (v.t.) 1. ஏற்றுக் கொள்ளுதல்; to admit into society, take into service. 2. கணக்கிற் பதிதல்; to allow in account, credit. 3. கவர்தல்; to encroach upon, misappropriate.

*[சேர்த்து + கொள்(ளு)-தல்]*

**சேர்த்துப்பிடி-த்தல்** *šērttu-p-piḍi-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. வயப்படுத்துதல் (வின்.); to conciliate, gain over. 2. சிக்கனம் பண்ணுதல்; to economise. 3. சேர்த்துக் கொள்-3. பார்க்க; see šērttu-k-koḷ-3. 4. வைப்பு வைத்தல், தொடுப்பு வைத்தல்; to keep a paramour.

*[சேர்த்து + பிடி-.]*

**சேர்த்துவை-த்தல்** *šērttu-vai-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. சொத்துச் சேர்த்தல்; to lay up a hoard, amass, accumulate. 2. அமைதி உண்டாக்குதல்; to reconcile, reunite.

*[சேர்த்து + வை-.]*

**சேர்ந்த** *šērnda*, கு.பெ.எ. (adj.) 1. குறிப்பிட்ட ஊர், நாடு முதலியவற்றைப் பிறப்பிட மாகவோ வாழ்விடமாகவோ கொண்ட; ஒன்றை எல்லையாகக் கொண்டு அதற்கு உட்பட்ட; belonging to a country, nation, etc. 2. ஒரு பிரிவு, அமைப்பு முதலியவற்றில் உறுப்பினராக உள்ள; indicating membership belonging to; of. நீ எந்தக் கல்லூரியைச் சேர்ந்த மாணவர்.

*[சேர் → சேர்ந்த]*

**சேர்ந்தகை** *šērnda-gai*, பெ. (n.) கூட்டாளி; partner, as in a game, a company.

*[சேர் → சேர்ந்த + கை]*

**சேர்ந்தகைமை** *šērndagaimai*, பெ. (n.) சேர்ந்தலை (யாழ்ப்.) பார்க்க; see šerndalai.

*[சேர் + தகைமை. சேர்தகைமை → சேர்ந்தகைமை]*

**சேர்ந்தணையாக** *šērndaṇai-y-āga*, கு.வி.எ. (adv.) சேர்ந்தரணையாக பார்க்க; see *šērndaraṇai-y-āga*.

**சேர்ந்தரணையாக** *šērndaraṇai-y-āga*, கு.வி.எ. (adv.) சேரிடையாக பார்க்க; see *šēriḍaiyāga*.

*[சேர் + இணை + ஆக - சேரிணையாக → சேர்ந்தரணையாக]*

**சேர்ந்தலை** *šērndalai*, பெ. (n.) 1. கூட்டுறவு; intimate, connection, intimacy of friends. 2. புணர்ச்சி; sexual union.

*[சேர் → சேர்ந்தலை.]*

**சேர்ந்தார்** *šērndār*, பெ. (n.) 1. தஞ்சம் அடைந்தவர்; persons under one's protection. "சேர்ந்தார் தீவினைகட் கருநஞ்சை" (திவ். திருவாய். 2. 3:6.). 2. நண்பர் (சூடா.); partisans, allies, friends. 3. உறவினர் (உ.வ.); relatives. 4. ஆட்கொள்ளப்பட்டவர்; one who is involved. 5. இறந்தவர்; dead person.

*[சேர் → சேர்ந்தார்.]*

**சேர்ந்தார்க்கொல்லி** *šērndār-k-kolli*, பெ. (n.) நெருப்பு (சூடா.); fire, as destroying anything that comes in contact with it.

*[சேர்ந்தார் + கொல்லி. சேர்ந்தார்க் கொல்லி = தன்னைச் சேர்ந்தாரை அழிக்கும் நெருப்பு.]*

**சேர்ந்தாரைக்கொல்லி** *šērndārai-k-kolli*, பெ. (n.) சேர்ந்தார்க்கொல்லி பார்க்க; see šērndār-k-kolli. சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி (குறள், 306).

**சேர்ந்தாற்போல்** *šērndāṟpōl*, வி.எ. (adv.) தொடர்ச்சியாக; continuously; at a stretch. சேர்ந்தாற்போல் ஒரு மணி நேரம் பேசக்கூடியவர் சிலர் உண்டு (உ.வ.).

*[சேர் → சேர்ந்தால் + போல்]*

**சேர்ந்திரணையாக** *šērndiraṇai-y-āga*, கு.வி.எ. (adv.) 1. தொடர்ச்சியாக; சேரிடையாக (நெல்லை.); continuously. 2. மொத்தமாக; in a lot or lump. அவன் சேர்ந்திரணையாகப் பாடுபட்டு வெற்றி பெற்றான் (உ.வ.).

*[சேர் → சேர்ந்த + இரணையாக. இணை → இரணை]*

**சேர்ந்து** *šērndu*, கு.வி.எ. (adv.) 1. செயலைச் செய்யும்போது ஒன்றாக; ஒன்றுகூடி; to gether; jointly. 'இருவரும் சேர்ந்து நடித்த படம். 2. ஒன்றோடொன்று ஒட்டி; sticking together. புத்தகத்தின் பக்கங்கள் சேர்ந்து இருந்தன.

*[சேர் → சேர்ந்து]*

**சேர்ப்பன்** *śerppaṉ*, பெ. (n.) *1. நெய்தனிலத் தலைவன்;* chief of the maritime tract. 'பனிக்கடற் சேர்ப்ப னென்கோ' *(இறை. 1, உரை.)* *2. மழைக் கடவுள் (வருணன்);* Varuṇa. "எற்று தெண்டிரைநீர்ச் சேர்ப்பன்" *(திருவிளை. நான்மா.4).*

*[சேர்ப்பு → சேர்ப்பன்.]*

**சேர்ப்பாடு** *śēr-p-pāḍu,* பெ. (n.) *சேரில் அளந்து வைத்த நெல்லில் ஏற்பட்ட குறைவு (தஞ்சை.);* decrease in quantity of the grain stored up in granary.

*[சேர் + பாடு. உலர்தலால் அல்லது காய்தலால் தவசங்களின் எடை அல்லது அளவு குறையும். இக்குறைப்பாட்டை சேர்ப்பாடு என்பர்.]*

**சேர்ப்பால்** *śēr-p-pāl,* பெ. (n.) *குழம்புப் பால்;* well-boiled milk. 'சேர்ப்பாலுங் கண்ட சர்க்கரையும் போல' *(ஈடு, 9. 3:7).*

*[சேர் + பால்.]*

**சேர்ப்பி-த்தல்** *śēr-p-pi-,* 4 செ.குன்றாவி. (v.t.) *ஒப்படைத்தல்;* hand-over, entrust. பணத்தை யாரிடம் சேர்ப்பித்தாய்?

*[சேர் → சேர்ப்பி]*

**சேர்ப்பு**[1] *śerppu,* பெ. (n.) *1. இடம்;* place. "மேருவின் சிகரச் சேர்ப்பின்" *(கம்பரா. மருத்து. 53).* *2. சேர்பு-1 பார்க்க;* see *śerpu-1.* "ஏகம்பஞ் சேர்ப்பதாக நாஞ் சென்றடைந்து" *(தேவா. 1043, 7).* *3. கடற்கரை;* seashore, coast. "பிறங்குநீர்ச் சேர்ப்பினும்" *(புறநா. 49:6).* *4. கலப்பான பொருள்;* mixture. "சேர்ப்பாய பலவே யுண்மை யென்றிடின்" *(சிசி. 4:5).* *5. பின்னி- ணைப்பு;* supplement, appendix. பிற்சேர்ப்பாக. *6. மனைவியில்லாமல் மற்றொருத்தியை வைத்துக் கொள்ளல்;* another woman taken as wife; to keep a paramour. *7. பட்டியலில் பதிவு செய்தல்;* enrolment. வாக்காளர் சேர்ப்புப் பணி தொடங்கியது. *8. வேலைக்கு ஆட்களைத் தேர்ந்தெடுத்தல்;* recruitment. கப்பல் படைக்கு ஆள் சேர்ப்பு.

*[சேர் → சேர்ப்பு.]*

**சேர்ப்பு**[2] *śerppu,* பெ. (n.) *1. கப்பலினின்று சரக்கிறக்கும் பாலம் (புதுவை.);* wharf. *2. கட்டு மரத்தின் முன்புறம் பின்புறம் நீர் புகாதிருக்க தடுத்துக் கட்டப்பெறுமோர் மரப்பலகை;* a plank to prevent in flow of water in front and back side of catamaran.

*[சேர் → சேர்ப்பு.]*

**சேர்ப்பூட்டு** *śēr-p-pūṭṭu,* பெ. (n.) *1. சரியிணை;* well-matched pair. சேர்ப்பூட்டு மாடு *(யாழ்ப்.).* *2. ஒத்த இணை;* well matched couple.

*[சேர் + பூட்டு]*

**சேர்பு** *śērbu,* பெ. (n.) *1. வாழ்விடம்;* residence, abode. "செங்கமல பார்வையான் சேர்பு" *(அஷ்டப். திருவேங். மா. 7).* *2. வீடு (பிங்.);* house. *3. சேர்மானம்*[1] *(யாழ்.அக.) பார்க்க;* see *śēr-māṉam*[1].

*[சேர் → சேர்பு.]*

**சேர்மம்** *śērmam,* பெ. (n.) *கூட்டுப் பொருள் (வேதி.);* compound.

*[சேர் → சேர்மம்]*

**சேர்மானக்காரன்** *śērmāṉa-k-kāraṉ,* பெ. (n.) *வரி வாங்கும் அதிகாரி (நாஞ்.);* tax collector.

*[சேர்மானம்[1] + காரன்]*

**சேர்மானம்**[1] *śērmāṉam,* பெ. (n.) *1. சேர்க்கை பார்க்க;* see *śerkkai.* *2. கலக்கும் பொருள்;* addition, thing added, accompaniment. *3. இணைப்பு;* joint in carpentry. *4. ஒன்றில் இணைந்த மற்ற பொருளின் கூட்டு அளவு;* proportion of an additive. *5. நகை செய்வதற்காகத் தங்கத்தில் செம்பின் கலப்பு விழுக்காடு;* ratio of copper added to pure gold.

ம. சேருமானம்.

*[சேர் → சேர்மானம்]*

**சேர்மானம்**[2] *śēr-māṉam,* பெ.(n.) *ஓரவஞ்சனை (யாழ்.அக.);* partiality.

*[சேர்மானம் = ஓர் ஓரம்சேர்தல். சேர் + மானம்]*

**சேர்மானம்சேர்த்துவிடல்** *šērmāṉam šērttu-viḍal,* பெ. (n.) கூட்ட வேண்டியதைக் கூட்டுகை; adding what is required. தக்க சேர்மானம் சேர்த்துவிட்டால் சாம்பாரின் மணம் எட்டுத் தெரு வீசுமே! (உ.வ.).

*[சேர்மானம் + சேர்த்துவிடல்]*

**சேர்வள்ளம்** *šērvaḷḷam,* பெ. (n.) இரண்டு பட்டணம்படி அளவுள்ள முற்கால முகத்தலளவை (G.Sm. D.I, i, 287); a measure of capacity equal to about 2 old Madras measures.

*[சேர் + வள்ளம்]*

**சேர்விடம்** *šērviḍam,* பெ. (n.) 1. சேர்பு,1 பார்க்க; see *šērbu,1.* "சேர்விடந் தேடியுஞ் செல்குவரே" (திருக்கருவை, கலித். 38). 2. துயிலிடம் (பிங்.); bed, bed-room. 3. சேர்க்கை,1 (யாழ்அக.) பார்க்க; see *šērkkai,1.* 4. தங்குமிடம்; place of staying. 5. வாழ்விடம்; place of living.

*[சேர்வு + இடம்]*

**சேர்விலங்கு** *šēr-vilaṅgu,* பெ. (n.) தளை (யாழ்ப்); fetters for the feet or hands.

*[சேர் + விலங்கு]*

**சேர்வு** *šērvu,* பெ. (n.) 1. அடைகை; arriving, joining. 2. சேர்பு,1 பார்க்க; see *šērbu,1.* "அகத்தியர் தமக்கு... திருப்பொதியிற் சேர்வு நல்கிய" (தேவா. 1715). 3. சேரி, ஊர் (பிங்.); town, village. 4. திரட்சி (பிங்.); roundness, sphericity. 5. ஒன்றுசேர்கை; union, association, junction, connection. 6. கூட்டம் (வின்.); collection, assocation.

*[சேர் → சேர்வு.]*

ஐரோப்பிய நாடுகளின் ஊர்ப்பெயர்களில் இச்சொல் பரவலாக உள்ளது.

*Yark-shire; Lanka-shire - England.*

**சேர்வேன்** *šērvēṉ,* பெ. (n.) சேரில் அளந்து வைத்தபின் அதிகப்படியாகக் கண்ட தவசம் (தஞ்சை.); excess in quantity of the grain measured and stored up in granary.

சேர் = தவசம் சேர்த்து வைக்கப்படும் களஞ்சியம்.

*[சேர் → சேர்வேன்]*

**சேர்வை**[1] *šērvai,* பெ. (n.) 1. கூட்டுறவு; fellowship, association, union. "தொண்டர்களின் சேர்வை" (தணிகைப்பு. நாரண. 1). 2. கலவை; mixture, compound. "அரிசனவாடைச் சேர்வை குளித்து" (திருப்பு. 139). 3. மருந்து முதலியவற்றிற் கூட்டுங் கலப்புச்சரக்கு; ingredients for medicinal or other composition. 4. சீலையிற் பூசிஇடும் மருந்து (யாழ்ப்.); plaster, salve spread on cloth. 5. மாழை (உலோக)க் கலப்பு (இ.வ.); alloy; admixture of base metal, as in coin. 6. சேனை (வின்.); army. 7. கூட்டம் (வின்.); collection, assemblage. 8. 20 வெற்றிலைக் கட்டு (வின்); twenty bundles of betel leaves. 9. மசாலாப் பொருட்களும் காய்கறி அல்லது இறைச்சியும் கலந்த ஆணம் (குழம்பு); a mixture of spices and vegetables or mutton.

*[சேர் → சேர்வை]*

**சேர்வை**[2] *šērvai,* பெ. (n.) 1. கள்ளிறங்கும்படி சீவிய பாளையைக் கள்ளுக் கலயத்துடன் இணைக்கை; connecting the scraped end of the spathe of a palm-tree with a vessel attached to it to receive toddy. 2. நுங்கு பொதிந்துள்ள பனங்காயின் இளந்தோல்; the tender skin of the unripe palm fruit around the jelly part.

*[சேர் → சேர்வை]*

**சேர்வை**[3] *šērvai,* பெ. (n.) 1. மகளிர் காதணி வகை (வின்.); women's ear-ornament. 2. கூத்து வகை (வின்.); a kind of dance.

*[சேர் → சேர்வை.]*

**சேர்வை**[4] *šērvai,* பெ. (n.) 1. பற்று (புதுவை.); poultice. 2. அணை; dam.

*[சேர் → சேர்வை.]*

**சேர்வைக்களி** *šērvai-k-kaḷi,* பெ. (n.) காசுக் குற்ற வகை; a defect in coins. "கள்ளனென்றுஞ் சேர்வைக்களி யென்றும்" (நெல்விடு. 345).

*[சேர்வை + களி.]*

**சேர்வைக்காரன்** *šērvai-k-kāraṉ,* பெ. (n.) 1. சேர்வைகாரன் பார்க்க; see *šērvai-kāraṉ.* 2. படைத்தலைவன் (வின்.); captain, commander of a division of army.

*[சேர்வை + காரன்]*

**சேர்வைக்கால்** *šērvai-k-kāl,* பெ. (n.) 1. ஏணியைத் தாங்குங்கால் (வின்.); support for a ladder to lean against. 2. தட்டைத் தாங்கி நிற்கும் பீடக்கால்; stand, as of plates.

[சேர்வை + கால்]

**சேர்வைகட்டு-தல்** *šērvai-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. மரக்கிளைகளைச் சேர்த்துத் தாழ்வாரம் இறக்குதல் (வின்.); to unite the upper branches of trees in the form of a portico. 2. வெற்றிலைக்கொடி படரும்படி அகத்திக் கால்களை இரட்டையாகச் சேர்த்துக் கட்டுதல்; to tie the stalks of agatti trees in pairs, as a support for growing betel creepers. 3. வெற்றிலைக் கொடிக்காலில் ஆள் ஏறி வெற்றிலை கிள்ளுவதற்கு வாய்ப்பாக வரிசல் வைத்துக் கட்டுதல் (இ.வ.); to tie scaling pieces in a betel garden.

[சேர்வை + கட்டு-.]

**சேர்வைகாரன்** *šērvai-kāraṉ,* பெ. (n.) அகம்படியார்க்கும் மறவர் கள்ளர் வன்னியரின் உள்வகுப்பினர்க்கும் வழங்கும் பட்டப்பெயர் வகை; caste title of Agambaḍiyār and of certain other sub-castes, viz., Maṟavar, Kaḷḷar, Vaṉṉiyar.

து. சேரிகாரெ

[சேர்வை + காரன்]

**சேர்வைச்சந்தனம்** *šērvai-c-candaṉam,* பெ. (n.) கலவைச் சந்தனம்; compound sandal paste.

[சேர்வை + சந்தனம்]

**சேர்வைச்சீலை** *šērvai-c-cīlai,* பெ. (n.) காரச்சீலை (யாழ்ப்.); plaster, cere-cloth.

[சேர்வை + சீலை]

**சேர்வையணி** *šērvai-y-aṇi,* பெ. (n.) கலவையணிக்கு எதிரிடையான வேறுபட்ட பல அணிகள் சேர்ந்து வரும் அணியிலக்கணம் (அணியி. 43); combination of several distinct figures of speech, opp. to kalavai-y-aṇi.

[சேர்வை + அணி]

**சேர** *šēra,* கு.வி.எ. (adv.) 1. முழுதும்; altogether, wholly. "சேர வாருஞ் செகத்தீரே" (தாயு. காடுங்கரையும். 2). ஒரு சேர முயன்று அவன் வெற்றி பெற்றான் (உ.வ.). 2. கூட (வின்); along with, in company with. 3. அணித்தாக; near. சேரப் போ.

[சேர் → சேர]

**சேரக்கட்டு-தல்** *šēra-k-kaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) செலுத்துதல் (வின்.); to deliver, remit, transmit.

[சேர + கட்டு-.]

**சேரகோன்** *šērakōṉ,* பெ. (n.) 1. சேரவரசன்; the king of Cēra country. 2. நாஞ்சினாட்டு முதலியார்களுக்குரிய பட்டம் (நாஞ்.); a title conferred upon Mudaliars in Nāñjiṉāḍu.

ம. சேரகோன்

[சேரன் + கோன்]

**சேரங்கை** *šēraṅgai,* பெ. (n.) சிறாங்கை; quantity that can be held in the hollow of the palm as a measure; palmful. "சேரங்கை யள்ளிச் சீருடன் கொடுத்தல்" (பரத. பாவ. 23).

[சேரை + அம் + கை]

**சேரடி** *šēr-aḍi,* பெ. (n.) நெற்சேர் நிற்குமிடம்; the place where granary or straw-receptacle for paddy stands. "செந்நெற் சேரடிகளும்" (இராமநா. சுந். 3).

சேர் = தவச வகைகளைச் சேர்த்து வைக்கும் களஞ்சியம்.

[சேர் + அடி]

**சேரடையாக** *šēraḍai-y-āga,* கு.வி.எ. (adv.) தொடர்ச்சியாக; continuously. சேரடையாக மாட்டுமந்தை வீடு திரும்பிக் கொண்டிருக்கிறது.

[சேர் + அடை + ஆக]

**சேரநாடு** *šēra-nāḍu,* பெ. (n.) சேரமண்டலம் பார்க்க; see *šēra-manḍalam.*

ம. சேரநாடு

[சேரன் + நாடு]

**சேரம்** *šēram,* பெ. (n.) கேரளத்தின் பழம் பெயர்; the ancient name of Kēraḷa (சேரநா.).

ம. சேரம்

[சாரல் → சேரல் → சேரம்]

**சேரமண்டலம்** *šēra-manḍalam,* பெ. (n.) சேரநாடு; the Cēra country.

[சேரன் + மண்டலம்]

**சேரமான்** *šēra-māṉ*, பெ. (n.) சேரலன்[1] (புறநா.) பார்க்க; see *šēralaṉ*[1].

*ம.* சேரமான்

*[சேரன் → சேரமான்.]*

ஒ.நோ. தொண்டைமான், அதியமான்; மான்- சிறந்த மனிதர், பெருமகன் போன்ற பொருளில் வரும். உலகெங்கிலும் இச்சொல் மக்கட் பெயருடன் வருகிறது.

**சேரமான்அந்துவஞ்சேரலிரும்பொறை** *šēramāṉ-anduvañjēral-irumporai*, பெ. (n.) **புறநானூற்று 13ஆம் பாடலின் ஆசிரியரான உறையூர் ஏணிச்சேரி முடமோசியாரின் நண்பரான சேரன்;** Cērā king, friend of the poet Uraiyūr Ēṇicēry Muḍamōšiyār, the author of poem no. 13 of Puṟanāṉūṟu. சோழன் முடித்தலைக் கோப்பெருநற் கிள்ளி கருவூரிடஞ் செல்வானைக் கண்டு சேரமான் அந்துவஞ் சேரலிரும்பொறை யொடு வேண்மாடத்து மேலிருந்து உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடியது (புறம்நா. 13, உரை.).

*[சேரமான் + அந்துவன் + சேரல் + இரும்பொறை]*

**சேரமான்இளங்குட்டுவன்** *šēramāṉ-iḷaṅguṭṭuvaṉ*, பெ. (n.) **அகநானூறு 153ஆம் பாடலைப் பாடிய சேரர் குலத்து அரசன்;** a Cērā prince who wrote the poem no. 153 of Aganāṉūṟu.

*[சேரமான் + இளம் + குட்டுவன்]*

**சேரமான்கடலோட்டியவேல்கெழுகுட்டுவன்** *šēramāṉ-kaḍal-ōṭṭiya-vēlkeḻu-kuṭṭuvaṉ*, பெ. (n.) **பரணர் பாடிய, புறநானூற்று 369ஆம் பாட்டின் பாட்டுடைத் தலைவன்;** a Cērā king. சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டுவனைப் பாடியது. (புறநா. 369, உரை).

*[சேரமான் + கடலோட்டிய + வேல்கெழு+ குட்டுவன்]*

இம்மன்னனின் கடல் வெற்றிச் சிறப்பினை விளக்கும் வகையில் கடலோட்டிய என்னும் அடையும், வேலேந்திச் செய்யும் போர்த்திறச் சிறப்பால் 'வேல் கெழு' என்னும் அடையும் இவன் பெயர்க்கு முன் அமைந்துள்ளன. இவன் பெயர்க்கு 'வேள் கெழு குட்டுவன்' என்ற பாடபேதமும் உண்டு.

**சேரமான்கடுங்கோவாழியாதன்** *šēramāṉ-kaḍuṅgo-vāḻiyādaṉ*, பெ. (n.) **கபிலர் பாடிய பாட்டுடைத் தலைவன்;** hero of a poem authored by Kapilar. 'சேரமான் கடுங்கோ வாழியாதனைப் பாடியது (புறநா. 8ஆம் பாடலின் குறிப்பு).

கடுங்கோ என்பது பெருவீரன், பெருமன்னன் என்ற பொருளில் வந்தது.

மறுவ. செல்வக்கடுங்கோவாழியாதன்

*[சேரமான் + கடுங்கோ + வாழி + ஆதன்]*

**சேரமான்கணைக்காலிரும்பொறை** *šēramāṉ-kaṇaikkāl-irumporai*, பெ. (n.) **சோழன் செங்கணானொடு பொருது சிறைப்பட்டு மாண்ட சேரன்;** a Cērā who lost his life in jail, after fighting with Cōlaṉ Šeṅgaṇāṉ. சேரமான் கணைக்கா லிரும்பொறை, சோழன் செங்கணா னொடு (புறநா. 74, உரை.).

மறுவ. கோச்சேரமான், சேரமான்.

*[சேரமான் + கணைக்கால் + இரும்பொறை]*

**சேரமான்குடக்கோநெடுஞ்சேரலாதன்** *šēramāṉ-kuḍakkō-neḍuñjēralādaṉ*, பெ. (n.) **கழகக்கால சேரமன்னன்;** a Cērā king in Šaṅgam age.

*[சேரமான் + குடக்கோ + நெடுஞ்சேரல் + ஆதன்]*

சேரலாதன், செடுஞ்சேரலாதன் என்னும் பெயரோடு விளங்கிய ஏனையோர்களி னின்றும் பிரித்துணர ஏந்தாக இவன் பெயரில் குடக்கோ என்னும் அடை அமைந்ததாகலாம். சேரநாடு, குடநாடு, குட்டுவர் நாடு என்னும் பகுதிகளைக் கொண்டமையால் குடவர், குடவர்கோ, குட்டுவர், குட்டுவர்கோ என்று வழங்கப் பெற்றனர். ஆதன் சேரமன்னர்க்கு வழங்கிய இயற்பெயர்களுள் ஒன்று. இவனைப் பற்றி கழாத் தலையர், பரணர் ஆகியோர் புறநானூறு 62, 63, 368 ஆகிய பாடல்களில் பாடியுள்ளனர்.

**சேரமான்கோக்கோதைமார்பன்** *šēramāṉ-kōkkōdai-mārbaṉ*, பெ. (n.) **கழகக் கால மன்னர்களில் ஒருவன்;** a king in šaṅgam period.

மறுவ. கோதைமார்பன்

*[சேரமான் + கோக்கோதை + மார்பன்]*

*இம்மன்னனைப்பற்றி நற்றிணை (8), அகநானூறு (346), புறநானூறு (48) ஆகியவற்றில் பாடல்கள் உள்ளன.*

**சேரமான்கோட்டம்பலத்துத்துஞ்சிய மாக்கோதை** *šēramān-kōṭṭambalattu-t-tuñjiya mākkōdai,* பெ. (n.) புறநா. 245ஆம் பாடலை இயற்றிய சேரவரசர்; a Cērā king, who wrote the poem Puṟam. 245.

*[சேரமான் + கோட்டம்பலத்து + துஞ்சிய மாக்கோதை]*

**சேரமான்தகடூர்எறிந்தபெருஞ்சேரல் இரும்பொறை** *šēramān-tagaḍūr-eṟinda-peruñjēral-irumpoṟai,* பெ. (n.) கழகக்கால சேரமன்னன்; a Chera king in Šaṅgam period.

*[சேரமான் + தகடூர் + எறிந்த + பெருஞ்சேரல் + இரும்பொறை]*

*இவன் தகடூர் மேல் படை எடுத்து வென்றதால் தகடூர் எறிந்த என்னும் அடையைப் பெற்றான். முரசு கட்டிலில் உறங்கிய மோசிகீரனார்க்குக் கவரி விசியவன் இவனே. புறநானூறு 50வது பாடல் இவனைப் பற்றிக் கூறுகிறது. அரிசில் கிழார் பதிற்றுப்பத்தில் இவனைப் பாடுகிறார்.*

**சேரமான்தோழர்** *šēramān-dōḻar,* பெ. (n.) *(சுந்தரமூர்த்தி நாயனார்)* வன்தொண்டர்; Sundaramūrtti nāyaṉār, as the friend of Šēramāṉ-perumāḷ nāyaṉār. "சேரமான்தோழரென்று பார்பரவு மேன்மை" *(பெரியபு. கழறிற். 66).*

*[சேரமான் + தோழர்]*

**சேரமான்பெருஞ்சேரலாதன்** *šēramān-peruñ-jēralādan,* (n.) கழகக் கால சேரமன்னன்; a Cērā king in Šaṅgam age.

மறுவ. சேரமான் பெருந்தோளாதன்

*[சேரமான் + பெருஞ்சேரலாதன்]*

சோழன் கரிகாலன் விட்ட அம்பு மார்பில் பட்டு முதுகுவழியே வெளிவந்ததை இழுக்கு எனக் கருதி வடக்கிருந்து உயிர்விட்டவன். புறநானூற்று 65, 66ஆம் பாடல்கள் இவனைப் பற்றியது.

**சேரமான்பெருஞ்சோற்றுதியஞ்சேரன்** *šēramān-peruñ-jōṟṟudiyañjēran,* (n.) கழகக் கால சேர வேந்தன்; a Cērā king in Šaṅgam age.

மறுவ. உதியன், உதியஞ்சேரல், உதியஞ் சேரலன்

*[சேரமான் + பெருஞ்சோற்று + உதியன்+ சேரன்]*

பாரதப் போரில் நுற்றுவர் பொருது களத்தொழிய, மறவர்க்குப் பெருஞ்சோறு வழங்கியதால் பெருஞ்சோற்று உதியன் எனப்பட்டான். இவனை முரஞ்சியூர் முடிநாகனார், மாமூலனார், இளங்கீரனார் போன்றவர்கள் பாடியுள்ளனர். அகநானூறு (65, 233, 168), புறநானூறு (2), நற்றிணை (113) ஆகியவற்றில் இவன் பாடப்படுகிறான்.

**சேரமான்பெருமாணாயனார்** *šēramān-perumāṇāyaṉār,* பெ. (n.) நாயன்மார் அறுபத்து மூவருள் ஒருவரும் சேரவரசரும் ஆதியுலா, பொன்வண்ணத்தந்தாதி முதலிய வற்றின் ஆசிரியருமான சிவனடியார் *(பெரியபு.);* a canonized Šaiva saint, Cērā king and author of Ādi-ulā, Poṉ-vaṇṇattandādi. etc., one of 63 nāyaṉmārs.

*[சேரமான் + பெருமாள் + நாயனார்]*

**சேரமான்மாந்தஞ்சேரவிரும்பொறை** *šēramān-māndājēra-v-irumboṟai,* (n.) கழகக் காலத்தில் வாழ்ந்த சேரமன்னர்களில் ஒருவன்; a Cērā king in Šaṅgam period.

*[சேரமான் + மாந்தஞ்சேரவிரும்பொறை]*

இவன் மாந்தரன் என்னும் சேரனின் மகனாக இருக்கலாம் இவன் புறநானூறு 125ல் பாடப் படுகிறான்.

**சேரமான்மாரிவெண்கோ** *šēramān-māri-veṇkō,* (n.) கழகக் கால சேர மன்னன்; a Cērā king in Šaṅgam age.

*[சேரமான் + மாரிவெண்கோ]*

இவனைப் பற்றிய செய்தி புறநானூறு 367ஆம் பாடலில் காணப்படுகிறது.

**சேரமான்யானைக்கட்சேய்மாந்தரஞ்சேரல் இரும்பொறை** *šēramān-yāṉaik-kaṭ-šēy-*

*māndarañjēral-irumboṟai,* (n.) கழகக் கால சேரமன்னன்; a Cērā king in Šaṅgam period.

*மறுவ. கோச்சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை*

*[சேரமான் + யானைக்கட்சேய் + மாந்தரஞ்சேரல் + இரும்பொறை]*

**சேரமான்வஞ்சன்** *šēramāṉ-vañjaṉ,* (n.) புறநானூற்றால் அறியப்படும் சேரமன்னன்; a Cērā king in Pura-nāṉūṟu.

*[சேரமான் + வஞ்சன்]*

இவனைத் திருத்தாமனார் என்னும் புலவர் புறநானூறு 398இல் பாடியுள்ளார்.

**சேரமானெந்தை** *šēramāṉ-endai,* பெ. (n.) குறுந்தொகை 22ஆம் பாடலை இயற்றியவர்; author of 22nd verse of Kurundogai.

*[சேரமான் + எந்தை]*

**சேரர்** *šērar,* பெ. (n.) குடவர்; குட்ட நாட்டவர்; Kings of the western area. குட்டநாடு குறுகி குடநாடு ஆயிற்று.

*[சாரல் (= மலைச்சாரல்) → சேரல் → சேரலர் → சேரர்]*

தமிழக முடியுடை வேந்தர் மூவருள் முதன்மையினராக வைத்து எண்ணப் பட்டவர்கள் சேரர்கள். தமிழ்நாட்டின் மேற்கில் அமைந்துள்ள இன்றைய மலையாள நாடாகிய கேரளப் பகுதியில் அவர்கள் ஆண்டனர். மலை அடுக்குகள் தொடர்ச்சியாகப் பின்னிப் பிணைந்த பகுதி 'சேரல்' எனப்படும். அச்சேரலைச் சேர்ந்த நாடு சேரல் நாடாகும். அதனை ஆண்டவர்கள் 'சேரலர்' எனப்பட்டனர். 'சேரலர்' என்ற சொல் 'சேரர்' எனவும் 'கேரளம்' எனவும் திரிந்து வழங்கலாயிற்று.

இவர்கள் வில் பொறித்த கொடியினையும், பனம்பூ மாலையையும் அடையாளப் பொருள்களாகக் கொண்டனர். இவர்களின் தலைநகர் வஞ்சி,தொண்டி துறைமுகத் தலை நகராக இருந்தது.

**சேரல்** *šēral,* பெ. (n.) சேரலன்[1] பார்க்க; see *šēralaṉ*. "குடக்கோச் சேரல் இளங்கோ வடிகட்கு" *(சிலப். பதி.2).*

*[சேரலன் → சேரல். சேரலன் என்ற பெயர் ஈறுகெட்டுச் சேரல் என நின்றது. ஒ.நோ.: பாண் (பாட்டு) → பாணன் (பாடல் தொழிலான்) → பாண் = பாணர்குலம்]*

**சேரலன்[1]** *šēralaṉ,* பெ. (n.) தமிழ் வேந்தர் மூவருள் சேரநாட்டரசன்; Cērā king one of the three Tamil dynasties. "சேரலர் சுள்ளியம் பேர்யாற்று" *(அகநா. 149).*

ம. கேரல, சேரலன்

*[சாரல் = மலைச்சரிவு, மலை. சாரல் → சேரல் → சேரலன்]*

தமிழ் வேந்தர் மூவர் - சேர, சோழ, பாண்டியர்.

**சேரலன்[2]** *šēralaṉ,* பெ. (n.) பகைவன் (திவா.); enemy.

ம. சேரார்

*[சேர் + அலன் - சேரலன் = தன்னைச் சேர்ந்தவன் அல்லன். ஆகவே பகைவன்]*

**சேரலி** *šērali,* பெ. (n.) ஒரு வகை நெல் (சங்.அக.); a kind of paddy.

**சேரன்** *šēraṉ,* பெ. (n.) சேரலன்[1] பார்க்க; see *šēralaṉ*. "சேரன்பொறையன் மலையன் நிறம்பாடி" *(சிலப். 29, ஊசல்வரி. 2).*

ம. சேரன்

*[சேரலன் → சேரன்]*

குடமலைநாடு சேரனுக்கே சிறப்பாகவுரிய தாயிருந்தமையால் இதனால் மலையன், மலையமான், பொறையன், வானவன், வானவரம்பன் என்னும் பெயர்கள் அவனுக்கு வழங்கி வந்தன.

**சேரன்செங்குட்டுவன்** *šēraṉ-šeṅguṭṭuvaṉ,* பெ. (n.) கழகக் காலச் சேரமன்னன்; a Chera king in Šaṅgam age.

*[சேரன் + செங்குட்டுவன்.]*

சேரமன்னர்களில் சிறந்தவன். கண்ணகிக்குக் கோயில் எடுத்துச் சிறப்புற்றவன். இவனைப் பற்றி பதிற்றுப் பத்தின் ஐந்தாம்பத்து, சிலப்பதிகாரம், மணிமேகலை, புறநானூறு ஆகியவற்றால் அறியலாம். கி.பி. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவன். சிலப்பதிகாரத்தின் ஆசிரியர் இளங்கோவடிகள் இவன் தம்பி.

**சேரன்தீவு** *šēraṉ-tīvu,* பெ. (n.) இலங்கையின் பெயர்; the name of Srilanka.

வெளிநாட்டார் Cerandeep என்று இலங்கையை அழைத்தனர். இஃது ஒரு காலத்தில் சேரநாட்டின் பகுதியாக இருந்தது என்பதை உய்த்துணர்த்துகிறது.

*[சேரன் + தீவு]*

**சேரன்மாதேவி** *šēraṉ-mādēvi*, பெ. (n.) நெல்லை மாவட்டத்திலுள்ள ஊர்; a place in Tirunelveli district. "கீழ்பாற்கெல்லை சேரமாதேவிக்கு மேற்கு" (தெ.க.தொ. 26, கல். 677-2).

சேர அரசியின் நினைவாக ஏற்படுத்தப் பட்ட ஊர்.

[சேரன் + மாதேவி]

**சேரா** *šērā*, பெ. (n.) கள் (அக.நி.); toddy.

[சுரா → சேரா.]

**சேராங்கொட்டை** *šērāṅ-goṭṭai*, பெ. (n.) சேங்கொட்டை; marking-nut.

[சேரான் + கொட்டை]




**சேராச்சேர்த்தி** *šērā-c-cērtti*, பெ. (n.) 1. இசைவற்ற சேர்க்கை (யாழ்ப்.); unequal match, as of a married couple, ploughing bullocks etc. 2. தகாத கூட்டுறவு (யாழ்ப்.); bad company, improper association with low persons. அந்தக் கட்சியும் இந்தக் கட்சியும் சேராச்சேர்த்தியாகத் தேர்தலில் கூட்டுச் சேர்ந்துள்ளன. (உ.வ.). 3. தாறுமாறு (யாழ்ப்.); confusion, disorder. 4. எதிர்பாராத சந்திப்பு (இ.வ.); unusual, unexpected meeting.

[சேர் + ஆ + சேர்த்தி.]

'ஆ' எதிர்மறை இடைநிலை

**சேரார்** *šērār*, பெ. (n.) பகைவர்; enemies, foes. "சேரார் இன்னுயிர் செகுக்கும்" (பரிபா. 2, 48).

ம. சேரார்

[சேர் + ஆ + அர்]

**சேரான்** *šērāṉ*, பெ. (n.) சேங்கொட்டை (வின்.); marking-nut.

[சேர் → சேரான்]

**சேரான்கொட்டை** *šērāṉ-koṭṭai*, பெ. (n.) சேங்கொட்டை பார்க்க; see *šēṅ-goṭṭai.*

**சேரி** *šēri*, பெ. (n.) 1. ஊர் (பிங்.); town, village, hamlet. 2. முல்லைநிலத்தூர் (தொல். பொருள். 18, உரை); village of the Mullai tract, herdsmen's village. 3. தெரு; street. "நஞ்சேரியிற் போகா முடமுதிர் பார்ப்பானை" (கலித். 65). 4. பழந் தமிழர் வாழும் பகுதி; quarters of the ancient Tamils. 5. சிற்றூர்களில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் வாழும் பகுதி; that part of the village where people of certain castes live. சேரிக்குப் பக்கத்திலிருக்கும் வயல். 6. நகர்ப் புறங்களில் ஏழை மக்கள் வாழும் நெருக்கமான குடிசைகளைக் கொண்ட பகுதி; slum. சேரிகளைத் தூய்மை செய்ய மாநகராட்சி நடிவடிக்கை எடுத்துள்ளது.

ம. சேரி; க., குட. கேரி; தெ. கேரி (தெரு, வழி); து. கேரி (தெரு); பட. கேரி (தெரு); கோத. கேர்ய்; துட. கேர்ய (தெரு); E. street; G. strāssa; OE. struot; Du. street; IT. strāta; L. strāta.

[சேர் → சேரி = மக்கள் சேர்ந்து வாழும் இடம்]

**சேரிக்கூத்தன்** *šēri-k-kūttaṉ*, பெ. (n.) திருக்கச்சூர் கோயில் நிலத்திற்குத் தம் ஏரியிலிருந்து நீர் வழங்கியோருள் ஒருவர்; one of the group who donated water to the land of the Tirukkaccūr temple from their tank. "இவன் தம்பி சேரிக்கூத்தனும்" (தெ.க.தொ. 26, கல். 313-6).

[சேரி + கூத்தன்]

**சேரிகை** *šērigai*, பெ. (n.) நகரம், ஊர்; town, village. "சேரிகை யேறும் பழியாய் விளைந்தது" (திருவிருத். 19).

[சேரி → சேரிகை]

**சேரிடு-தல்** *šēriḍu-*, 18 செ.குன்றாவி. (v.t.) பிணைத்தல் (சங்.அக.); to tie or fasten together, bind up.

[சேர் + இடு-.]

**சேரிடையாக** *šēr-idai-y-āga*, கு.வி.எ. (adv.) 1. இடையீடின்றித் தொடர்ச்சியாக; continuously, without break. அவனுக்கு நான்கு கோட்டை நிலம் சேரிடையாக இருக்கிறது (நாஞ்.). 2. ஒரே குழுவாக; in one group.

*[சேர் + இடை + ஆக. ஆ → ஆக]*

**சேரிப்பரத்தை** *šēri-p-parattai*, பெ. (n.) ஊர்ப்புறச் சேரியில் வாழும் பரத்தை (தொல். பொருள். 151, உரை); prostitute, courtesan, living in the quarters set apart for her class.

*[சேரி + பரத்தை]*

**சேரிமடை** *šēri-madai*, பெ. (n.) மதகின் மேலாக வழிந்தோடும் மிகுதி நீர் வாய்க்கால் (R.T.); sluice carrying surplus water.

மறுவ. வடிகால்

*[சேரி + மடை]*

**சேரிமொழி** *šēri-moli*, பெ. (n.) உலக வழக்குச் சொல்; colloquialism. "சேரிமொழியாற் செவ்விதிற் கிளந்து" (தொல். பொருள். 553).

*[சேரி + மொழி]*

**சேருகம்** *šērugam*, பெ. (n.) நாகண வாய்ப்புள் (சது.); common myna.

**சேரும்பாடும்** *šērum-pādum*, கு.வி.எ. (adv.) கூட்டாக் குழப்பமாய் (யாழ்ப்.); promiscuously, in confusion, topsy-turvy.

*[சேர் + படு - சேர்படு → சேர்பாடு → சேரும்பாடும்]*

**சேரும்வழியுரிமை** *šērum-vali-y-urimai*, பெ. (n.) கலப்பு மரபுவழி உரிமை; blending inheritance.

*[சேரும் + வழியுரிமை]*

**சேருவைகாரன்** *šēruvai-kāran*, பெ. (n.) சேர்வைகாரன் பார்க்க; see *šērvai-kāran*. "தேடுங்கன சேருவைகாரர்" (விறலிவிடு. 1001).

*[சேர்வைகாரன் → சேருவைகாரன்]*

**சேரை**[1] *šērai*, பெ. (n.) சாரைப் பாம்பு; rat snake. "சேரையென்று புலம்புவ தேரையே" (கம்பரா. ஆறுசெல்.43).

ம. சேர; க. கேரெ; து. கேரெ, கேரி; துட. கேர்; தெ. சார, கோத. கேர்பாம்ப்.

*[சாரை → சேரை.]*

**சேரை**[2] *šērai*, பெ. (n.) சேரங்கை பார்க்க; see *šēr-aṅgai*. 'உப்பு - ஒரு சேரை போடு' (பாலவா. 874).

க. சேரெ; தெ. சேர

*[சேர் → சேரை]*

**சேல்** *šēl*, பெ. (n.) செந்நிறக் கெண்டை மீன் (சூடா.); carnatic carp. "சேலனைய சில்லரிய" (சீவக. 167).

தெ. சேப்ப

*[கல் → செல் → சேல். கல் = சிவத்தற் கருத்து]*

**சேல்கெண்டை** *šēl-kendai*, பெ. (n.) சேற்கெண்டை பார்க்க; see *šer-kendai*.

மறுவ. சேல்

*[சேல் + கெண்டை]*


சேல்கெண்டை

**சேல்விழி** *šēl-vili*, பெ. (n.) சேல்மீன் போலும் செவ்வரி பரந்த பெண்ணின் கண்; women's eye.

*[சேல் + விழி]*

**சேலகம்** *šēlagam*, பெ. (n.) கோரைக்கிழங்கு (மலை.); tuber of sedge.

ம. சேலகம்

**சேலஞ்சர்க்கரை** *šēlañ-jarkkarai*, பெ. (n.) சேலஞ்சீனி (இ.வ.) பார்க்க; see *šēlañ-jīni*.

*[சேலம் + சர்க்கரை. சருக்கரை → சர்க்கரை]*

**சேலஞ்சீனி** *šēlañ-jīni*, பெ. (n.) பழுப்புச் சருக்கரை (இ.வ.); country sugar, after Salem where it was originally manufactured.

*[சேலம் + சீனி]*

**சேலம்**[1] *šēlam,* பெ. (n.) ஆடை; cloth. "அவள் சேலந்திருந்தி" (பெருங். வத்தவ. 12:97).

*[சீரை → சீலை → சேலை → சேலம்]*

**சேலம்**[2] *šēlam,* பெ. (n.) ஒரு நகரம்; Salem town. "சேலங்கைக் கொண்டு" (ஒரு துறைக். 2).

*[சாரல் (=மலைச்சாரல்) → சேரல் → சேரம் → சேலம்]*

**சேலவன்** *šēlavan,* பெ. (n.) திருமால் (அக.நி.); Viṣṇu, as fish Avatar.

ம. சேலவன்

*[சேல் = மீன். சேல் + அவன் - சேலவன் = மீனாகத் தோற்றரவு செய்த திருமால்]*

**சேலியால்** *šēliyāl,* பெ. (n.) இலாமிச்சை (மலை.); cuscuss.

**சேலிரு** *šēliru,* பெ. (n.) சிவப்பவரை; red bean.

**சேலேகம்** *šēlēgam,* பெ. (n.) 1. சிந்தூரம் (சூடா.); vermilion. 2. சந்தனம் (மலை.); sandal-wood tree.

ம. சேலேகம்

*[சேல் → சேலேகம் = சிந்தூரம் (மு.தா. 140)]*

**சேலேசி** *šēlēši,* பெ. (n.) அசோகு மரம்; asoka tree.

**சேலை**[1] *šēlai,* பெ. (n.) 1. ஆடை (பிங்.); cloth. 2. மகளிர் உடுத்தும் ஆடை; saree. "சேலை கட்டிய மாதரை" (விவேகசிந்.). 3. முழுத் துணியின் பாதி (யாழ்ப்.); half a piece of cloth, measuring 36 to 40 cubits.

ம. சேல; க., பட. சேலெ

A.S. segel; E. sail

*[சீரை → சீலை → சேலை. சீலை = நீண்ட அல்லது அகன்ற துணி. சேலை → வ. சேல. வடவர் சில் (c) என்றொரு செயற்கை மூலத்தை அமைத்துக்கொண்டு ஆடையணிதல் என்று பொருள் கூறுவர். இஃது முற்றிலும் பொருந்தாமை வெள்ளிடைமலை. (வ.மொ.வ.166. ஒமொ.174.)]*

**சேலை**[2] *šēlai,* பெ. (n.) அசோகு (மலை.); mast tree. 2. மரவகை; parchment bark cutch.

ம. சேல

*[செய் → செயலை → சேலை]*

**சேலைக்கலிச்சி** *šēlai-k-kalicci,* பெ. (n.) இச்சி மரம் (L.); jointed ovate-leaved fig.

**சேலைபோடு-தல்** *šēlai-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) கைம்பெண்ணானவட்குப் புதுத்துணி அளித்தல் (நாஞ்.); to offer a new cloth to a widow in mourning.

*[சேலை+போடு-தல். கைம்பெண் ஆனவளின் திடீர் கையறு நிலை கண்டு அவளது எதிர்காலத் தேவையை முன்னிட்டு உறவினர்கள், அவளுக்குச் சேலை அளித்து உதவுதல்]*

**சேலையுஞ்சை** *šēlai-yuñjai,* பெ. (n.) கருவாகை மரம் (L.); fragrant sirissa.

**சேலையுடைத்தாள்** *šēlai-y-uḍaittāḷ,* பெ. (n.) கவிழ்தும்பை; stooping leucas.

**சேலைவாகை** *šēlai-vāgai,* பெ. (n.) வாகை வகை; silken rose tree.

க. சேலபாகெ

*[சேலை → சேலைவாகை]*

**சேலொளி** *šēloḷi,* பெ. (n.) 1. வைடூரியம்; cat's eye. 2. சேற்கெண்டைமீனின் கண்ணை யொத்த ஒளி; light or lustre resembling the carp fish eye.

*[சேல் + ஒளி.]*

**சேலோதம்** *šēlōdam,* பெ. (n.) சந்தனம் (மூ.அ.); sandal-wood tree.

*[சேலேகம் → சேலேதம் → சேலோதம்]*

**சேவகம்**[1] *šēvagam,* பெ. (n.) 1. யானைக்கூடம்; elephant's stall. "சேவக மமைந்த சிறுகட்கரி" (கம்பரா. தைலவ. 12). 2. தூக்கம் (சூடா.); sleep. "யானை சேவகமமைந்த தென்னச் செறிமலர் அமளி சேர்ந்தான்" (கம்பரா. கும்ப. 9).

E. sleep; OE. sladpan; G. schlafen; L. sommus

*[சே[2] + அகம்.]*

**சேவகம்**[2] *šēvagam,* பெ. (n.) 1. பேயுள்ளி; wild onion. 2. கோரைக்கிழங்கு; koray root. 3. சோம்பு; anise seed.

*[சே[2] + அகம்.]*

**சேவகன்** *šēvagan̲*, பெ. (n.) சேவகன்பூடு (மலை.) பார்க்க; see *šēvagan̲-pūḍu.*

*[செம் + அகம் – செமகம் → சேமகம் → சேவகம் → சேவகன்]*

**சேவகன்பூடு** *šēvagan̲-pūḍu*, பெ. (n.) 1. சிற்றாமுட்டி (மலை.); rose-coloured sticky mallow. 2. காந்தள்; Malabar glory-lily. 3. சிறு புள்ளடி; scabrous ovate unifoliate ticktrefoil.

*[சேவகன்² + பூடு]*

**சேவகனார்** *šēvagan̲ār* பெ. (n.) மஞ்சட் காளான்; yellow fungus.

**சேவகனார்கிழங்கு** *šēvagan̲ār-kiḻaṅgu*, பெ. (n.) மருந்தாகப் பயன்படும் கிழங்குவகை (பதார்த்த. 408); a kind of root, used medicinally.

*[சேவகன்² → சேவகனார் + கிழங்கு]*

**சேவடி** *šēvaḍi*, பெ. (n.) சிவந்த பாதம்; lotus-red foot. "மன்னிய வீசன் சேவடி நாளும் பணிகின்ற" (தேவா. 104:15).

ம. சேவடி

*[சே + அடி. சே = சிவப்பு, செம்மை]*

**சேவணம்** *šēvaṇam*, பெ. (n.) ஒரு நாடு; a country.

**சேவணர்** *šēvaṇar*, பெ. (n.) சேவண நாட்டார் (கலிங். 318); people of the country of Šēvaṇam.

**சேவதக்கு-தல்** *šēvadakku-*, 5 செ.கு.வி. (v.i.) எருதுக்கு விதையடித்தல்; to geld a bull. "சேவதக்குவார் போலப் புகுந்து" (திவ்.பெரியாழ். 4. 5:7).

*[சே + அதக்கு-,]*

**சேவமரம்** *šēvamaram*, பெ. (n.) சாயமரம்; Malay sandal.

**சேவல்¹** *šēval*, பெ. (n.) 1. மயிலொழிந்த பறவைகளின் ஆண் (தொல். பொருள். 603); male of birds and fowls, excepting peacock. 2. கோழியின் ஆண் (திவா.); cock. 3. ஆண் அன்னம் (திவா.); male swan. "அன்னச் சேவலன்னச் சேவல்" (புறநா. 67) 4. கருடன்; kite. "உயிர்கொடிச் சேவலோய்" (பரிபா. 3:18). 5. முருகக் கடவுளூர்தியாகிய மயில் (தொல். பொருள். 603, உரை.); peacock, the vehicle of Murugan̲. 6. ஆண்குதிரை; stallion. "குதிரையுளாணினைச் சேவலென்றலும்" (தொல். பொருள். 623).

F. chevell

ம. சேவல், சாவல் கோழி

*[சே → சேவு → சேவல். சேவல் என்பது விலங்கு, பறவை முதலானவற்றின் ஆண்பாற் பொதுப்பெயராகும். (எ.கா) சேங்கன்று = ஆண்கன்று. "சேவும் சேவலும் இரலையும் கலையும் . . . போத்தும் கண்டியும் கடுவனும் பிறவும் யாத்த ஆண்பாற் பெயரென மொழிப" (தொல்.1501) (தமி.வ.108)]*

**சேவல்²** *šēval*, பெ. (n.) காவல்; watching. "இறடியஞ் சேவற்கு" (கல்லா. 84: 9).

ம. சேவல்

*[செய்வி → சேவி → சேவு → சேவல்]*

**சேவல்³** *šēval*, பெ. (n.) சேறு (சூடா.); mud, mire.

மறுவ. களிமண், அளறு, சகதி.

*[செவ்வல் → சேவல்]*

**சேவல்காத்தல்** *šēval-kāttal*, பெ. (n.) பயிர்க்குப் புள், விலங்கு முதலியவற்றாற் கேடு விளையாமற் காக்கை (ஏரெழு.); keeping watch over corn-field, protecting it from birds, beasts, etc.

*[சேவல் + காத்தல்]*

**சேவலஞ்சித்தி** *šēvalañjitti*, பெ. (n.) கீரிப் பிள்ளை; mongoose (சா.அக.).

**சேவலவரை** *šēval-avarai*, பெ. (n.) கோழியவரை; fowl bean.

*[சேவல் + அவரை]*

**சேவலாங்கொட்டை** *šēvalāṅ-goṭṭai*, பெ. (n.) நேர்வாலங்கொட்டை; Indian croton seed.

*[சேவாலம் + கொட்டை]*

**சேவலாள்** *šēval-āḷ*, பெ. (n.) விளை புனங்களைக் காவல்புரிபவன் (W.G.); watchman in corn-field.

*[சேவல்² + ஆள்]*

**சேவலான்** *śēval-āṉ,* பெ. (n.) சேவற் கொடியோன் பார்க்க; see *śēvaṟ-koḍiyōṉ.* "சேவலானெனத் தயித்திய னனையவத் திகத்தர்" (பாரத. நிரைமீட். 20).

*[சேவல்' → சேவலான்]*

**சேவற்கட்டு** *śēvaṟ-kaṭṭu,* பெ. (n.) சேவற்போர் (எங்களூர். 10); cock-fight.

*[சேவல் + கட்டு. கத்தி போன்றவற்றை சேவலின் காலில் கட்டி போர் புரியவிடல்]*

**சேவற்கத்தி** *śēvaṟ-katti,* பெ. (n.) போர்ச் சேவல்களின் கால்களிற் கட்டுங் கத்தி; knife fastened to the feet of cocks in cock-fight, spur.

*[சேவல் + கத்தி]*


சேவற்கத்தி

**சேவற்கொடி** *śēvaṟ-koḍi,* பெ. (n.) ஒருவகைக் கொடி; cock-creeper (சா.அக.).

**சேவற்கொடியோன்** *śēvaṟ-koḍiyōṉ,* பெ. (n.) முருகக்கடவுள் (திவா.); Muruga, as having the cock on his banner.

*[சேவல் + கொடியோன். சேவற்கொடி யோன் = சேவலைக் கொடியில் கொண்டவன்]*

**சேவற்கொண்டை** *śēvaṟ-koṇḍai,* பெ. (n.) 1. சேவலின் தலையில் உள்ள கொண்டை போன்ற அமைப்பு; cock's crest. 2. கோழிக் கொண்டைச் செடி; cock-comb.

*[சேவல் + கொண்டை]*

**சேவற்சூடு** *śēvaṟ-śūḍu,* பெ. (n.) சேவற் கொண்டை; cock's crest.

*[சேவல் + சூடு]*

**சேவற்பண்ணி** *śēvaṟ-paṇṇi,* பெ. (n.) நாணற் புல்; kaus grass (சா.அக.).

**சேவற்பண்ணை** *śēvaṟ-paṇṇai,* பெ. (n.) கோழிக் கொண்டைச் செடி (சங்.அக.); cocks- comb.

*[சேவல் + பண்ணை]*

**சேவற்பூ** *śēvaṟ-pū,* பெ. (n.) கோழிக் கொண்டைச் செடி; cock's comb (சா.அக.).

**சேவற்போர்** *śēvaṟpōr,* பெ. (n.) சேவல்களின் காலில் கத்தியைக் கட்டி மோத விடும் ஒருவகை போர்; cock-fight.

*[சேவல் + போர்]*

**சேவாலகம்** *śēvālagam,* பெ. (n.) சத்திசாரணை; spreading hogweed.

**சேவாலங்கொட்டை** *śēvālaṅ-goṭṭai,* பெ. (n.) சேவாலம் பார்க்க; see *śēvālam.*

*[சேவாலம் + கொட்டை]*

**சேவாலம்** *śēvālam,* பெ. (n.) நேர்வாளம் (மலை.); croton.

**சேவாலிகம்** *śēvāligam,* பெ. (n.) கருநொச்சி (மலை.); willow-leaved justicia.

**சேவியம்** *śēviyam,* பெ. (n.) வெள்ளை வெட்டிவேர் (மூ.அ.); a variety of cuscuss grass.

**சேவியால்** *śēviyāl,* பெ. (n.) 1. இலாமிச்சை; cuscuss root. 2. வேலமரம்; acacia tree (சா.அக.).

**சேவியால்புல்லுருவி** *śēviyāl-pulluruvi,* பெ. (n.) வேலமரத்தின்மேற் புல்லுருவி; a parasite on acacia tree (சா.அக.).

*[சேவியால் + புல்லுருவி]*

**சேவு**[1] *śēvu,* பெ. (n.) 1. செவ்வயிரம்; heart-wood. 2. சிவப்பு வண்ணம்; red colour. 3. மரவயிரம்; headcore of a tree. 'செய் தகை சேவேறும், செய்யாத கை நோவேறும்' (பழ.).

*[சே → சேவு]*

**சேவு**[2] *śēvu,* பெ. (n.) கடலை மாவைப் பிசைந்து அச்சில் தேய்த்து எண்ணெய்யில் இட்டுச் செய்யப்படும் கார அல்லது இனிப்புச் சுவையுடைய தின்பண்டம்; a savoury or sweet in the shape of stort stick-strips made of chick- pea past fried in oil. இனிப்புச் சேவு.

*[சேர் → சேர்வை → சேவை → சேவு]*

**சேவுகன்** *šēvugaṉ*, பெ. (n.) பேயுள்ளி அல்லது நரி வெங்காயம்; wild onion.

**சேவை**[1] *šēvai*, பெ. (n.) எதிராக; towards, in front of. கடைக்குச் சேவை (இ.வ.).

*[செவ்வை → சேவை]*

**சேவை**[2] *šēvai*, பெ. (n.) அரிசி மாவை நூல் போலப் பிழிந்து நீராவியில் வேகவைத்துச் செய்யப்படும் உணவு; a noodle-like steamed rice preparation.

மறுவ. இடியாப்பம்

*[சேர் → சேர்வை → சேவை]*

**சேவைக்கீல்** *šēvai-k-kīl*, பெ. (n.) நீண்டகீல் (C.E.M.); long hinges.

*[சேர் → சேர்வை → சேவை + கீல் - சேவைக்கீல்]*

**சேவைநாழி** *šēvai-nāḻi*, பெ. (n.) சேவை பிழிவதற்கான அடித்துளைகளும் கைப் பிடிகளும் கொண்டு, ஒன்றுக்குள் ஒன்று செல்லுமாறு அமைந்த உழக்குப் போன்ற கருவி; a kind of colander-like vessel, used in preparing šēvai.

*[சேவை + நாழி]*



சேவைநாழி

**சேவையர்காவலன்** *šēvaiyar-kāvalaṉ*, பெ. (n.) சேக்கிழார்; Šēkkiḻār. "வளவர் கோமான் சேவையர் காவலரை முகநோக்கி" (சேக்கிழார். பு.25).

**சேழ்** *šēḻ*, பெ. (n.) மேலிடம்; the upper region. "சேழுயர்ந்த மணிமாடம்" (திவ். பெரியதி. 4. 4.9).

ம. சேழ்

*[சேண் → சேழ்]*

**சேழம்** *šēḷam*, பெ. (n.) சேளம் (நாஞ்.) பார்க்க; see *šēḷam*.

*[சேளம் → சேழம்]*

**சேழி** *šēḻi*, பெ. (n.) முற்றம் (தருமபுரி.); court-yard.

*[சேழ் → சேழி]*

**சேளம்** *šēḷam*, பெ. (n.) மீதி (நெல்லை); remainder, balance.

**சேளாகம்** *šēḷāgam*, பெ. (n.) ஒரு வகைக் கோணி (இ.வ.); a kind of gunny bag.

ம. சேளாகம்

**சேற்கண்ணி** *šēṟ-kaṇṇi*, பெ. (n.) மெய்யழகுப் பூச்சு, அரிதாரம் (சங்.அக.); sulphide of arsenic.

*[சேல் + கண்ணி]*

**சேற்கெண்டை** *šēṟ-keṇḍai*, பெ. (n.) கரும்பச்சை நிறமுடைய கெண்டை மீன் வகை; carnatic carp, greenish-brown, weighing as much as 25 lb.,

*[சேல் + கெண்டை]*

**சேற்றாமை** *šēṟṟāmai*, பெ. (n.) ஆமை வகை; common terrapin.

*[சேறு + ஆமை]*



சேற்றாமை

**சேற்றாரால்** *šēṟṟāral*, பெ. (n.) 15 விரல நீளமும், பழுப்பும் பச்சையுங் கலந்த நிறமுமுள்ள ஆரால் மீன் வகை; sand-eel brownish or greenish, attaining 15in. in length.

*[சேறு + ஆரால்]*

**சேற்றில்வளர்ந்தமடச்சி** *šēṟṟil-vaḷarnda-maḍcci*, பெ. (n.) பிரமிப்பூடு; brahmiplant (சா.அக.).

*[சேற்றில் + வளர்ந்த + மடச்சி]*

**சேற்றுக்கால்** *ṡēṟṟu-k-kāl,* பெ. (n.) *1.* வயலில் தொளியடித்து நாற்றுநடவு செய்து பயிர் செய்யும் வேளாண்மை; wet-ploughing system of cultivation. *2.* தொளியடித்து விதைக்கும் வயல்; land trampled, ploughed and puddled for sowing paddy. *3.* களிமண் வயல், நஞ்சை (தஞ்சை); slushy clay-soil.

*[சேறு + கால்]*

**சேற்றுக்கெண்டை** *ṡēṟṟu-k-keṇḍai,* பெ. (n.) சேற்றில் வளரும் கெண்டை மீன்; a kind of fish

*[சேறு → கெண்டை]*



சேற்றுக்கெண்டை

**சேற்றுத்தாவி** *ṡēṟṟu-t-tāvi,* பெ. (n.) ஈரமும் மென்மையும் கொண்ட களிமண்; wet and soft earth mire, aspersions, mud slipper.

*[சேறு + தாவி]*

**சேற்றுநாற்று** *ṡēṟṟu-nāṟṟu,* பெ. (n.) சேறுசெய்த வயலில் முளைத்த நாற்று (G.Tj.D.I, 96); seedling, growing from slushed seed-bed, mud-shoots.

*[சேறு + நாற்று]*

**சேற்றுப்பலகை** *ṡēṟṟu-p-palagai,* பெ. (n.) *1.* மண்தாங்கிப் பலகை; wooden lintel. *2.* சேறடித்த வயலைப் பரம்படிக்கப் பயன்படும் பலகை; wooden plank to flatten the slushed wet land.

*[சேறு + பலகை]*

**சேற்றுப்புண்** *ṡēṟṟu-p-puṇ,* பெ. (n.) சேற்றால் கால்விரலிடையில் உண்டாகும் அரிபுண்; itching sore between the toes, due to frequent walking in the mud.

ம. சேற்றுப்புண்ணு; பட. கொரெகுண்ணு

*[சேறு + புண்]*

**சேற்றுப்புழுதி** *ṡēṟṟu-p-puḻudi,* பெ. (n.) உழப்பட்ட நிலம் (R.T.); ploughed land.

*[சேறு + புழுதி]*

**சேற்றுமரக்கரப்பான்** *ṡēṟṟumara-k-karappāṉ,* பெ. (n.) குழந்தைகளுக்கு வரும் கரப்பான் நோய்; eczema of children due to phlegm humour (சா.அக.).

**சேறடி** *ṡēṟaḍi,* பெ. (n.) சேறடை (யாழ்ப்.) பார்க்க; see *ṡēṟaḍai.*

**சேறடை** *ṡēṟaḍai,* பெ. (n.) வண்டிச்சக்கரத்தில் படும் சேற்றை அகற்றிக் கொண்டேயிருக்கும் கருவி; tool to remove the slush from the wheel of the cart; mudguards of a carriage.

*[சேறு + அடை. சேறு அடையாவண்ணம் விலக்கிக் கொண்டேயிருக்கும் கருவி]*

**சேறல்** *ṡēṟal,* பெ. (n.) செல்லுகை (சூடா.); passing, going, reaching. "தென்றிசை சேறலாற்றா" *(கம்பரா. சம்புமாலி. 19).*

*[செல் → சேறல்]*

**சேறாடி**[1] *ṡēṟāḍi,* பெ. (n.) சேறடை (யாழ்ப்.) பார்க்க; see ṡēṟaḍai.

*[சேறு + ஆடி - சேறாடி. ஆடு → ஆடி.]*

**சேறாடி**[2] *ṡēṟāḍi,* பெ. (n.) ஒரு வகை விருது; a royal emblem carried in procession. "பொன்னெழுத் தெழுது சேறாடி பொற்புற" *(திருக்காளத். பு. 7:66).*

**சேறாடு**[1]**-தல்** *ṡēṟāḍu-, 5* செ.கு.வி. (v.i.) வயலில் விதைத்தற்குத் தொளி கலக்குதல் (யாழ்ப்.); to make a field slushy for sowing paddy.

*[சேறு + ஆடு-.]*

**சேறாடு**[2]**-தல்** *ṡēṟāḍu-, 5* செ.குன்றாவி. (v.t.) துவைத்துக் குழைத்தல்; to mash, reduce to pulp, as mangled bodies on the field of battle.

*[சேறு + ஆடு. சேறாடு = சேற்றைத் துவைத்துக் குழப்புதல்.]*

**சேறாம்பாம்பு** *ṡēṟām-pāmbu,* பெ. (n.) *10* அடி நீளமும் பழுப்பு நிறமும் உள்ள மீன்வகை; eel, uniform brown, attaining 10 ft. in length.

*[சேறு + ஆம் + பாம்பு; சேற்று மணலுள் அடிக்கடி புதைந்து செல்லும் செவிளுள்ள மீன், வடிவில் பாம்பு போலிருக்கும்]*

**சேறி** *šēṟi*, பெ. (n.) 1. 2 அடி நீளமும் கரும்பலகை நிறமும் உடைய கடல்மீன் வகை; sea-fish, slaty grey attaining 2ft. in length, *Aiagramma cinctum*. 2. $4^3/_4$ விரல நீலமும் கருமை கலந்த சாம்பல் நிறமும் உடைய கடல்மீன் வகை; sea-fish dark-grey attaining $4^3/_4$ in. in length, mugil labiosus.

**சேறு**[1] *šēṟu*, பெ. (n.) 1. நீருடன் கலந்து குழைந்த மண், சகதி; mud, mire, slush, loam. "கதிர்மூக் காரல் கீழ்ச்சேற் றொளிப்ப" (புறநா. 249). 2. குழம்பு; liquid of thick consisting as sandal paste. "சாறுஞ் சேறும்" (பரிபா. 6:41). 3. பனம் பழம் தேங்காய் முதலியவற்றின் செறிந்த உள்ளீடு; kernel, as of a coconut. "நுங்கின் றீஞ்சேறு மிசைய" (புறநா. 225). 4. விளாம்பழம் (மலை.); wood-apple. 5. சீழ்; pus. புண்ணிலிருந்து சேறுஞ் சலமும் பாய்கின்றன (நாஞ்.).

ம. சேறு, சேற், சேர்; க. கெசர்; தெ. செறுகு; து. கெலர், கேது; பட. சேரு; குரு. கச்ச்; மா. க்வகூ

[செறி → சேறு]

**சேறு**[2] *šēṟu*, பெ. (n.) கோயில் திருவிழா (சூடா.); temple festival.

**சேறு**[3] *šēṟu*, பெ. (n.) 1. சாரம்; sap, juice. "சேறு சேர்கனி" (சூளா. சுயம். 66). 2. இனிமை; sweetness, toothsomeness. "தெண்ணீர்ப் பசுங்காய் சேறுகொள முற்ற" (நெடுநல். 26). 3. கள் (சூடா.); toddy. "சேறுபட்ட தசும்பும்" (புறநா. 379:18). 4. தேன்; honey. "சேறுபடு மலர்சிந்த" (சீவக. 426). 5. பாகு; treacle. "கரும்பின் றீஞ்சேறு" (பதிற்றுப். 75:6).

[சாறு → சேறு]

**சேறு**[4] *šēṟu*, பெ. (n.) அரத்தின நீரோட்டம் (இ.வ.); water, transparency and brilliance of a gem.

**சேறுகம்** *šēṟugam*, பெ. (n.) விதை; seed (சா.அக.).

[சாறு → சேறு → சேறுகம்]

**சேறுகுத்தி** *šēṟu-kutti*, பெ. (n.) சேற்றைத் தள்ளற்கு உதவுங் கருவி (புறநா. 61. உரை); an instrument for removing mud.

[சேறு + குத்தி]

**சேறுஞ்சுரியும்** *šēṟu-ñ-šuriyum*, பெ. (n.) சகதி; mud and mire.

மறுவ. சேறும் சகதியும் (முகவை)

[சேறு + சுரி]

**சேறுஞ்சுரியுமாய்** *šēṟu-ñ-juriyum-āy*, கு.வி.எ. (adv.) குழைவாய்; in over boiled mashy condition. சோறு சேறுஞ்சுரியுமா யிருக்கிறது (யாழ்ப்.).

[சேறு + சுரியும் + ஆய்]

**சேறுதடித்தநீர்** *šēṟu-taḍitta-nīr*, பெ. (n.) சேறு கலந்த கலங்கலான தண்ணீர்; muddy water.

மறுவ. மண்டி, மண்டிநீர் (முகவை)

[சேறு + தடித்த + நீர்]

**சேறுதாங்கி** *šēṟu-dāṅgi*, பெ. (n.) சேற்றினை வலைப்பையில் செல்லவிடாமல் செய்யும் ஒரு வலைக்கூறு; a part of the net to prevent slush going into the net.

[சேறு + தாங்கி]

**சேறுதூக்கி** *šēṟu-tūkki*, பெ. (n.) சேறு அகற்றி; mud jack.

[சேறு + தூக்கி]

**சேறை** *šēṟai*, பெ. (n.) சேரை[2] பார்க்க; see *šērai*[2].

**சேன்** *šēṉ*, பெ. (n.) சேனன் பார்க்க; see *šēṉaṉ*. "புரவிச்சே னென்றியாவரும் புகழப்பட்டார்" (சீவக. 1681).

[சேனன் → சேன்]

**சேனம்** *šēṉam*, பெ. (n.) சேம்பு[1] பார்க்க; see *šēmbu*.

[சேம்பு → (சேம்மு) → சேனம்]

**சேனம்பாம்பு** *šēṉam-pāmbu*, பெ. (n.) சேனா[1] பார்க்க; see *šēṉā*.

**சேனன்** *šēṉaṉ*, பெ. (n.) ஒரு பழைய பட்டப் பெயர்; an ancient title. "சந்து சேனனு மிந்து சேனனுந் தருமசேனனும்" (தேவா. 859, 4).

**சேனா**[1] *šēṉā*, பெ. (n.) 1. நான்கு அடிக்கு மேல் வளரும் பழுப்பு நிற மீன்வகை; true eel, brownish, attaining more than 4 ft. in length. 2. மலங்குமீன் (வின்.); a kind of eel with picked head.

**சேனா**[2] *šēṉā*, பெ. (n.) நிலவாவிரை; Thirunelveli senna.

**சேனாங்கம்** *šēṉāṅgam*, பெ. (n.) படையின் உறுப்பு (யாழ்.அக.); component division of an army.

*[சேனை + அங்கம்]*

**சேனாசமுத்திரம்** *šēṉā-šamuttiram*, பெ. (n.) 1. கடல்போன்ற பெரும் படை; army, vast as an ocean. 2. பெருங்கூட்டம் (உ.வ.); immense crowd.

*[தானை → சேனை + சமுத்திரம். தானை = படை, பெரும்படை.]*

Skt. சமுத்ர → த. சமுத்திரம்

**சேனாதிபதி** *šēṉādi-padi*, பெ. (n.) சேனாபதி பார்க்க; see *šēṉā-padi*.

**சேனாதிபன்** *šēṉādi-paṉ*, பெ. (n.) சேனாபதி பார்க்க; see *šēṉā-padi*. "சூரனே சேனாதிபன்" *(அறப்பளி. 85)*.

*[சேனை + அதிபன்]*

Skt. அதிப → த. அதிபன்

**சேனாதிராயன்** *šēṉādi-rāyaṉ*, பெ. (n.) 1. சேனாபதி (யாழ்.அக.) பார்க்க; see *šēṉā-padi*. 2. முருகக்கடவுள்; god Murugaṉ.

*[சேனை + ஆதிராயன்]*

Skt. அதிராஜ → த. அதிராயன். அதி → ஆதி

**சேனாபத்தியம்** *šēṉāpattiyam*, பெ. (n.) படைத்தலைமை; office of a commander, commander-ship.

*[சேனை + பத்தியம் - சேனைபத்தியம் → சேனாபத்தியம் Skt. பத்ய → த. பத்தியம்]*

**சேனாபதி**[1] *šēṉā-padi*, பெ. (n.) படைத் தலைவன்; general, commander of an army. "சுவேதனைச் சேனாபதியாய்" *(திவ். இயற். 4:24)*.

*[சேனை + பதி. Skt. பதி]*

**சேனாபதி**[2] *šēṉā-padi*, பெ. (n.) பண்வகை (இராகவகை) (பரத. ராக. 103.); a specific melody-type.

**சேனாபதியாழ்வார்** *šēṉāpadi-y-āḻvār*, பெ. (n.) திருமாலுக்கு விருந்து கொடுத்தவர் (M.E.R. 514 of 1917); Viṣṇu's host.

மறுவ. சேனை முதலியார்

*[சேனாபதி + ஆழ்வார்]*

**சேனாமரம்** *šēṉā-maram*, பெ. (n.) அழிஞ்சில் மரம்; alangium tree (சா.அக.).

*[சே → சேனா + மரம்]*

**சேனாமுகம்** *šēṉā-mugam*, பெ. (n.) 1. முற்படை; front army. "வாழ்க சேனாமுகம்" *(சிலப். 25: 192)*. 2. மூன்று தேர், மூன்று யானை, ஒன்பது குதிரை, பதினைந்து காலாட்கள் அடங்கிய ஒரு படைத்தொகை (பிங்.); division of an army comprising 3 chariots, 3 elephants, 9 horses and 15 foot-soldiers.

*[சேனை + முகம்]*

**சேனாவரைசி** *šēṉā-v-araiši*, பெ. (n.) சேனாவரையன் மனைவி (நன். 276, மயிலை).; wife of commander-in-chief.

*[சேனை + அரைசி]*

**சேனாவரையம்** *šēṉāvaraiyam*, பெ. (n.) தொல்காப்பியச் சொல்லதிகாரத்துக்குச் சேனாவரையர் செய்த உரை; a commentary on the Šol-l-adigāram of Tolkāppiyam by Šēṉāvaraiyar.

*[சேனாவரையர் → சேனாவரையம்]*

**சேனாவரையர்** *šēṉāvaraiyar*, பெ. (n.) தொல்காப்பியச் சொல்லதிகாரத்துக்குச் சிறந்த உரை செய்த ஆசிரியர்; the renowned commentator on the Šol-l-adigāram of Tolkāppiyam.

*[சேனை + அரையர்]*

**சேனாவரையன்** *šēṉā-varaiyaṉ*, பெ. (n.) சேனாபதி (நன். 278, மயிலை) பார்க்க; see *šēṉā-pati*.

*[சேனை + அரையன்]*

**சேனாவு** *šēṉāvu*, பெ. (n.) தகரை (மலை.); foetid cassia.

**சேனானியன்** *šēṉāṉiyaṉ*, பெ. (n.) சேனாதிராயன் (யாழ்.அக.) பார்க்க; see *šēṉādi-rāyaṉ*.

**சேனை**[1] *šēṉai,* பெ. (n.) *1. யானை, தேர், பரி, காலாள் என்ற நாற்படை;* army comprising four-fold divisions, viz., yāṉai, dēr, pari, kālāḷ. *2. படைக்கலம்;* weapon. *3. கூட்டம்;* multitude, crowd. "குரிசிலை விடாத சேனையே" *(கம்பரா. தைலமா. 8). 4. உற்றார் உறவினர்;* friends and relations. அவன் சேனையை யாரால் தாங்க முடியும்?

*[தானை → (சானை→) சேனை. தானை = படை]*

**சேனை**[2] *šēṉai,* பெ. (n.) *1.* தெரு *(பிங்.);* street. *2. கடைத்தெரு;* bazaar. *3. சந்தை* (வின்.); market, fair.

**சேனை**[3] *šēṉai,* வி.அ. (adj.) பல; many. அவன் வந்து சேனைநாள் ஆயின (இ.வ.).

தெ. சேந

**சேனை**[4] *šēṉai,* பெ. (n.) சேணம்; saddle.

*[சேணம் → சேணை → சேனை]*

**சேனை**[5] *šēṉai,* பெ. (n.) *1. கரணை வகை* (தைலவ. தைல. *135);* tahiti arrowroot, Tacoa pinnatifida. *2. கரணை வகை* (M.M.); tuberous- rooted herb. Amorphophallus campanulatue.

ம. சேன; க., து., கேனெ; கூ. கூனெ

*[சேமம் → சேனை. சாற்றை (சத்துகளை) வேரில் சேமித்து வைக்கும் கிழங்கு]*

**சேனை**[6] *šēṉai,* பெ. (n.) சேனைப்பால் பார்க்க; see *šēṉai-p-pāl.* "சங்கிற்... சேனையுடன் வஞ்சத் திருட்டுமருட்டுங் கலந்து புகட்டினாள்" *(விறலிவிடு. 166).*

*[சேணை → சேணை]*

**சேனைக்கணிமகன்** *šēṉai-k-kaṉi-magaṉ,* பெ. (n.) சேனையிலுள்ள கணியன்; astrologer attached to an army. "செவ்வகை யுணர்ந்தோன் சேனைக் கணிமகன்" *(பெருங். உஞ்சைக். 36:199).*

*[சேனை + கணி + மகன்]*

**சேனைக்கால்** *šēṉai-k-kāl,* பெ. (n.) கோயிலில், குடவடிவ விளக்கை வைக்கும் கம்பம் (இ.வ.); stand of a pot-shaped lamp used in temples.

*[சேனை + கால்]*

**சேனைக்கிழங்கு** *šēṉai-k-kiḻaṅgu,* பெ. (n.) சமையலுக்குப் பயன்படும், கறுப்பு நிறத்தோலும் வெளிர்ச் சிவப்பு நிறச் சதைப் பகுதியும் கொண்ட அரைக்கோள வடிவத்தில் இருக்கும் ஒருவகைக் கிழங்கு; a big variety of elephant foot yam *(சா.அக.).*

*[சேனை[5] + கிழங்கு]*


சேனைக்கிழங்கு

**சேனைக்குடையார்** *šēṉai-k-kuḍiyār,* பெ. (n.) *சேனைத்தலைவர்,3 பார்க்க;* see *šēṉai-t-talaivar,3.*

மறுவ. படைத்தலைவர், சேனைமுதலி

*[சேனை + கு + உடையார்]*

**சேனைக்கைகோளர்** *šēṉai-k-kaikōḷar,* பெ. (n.) சேனைத்தலைவர் பார்க்க; see *šēṉai-t-talaivar.* "சேனைக் கைகோளரும், கண்ணாளரும் மற்றும் பல கல்வனையில் உள்ளாரும்" *(த.க.தொ.2 கல். 4, தொ. எ. 259-4).*

*[சேனை + கைகோளர்]*

**சேனைத்தலைவர்** *šēṉai-t-talaivar,* பெ. (n.) *1.* சேனாபதி; commander, leader of an army. "சேனைத் தலைவராய்ச் சென்றோரும்" (நாலடி 2). *2.* சேனைமுதலியார்,1 பார்க்க; see *šēṉai-mudaliyār,1.* 'சேனைத் தலைவர் திருத்தாள்... சேவிப்பனே' *(அழகர்கலம். காப்பு).* 3. இலை வணிகரினத்தார் (இ.வ.); men of ilai-vāṇigar caste.

*[சேனை + தலைவர்]*

**சேனைநாதன்** *šēṉai-nādaṉ,* பெ. (n.) சேனாபதிஆழ்வார் பார்க்க; see *šēṉāpadi-āḻvār.* "நாதமுனி சடகோபன் சேனை நாதன்" *(ரஹஸ்ய51).*

*[சேனை + நாதன்]*

**சேனைப்படைகள்** *šēṉai-p-paḍaigaḷ,* பெ. (n.) பெருங்கூட்டம் (யாழ்ப்.); big crowd, concourse of people.

*[சேனை + படைகள்]*

**சேனைப்படையரவம்** *šēṉai-p-paḍaiyaravam,* பெ. (n.) சிறியாநங்கை; snake root (சா.அக.).

**சேனைப்பால்** *šēṉai-p-pāl,* பெ. (n.) குழந்தை பிறந்ததும் புகட்டும் இனிப்புக் கலந்த நீருணவு (இ.வ.); sweetened liquid, used for feeding an infant as soon as it is born.

*[சேனை + பால் – சேனைப்பால்]*

**சேனைப்பெருங்கணி** *šēṉai-p-peruṅ-gaṇi,* பெ. (n.) படையெடுப்பு முதலியவற்றுக்குரிய நாள் முழுத்தங்களைக் கணித்தற்குச் சேனையில் அமர்ந்துள்ள கணியர் தலைவன்; chief astrologer attached to an army. "சேனைப் பெருங்கணி செப்பிய நன்னாள்" (பெருங். மகத. 22: 185).

*[சேனை + பெரும்கணி]*

**சேனைப்பெருவாணிகன்** *šēṉai-p-peru-vāṇigaṉ,* பெ. (n.) படைக்கு வேண்டிய உணவு முதலிய பண்டங்களைக் கொடுத்து உதவுபவன்; chief purveyor for an army. "செருவார் சேனைப் பெருவாணிகன் மகன்" (பெருங். உஞ்சைக். 40: 344).

*[சேனை + பெருவாணிகன்]*

**சேனைபோகம்** *šēṉai-bōgam,* பெ. (n.) படைக்குரிய பணிகளில் ஒன்று; an office in military service.

*[சேனை + போகம்]*

**சேனைமீகாமன்** *šēṉai-mīgāmaṉ,* பெ. (n.) கடற்படையின் கலத்தலைவன்; captain of the warship. 'இராசராச சேதிராயஞ் சேனைமீகாமன் எழுந்தருவித்த சேதி நாயகற்கும் நாச்சியாற்கும்' (முதல் இராசராசன், கிபி. 1049, தெ.க.தொ. 7, கல். 890).

*[சேனை + மீகாமன்]*

**சேனைமுதலி** *šēṉai-mudali,* பெ. (n.) படைத் தலைவர்; chief of an army.

*[சேனை + முதலி]*

**சேனைமுதலியார்** *šēṉai-mudaliyār,* பெ. (n.) திருமாலுக்கு விருந்து கொடுத்தவர்; Viṣṇu's hosts. 2. கைக்கோள இனத்தார்; men of Kaikkōḷar caste.

*[சேனை' + முதலியார்]*

**சேனையங்காடிகள்** *šēṉai-y-aṅgāḍigaḷ,* பெ. (n.) அறுவை வணிகருளொரு வகையினர் (தெ.க.தொ. 430); a sect of cloth merchants.

*[சேனை + அங்காடிகள்]*

**சேனையர்கோன்** *šēṉaiyar-kōṉ,* பெ. (n.) சேனைமுதலியார் பார்க்க; see *šēṉai-mudaliyār.* "பேராழி செலுத்திய சேனையர் கோன்வாழ" (அஷ்டப். சீரங்கநாயகி. ஊசல், 1).

*[சேனையர் + கோன்]*

**சேனையுள்படுநன்** *šēṉaiyuḷ-paḍunaṉ,* பெ. (n.) அரசன் ஆணையைக் காளமூதிச் சேனைக்கு அறிவிப்போன்; royal herald who proclaims with a trumpet the king's commands to his army. 'சேனையுள்படுநரை யாணையி னேவி' (சிலப். 8: 13, உரை).

*[சேனை + உள் + படுநன்]*

# சை

**சை**[1] *šai*, சகரமெய்யும் ஐகார உயிரும் சேர்ந்த உயிர்மெய் எழுத்து; the compound of 'c' and 'ai'.

*[ச் + ஐ = சை]*

**சை**[2] *šai*, இடை (int.) இகழ்ச்சிக் குறிப்பு; expr. of contempt, abhorrence.

**சை**[3] *šai*, பெ. (n.) தினை; millet.

**சைக்கினை** *šaikkiṉai*, பெ. (n.) சைகை பார்க்க; see *šaigai*.

*E. signal; F., LL, L: signum*

*[சைகை → சைக்கினை]*

**சைகை** *šaigai*, பெ. (n.) செய்தி தெரிவிக்கும் முறையில் கை, கண் முதலியவற்றால் காட்டும் குறிப்பு; signal gesture, hint, as winking of the eyes, hand. "செங்கட் சைகை" (சூளா. குமார. 27).

*[செய் + கை - செய்கை (செய்வது) → சைகை]*

**சையகம்** *šaiyagam*, பெ. (n.) படுக்கை (அக.நி.); bed.

*[தலை சாய்த்தல் என்பது உறங்குதலைக் குறிக்கும். எனவே சாய் → அகம் - சாயகம் → சையகமாகிப் படுக்கையைக் குறிக்கிறது.]*

**சையரியம்** *šaiyariyam*, பெ. (n.) பெருங் குறிஞ்சி; cone head - Strobil anthes consanguineus (சா.அக.).

**சையல்** *šaiyal*, பெ. (n.) சாயல்; exact likeness. "சாமி நடையைப் போல . . . சையலிலே நான் காணேன்" (கட்டபொம்மு, பக். 57).

*[சாயல் → சையல்]*

**சையானம்** *šaiyāṉam*, பெ. (n.) சையகம் பார்க்க; *šaiyagam*.

**சையெனல்** *šai-y-eṉal*, பெ. (n.) இகழ்ச்சிக் குறிப்பு; onom. expr. of contempt, abhorrence. "சையெனத் திரியேல்" (ஆத்திசூடி).

*[சே → சை + எனல்]*

**சையை**[1] *šaiyai*, பெ. (n.) சைகை பார்க்க; see *šaigai*.

*E. signal; L.L, L., F. signum*

*[சைகை → சையை]*

**சையை**[2] *šaiyai*, பெ. (n.) செய்யுள்போக்கு; flow as a poetry.

**சையொத்திரு-த்தல்** *šaiyottiru-*, 3 செ.கு.வி. (v.i.) இணக்கமாயிருத்தல் (வின்.); to be friendly.

*[இசை + ஒத்திரு → சையொத்திரு]*

**சைரிகம்** *šairigam*, பெ. (n.) கலப்பை (யாழ்.அக.); plough-share.

மறுவ. மேழி, ஏர்.

*[ஏர் → சேர் → சேரி → சேரிகம் → சைரிகம்]*

**சைரிகன்** *šairigaṉ*, பெ. (n.) 1. உழவன் (யாழ்.அக.); ploughman. 2. ஏர்மாடு; plough-bullock.

*[சைரிகம் → சைரிகன்]*

**சைரிபம்** *šairibam*, பெ. (n.) எருமை (பிங்.); buffalo.

*[சைரிகன் → சைரிபம்]*

**சைரியம்** *šairiyam*, பெ. (n.) சையரியம் பார்க்க; see *šaiyariyam*.

**சைலியம்** *šailiyam*, பெ. (n.) 1. பூக்களை இரண்டிரண்டாகத் தொடுக்கும் மாலைவகை (உவ.); a kind of garland strung with pairs of flowers. 2. மொழிநடை; style.

*[சையை → சைலியம்]*

**சைவகட்பலா** *šaiva-kaṭpalā*, பெ. (n.) வெள்வேல்; white babool.

**சைவங்கம்** *šaivaṅgam*, பெ. (n.) தினை; millet.

**சைவசுயா** *šaivašuyā*, பெ. (n.) தழுதாழை; wild killer.

**சைவரல்** *šaivaral*, பெ. (n.) இகழ்கை (இலக்.அக.); contempt, act of despising.

*[சே (ஒலிக்குறிப்பு) → சை + வரல்]*

**சைவலம்** *šaivalam*, பெ. (n.) ஒரு வகைப்பாசி (சூடா.); duck-weed greee, moss-like plant growing in pools.

**சைவவாதளா** *šaiva-vādaḷā*, பெ. (n.) தணக்கு; catamaran tree (சா.அக.).

# சொ

**சொ** *co/šo*, ஒகரம் ஏறிய 'ச'கர உயிர்மெய் எழுத்து; the compound of 'c' and 'o'.

*[ச் + ஒ]*

**சொக்கக்கட்டிவெள்ளி** *šokka-k-katti-velli*, பெ. (n.) தூய வெள்ளி; pure silver.

*[சொக்கம் + கட்டி + வெள்ளி]*

**சொக்கக்கூத்து** *šokka-k-kūttu*, பெ. (n.) ஒரு வகைக்கூத்து; a kind of dance.

*[சொக்கன் + கூத்து. சொக்கம் = நல்லாடல் (சுத்த நிருத்தம்) சொக்கசீயன் என்பது கோப்பெருஞ்சிங்கன் என்னும் பல்லவ மன்னனுக்குரிய சிறப்புப் பெயர்.]*

**சொக்கச்சியன்கல்** *šokkacciyan-kal*, பெ. (n.) தொண்டை மண்டலத்தில் பொன்னை நிறுப்பதற்குப் பயன்படுத்திய எடைக் கல்; a weight measure prevalent in the Tondai mandalam.

*[சொக்கச்சீயன் → சொக்கச்சியம் + கல்]*

**சொக்கச்சியன்கோல்** *šokkacciyan-kōl*, பெ. (n.) தில்லைக்கோயிலின் நிலங்களை அளக்கப் பயன்பட்ட கோல்; the name of linear measure, used to measure the lands belonging to the temple at Chidambaram.

"சொக்கச்சியன் கழுகு திருநந்தவனம் நிலம் அறுபத்து மூன்று மா முக்காணிக் கீழ் முக்காலும் சொக்கச்சியன் கோலால் அளந்த இடத்து" *(தெ.க.தொ. 12, கல் 215).*

*[சொக்கச்சீயன் → சொக்கச்சியன் + கோல்]*

**சொக்கச்சியன்திருவாசல்** *šokkacciyan-diruvāšal*, பெ. (n.) சிதம்பரம் திருக்கோயிலின் தெற்கு வாசலுக்கமைந்த பெயர் *(தெ.க.தொ. 8, கல். 50)*; the name given to the Southern entrance of the temple at Chidambaram.

*[சொக்கச்சீயன் → சொக்கச்சியன் + திருவாசல்]*

**சொக்கச்சீயன்** *šokka-c-cīyan*, பெ. (n.) பல்லவ அரசர்க்குரிய சிறப்புப் பெயர்; special title of Pallavā kings.

*[சொக்கன் (=சிவன்) + சீயன்]*

**சொக்கட்டாய்** *šokkattāy*, கு.வி.எ. (adv.) எளிதாக; easily, without much ado. அதைச் சொக்கட்டாய்த் தள்ளி விட்டான் *(இ.வ.).*

**சொக்கட்டான்** *šokkattān*, பெ. (n.). 1. உருட்டிப் போடும் கட்டைகளின் எண்ணிக்கைக்குத் தகுந்தபடி விளையாடும் தாய விளையாட்டு வகை; a game similar to backgammon. 2. சொக்கட்டான்சிலை,2 பார்க்க; see *šokkattān-šīlai*,2.

ம. சொக்கட்டான்; கெ. சொடகமு

*[சதுரம் என்பதைச் சவுக்கம், சதுக்கம் என்று கூறுவது உலகவழக்கு. சவுக்கம் + கட்டாம் → சவுக்கட்டாம் → சொக்கட்டாம் → சொக்கட்டான்]*

**சொக்கட்டான்கவறு** *šokkattān-kavaru*, பெ. (n.) சொக்கட்டான் ஆட்டத்தில் தாயங் குறிக்க உருட்டும் கட்டை; dice used in the game of *šokkattān*.

மறுவ. ஆடுகல், தாயக்கட்டை

*[சொக்கட்டான் + கவறு]*

**சொக்கட்டான்காய்** *šokkattān-kāy*, பெ. (n.) சொக்கட்டான் ஆட்டத்தில் பயன்படுத்தும் காய் *(சங். அக.)*; pieces used in the game of *šokkattān*.

மறுவ. சொக்கட்டான்கல்.

*[சொக்கட்டான் + காய்]*

**சொக்கட்டான்சீலை** *šokkattān-šīlai*, பெ. (n.) 1. விளையாடுதற்கென்று சொக்கட்டான் கட்டங்கள் வரையப்பட்ட கிழிச்சீலை; chequered cloth in the form of a cross for playing šokkattān. 2. ஒருவகைப் புடவை; a kind of saree, having square designs.

*[சொக்கட்டான் + சீலை]*

**சொக்கட்டான்பந்தல்** *šokkattān-pandal*, பெ. (n.) சொக்கட்டான் மனை போலமைத்த

பந்தர் (யாழ். அக.); shed or pavilion in the form of a šokkaṭṭāṉ board.

ம. சொக்கட்டா மண்டபம்

[சொக்கட்டான் + பந்தல் – சொக்கட்டான் பந்தல் = சொக்கட்டான் மனை வடிவில் உள்ள பந்தல்]

**சொக்கட்டான்பாய்ச்சிகை** *šokkaṭṭāṉ-pāyccigai,* பெ. (n.) சொக்கட்டான்கவறு பார்க்க; see *šokkaṭṭāṉ-kavaṟu.*

[சொக்கட்டான் + பாய்ச்சிகை]

**சொக்கட்டான்மனை** *šokkaṭṭāṉ-maṉai,* பெ. (n.) சொக்கட்டான் ஆடும் பலகை (வின்.); draught board for playing šokkaṭṭāṉ.

[சொக்கட்டான் + மனை]




**சொக்கட்டான்வீடு** *šokkaṭṭāṉ-vīḍu,* பெ. (n.) சொக்கட்டான் கட்டங்கள்; chequers of šokkaṭṭāṉ board.

[சொக்கட்டான் + வீடு]

**சொக்கத்தங்கம்** *šokka-t-taṅgam,* பெ. (n.) தூய்மையான தங்கம்; pure gold. 'பிள்ளையைச் சொக்கத்தங்கமே' என்று கொஞ்சினாள்.

[சொக்கம்¹ + தங்கம்]

**சொக்கத்தாண்டவம்** *šokka-t-tāṇḍavam,* பெ. (n.) நல்லாடல் (சுத்த நிருத்தம், ஆனந்தத் தாண்டவம்); a kind of dance. "சொக்கன் சொக்கத் தாண்டவம் புரிந்தா னன்றே" (திருவாலவா. 5:5).

[சொக்கன் + தாண்டவம்]

**சொக்கதேவன்** *šokka-dēvaṉ,* பெ. (n.) 1. கூகைபோல முகத்தை வீங்கச் செய்வதான பொன்னுக்கு வீங்கி என்னும் அம்மைக்கட்டு (யாழ்.அக.); mumps. 2. கூகை; rock horned owl.

சொக்கு, சோ என்பன துயிலைக் குறிக்கும் சொற்கள். சோம்பல், மடியையும் குறிக்கும். கூகை பகலில் துயின்று கொண்டிருப்பதால் சொக்கதேவன் என்றழைக்கப்பட்டது.

[சொக்கு + தேவன்]

**சொக்கநாதன்** *šokka-nādaṉ,* பெ. (n.) மதுரையிற் கோயிற் கொண்ட சிவன்; Šivaṉ at the shrine of Madurai. "மைதிகழுங் கண்டத்தன் சொக்கநாதன்" (திருவாலவா. 57: 21).

மறுவ. ஆலவாயன், நீலகண்டன்.

[சொக்கன் + நாதன்]

சொக்கு, சொக்கன் என்றால் அழகன் என்ற பொருள் உண்டு. எனவே ஆலவாயனை அழகன் என்ற பொருளில் சொக்கன் என்பர்.

**சொக்கநாயகன்** *šokka-nāyagaṉ,* பெ. (n.) சொக்கநாதன் பார்க்க; see *šokka-nādaṉ.* "அரவணிச் சொக்கநாயக னாடலும்" (திருவிளை. விடையி. 5).

[சொக்கன் + நாயகன்]

**சொக்கப்பநாவலர்** *šokkappa-nāvalar,* பெ. (n.) தஞ்சைவாணன் கோவையுரையாசிரியர்; the commentator on Tañjaivāṇaṉ-kōvai.

**சொக்கப்பனை¹** *šokka-p-paṉai,* பெ. (n.) தாளிப்பனை; talipot (சா.அக.).

ம. சொக்கப்பன

**சொக்கப்பனை²** *šokka-p-paṉai,* பெ. (n.) கார்த்திகைத் திருவிழாவில் கோயில்களுக்கு முன்பு எரிக்கும் பனையோலைக் கூடு; bonfire with palmyra leaves lit in front of temples in Kārttigai festival. "வானளாவு மோங்கு சொக்கப்பனை" (திருநெல். பு. தீபம். 15).



**சொக்கப்பான்** *šokkappān,* பெ. (n.) சொக்கப்பனை பார்க்க; see *šokka-p-panai.*

*[சொக்கப்பனை → சொக்கப்பான்]*

**சொக்கப்பான்கார்த்திகை** *šokkappān-kārttigai,* பெ. (n.) சொக்கப்பனை நடக்கும் திருக் கார்த்திகை விளக்கீடு (வின்.); lamp lighting festival on the day of šokka-p-panai.

*[சொக்கப்பான் + கார்த்திகை]*

**சொக்கப்பானை** *šokka-p-pānai,* பெ. (n.) சொக்கப்பனை பார்க்க; see *šokka-p-panai.*

**மறுவ.** சொக்கப்பான், சொக்கப்பனை

*[சொக்கப்பனை → சொக்கப்பானை]*

**சொக்கப்பையன்** *šokka-p-paiyan,* பெ. (n.) 1. வேலைக்காரச் சிறுவன் (வின்.); errand boy, attendant. 2. அழகிய சிறுவன்; beautiful boy.

**மறுவ.** சொக்கரா

H., U., Gu. chōkrā

*[சொக்கு + பையன்]*

சொக்கு என்ற சொல்லுக்கு மயங்க வைக்கும் அழகு என்ற பொருளும் உண்டு. அதனடிப்படையில் சொக்கன், சொக்கி என்னும் இயற்பெயர்கள் உண்டாகின.

**சொக்கம்[1]** *šokkam,* பெ. (n.) 1. தூய்மை; genuineness, purity, excellence, as of gold, silver. சொக்கத்தங்கம் (உ.வ.). 2. அழகு (பிங்.); beauty. 3. சொக்கத்தாண்டவம் பார்க்க; see šokka-t-tāṇḍavam. 'சொக்க மவினய நாடகம்' (சிலப். பதி. 73, உரை.) 4. கெம்பு (சங்.அக.); ruby. 5. சிவப்பு; red.

*[சொள் → (சொகு) → சொக்கம்]*

**சொக்கம்[2]** *šokkam,* பெ. (n.) களவு (யாழ்ப்.); theft.

*[சொக்கு' → சொக்கம்]*

**சொக்கயம்** *šokkayam,* பெ. (n.) பட்டாணி; pea (சா.அக.).

**சொக்கரை** *šokkarai,* பெ. (n.) சொக்கறை (வின்.) பார்க்க; see *šokkaṟai.*

**சொக்கலா** *šokkalā,* பெ. (n.) மூக்கரட்டை; spreading hogweed (சா.அக.).

**சொக்கலாதி** *šokkalāti,* பெ. (n.) ஒளிப்புல்; a luminous grass (சா.அக.).

*[சொக்கம் → சொக்கலாதி.]*

**சொக்கலி** *šokkali,* பெ. (n.) 1. சிறுபசளை; small Indian purslane. 2. சடாமாஞ்சில்; valarian root. 3. மூங்கில்; bamboo. 4. மூக்கிலிப்பூடு; a plant-portulaca meridiana.

**சொக்கலிங்கம்** *šokkaliṅgam,* பெ. (n.) சொக்கநாதன் பார்க்க; see *šokka-nādan.* "சொக்கலிங்க முண்டேதுணை" (பெருந்தொ. 1576).

*[சொக்கு + இலிங்கம்]*

அழகிய ஆடை அணிந்தவன் (புலித்தோல்) என்ற பொருளில் சிவபெருமானுக்குச் சொக்கலிங்கம் என்ற பெயர் ஏற்பட்டது.

**சொக்கலை** *šokkalai,* பெ. (n.) ஐந்திலைகளைக் கொண்ட ஒருவகை மரம்; roxburgh's five leaved tree of beauty.

**சொக்கவெள்ளி** *šokka-veḷḷi,* பெ. (n.) 1. சொக்கக்கட்டி வெள்ளி (உ.வ.) பார்க்க; see šokka-k-kaṭṭi-veḷḷi. "சொக்கவெள்ளிப் பாற்குடமோ அமுதவூற்றோ" (பாவேந்தர்.) 2. விடிவெள்ளி; morning star. சொக்கவெள்ளி தோன்றிவிட்டதாற் புறப்படுவோம் (நாஞ்.).

*[சொக்கம் + வெள்ளி]*

**சொக்களி** *šokkaḷi,* பெ. (n.) பயனற்ற மறுப்புரை கூறிப் பகடி பண்ணுகை; ridicule by raising frivolous objections. சொக்களி பேசுவதைத் தவிரக் காரியம் முடிக்க உன்னாலாகாது (நாஞ்.).

*[சொல் + களி]*

**சொக்கறை** *šokkaṟai,* பெ. (n.) 1. கன்னம் முதலியவற்றில் விழுங்குழி; dimple in cheek; bend in walls, baskets, etc., flaw in the edge of nails. 2. தோட்டம் முதலியவற்றின் சிறிய அடைப்பு; small enclosure or partition, as in a garden, a house. 3. மதில் முதலிய வற்றிலுள்ள தொண்டு; breach or gap in a wall, hedge or mound.

*[சொக்கு[5] + அறை]*

**சொக்கன்**[1] *šokkaṉ,* பெ. (n.) *1. அழகன்;* handsome person. *2. சிவன்;* Šivaṉ, as beautiful. *"சொக்க னென்னு ளிருக்கவே" (தேவா. 859, 11).*

*[சொக்கம் → சொக்கன்]*

*சொக்கன் என்பது அழகன் என்று பொருள் படுமேனும், சிவனைக் குறிக்கும் போது அப்பொருள் படாது (மு.தா.142) மக்கட்பெயராக சொக்கன், சொக்கி, என உள்ளன. ஊர்ப்பெயராக சொக்கிக்குளம், சொக்கநாதபுரம் போன்று சில ஊர்ப் பெயர்கள் தமிழ்நாட்டில் உள்ளன. சொக்கலிங்கபுரம் என்ற பெயரில் பல ஊர்கள் உள்ளன. சொக்கு என்ற சொல் வட இந்திய மொழிகளில் சோபா, சோபனா என்று மக்கட்பெயராக மாறுகிறது. ஆங்கிலம் போன்ற மேலை ஆரிய மொழிகளில் சோபியா (sophya, sophia) என்ற வடிவம் பெறுகின்றது.*

**சொக்கன்**[2] *šokkaṉ,* பெ. (n.) **வணிகனின் கையாள்** *(வின்.);* merchant's attendant, carrying a bag.

**சொக்கன்**[3] *šokkaṉ,* பெ. (n.) *குரங்கு (நாஞ்.);* monkey.

*ம. சொக்கன்*

**சொக்கன்**[4] *šokkaṉ,* பெ. (n.) *மிகுதியாக* **உண்போன்;** one who indulges to excess in eating. *சொக்கனுக்குச் சட்டியளவு (உ.வ.) (சா. அக.).*

**சொக்கன்**[5] *šokkaṉ,* பெ. (n.) *மூடன்;* simpleton.

**சொக்கன்சம்பா** *šokkaṉ-šambā,* பெ. (n.) *சம்பா நெல் வகை;* a kind of šambā paddy. *"நேர் பெருகு சொக்கன் சம்பா நெல்லென்றும்" (நெல்விடு. 189).*

*[சொக்கன் + சம்பா]*

**சொக்கனார்புல்** *šokkaṉār-pul,* பெ. (n.) *புல்வகை;* citro-nella grass, Andropogon nardus.

*[சொக்கனார் + புல்]*

**சொக்கா** *šokkā,* பெ. (n.) *சொக்காய் பார்க்க;* see *šokkāy. "சோடில்லை மேல்வெள்ளைச் சொக்காவிலை" (அருட்பா. 6, வெறிவிலக்கு. 2).*

**தெ.** த்சொக்கா

*அழகிய ஆடை என்ற பொருளுள்ள இச் சொல் உருது போன்ற பிறமொழிகளுக்கும் பரவியுள்ளது. பருத்தி, பஞ்சு, நூல், சாயமிடல், நெசவு ஆகியன தென்னிந்தியா விற்கே உரித்ததாக இருந்தமை மேலே கூறிய கருத்திற்கு அரண் செய்யும். இது தமிழ்ச் சொல்லே ஆகும்.*

*[சொக்கம்' → சொக்கா]*

**சொக்காக்கீரை** *šokkā-k-kīrai,* பெ. (n.) *கீரைவகை (வின்.);* a species of greens.

*[சொக்கு + கீரை]*

**சொக்காய்** *šokkāy,* பெ. (n.) *சட்டை (ஈடு, 10. 6: 1, ஜீ);* coat, shirt, jacket.

**மறுவ.** கைச்சட்டை

*[சொக்கம்' → சொக்காய்]*

**சொக்காரன்**[1] *šokkāraṉ,* பெ. (n.) **ஓரினத்துப் பிறந்த உரிமைப் பங்காளி** *(தாயாதி);* agnate.

**மறுவ.** தாயாதிக்காரன்

*[சொந்தம் → சொம் + காரன்]*

**சொக்காரன்**[2] *šokkāraṉ,* பெ. (n.) **சகலன்** *(இ.வ.);* wife's sister's husband.

**மறுவ.** சட்டகர், சகலப்பாடி

*[சொந்தக்காரன் → சொக்காரன்]*

**சொக்காரி** *šokkāri,* பெ. (n.) **சொத்திற்கு உரிமைபூண்டவள்** *(இ.வ.);* female agnate.

*[சொக்காரன் → சொக்காரி]*

**சொக்காலி** *šokkāli,* பெ. (n.) **சொக்காளி** *(வின்.) பார்க்க;* see šokkāḷi.

**சொக்காளி** *šokkāḷi,* பெ. (n.) **சிறுபூளை** *(யாழ்.அக.);* a common way- side weed.

**சொக்கான்** šokkāṉ, பெ. (n.) **பழைய அரிசியிலுள்ள சிவப்பு வண்டு** *(இ.வ.);* rice-bug.

*[சே → சேக்கு → சொக்கு → சொக்கான்]*

*சே = செந்நிறம். சிவப்பு நிறமுள்ள சிறுவண்டு சொக்கான் எனப்பட்டது.*

**சொக்கிடு-தல்** *šokkiḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) **மயக்கப்பொடி தூவுதல்;** to sprinkle magic powder for inducing stupor. *"சொக்கிடுந் தொழில் வல்ல துரிசனும்" (சிவதரு. பாவ. 69).*

**தெ.** சொக்கிடு

*[சொக்கு + இடு-.]*

**சொக்கு[1]-தல்** *šokku-*, 5 செ.கு.வி. (v.i.) 1. அழகு, திறமை முதலியவற்றால் தன்வயம் இழத்தல்; மயங்குதல்; to become languid, sleepy; to be stupefied. அவளின் அழகிலும் ஒப்பனையிலும் சொக்கிநின்றான். 2. மனம் பிறர்வயமாதல்; to be enchanted, fascinated, captivated, subjected to the will of another. 3. பிறரை மயங்குமாறு ஒழுகுதல் (இ.வ.); to behave in a captivating manner. 4. தூக்கத்தால் கண்கள் செருகுதல்; to be heavy with sleep. எனக்குத் தூக்கம் சொக்குகிறது.

க. சொக்கு (sokku); தெ. சொக்கு

[சோ → சொக்கு-.]

**சொக்கு[2]-தல்** *šokku-*, 5 செ.கு.வி. (v.i.) குழிவு அல்லது வளைவு விழுதல்; to be pressed in, bent in, as the surface of a wall, the edge of a mat, a basket.

**சொக்கு[3]** *šokku*, பெ. (n.) 1. மயக்கம்; stupor, torpor, dullness, as produced by enchantment or drug. "சொக்குப் பொட்டெடுத்திக் கைப்பொருள்" (திருப்பு.). 2. வயப்படுகை; fascination, captivation.

ம. சொக்கு; க. சொக்கு; தெ. சொக்கு.

[சோ → சொக்கு]

**சொக்கு[4]** *šokku*, பெ. (n.) தூய்மை; purity. 2. அழகு; beauty. 3. பொன் (சங்அக.); gold. சொக்கத்தங்கம் (உ.வ.). 4. சொக்கநாதன் பார்க்க; see *šokka-nādaṉ*. "மன்றினு ளாடுஞ் சொக்கைப் பாடினான்" (திருவாலவா. 55:17).

ம. சொக்கு

[சொக்கம்[1] → சொக்கு]

**சொக்கு[5]** *šokku*, பெ. (n.) கன்னக் கதுப்பு (யாழ்ப்.); cheek.

E. cheek

**சொக்கு[6]** *šokku*, பெ. (n.) கள்ளுண்ணுதற் கேதுவாய சிறிய மட்பாண்டம்; small mud vessel used for drinking toddy.

**சொக்குக்கிள்ளு-தல்** *šokku-k-kiḷḷu-*, 5 செ.கு.வி. (v.i.) விளையாட்டாகவேனும், சினத்தினா லேனுங் கன்னத்தை நிமிண்டுதல் (யாழ்ப்.); to pinch, draw out or twist the cheeks, either for sport or in anger.

[சொக்கு + கிள்ளு-.]

**சொக்குச்செட்டி** *šokku-c-ceṭṭi*, பெ. (n.) கடுஞ்செட்டுள்ளவன், சிக்கனக்காரன் (கவிகுஞ். 13); miser.

[சுக்குச்செட்டி → சொக்குச்செட்டி]

**சொக்குப்பாக்கு** *šokku-p-pākku*, பெ. (n.) மயக்கத்தையுண்டாக்கும் புழுக்கள் பாய்ந்த பாக்கு; worm-eaten arecanut causing choke or loss of consciousness when chewed (சா.அக.).

[சொக்கு + பாக்கு.]

**சொக்குப்பிடுங்கு-தல்** *šokku-p-piḍuṅgu-*, 5 செ.கு.வி. (v.i.) சொக்குக்கிள்ளு- (யாழ்ப்.) பார்க்க; see *šokku-k-kiḷḷu-*.

[சொக்கு + பிடுங்கு-.]

**சொக்குப்பொடி** *šokku-p-poḍi*, பெ. (n.) பிறரை மயக்கித் தன்வயப்படுத்துதற்குப் பயன்படும் மாயப்பொடி; a magic powder causing stupor love-powder. "சொக்குப்பொடி யெடுத்துத் தூற்றி யுடைமையெல்லாம்... கழற்றியே" (பணவிடு. 337.).

ம. சொக்குபொடி; தெ. த்சொக்குபொடி

[சொக்கு + பொடி]

**சொக்குமாந்தடி** *šokku-māndaḍi*, பெ. (n.) சுக்குமாந்தடி (இ.வ.); magic wand.

[சுக்குமாந்தடி → சொக்குமாந்தடி]

**சொக்குவித்தை** *šokku-vittai*, பெ. (n.) மயக்குவித்தை (யாழ். அக.); art of causing sleep or stupefaction.

மறுவ. கண்கட்டி வித்தை

[சொக்கு + வித்தை]

**சொக்குளிசம்** *šokkuḷišam*, பெ. (n.) கிலுகிலுப்பை; nattle-wort (சா.அக.).

**சொக்கெண்ணெய்** *šokkeṇṇey*, பெ. (n.) நீராடுதற்கு முன் உடம்பில் அரைகுறையாய்த் தேய்த்துக் கொண்ட எண்ணெய் (உ.வ.); oil rubbed partially over the body before bathing.

[சொக்கு + எண்ணெய்]

**சொகுசு** *šogušu*, பெ. (n.) *1. அனைத்து ஏந்துகளும் நிறைந்தது, நேர்த்தி;* refinement, neatness. அவன் சொகுசான வாழ்க்கைக்குப் பழகி விட்டான். *2. இதம்;* luxury. சொகுசுப் பேருந்தில் நேற்றுதான் பயணித்தேன் *(உ.வ.). 3. சிறப்பு;* fineness, as of work, superior quality.

ம. சொகிசு; க., தெ., து. சொகசு

*[சொக்கு → சொகு → சொகுசு]*

**சொகுசுக்காரன்** *šogušu-k-kāraṉ*, பெ. (n.) *பணச்செலவுமிக்க மிகுமகிழ் வாழ்க்கை வாழ்பவன்;* person of delicate or fastidious taste; person given to luxurious living. சொகுசுக்காரனாய்த் திரிந்ததால் இன்று தெருவில் நிற்கிறான் *(உ.வ.)*.

க. சொகசுகாற

*[சொகுசு + காரன்]*

**சொங்காரன்** *šoṅgāraṉ*, பெ. (n.) சொக்காரன்[1] *(வின்)* பார்க்க; see *šokkāraṉ*[1].

**சொங்காரிகம்** *šoṅgārigam*, பெ. (n.) *பப்பாளி;* common papaya tree.

**சொங்கி** *šoṅgi*, பெ. (n.) *உள்ளீடு இல்லாமை;* hollow. சொங்கிப்பயல், சொங்கித்தனம் *(உ.வ.)*.

*[சொங்கு → சொங்கி.]*

சோளத்தின் மணியை ஒட்டிக் கொண்டிருக்கும் மூடியைச் சொங்கு என்பது வழக்கு. சோளம் நீக்கிய சொங்கு உள்ளீடின்மையால் சோற்றுக்குப் பயன்படாது. சிலரை அவரது சோம்பல், செயலற்ற தன்மை, பயனின்மை ஆகியவை கருதிச் சொங்கு என்பது வழக்கு. பேச்சு வழக்கில் இது சொங்கி ஆயிற்று. (வழ. சொ. அ.)

**சொங்கு**[1] *šoṅgu*, பெ. (n.) *குற்றம்;* fault, blemish. "சொங்கில்லையாக" *(திருமந். 558)*.

*[சொக்கு → சொங்கு]*

**சொங்கு**[2] *šoṅgu*, பெ. (n.) *குஞ்சம்;* excess over the requirement. வேட்டியைச் சொங்கு வைத்துக் கட்டிக் கொண்டான்.

*[சும் → சொம் → சொங்கு]*

**சொங்கு**[3] *šoṅgu*, பெ. (n.) *சோளத்தின் உள்ளீடற்ற வெளிக்கூடு, உமி;* the outer cover of the cōlam.

*[சும் → சொங்கு]*

**சொச்சம்**[1] *šoccam*, பெ. (n.) *1. மிச்சம்;* deficiency, balance, arrears. செலவு போக சொச்சம் எங்கே. *2. சில்வானம்;* odd, a term appended to number, sum, weight, etc. "ஆயிரத்து சொச்ச நோய்களும்" *(தைலவ. தைல. 97.) 3. வட்டி;* interest on prinicipal. சொச்சத்துக்குப் பணங் கொடுத்தான் (இ.வ.). *4. கழித்தல் வகுத்தல்களில் வரும் மீதி;* remainder, as in subtraction, division.

தெ. சொச்செமு

*[மீதி → மிச்சம் → சொச்சம்]*

**சொச்சம்**[2] *šoccam*, பெ. (n.) *தூய்மை;* purity. "சொச்சத் தாதையர் தாமெனவே" *(திருப்பு. 573.)*.

*[சொக்கம்[1] → சொச்சம்]*

**சொச்சமுங்காசும்** *šoccamuṅ-gāšum*, பெ. (n.) *வட்டியும் முதலும்;* principal and interest there on. சொச்சமுங்காசுங் கீழே வை *(வின்.)*.

*[சொச்சம்[1] + உம் + காசு + உம்]*

**சொட்டச்சொட்ட** *šoṭṭaccoṭṭa*, வி.எ. (adv.) *நீர் வழிய வழிய;* drenched, soaked. மழையில் சொட்டச் சொட்ட நனைந்து கொண்டே வந்தாள் *(உ.வ.)*.

*[சொட்ட + சொட்ட]*

**சொட்டன்** *šoṭṭaṉ*, பெ. (n.) *குற்றமுள்ளவன்;* guilty person. "சொட்டனுக்கு நெஞ்சு சுருக்கென்னும்" *(விறலிவிடு. 259.)*.

*[சொட்டு[5] → சொட்டன்]*

**சொட்டு**[1]**-தல்** *šoṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) *துளித்தல்;* to fall in drops, drizzle. "தேன் சொட்டச் சொட்டநின் றட்டுந் திருக்கொன்றை" *(தேவா. 586. 1)*. வியர்வை சொட்ட ஓடி வந்தான்.

ம. சொட்டுக; க. தொட்டு, தடக்கனெ, தொடக்கனெ; தெ. தொட்ட; து. தடகு; கோத. சொட்; துட. ச்விட்; பட. சொட்டு.

*[சுல் (குத்தற் கருத்து வேர்) → சுள் → சுர் → சுரு → சுறு → (சுற்று) → சுத்து → சுத்தி = குத்துவது போல் தட்டும் சிறு சம்மட்டி. சுத்து → சொத்து → சொட்டு → சொட்டு-தல் = தட்டுதல், தட்டுதல் போல் துளி ஒன்றில் விழுதல்]*

**சொட்டு²-தல்** *śoṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. கொத்துதல்; to peck as a crow. 2. சூழ்ச்சியால் கவர்தல்; to snatch away, misappropriate secretly and slowly. 3. ஏமாற்றுதல் (வஞ்சித்தல்); to cheat, circumvent.

ம. சொட்டுக

[சொல் → சொள் → சொட்டு-.]

**சொட்டு³-தல்** *śoṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. குட்டுதல் (உ.வ.); to strike with knuckles. 2. பால் கறத்தற்கு ஆட்டு மடியைத் தட்டுதல் (வின்.); to tap gently the udder of a goat for inducing free flow of milk. 3. அடித்தல் (இ.வ.); to beat, hit.

ம. சொட்டுக; தெ. சொட்டு

[சொட்டு' → சொட்டு]

**சொட்டு⁴** *śoṭṭu*, பெ. (n.) 1. சிறு உருண்டை வடிவ சொட்டுந்துளி; drop. ஒரு சொட்டு நெய். 2. துண்டு; small, piece, slice. தேங்காய்ச் சொட்டு (யாழ்ப்.).

க. சொட்டு

[சொட்டு' → சொட்டு]

**சொட்டு⁵** *śoṭṭu*, பெ. (n.) 1. குட்டு; cuff, knock on the head. 2. குற்றங்குறை; defect, blemish, stigma. 3. குற்றத்தை வெளிப்படக் கூறாது குறிப்பாற் கூறும் பேச்சு; disparaging remark conveyed through a hint, insinuation. அவன் சொட்டு வைத்துப் பேசுகிறான். 4. பாழ் (சுன்னம்) (இ.வ.); cipher. 5. வழுக்கை; baldness.

ம. சொட்டு; க. சொட்ட; தெ. சொட்ட; து. சொண்ட், சோண்ட், சோண்டு.

[சுல் (துளைத்தல் கருத்து) → சொல் → சொள் → சொண்டு → சொட்டு]

**சொட்டுச்சொட்டாக** *śoṭṭu-c-coṭṭāga*, வி.அ. (adv.) துளித்துளியாக; drop by drop. மழை சொட்டுச் சொட்டாகப் பெய்தது.

[சொட்டு' → சொட்டு + ஆக.]

**சொட்டுச்சொட்டெனல்** *śoṭṭu-c-coṭṭeṉal*, பெ. (n.) துளித்தற்குறிப்பு; expr. signifying dripping, drizzling. "சொட்டுச் சொட்டென்னத் துளிக்கத் துளிக்க" (திவ். பெரியாழ். 1. 9:1).

[சொட்டு ' + சொட்டு + எனல்]

**சொட்டுச்சொல்** *śoṭṭu-c-col*, பெ. (n.) சொட்டைச் சொல் (உ.வ.) பார்க்க; see *śoṭṭai-c-col*.

[சொட்டு⁵ + சொல்]

**சொட்டுத்தண்டம்** *śoṭṭu-t-taṇḍam*, பெ. (n.) தனக்கு விருப்பமின்றிப் பிறர்க்காகக் கொடுத்த பொருள் (யாழ்ப்.); unwilling contribution made through another's influence.

[சொட்டு⁵ + தண்டம்]

**சொட்டுநீர்ப்பாசனம்** *śoṭṭu-nīr-p-pāśaṉam*, பெ. (n.) குழாய்களின் வழியே நீரைச் செலுத்தி, மரம் செடி கொடிகளின் வேர்ப் பகுதியில் நீர் சொட்டிக் கொண்டிருக்கும் வகையில் அமைந்த பாசனமுறை; drip irrigation.

[சொட்டு' + நீர் + பாசனம்]

**சொட்டுப்பால்** *śoṭṭu-p-pāl*, பெ. (n.) 1. கெட்டியான தேங்காய்ப் பால்; juice extracted from coconut kernel. 2. நீர் சேர்க்காத ஆவின் பால்; cow's milk without adding water.

[சொட்டு + பால்]

**சொட்டுப்போடு-தல்** *śoṭṭu-p-pōḍu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. அடிகொடுத்தல் (வின்.); to give a slap. 2. குறைகூறுதல் (வின்.); to speak disparagingly of one's character. 3. தவறுதல்; to fail, as in examination. அவன் தேர்வில் சொட்டுப் போட்டுவிட்டான்.

[சொட்டு⁵ + போடு-.]

**சொட்டுமருந்து** *śoṭṭu-marundu*, பெ. (n.) இளம்பிள்ளைவாத நோய் தாக்காமல் இருப்பதற்காக, குழந்தை பிறந்த மூன்றாவது மாதத்திற்குப் பின் 6 திங்களுக்கொரு நாள் மேனி ஐந்து ஆண்டுகள், குழந்தையின் வாயில் சொட்டு சொட்டாக ஊற்றப்படும் மருந்து; polio drops. 2. கண், காது, மூக்கு, வாய் ஆகியவற்றில் சொட்டுச் சொட்டாக விடப்படும் மருந்து; medicinal drops.

[சொட்டு ' + மருந்து]

**சொட்டுமூத்திரம்** *śoṭṭu-mūttiram*, பெ. (n.) ஒழுக்கு மூத்திர நோய்; strangury.

[சொட்டு' + மூத்திரம்]

*நீர்க்கடுப்பு நோயால் இது நேரும். அதிகப் படியான தண்ணீர் அருந்துவதாலும், எலுமிச்சை, ஆரஞ்சு சாறுகளை உரிய முறையில் குடிப்பதாலும் இது நீங்கும்.*

**சொட்டுவை-த்தல்** *šoṭṭu-vai-*, 4 செ.குன்றாவி. (v.i.) 1. *குட்டுதல்;* to give a hit with knuckles. 2. *இகழ்ச்சிக்கு ஆளாகுதல்;* to cast a slur. அவன்மேல் சொட்டுவைத்துப் பேசினான் *(இ.வ.)*.

*[சொட்டு⁵ + வை-.]*

**சொட்டை¹** *šoṭṭai*, பெ. (n.) *பார்ப்பனரது பழங்குடிகளுள் ஒன்று;* an ancient Brahmin family. "இராயூர் சொட்டை கோவிந்த பட்டரும்" *(தெ.க.தொ. 3)*.

**சொட்டை²** *šoṭṭai*, பெ. (n.) 1. *சொட்டைவாள் பார்க்க;* see *šoṭṭai-vāḷ*. "சொட்டையாலே . . . நாவை விரைவொடு மரிந்து" *(திருவாலவா. 35:22)*. 2. *வளைதடி (வின்.);* crooked club. 3. *வளைவு (வின்.);* crookedness, bend, as in the sheath of a sword. 4. *சுருக்கு முதலியவற்றை மாட்டுதற் கிடமானது (நாஞ்.);* a knob-like contrivance for hanging anything.

ம. சொட்ட

*[சொட்டு⁵ → சொட்டை = சொத்தை, குற்றம்]*

**சொட்டை³** *šoṭṭai*, பெ. (n.) 1. *சொட்டைச்சொல் பார்க்க;* see *šoṭṭai-c-col*. 2. *குழிவு;* dent. அவன் கன்னத்தில் சொட்டை விழுந்திருக்கிறது *(இ.வ.)*. 3. *பள்ளம் (வின்.);* excavation, furrow, cavity. 4. *தலைவழுக்கை;* baldness in spots due to disease or old age. 5. *தலைப்பொடுகு (உ.வ.);* dandruff. 6. *சொற்சித்திரம் (யாழ்ப்.);* pun quibble, play on words.

ம. சொட்ட, தெ. சொட்டா

*[சொட்டு → சொட்டை = தட்டுவதால் உண்டாகும் தட்டை, மொட்டை, பள்ளம் வழுக்கை, வழுக்கைக் குற்றம். ஓ.நோ. தட்டு → தட்டை; பட்டு → பட்டை]*

**சொட்டைக்கத்தி** *šoṭṭai-k-katti*, பெ. (n.) *வளைந்த கத்தி;* crooked or curved knife. சொட்டைக் கத்தியால் வெண்ணெய் கூட வெட்ட முடியாது *(உ.வ.)*.

*[சொட்டை + கத்தி]*

**சொட்டைக்காரன்** *šoṭṭai-k-kāraṉ*, பெ. (n.) *வேடிக்கையாக பேசுகிறவன் (யாழ்ப்.);* punster, quibbler.

*[சொட்டை + காரன்]*

**சொட்டைச்சொல்** *šoṭṭai-c-col*, பெ. (n.) 1. *பழிச்சொல் (உ.வ.);* stigma. 2. *எள்ளல் (பரிகாசம்) (யாழ்ப்.);* ridicule.

*[சொட்டை + சொல்]*

**சொட்டைசொள்ளை** *šoṭṭai-šoḷḷai*, பெ. (n.) *குற்றங்குறை (நெல்லை.);* flaw, defect.

*[சொட்டை + சொள்ளை]*

**சொட்டைத்தலை** *šoṭṭai-t-talai*, பெ. (n.) *வழுக்கை விழுந்த தலை;* baldness in spots, due to disease.

ம. சொட்டித்தல

*[சொட்டை + தலை]*

**சொட்டையன்** *šoṭṭaiyaṉ*, பெ. (n.) *சொட்டைக்காரன் (யாழ்ப்.) பார்க்க;* see *šoṭṭai-k-kāraṉ*.

*[சொட்டை → சொட்டையன்]*

**சொட்டையாளன்** *šoṭṭaiyāḷaṉ*, பெ. (n.) *படை வீரன்;* soldier, warrior. 'சொட்டையாளர் படை தெரிய' *(பதிற்றுப். 67:5, உரை.)*.

*[சொட்டை + ஆளன். ஆள் → ஆளன்]*

**சொட்டைவாள்** *šoṭṭai-vāḷ*, பெ. (n.) *வளைந்த வாள் வகை;* a kind of crooked sword. "சொட்டைவாள் பரிசை" *(பாரத. கிருட்டிண. 101)*.

*[சொட்டை + வாள்]*

**சொட்டைவாளை¹** *šoṭṭai-vāḷai*, பெ. (n.) 1. *இரண்டடிக்கு மேற்பட்ட நீளமுடையதும் நன்னீரில் வாழ்வதும் வெண்ணிறமுள்ளது மான வாளைமீன் வகை;* fresh-water fish, silvery, attaining more than 2 ft. in length. 2. *ஒன்றரையடி நீளமுள்ளதும் நன்னீரில் வாழ்வதும் வெண்ணிறமுள்ளதுமான வாளை வகை;* butter-fish, fresh water-fish, silvery shot with purple attaining 1½ ft. in length. 3. *பூரான் வகை (நாஞ்.);* a species of centipede.

*[சொட்டை + வாளை]*




**சொட்டைவாளைக்குட்டி** *śoṭṭai-vāḷai-k-kuṭṭi,* பெ. (n.) வாளை மீனைப் போல் தடித்த தேகமுள்ள இளைஞன்; said of a young lad with a robust and symmetrical body (சா.அக.).

[சொட்டை + வாளை + குட்டி]

**சொட்டைவிழு-தல்** *śoṭṭai-viḻu-,* 2 செ.குவி. (v.i.) 1. தலையில் வழுக்கை உண்டாதல்; to become bald, as the head. தலையெல்லாம் சொட்டை விழுந்துவிட்டது. 2. அதுங்கிப் போதல்; to be dented, marked with dents, as a vessel. ஏனம் சொட்டை விழுந்திருக்கிறது.

[சொட்டை + விழு-.]

**சொடக்கு¹-தல்** *śoḍakku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. நெட்டி வாங்குதல்; to crack as the joints, knuckles. 2. கைநொடித்தல்; to snap, as the fingers. 3. பேன் நசுக்குதல்; to crack, as lice.

[சடக்கு → சொடக்கு-.]

**சொடக்கு²** *śoḍakku,* பெ. (n.) 1. கை, கால் முதலியவற்றை நீட்டி உதறி அல்லது விரல்களை நெறித்து எழுப்பும் சடசட ஒலி, நெட்டி; cracking the fingers, knuckles, etc. விரல்களைச் சொடக்கு எடுத்தான். 2. சோம்பற்றன்மை (வின்.); laziness, idleness. 3. கைநொடி (இ.வ.); snapping the fingers. 4. சுட்டை விரலையும் நடுவிரலையும் சேர்த்துச் சுண்டியெழுப்பும் ஒலி; கை நொடிப் பொழுது; time taken to snap one's fingers, moment. ஒரு சொடக்கில் வருகிறேன்.

ம. சொடக்கு

[சடக்கு → சொடக்கு.]

**சொடக்கு³** *śoḍakku,* பெ. (n.) 1. துளைக்கருவி (புதுவை.); wind instrument. 2. கிலுகிலுப்பை (மலை.); rattlewort.

**சொடக்குப்போடும்நேரம்** *śoḍakku-p-pōḍum-nēram,* பெ. (n.) 1. கைநொடிப் பொழுது; ஒரு மாத்திரை அளவு நேரம்; one second. 2. விரைவு; quickness. சொடக்குப் போடும் நேரத்தில் அவ்வேலையை அவன் முடித்து விட்டான் (உ.வ.).

[சொடக்கு + போடும் + நேரம்]

**சொடக்குவாங்கு-தல்** *śoḍakku-vāṅgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) சொடக்கெடு-த்தல் பார்க்க; see *śoḍakkeḍu-.*

[சொடக்கு + வாங்கு]

**சொடக்கெடு-த்தல்** *śoḍakkeḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) நெட்டி வாங்குதல்; to crack as the joints, knuckles; to stretch oneself.

[சொடக்கு + எடு-.]

**சொடக்கெடுத்தாற்போலிரு-த்தல்** *śoḍakkeḍuttāṟ-pōliru-,* 3 செ.கு.வி. (v.i.) தொந்தரவு நீங்கியிருத்தல் (இ.வ.); to feel easy; to be rid of uncomfortable elements.

[சொடக்கு + எடுத்தால் + போல் + இரு-.]

**சொடக்கெனல்** *śoḍa-k-keṉal,* பெ. (n.) ஓர் ஒலிக்குறிப்பு; onom. expr. of cracking noise. கம்பைச் சொடக்கென முறித்தான் (உ.வ.).

[சொடக்கு + எனல்]

**சொடகு** *śoḍagu,* பெ. (n.) சொடக்கு,1,2 பார்க்க; see *śoḍakku,1,2.*

[சொடக்கு → சொடகு]

**சொடி¹-தல்** *śoḍi-,* 2 செ.கு.வி. (v.i.) 1. வெயிலில் வாடுதல் (இ.வ.); to be burnt by the sun, as crops; to be blighted. மழையின்றி கடலைக்கொடி சொடிந்து போயிற்று. 2. குழைதல்; to shrink, as the abdomen for want of food. வயிறு சொடிய (வின்.).

க. சடு

[சடு → சொடு → சொடி → சொடி-.]

**சொடி²-த்தல்** *šoḍi-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. குறைவாய் விற்றல் (யாழ்ப்.); to sell dear. 2. வற்றுதல்; to grow dry.

[சுடு → சொடு → சொடி-.]

**சொடி³** *šoḍi*, பெ. (n.) சுறுசுறுப்பு (இ.வ.); active, temperament and habit.

ம. சொடி

**சொடிக்கு-தல்** *šoḍukku-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. சாட்டை முதலியவற்றைச் சுண்டியிழுத்தல்; give a sharp, snapping, sound. சாட்டையைச் சொடிக்கியதும் மாடு வேகமாக ஓடியது. 2. சொடக்குப்போடுதல்; snap. கை சொடிக்கும் நேரத்தில் எல்லாம் முடிந்துவிட்டது.

[சுடக்கு → சொடுக்கு]

**சொடுக்குச்சொடுக்கெனல்** *šoḍukku-c-coḍukkeṉal*, பெ. (n.) 1. ஓர் அடுக்கொலிக் குறிப்பு; onom. expr. signifying repeated clacking noise, as of wooden sandals in walking. 2. விரைவுக்குறிப்பு; quick action. தவறிழைத்த மாணவனை ஆசிரியர் சொடுக்குச்சொடுக்கென பிரம்பால் விளாசினார் (உ.வ.).

[சொடுக்கு + சொடுக்கு + எனல்]

**சொடுக்கெனல்** *šoḍukkeṉal*, பெ. (n.) பிரம்பாலடிக்கும் பொழுதும் சாட்டையால் வீசும்பொழுதும் எழும் ஒலிக்குறிப்பு (உ.வ.); onom. expr. of sharp sound, as of a stroke with a cane or a smack with a whip.

[சொடுக்கு + எனல்]

**சொடுகு** *šoḍugu*, பெ. (n.) குழிவு; dent.

[சொட்டை → சொடுகு.]

**சொடுதலை** *šoḍutalai*, பெ. (n.) வாயகன்ற ஏன வகை (சங்.அக.); a cylindrical vessel with open mouth.

[சோடு + தவலை - சோடுதவலை → சொடுதவலை → சொடுதலை]

**சொண்டடி-த்தல்** *šoṇḍaḍi-*, 4 செ.கு.வி. (v.i.) பேசுதற்கு உதடு குவித்தசைத்தல் (வின்.); to blubber in speaking, as an old man.

[சொண்டு = உதடு. சொண்டு + அடி-.]

**சொண்டலு** *šoṇḍalu*, பெ. (n.) சரக்கொன்றை; cassia fistula (சா.அக.).

**சொண்டறை** *šoṇḍaṟai*, பெ. (n.) இழிந்தவன் (அற்பன்) (யாழ்ப்.); mean person.

மறுவ. சொங்கி

[சொல் → சொள் → சொண்டு → சொண்டறை.]

**சொண்டன்** *šoṇḍaṉ*, பெ. (n.) 1. சொண்டுக்காரன் (வின்.) பார்க்க; see *šoṇḍu-k-kāraṉ*. 2. செருக்கன்; self-conceited person. "ஒரு சொண்டன் பரந்துலவும்" (கோயிற்பு. இரணிய. 22).

[சொண்டு² → சொண்டன்.]

**சொண்டாங்கலயம்** *šoṇḍāṅgalayam*, பெ. (n.) சிறுமட்பாண்டம் (நெல்லை); a small round earthern vessel.

ம. சொண்டாங்கி

[சொண்டு + ஆம் + கலயம்]

**சொண்டி¹** *šoṇḍi*, பெ. (n.) சுக்கு (மலை.); dried ginger.

க., தெ. சொண்டி; பட. சுட்டி

[சுண்டி → சொண்டி]

**சொண்டி²** *šoṇḍi*, பெ. (n.) சுண்டியுண்டை; a kind of yeast-ball.

[சுண்டி → சொண்டி]

**சொண்டிச்சோறு** *šoṇḍi-c-cōṟu*, பெ. (n.) சுண்டியுண்டையைப் பயன்படுத்திப் புளிக்க வைத்த சோறு; a kind of rice.

[சொண்டி + சோறு]

**சொண்டிதா** *šoṇḍitā*, பெ. (n.) கணைப் பூண்டு; a plant (சா.அக.).

**சொண்டிலி** *šoṇḍili*, பெ. (n.) சொண்டறை (சங்.அக.) பார்க்க; see *šoṇḍaṟai*.

**சொண்டு¹** *šoṇḍu*, பெ. (n.) குழிவு; dent.

க. ஜொண்டு; தெ. த்சுண்டு

[சொல் → சொள் → சொண்டு.]

**சொண்டு²** *šoṇḍu*, பெ. (n.) 1. பறவைமூக்கு (யாழ்ப்.); beak, bill. 2. உதடு; lip. சிவந்த சொண்டு. 3. தடித்த உதடு; blubber lip. 4. அடி

பருத்த ஏன (பாத்திர) விளிம்பு; thick brim of a pot or vessel. 5. மீன் மூக்கு; nose of fish.

ம. சுண்டு

[சுல் → சுள் → சொள் → சொண்டு]

**சொண்டு**³ *šondu,* பெ. (n.) 1. குற்றம்; guilt, fault. 2. சொண்டறை (இ.வ.) பார்க்க; see *šondarai.* 3. சொத்தை மிளகாய்; decayed chilly.

தெ. சொட்டு

[சுல் → சொல் → சொள் → சொண்டு]

**சொண்டுக்கதை** *šondu-k-kadai,* பெ. (n.) 1. உணவுக்காகச் சொல்லும் கதை (வின்.); stories told for food, etc. 2. பிறரை மகிழ்விக்கப் புறங்கூறுகை; tale-bearing, blabbing, exposing secrets in order to please others.

[சொண்டு + கதை]

**சொண்டுக்காரன்** *šondu-k-kāran,* பெ. (n.) தடித்த உதடன் (வின்.); blubber-lipped person.

[சொண்டு² + காரன்]

**சொண்டுகூட்டு-தல்** *šondu-kūttu-,* 5 செ.கு.வி. (v.i.) பேசுதற்குக் குழந்தைகள் இதழ் கூட்டுதல் (வின்.); to protrude the lips, as a child when beginning to talk.

[சொண்டு² + கூட்டு-.]

**சொண்டுச்சாடை** *šondu-c-cādai,* பெ. (n.) ஒருவனைப் பிறன் இழித்துக் கூறியதாக அவனிடமே கூறும் புறங்கூற்று (வின்.); telling a person what another has said to his discredit, a kind of tale-bearing.

[சொண்டு ³ + சாடை]

**சொண்டுசொல்** *šondu-šol,* பெ. (n.) துன்புறுத்தும் மொழி (இவ.); caustic remarks.

[சொண்டு³ + சொல்]

**சொண்டுத்தீன்** *šondu-t-tīn,* பெ. (n.) அடிக்கடி கொள்ளுஞ் சுவையுணவு (வின்.); delicious food taken frequently.

[சொண்டு² + (தீனி →) தீன்]

**சொண்டுப்பானை** *šondu-p-pānai,* பெ. (n.) தடித்த விளிம்புடைய பானை (வின்.); thick brimmed pot.

[சொண்டு² + பானை]

**சொண்டுபண்ணு-தல்** *šondu-pannu-,* 5 செ.குன்றாவி. (v.t.) இகழ்ச்சிசு செய்தல் (யாழ்.அக.); to scorn, treat with contempt.

மறுவ. ஏளனம் செய்தல்

[சொண்டு + பண்ணு-.]

**சொண்டுபேசு-தல்** *šondu-pēšu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. இகழ்ச்சியைச் சொல்லில் மறைத்துப் பேசுதல் (உ.வ.); speak with hidden abuse. 2. பழித்தல் (யாழ்ப்.); to abuse. சொண்டு பேசுவதே அந்தக் கிழவிக்கு வழக்கம் (உ.வ.).

[சொண்டு + பேசு-.]

**சொண்டுமிளகாய்** *šondu-milagāy,* பெ. (n.) விதையில்லாத சொத்தை மிளகாய்த் தோல்; blighted pod of chilly.

[(சண்டு →) சொண்டு + மிளகாய்]

**சொண்டுவில்-தல்** *šondu-vil-,* 14 செ.கு.வி. (v.i.) புறங்கூறுதல் (வின்.); to backbite.

[சொண்டு³ + வில்-.]

**சொணை** *šonai,* பெ. (n.) இலை, காய் முதலியவற்றின் மேல் உள்ள சிறுமுள்; prickle, as in leaves, stalks, etc.

[சுணை → சொணை]

**சொணைப்பு** *šonaippu,* பெ. (n.) சுரணை; *šensibility.* அவன் சொணைப்புக் கெட்டவன் (உ.வ.).

[சொணை → சொணைப்பு]

**சொத்தட்டை** *šottattai,* பெ. (n.) உளுத்த மரக்கட்டை (நாஞ்.); rotten piece of wood.

[சொத்தை + கட்டை - சொத்தட்டை]

**சொத்தல்** *šottal,* பெ. (n.) சொத்தை¹, 1, 4 பார்க்க; see *šottai*¹,1,4.

[சொத்தை¹ → சொத்தல்]

**சொத்தலி** *šottali,* பெ. (n.) கொட்டையில்லாப் பனங்காய் (யாழ்ப்.); stoneless palmyra fruit.

[சொத்தல் → சொத்தலி]

**சொத்தாட்சியலுவலர்** *šottatci-y-aluvalar,* பெ. (n.) சொத்து ஒப்படைப்பு அலுவலர்; official receiver.

[சொத்தாட்சி + அலுவலர்]

**சொத்தி** *šotti,* பெ. (n.) 1. உறுப்புக்குறை; lameness, crippledom. 2. நொண்டி; lame person. 3. குற்றம்; fault. யாருடைய சொத்தியால் இந்த வேலை இப்படி யாயிற்று.

[சொத்தை → சொத்தி]

**சொத்தியன்** *šottiyan,* பெ. (n.) நொண்டி (வின்.); lame person, cripple.

[சொத்தை → சொத்தியன்]

**சொத்திருப்புவகை** *šottiruppu-vagai,* பெ. (n.) சொத்து இருப்புகளின் வகைப்பாடு; classification of assets.

[சொத்து + இருப்புவகை]

**சொத்திலை** *šottilai,* பெ. (n.) பூமரம்; lac tree.

**சொத்தினம்** *šottinam,* பெ. (n.) அசையாச் சொத்துவகை; estate.

[சொத்து + இனம்]

**சொத்து**[1] *šottu,* பெ. (n.) 1. அசையும் பொருள் அசையாப்பொருள் என்ற இருவகை உடைமை; property, possessions, being of two kinds viz., tāvaram and šaṅgamam. சொத்தை விற்றுக் கடனை அடைத்தார். 2. பொன்; gold. "சொத்துற் றமைந்த சுதையில் செஞ்சுவர்" (பெருங். உஞ்சைக். 34:221).

க., தெ. சொத்து

[சொம் → சொத்து. ஒ.நோ. தொகை = தொகுதி, செல்வம். வ. ஸ்வாம் = சொத்து. தேவஸ்வாம் = தெய்வச் சொத்து, கோயிற் சொத்து. ஸ்வாம் → ஸ்வாமி → ஸ்வாமின் = சொத்துக்காரன், ஆண்டை, ஆண்டவன், தெய்வம். வடவர் ஸ்வாமின் என்னுஞ் சொல்லை ஸ்வ + மின் என்று பகுத்து, சொந்தக்காரன், உடையவன், உரிமையாளன், தலைவன், கணவன், அரசன், குரு, தெய்வப் படிமை என்று பொருள் தொடுப்பர்]

**சொத்து**[2] *šottu,* பெ. (n.) சொத்தை[1], 2 பார்க்க; see *šottai*[1],2. "உலக்கை பட்டு வலக்கை சொத்தானவும்" (கலிங். 133).

[சொத்தை → சொத்து]

**சொத்து**[3] *šottu,* பெ. (n.) உடலிற்பூசும் அரத்தம் போன்ற செம்பசை; blood-like red paste. சொத்துப் பூசிக்கொண்டான் (வின்).

**சொத்துக்காரன்** *šottu-k-kāran,* பெ. (n.) 1. பொருளுக்குரியவன்; owner. 2. பணக்காரன்; rich man.

[சொத்து + காரன்]

**சொத்துசுகம்** *šottu-šugam,* பெ. (n.) சொத்து பல, கை இருப்பில் உள்ளதால் வரும் இன்பம்; pleasure available by the ownership of property. அவனுக்குச் சொத்துச் சுகம் ஏதும் கிடையாது.

[சொத்து + சுகம்]

**சொத்துப்பூசு-தல்** *šottu-p-pūšu-,* 5 செ.கு.வி. (v.i.) பிறர் இரங்கிப் பிச்சைக் கொடுக்கும்படி உடலிற் செஞ்சாந்து பூசிக்கொள்ளுதல் (வின்); to daub one's body with blood-like red paste with a view to excite compassion while begging.

[சொத்து + பூசு-]

**சொத்துச்சொத்தெனல்** *šottu-c-cottenal,* பெ. (n.) தேங்காய் முதலியன ஒன்றின்பின் ஒன்றாய் விழுதல் முதலியவற்றால் உண்டாகும் அடுக்கொலிக்குறிப்பு (வின்.); onom. expr. signifying the repeated sound as of coconuts falling on the ground one after another. தேங்காய் சொத்துக் சொத்தென விழுகின்றது. பழம் சொத்துச் சொத்தென விழுகின்றது.

[சுல் (குத்தல்) → சுள் → சுர் → சுரு → சுறு → (சுற்று) → சுத்து → சொத்து + சொத்து + எனல். சொத்து - சொத்துதல் வினை இன்று வழக்கற்றுப்போய் ஒலிக்குறிப்பாக மட்டுமே வழங்குகிறது]

**சொத்துபற்றுஅறிக்கை** *šottu-parru-arikkai,* பெ. (n.) சொத்திற்கான பொறுப்பு அறிக்கை; statement of assets and liabilities.

[சொத்துபற்று + அறிக்கை]

**சொத்துவம்**[1] *šottuvam,* பெ. (n.) 1. பொருளுரிமை (சங்அக.); right, proprietorship, title, claim. 2. தானே இருத்தல் (சுயம்பு) (யாழ்ப்.); self-existence, independent condition.

[சொத்து → சொத்துவம்]

**சொத்துவரி** *šottu-vari,* பெ. (n.) வீடு, பணம், வேளாண்மை நிலம் நீங்கலாக உள்ள இதர

நிலம் போன்ற சொத்துகளின் மதிப்பின்மீது வாங்கப்படும் வரி; wealth tax on the capital value of a person's assets exclusive of agricultural lands.

[சொத்து + வரி]

**சொத்துவை-த்தல்** *šottu-vai-*, 4 செ.குவி. (v.i.) 1. தொகுத்து வைத்தல்; to collect. "நெடுங்கயிறெல்லா மிசைசொத்து வைத்தும்" (அஷ்டப். திருவரங். மா.52). 2. வழித்தோன்றல் முதலியவர்க்கு சொத்து தொகுத்து வைத்தல் (உ.வ.); to leave properties to heirs.

[சொத்து + வை-.]

**சொத்தெனல்** *šottenal*, பெ. (n.) மண்போன்ற மென்மைப் பரப்பில் தேங்காய் போன்ற பொருள் விழும்போது ஏற்படும் ஒலிக்குறிப்பு; onom. expr. of a falling material like coconut over soil surface.

மறுவ. சொத்துச் சொத்தெனல்

[சொத்து + எனல்]

**சொத்தை**[1] *šottai*, பெ. (n.) 1. புழுவண்டு முதலியன அரித்தது; that which is decayed, worm-eaten, injured by insects. 2. ஊனம்; defect, as in limbs, teeth, fruits etc. "சொத்தைவில் லொடித்ததை" (இராமநா. பாலகா. 25.). 3. சீர்கேடு (வின்.); being ruined in circumstances or character. 4. மெலிந்த உயிரி (பிராணி); emaciated person or animal. 5. சொத்தைக்களா (வின்.) பார்க்க; see *šottai-k-kaḷa*.

ம., து. சொத்த; க. சொத்த, சொத்தி, சொத்து, ஜொத்து; தெ. சொத்த; கோத. சொதி; பட. சொத்தெ

[சொள் → சொட்டை → சொத்தை = உள்ளீடற்றுக் கறுத்த பழம், புழுத்த காய் பூச்சியரித்த பல்]

**சொத்தை**[2] *šottai*, பெ. (n.) கன்னம் (யாழ்ப்.); cheek.

E. cheek; OE. ce'ce.

**சொத்தைக்களா** *šottai-k-kaḷā*, பெ. (n.) 1. செடிவகை; bushy roundish-leaved sweet thorn. 2. இலங்கை மரவகை; Ceylon plum. 3. ஒருவகை இலங்கை மரம்; lovilovi of Ceylon.

[சொத்தை[1] + களா]

**சொத்தைப்பல்** *šottai-p-pal*, பெ. (n.) கெட்டுப் போன பல் (உ. வ.); carious tooth.

மறுவ. சூத்தைப் பல்

[சொத்தை + பல்]

**சொத்தையிற்போடு-தல்** *šottaiyai-r-pōḍu-*, 20 செ.கு.வி. (v.i.) கன்னத்திலடித்தல் (யாழ்ப்.); to give one a slap on the cheek.

[சொத்தை + இல் + போடு-.]

**சொதசொதெனல்** *šota-šotenal*, பெ. (n.) கசிதற் குறிப்பு; expr. signifying the state of being mashy, as over-boiled rice, or of being soaked, as with oil or other fluids.

[சொதுசொதுவெனல் → சொதசொத வெனல்]

**சொதி** *šodi*, பெ. (n.) தேங்காய்ப்பாலவியல் (யாழ்ப்.); vegetable soup prepared from coconut.

இவ்வகைக் குழம்பு நெல்லை மாவட்டத்தில் தான் சிறப்பாகச் செய்யப் படுகிறது.

**சொதுசொதுவெனல்** *šodu-šodu-v-enal*, பெ. (n.) சேறுபோற் குழைந்திருத்தல் குறிப்பு; expr. signifying the state of being mud.

[சொளுசொளு → சொதுசொது → சொதுசொதுவெனல்]

**சொதை** *šodai*, பெ. (n.) 1. குழாம், கூட்டம்; crowd. 2. சொத்து[1] (யாழ்.அக.) பார்க்க; see *šottu*[1].

[சொது → சொதை]

**சொதைகாரன்** *šodai-kāran*, பெ. (n.) சொத்துக்காரன் பார்க்க; see *šottu-k-kāran*.

[சொத்து → சொதை + காரன்]

**சொந்த** *šonda*, பெ.எ. (adj.) 1. தன்பிறப்பால் அல்லது தன்னுடைய முன்னோரில் பிறப்பால் உரிமையுடைய; native. சொந்த ஊருக்குப் போய் வந்தான். 2. உடன்பிறந்த; தன்நேர் உறவான; blood relation; own. சொந்தத் தம்பி. 3. தனக்கே உரிய; தனிப்பட்ட; personal; private. நடிகை தன் சொந்தக் குரலில் பாடினாள்.

[சொந்தம் → சொந்த]

**சொந்தக்கம்பத்தம்** *šonda-k-kambattam,* பெ. (n.) பண்ணை வைத்துச்செய்யும் வேளாண்மை; cultivation carried on by one's own plough and cattle.

*[சொந்தம் + கம்பத்தம். கம்மம் → கம்பத்தம் = வேளாண்மை.]*

**சொந்தக்காரன்** *šonda-k-kāraṉ,* பெ. (n.) 1. உரியவன்; owner. இந்த மாட்டின் சொந்தக் காரன் யாரோ? 2. உறவினன்; close relation. சொந்தக்காரன் திருமணத்திற்கு வந்தேன்.

*[சொந்தம் + காரன்]*

**சொந்தக்காரி** *šonda-k-kāri,* பெ. (n.) சொந்தக்காரன் என்பதன் பெண்பால்; feminine of šonda-k-kāraṉ.

*[சொந்தக்காரன் (ஆ.பா.) → சொந்தக்காரி (பெ.பா.)]*

**சொந்தம்** *šondam,* பெ. (n.) 1. நிலம், பொருள் முதலியவற்றின் மீது ஒருவருக்குள்ள உரிமை; one's own peculiar right, exclusive property, that which belongs to oneself. "சொந்தமா யாண்ட நீ" *(தாயு. சுகவாரி. 11).* அவருக்குச் சொந்த வண்டி உண்டு. 2. நெருங்கிய உறவு (உ.வ.); near relationship.

க. சொந்த; தெ. சொந்தமு

*[சும் → சொம் → (சொத்து) → சொந்தம்]*

**சொப்பட** *šoppaḍa,* குவி.எ. (adv.) நன்றாக; well, neatly, fully. 'சொப்பட நீராட வேண்டும்' *(திவ். பெரியாழ். 2. 4:5).*

தெ. சொப்படு

*[செப்பம் + படு - செப்பப்படு → சொப்பட]*

**சொப்பம்** *šoppam,* பெ. (n.) ஒளியின்மை; dullness, lack of brilliancy. 'ஹீனரோட்டை ஸம்ஸர்க்கத்திலிறே . . . சொப்பமும் பிறப்பது' *(திவ். திருநெடுந். 21, வியா, பக். 175).*

க. சொப்பு

**சொம்** *šom,* பெ. (n.) சொத்து; property, wealth, one's own goods. "சொம் மனைவைத் தெப்படி நடப்பீர்" *(குமர. பிர. காசிக். 34).*

வ. ஸ்வ → ஸ்வாம்

*[சும் → சொம். சும் → சும்மை = தொகுதி, செல்வத் தொகுதி]*

**சொம்படக்கா** *šombaḍakkā,* பெ. (n.) நீளமும் அகலமும் ஓரளவினதான கடல்மீன் வகை; sting-ray, dull brown, with disc as broad as long.




**சொம்பாதி**[1] *šom-bādi,* பெ. (n.) சரிபாதி; exact half. "சொம்பாதியானாள் சுமக்கவெருதானாள்" *(தனிப்பா. 1, 62:123).*

*[செம்மை+பாதி–செம்பாதி → சொம்பாதி]*

**சொம்பாதி**[2] *šombādi,* பெ. (n.) மேல்வாரம் (இ.வ.); owner's share of produce.

*[சொம் + பாதி. சொம் = சொத்து]*

**சொம்பு**[1] šombu, பெ. (n.) செம்பு பார்க்க; see *šembu.*

ம. செம்பு; க. செம்பு, சொம்பு; தெ. செம்பு; து. சொம்பு, செம்பு, சம்பு; கோத. கெபி; குட. செம்ப்; பட. செம்பு

*[செம்பு → சொம்பு]*

**சொம்பு**[2] *šombu,* பெ. (n.) அழகு; beauty, grace. "சொம்பிற் பலவள முதிர் சோலைகள்சூழ்" *(திருப்பு. 136).*

க., தெ. சொம்பு

**சொம்மாளி** *šom-m-āḷi,* பெ. (n.) உடைமையாளன் (யாழ். அக.); heir, owner.

மறுவ : உரிமையாளன், சொத்துக்காரன்

*[சொம் + (ஆள் →) ஆளி]*

**சொம்மெடு-த்தல்** *šom-meḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) வழியுரிமையாகச் (வாரிசாக) சொத்தை யடைதல் (நாஞ்.); to inherit of property.

*[சொம் + எடு. சொம் = சொத்து]*

**சொர்க்கப்பாவனை** *šorkka-p-pāvaṉai*, பெ. (n.) சொக்கப்பனை (வின்.) பார்க்க; see *šokka-p-paṉai*.

*[சொக்கப்பனை → சொர்க்கப்பாவனை]*

**சொரங்கம்** *šorangam*, பெ. (n.) ஏலக்காய்த் தோல் (வின்.); husk of cardamom.

**சொரசத்தோரசி** *šoraša-t-toraši*, பெ. (n.) இலவங்கம் (மலை.); clove.

**சொரசொரப்பு** *šora-šorappu*, பெ. (n.) உராய்வை ஏற்படுத்தும் தன்மை; roughness of a surface. மழிக்காமல் முகம் சொரசொரப்பாக உள்ளது.

*[சுரசுரப்பு → சொரசொரப்பு]*

**சொரடு** *šoraḍu*, பெ. (n.) துறட்டி (வின்.); crook of wood or iron.

*[துறடு → சொரடு.]*

துறடு = காய் முதலியனப் பறிக்குந் துறட்டுக் கோல்

**சொரணை** *šoranai*, பெ. (n.) சுரணை (யாழ்.அக.); sensitiveness.

*[சுரணை → சொரணை]*

**சொரி¹-தல்** *šori-*, 2 செ.கு.வி. (v.i.) 1. **மழை முதலியன தொகுதியாக விழுதல்;** to flow down, rain, spill. "அலர்மழை சொரிந்த" (கம்பரா. வேள்வி. 56) 2. **மிகுதல்;** to bear in plenty; to be abundant, profuse, copious. 3. **உதிர்தல்** (யாழ்ப்.); to drop off, as dry scales in small-pox; to be scattered, as rice from the husk. பூச்சொரிந்து வரவேற்றனர்.

ம. சொரியுக; க. சுரி; தெ. தொரகு, தொருகு, தொறகு; து. தொரியுனி; கோத. சோர்; குட. தோர்; கூ. சுகார; பர். சோர்; கட. சோர்ப்; குரு. சுர்கானா; மா. சுர்கெ, சுர்க்ரெ; பட. சோரு

*[சொல் → (சொர்) → சொரி → சொரி-தல் = உள்ளிருந்து விழுதல், சிந்துதல்]*

**சொரி² -தல்** *šori-*, 2 செ.குன்றா.வி. (v.t.) 1. **பொழிதல்;** to scatter pour forth, effuse, emit, shoot, as arrows, shed, as leaves fruits. "வானவர்பூ மழை சொரிந்தார்" (பெரியபு. மநுநீதி. 45). 2. **கொட்டுதல்;** to empty, pour out, as corn from sack; to dump, as sand from cart. "காரியெட்ட சொரிந்தார்" (கம்பரா. பிரமாத். 165). 3. **மிகக் கொடுத்தல்;** to give a way in plenty. "துகில் வர்க்க மெல்லாம் . . . சொரிந்தா ரன்றே" (சிவரக. சுகமுனி. 5).

*[சொரி¹ → சொரி²-.]*

**சொரி³ -தல்** *šori-*, 2 செ.குன்றாவி. (v.t.) சொறி பார்க்க; see *šoṟi*.

*[சொறி → சொரி-.]*

**சொரி⁴ -தல்** *šori-*, 2 செ.கு.வி. (v.i.) **சுழலுதல்** (சூடா.); to whirl, revolve.

*[சுரி → சொரி-. சுரி-தல் = சுழிதல்]*

**சொரி⁵** *šori*, பெ. (n.) **தினவு;** itching, tingling. "சொரிபுற முரிஞ்ச" (சிலப். 10:122).

*[சொறி → சொரி]*

**சொரிகுரும்பை** *šori-kurumbai*, பெ. (n.) நெல்வகை (வின்.); a kind of paddy.

*[சொரி¹ + குரும்பை - சொரி குரும்பை = மிகுதியாக விளையும் நெல் வகை]*

**சொரிகொன்றை** *šori-koṉṟai*, பெ. (n.) கொன்றை வகை (L.); Indian trumpet flower.

*[சொரி + கொன்றை]*

**சொரிந்தள-த்தல்** *šorindaḷa-*, 3 செ. குன்றாவி. (v.t.) **பண்டங்களை மேலே தூவியளத்தல்** (வின்.); to measure gently without pressing down, as flowers, flour, etc.

*[சொரி¹ → சொரிந்து + அள-.]*

**சொரிநெல்** *šorinel*, பெ. (n.) **குவித்திருக்கும் நெல்** (வின்.); paddy heaped up.

ம. சொரிநெல்லு

*[சொரி + நெல்]*

**சொரிபுன்னை** *šori-puṉṉai*, பெ. (n.) **பேய்க் கண்டல் என்னும் சிறுமரவகை;** simple cymed mangrove.

*[சொரி + புன்னை]*

**சொரிமணல்** *šori-maṇal,* பெ. (n.) கால் வைத்தால் இறக்கியமிழ்த்தும் புதைமணல்; quick- sand.

ம. சொரி மணல்

மறுவ. சொருகுமணல், புதைமணல்

[சொரி + மணல்]

**சொரிமி-த்தல்** *šorimi-,* 4 செ.கு.வி. (v.i.) இணங்குதல் (நாஞ்.); to agree, to be cordial.

**சொரிமிப்பு** *šorimippu,* பெ. (n.) இணக்கம் (நாஞ்.); agreement, cordial relationship.

[சொரிமி → சொரிமிப்பு]

**சொரிவாய்** *šori-vāy,* பெ. (n.) குதிரிலிருந்து நெல் சொரிந்து விழுந்துளை (நாஞ்.); aperture or opening of a receptacle through which paddy can be taken out.

[சொரி + வாய்]

**சொருக்கு** *šorukku,* பெ. (n.) சொருகு கொண்டை பார்க்க; see *šorugu-koṇḍai.*

[சொருகு → சொருக்கு]

**சொருகம்புல்** *šorugam-pul,* பெ. (n.) புல்வகை (சங். அக.); a kind of grass.

[சொருகு + அம் + புல்]

**சொருகல்** *šorugal,* பெ. (n.) பெரும்பாலுங் குழந்தைகளிடங்காணும் குடற்சிக்கு; sticking in the bowels, as of indigestible food, especially of children.

[சொருகு → சொருகல்]

**சொருகு¹-தல்** *šorugu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. சிக்கிக் கொள்ளுதல்; to be entangled, become connected inadvertently. 2. குடலிற் சிக்குதல்; to gripe in the bowels. 3. கருவிழி மறைதல்; to disappear, as the pupil of the eye in fainting. etc. தூக்கத்தால் அவனுடைய கண் சொருகுகின்றது 4. தங்குதல்; to repose. "துரியங்கண் மூன்றுஞ் சொருகிடனாகி" (திருமந் 1893).

[சொள் → (சொர்) → சொருகு → சொருகு-தல் = துளைக்குள் இடுதல், உள்ளிடுதல்]

**சொருகு²-தல்** *šorugu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. நுழைத்தல்; to put in, insert, tuck in. "சொருகு கொந்தளக மொருகை மேலலைய" (கலிங். 46). 2.தூக்கம் நோய் முதலியவை கண் விழிகளை ஒரு பக்கமாக ஒதுக்கி மறையச் செய்தல்; to turn the pupil of the eye till it disappears, as in sleep, giddiness. தூக்கம் கண்ணைச் சொருகுகிறது.

ம. சொருகுக; க. சொருகு

[சொருகு¹ → சொருகு²]

**சொருகு³** *šorugu,* பெ. (n.) 1. படகில் துடுப்பைப் பூட்டுதற்குரிய வளையம்; a ring to hold the ore in the boat. 2. உட்புறமிருந்து சிறு இரும்புச் சட்டத்தை அல்லது உருளையைத் தள்ளி, வீட்டுக்கதவைப் பூட்டுகை; small metal moving latch fitted on the door. 3. இரட்டைக் கதவில் ஒன்றை ஒரு சிறு இரும்பு உருளை அல்லது இரும்புச் சட்டத்தைத் தள்ளுவதன் மூலம் கதவு நிலையுடன் அல்லது கீழ்த் தரையில் உள்ள குழியுடன் பிணைப்பது; a movement of a latch which is used to fix the bolt to the door frame or whole on the floor.

[சொருகு¹ → சொருகு³]

**சொருகுகதவு** *šorugu-kadavu,* பெ. (n.) 1. சொருகி மூடுங்கதவு; door of insertion. 2. கடையை மூடவுதவும் சொருகு பலகைகள்; wooden planks to close the shops.

[சொருகு¹ + கதவு]

கடைக்கதவு பலகைகளால் ஆனது. மேல் நிலை, கீழ் நிலைகளில் தோண்டப்பட்ட பள்ளத்தில் நிற்கும். நடுப்பலகை இருக்கு மிடத்தில் மேல் நிலையில் பள்ளம் ஆழமாக எடுக்கப்பட்டிருக்கும். அப்பள்ளத்தில் பலகையைச் சொருகித் தூக்கிக் கீழ்நிலைப் பள்ளத்தில் நிறுத்தி இரு முனைகளுக்கும் தள்ளிவிடலாம். இறுதியில் நடுப்பலகையைச் சொருகிப் பூட்டி விடலாம்.



சொருகு கதவு

**சொருகுகொண்டை** *šorugu-kondai,* பெ. (n.) பெண் மயிர்முடிவகை (வின்.); woman's hair twisted round and tucked in, as in dressing.

*[சொருகு + கொண்டை]*

**சொருகுதலைப்பு** *šorugu-talaippu,* பெ. (n.) சேலையின் உள்ளிடமான தலைப்பு (வின்.); the end of saree tucked in.

*[சொருகு + தலைப்பு]*

**சொருகுபிடிகத்தி** *šorugu-pidi-katti,* பெ. (n.) உறையுள் இட்ட பிடியுள்ள கத்தி (இ.வ.); sword or knife with handle kept in sheath.

*[சொருகு + பிடிகத்தி]*

**சொருகுமணல்** *šorugu-maṇal,* பெ. (n.) சொரிமணல் பார்க்க; see *šori-maṇal.*

மறுவ. புதைமணல்

*[சொருகு + மணல்]*

**சொருகுமாந்தம்** *šorugu-māndam,* பெ. (n.) கண்களை ஒரு பக்கமாகச் சொருகுமாறு செய்யும் குழந்தை நோய்வகை (சங்.அக.); convulsions affecting children in, which the eyes are turned up under the lids.

*[சொருகு + மாந்தம்]*

**சொருகுமுந்தானை** *šorugu-mundāṉai,* பெ. (n.) புடைவையின் சொருகு தலைப்பு (வின்.); the end of a saree which is tucked in.

*[சொருகு + முந்தானை]*

**சொருகோடு** *šorukōdu,* பெ. (n.) சொருகி யடுக்குந்தட்டையோடு (C.E.M.); thick flat insertible tile.

*[சொருகு + ஓடு]*

**சொருணை** *šoruṇai,* பெ. (n.) 1. சுரணை (யாழ்ப்.); sensitiveness. 2. சுருட்டி வைத்த பொருள்; anything rolled up.

*[சுரணை → சுருணை → சொருணை]*

**சொருவா** *šoruvā,* பெ. (n.) கஞ்சி (அக. நி.); gruel.

**சொருவு** *šoruvu,* பெ. (n.) உறை (இ.வ.); sheath.

*[சொருகு → சொருவு]*

**சொல்[1](லு)-தல்** *šol(lu)-,* 8 செ.குன்றாவி. (v.t.) 1. பேசுதல்; to say, speak, tell, mention, utter, express. "சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ் சொல்லிய வண்ணஞ் செயல்" *(குறள், 664).* 2. திருப்பிக்கூறுதல்; to recite, repeat, relate, quote. சொன்னதைச் சொல்லுங் கிளிப்பிள்ளை. 3. கட்டளையிடுதல்; to dictate, command. மூத்தோர் சொல்லியதை மீறாதே. 4. அறிவுரைக் கூறுதல்; to advise. 5. அறிவித்தல்; to inform. "யாருக்கென் சொல்லுகே னன்னை மீர்காள்" *(திவ். திருவாய். 9. 9:7).* 6. புகழ்தல்; to praise. "தோளையே சொல்லுகேனோ" *(கம்பரா. மாரீச. 73).*

ம. சொல்லுக; க. சொல், சொல்லு; தெ. சொல்; இரு. சொல்லு; எர. சொன்னு

*[சுல் → சொல் = ஒலி, மொழி. சொல் → சொல்(லு)-தல் = உரைத்தல்]*

**சொல்[2](லு)-தல்** *šol(lu)-,* 8 செ.குன்றாவி. (v.t.) களைதல்; to remove, alleviate, put away. "புறவி னல்லல் சொல்லிய . . . துலாஅம் புக்கோன்" *(புறநா. 39).*

*[சுல் → சொல் → சொல்(லு)-தல்]*

**சொல்[3]** *šol,* பெ. (n.) 1. மொழி; word, term. 'சொல்லினாகு மென்மனார்' *(தொல். சொல். 158).* 2. பேச்சு; saying, speech. "சான்றோர் கொடுத்தா ரெனப் படுஞ்சொல்" *(நாலடி, 100).* 3. பழமொழி; proverb, maxim. "அல்லவை செய்தார்க் கறங் கூற்றமாமென்னும் . . . சொல்" *(சிலப். 20, வெண்பா.).* 4. உறுதிமொழி; declaration, promise, assurance. "தோழமை யென்றவர் சொல்லிய சொல்லொரு சொல்லன்றோ" *(கம்பரா. குகப். 15.).* 5. புகழ்; praise, encomium, panegyric. "தன்சொலாற் றான்கண்டனைத்து" *(குறள். 387).* 6. மந்திரம்; incantation. "சொல்லுங்காற் சொல்லும் பலவுள" *(பு.வெ. 12, வென்றிப், 9).* 7. தீமொழி (சாபம்); curse. "சொல்லொக்குங் கடியவேகச் சுடுசரம்" *(கம்பரா. தாடகை. 72).* 8. கட்டளை; command, direction. "என்சொற் கடந்தா லுனக்கியாதுள தீனமென்றான்" *(கம்பரா. நகர்நீங்கு. 140).* 9. அறிவுரை; advice. தந்தைசொல் மிக்க மந்திரமில்லை.

ம. சொல்லு, சொல்; க. சொல், சொல்லு; குட. சொல்லி (பெயர்); கோத. சொல் (ஆணை); பர். சுல்

*[சுல் → சொல்]*

**சொல்**[4] *šol*, பெ. (n.) *1.* பெயர்ச்சொல், வினைச் சொல், இடைச்சொல், உரிச்சொல் என்ற நால்வகை மொழிகள் (நன். 270); part of speech, of which there are four, viz. peyar-c-col, vinai-c-col, idai-c-col, uri-c-col. *2.* தமிழ் மொழியில் உள்ள இயற்சொல், திரிசொல், திசைச்சொல் வடசொல் என நால்வகைப் பட்ட மொழிகள் (தொல். சொல். 397); words in Tamil language, of four classes, viz., iyar-col, tiri-šol, tišai-c-col, vada-šol.

*[சொல்[3] → சொல்[4]]*

'சொல் எழுத்தொடு புணர்ந்து பொருள் அறிவுறுக்கும் ஓசை' *(இளம். தொல். சொல். 1; கல். தொல். சொல்1).*

'எழுத்தோடு ஒருபுடையான் ஒற்றுமையுடைத் தாய்ப் பொருள் குறித்து வருவது. சொல்தான் இரண்டு வகைப்படும் தனி மொழியும் தொடர் மொழியும் என' *(சேனா. தொல். சொல். 1).*

'எழுத்தினா னாக்கப்பட்டு இருதிணைப் பொருட்டன்மையும் ஒருவன் உணர்தற்கு காரணமாம் (நிமித்தமாம்) ஓசை' *(நச்.தொல். எழுத்து. பாயிரம்; நச். தொல். சொல். 1).*

'எழுத்தினான் ஆக்கப்பட்டுப் பொருளறி வுறுக்கும் ஓசை' *(நச்.தொல். பொருள்.195).*

'எழுத்தினானியன்று பொருள் அறிவிக்குஞ் சொற்களைப் பொருள் நிலைமை நோக்கித் தொடர்மொழி தனி மொழியென இருவகைப் படுத்தி, அத்தொடர்மொழியை அல்வழித் தொடர் வேற்றுமைத்தொடரென இருவகைப் படுத்தலாம்' *(தெய்வச். தொல். சொல்.1)*

'எழுத்தினான் ஆக்கப்பட்டு இருதிணைப் பொருட்டன்மையும் ஒருவன் உணர்தற்குக் கருவியாம் ஓசை' *(சிவ. நன். சொல். முன்னுரை).*

'சொல் (கூறும் முறை) எல்லாச் சொற்களையும் கூறுங்கால் பொருள் சிறக்குமிடத்து எழுத்தினை எடுத்தும் அயலெழுத்தினை நலித்தும் ஏனை யெழுத்துகளைப்படுத்தும் கூறுக' *(நன்.132. சிவ.).*

'சொல் (முரண்) சொல்லாலன்றிப் பொருளான் மாறுபடாமை' *(தொல். செய். 91, இளம்.).*

**சொல்**[5] *šol*, பெ. (n.) *1.* நாடகவரங்கிற் பேசப்படும் உட்சொல், புறச்சொல், வான் (ஆகாசச்) சொல் என்பன (சிலப். 3. 13 உரை. பக். 87); speech or utterance on the stage. of three kinds, viz., ut-col. pura-c-col. āgāša-c-col *2.* ஒலி; sound. பல்லி சொல்.

*[சல் → சொல்]*

**சொல்**[6] *šol*, பெ. (n.) *1.* நாமகள்; Šarasvadi, as Goddess of speech. சொல்லென்றது நாமகளாகிய தெய்வம் *(தொல். சொல். 57, சேனா.).* *2.* சொல் விளம்பி (அக. நி.) பார்க்க; see ***šol-vilambi.***

*[சல் → சொல்]*

**சொல்**[7] *šol*, பெ. (n.) நெருப்புப் போல் அல்லது பொன்போல் விளங்கித் தோன்றும் நெல்; paddy. "சொல்_ இறைஞ்சிக் காய்த்தவே" *(சீவக. 53).*

*[சல் → சொல்]*

**சொல்தவறு-தல்** *šol-tavaru-*, 5 செ.கு.வி. (v.i.) சொல் (வார்த்தை) பிறழ்தல்; to treak one's word.

*[சொல் + தவறு-.]*

**சொல்லகத்தியம்** *šol-l-agattiyam*, பெ. (n.) இறந்துபட்ட ஓர் இசைநூல் (சிலப். 8:24, அரும்.); an ancient treatise on music, not extant.

*[சொல் + அகத்தியம்]*

**சொல்லடைவு** *šol-l-adaivu*, பெ. (n.) ஒரு நூலில் வழங்கும் சொற்களை அகர வரிசைப்படுத்தி நூலுடன் இணைக்கும் பட்டியல்; word index. (for texts, ext. literary works)

*[சொல் + அடைவு]*

**சொல்லணி** *šol-l-ani*, பெ. (n.) சொல்லினோசை முதலியன இன்பம்பட அமைக்கும் அணிவகை (தண்டி.); figure of speech depending for its effect on sound alone, opp. to *porul-ani.*

*[சொல் + அணி]*

**சொல்லதிகாரம்** *šol-l-adigāram*, பெ. (n.) சொல்லின் பாகுபாடு செய்கை முதலியவற்றைப் பற்றிக் கூறும் இலக்கணப் பகுதி (தொல்.); section dealing with etymology.

*[சொல் + அதிகாரம்]*

**சொல்லபோனால்** *šollapōṉāl*, வி.எ. (adv.). உண்மையில்; in fact. இவர்கள் ஏன் ஒப்பாரி வைக்கிறார்கள் என்று தெரியவில்லை; சொல்லப் போனால் நானல்லவா துயரப்பட வேண்டும்.

*[சொல் → சொல்லப்போனால்]*

**சொல்லலங்காரம்** *šol-l-alaṅgāram*, பெ. (n.) சொல்லணி பார்க்க; see *šol-l-aṇi*.

*[சொல் + அலங்காரம்]*

Skt. அலம்கார → த. அலங்காரம்

**சொல்லழிம்பு** *šol-l-aḻimbu*, பெ. (n.) இடக்கர்ச்சொல்; obscene word. அவன் சொல்லழிம்பு மிகமோசம் (உ.வ.).

*[சொல் + அழிம்பு]*

**சொல்லழுத்தம்** *šol-l-aḻuttam*, பெ. (n.) 1. ஊன்றிச்சொல்லுகை; emphasis. 2. சொல்லுறுதி (வாக்குறுதி); word of promise; decisive speech.

*[சொல் + அழுத்தம்]*

**சொல்லற்பாடு** *šollaṟ-pāḍu*, பெ. (n.) சொல்லப்படுகை; spoken mentioned. 'அவ்விரண்டும் உவமமென்று சொல்லற்பாட்டிற் கடியப்படா' (தொல். பொருள். 310, உரை).

*[சொல் + அல் + (படு →) பாடு]*

**சொல்லறிகணை** *šol-l-aṟi-kaṇai*, பெ. (n.) ஒலியைக் கேட்டே மறைந்துள்ள இலக்கை அறிந்து எய்யுங்கணை; arrow that is shot at a person or animal when out of sight, the direction being judged by sound. "சொல்லறி கணையை வாங்கித் தொடுத்தவன் விடுத்தலோடும்" (யசோதர. 4:31).

*[சொல் + அறிகணை]*

**சொல்லறிபுள்** *šol-l-aṟipuḷ*, பெ. (n.) 1. கிளி (யாழ்அக.); parrot. 2. பூவை (சங்அக.); myna.

*[சொல் + அறி + புள்]*

**சொல்லறுதி** *šol-l-aṟudi*, பெ. (n.) விலை முதலியவற்றை வரையறையாகக் கூறும் உறுதி (வின்.); final word, as in striking a bargain.

*[சொல் + அறுதி]*

**சொல்லாக்கம்** *šol-l-ākkam*, பெ. (n.) 1. புதிய கருத்துகளை உணர்த்த ஒரு மொழியில் சொற் செய்துகொள்ளுகை; formation of words, word-building. 2. பேட்டி; interview. 3. கலந்துரையாடல்; conversation.

*[சொல் + ஆக்கம்]*

**சொல்லாகுபெயர்** *šol-l-āgupeyar*, பெ. (n.) 'உரை செய்தான்' என்பதில் உரையென்பது அம்மொழியால் உணரப்படும் பொருளுக்கு ஆவது போன்ற ஆகுபெயர் (நன். 290, உரை); a species of metonymy in which a term signifying word is used to denote a composition, oral or written as in 'நூலுக்கு உரை செய்தான்'

*[சொல் + ஆகுபெயர் - சொல்லாகுபெயர் = ஒரு சொல் அதனோடு ஏதேனும் ஒரு வகையில் தொடர்புடைய மற்றொன்றையும் குறிப்பிட்டு வழங்கி வருவது]*

**சொல்லாட்சி** *šol-l-āṭci*, பெ. (n.) சொற்களை தொடரில் பயன்படுத்தும் பாங்கு; command over words. மொழிநடையில் உள்ள சொல்லாட்சி கண்டே, எழுத்தாளர்/கவிஞர் யாரென அறியமுடியும்.

*[சொல் + ஆட்சி]*

**சொல்லாட்டி** *šol-l-āṭṭi*, பெ. (n.) திறமையாய்ப் பேசுபவள்; woman of clever or skilful speech. "சொல்லாட்டி நின்னொடு சொல்லாற்ற கிற்பார் யார்" (கலித். 108).

*[சொல் + ஆட்டி - சொல்லாட்டி = சொல்லை ஆள்பவள்.]*

**சொல்லாட்டு** *šol-l-āṭṭu*, பெ. (n.) பேச்சு; conversation speech. "சொல்லாட் டிடையுஞ் செல்ல நீர்தலின்" (பெருங். வத்தவ. 6:25).

*[சொல் + ஆட்டு. ஆடு → ஆட்டு]*

**சொல்லாடு-தல்** *šoḷ-l-āḍu-*, 5 செ.கு.வி. (v.i.) பேசுதல்; to speak, talk. "சொல்லாடச் சோர்வுபடும்" (குறள், 405).

*[சொல் + ஆடு-. ஆடு → ஆடுதல் = பேசுதல், உரைத்தல்]*

**சொல்லாதசொல்** *šollāda-šol*, பெ. (n.) 1. தகாத சொல் (யாழ்.அக.); improper word.

2. இடக்கர்ச் சொல்; obscene or indecent language. 3. வசை; abusive language.

[சொல் + ஆத + சொல்]

**சொல்லாமற்சொல்(லு)-தல்** *šollāmar-šoll(u)-*, 8 செ.குன்றாவி. (v.t.) தன் கருத்தைக் குறிப்பாற் கூறுதல்; to communicate one's thoughts indirectly or by sly remark or gestures. "சொல்லாமற் சொன்னவரை" (திருவிளை. பாயி. 13). மகன் செய்த தவற்றைச் சொல்லாமல் சொல்லித் திருத்தினார்.

[சொல்லாமல் + சொல்(லு)-.]

**சொல்லாழம்** *šol-l-ālam*, பெ. (n.) சொல்லின் பொருளாழம்; deep significance of a word.

[சொல் + ஆழம்]

**சொல்லாளி** *šol-l-āli*, பெ. (n.) 1. உறுதிச்சொல் (வாக்குறுதி) யுள்ளவன் (வின்.); one faithful to his word. 2. சொற்றிறமையுள்ளவன் (வின்.); eloquent person. 3. செல்வாக்குள்ளவன் (உவ.); a person of influence.

[சொல் + ஆளி. ஆள் → ஆளி]

**சொல்லானந்தம்** *šol-l-ānandam*, பெ. (n.) இலக்கியத் தலைவனின் இயற்பெயரை யடுத்துக் கேடுபயக்கும் அமங்கலச் சொல்லைப் புணர்த்துப்பாடுவது (யாப். வி. 96. பக். 519); inauspicious use of a word of evil import in conjunction with the name of the hero of a poem.

[சொல் + ஆனந்தம் - சொல்லானந்தம் = பாடலின் குற்றங்களுள் ஒருவகை. பாக்குற்றங்கள்: எழுத்துக் குற்றம், சொல் குற்றம், பொருள் குற்றம், யாப்புக் குற்றம், தூக்குக் குற்றம், தொடைக் குற்றம்]

**சொல்லிக்காட்டு-தல்** *šolli-k-kāttu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. பாடம் ஒப்பித்தல்; to repeat a lesson. 2. விளக்கியறிவித்தல் (வின்.); to describe, explain, define. 3. குத்திக் காட்டுதல்; to remind one of one's faults; to call to mind one's misdeeds or defects. குற்றத்தைச் சொல்லிக் காட்டினான்.

[சொல் → சொல்லி + காட்டு-. காட்டு → காட்டு-தல் = அறிவித்தல், காண்பித்தல்]

**சொல்லிக்கொடு[1]-த்தல்** *šolli-k-kodu-*, 4 செ. குன்றாவி. (v.t.) 1. படிப்பித்தல்; to teach, explain. 2. அறிவித்தல்; to inform, make known.

[சொல் → சொல்லி + கொடு-. 'கொடு' - துணைவினை]

**சொல்லிக்கொடு[2]-த்தல்** *šolli-k-kodu-*, 4 செ.கு.வி. (v.i.) 1. அறிவுரை கூறுதல்; to advise. 2. தூண்டி விடுதல்; to instigate.

[சொல் → சொல்லி + கொடு-. 'கொடு' - து. வினை]

**சொல்லிக்கொள்(ளு)[1]-தல்** *šolli-k-kol(lu)-*, 16 செ.கு.வி. (v.i.) 1. விடைபெறுதல்; to take leave. 2. ஒருவனுக்காகப் பிறனிடந் தாங்கிப் பேசுதல்; to recommend; to speak on one's behalf. பணத்திற்காக நான் அவனுக்குச் சொல்லிக் கொள்ளுகிறேன்.

[சொல் → சொல்லி + கொள்(ளு)-. கொள் - துணைவினை]

**சொல்லிக்கொள்(ளு)[2]-தல்** *šolli-k-kol(lu)-*, 10 செ.குன்றாவி. (v.t.) 1. முறையிடுதல்; to complain, make known. நடுவரிடம் தன் குறையைச் சொல்லிக் கொண்டான். 2. தனக்குட் பேசுதல்; to speak to oneself. அவர் எதையோ சொல்லிக் கொண்டிருக்கிறார். 3. பாடங்கேட்டல்; to learn from a teacher. மாணாக்கன் பாடத்தைச் சொல்லிக் கொண்டு வரப் போயிருக்கிறான். 4. விடை பெறுதல்; take leave. மனைவியிடம் சொல்லிக் கொண்டு புறப்பட்டான்.

[சொல்லி + கொள்(ளு)-. 'கொள்' - துணை வினை.]

**சொல்லிசையளபெடை** *šollišai-y-alabedai*, பெ. (n.) பெயர்ச்சொல் வினையெச்சச் சொல்லின் இசையை நிறைத்தற்பொருட்டு அளபெடுப்பது (ஆறு.நன். 91); an extension of vowel or consonant sound to give rhythm or melody either in noun or in past participle.

"உரன்நசைஇ உள்ளம் துணையாகச் சென்றார் வரனசைஇ இன்னும் உளேன்" (குறள். 1263)

"உரனசைஇ யுள்ளம்", "வரனசைஇ யின்னும்" இவற்றுள் உரனசை, வரனசை என நிற்பினும் செய்யுளோசை குன்றாதாயினும் விருப்ப மெனப் பொருள்படும் நசையென்னும்

*பெயர்ச்சொல், விரும்பியென வினையெச்சப் பொருள்படும் பொருட்டு வினையெச்சச் சொல்லாதற்கு 'நசைஇ' என அளபெடுத்தது.*

*[சொல் + இசை + அளபெடை]*

**சொல்லிசைவு** *šollišaivu,* பெ.(n.) சொல்லப் பட்டதற்கு ஏற்றது; according to the said word.

*[சொல் + இசைவு]*

**சொல்லிப்போடு[1]-தல்** *šolli-p-pōḍu-, 19* செ.குன்றாவி. (v.t.) 1. வெளியிடுதல்; to give out, publish, as a secret. 2. காட்டிக் கொடுத்தல்; to betray. 3. சொல்லியனுப்பு[1]-தல் பார்க்க; see *šolli-y-anuppu-.*

*[சொல் → சொல்லி + போடு-. 'போடு' - துணை வினை.]*

**சொல்லிப்போடு[2]-தல்** *šolli-p-pōḍu-, 20* செ.கு.வி. (v.i.) சொல்லியனுப்பு[2]-தல் பார்க்க; see *šolli-y-anuppu-.*

*[சொல் → சொல்லி + போடு-. போடு' - துணை வினை.]*

**சொல்லியனுப்பு[1]-தல்** *šolli-y-anuppu-, 5* செ.குன்றாவி. (v.t.) ஆள்மூலம் சொல்லி யனுப்புதல்; to send through a person, as a message.

*[சொல் → சொல்லி + அனுப்பு-.]*

**சொல்லியனுப்பு[2]-தல்** *šolli-y-anuppu-, 5* செ.கு.வி. (v.i.) அழைத்துவரச் செய்தி யனுப்புதல்; to send for. உறவினர்களுக்குச் சொல்லி அனுப்பியிருக்கிறோம்.

*[சொல் → சொல்லி + அனுப்பு-,]*

**சொல்லிலக்கணம்** *šol-l-ilakkaṇam,* பெ. (n.) சொல்லின் தன்மை பாகுபாடு முதலிய வற்றைக் கூறும் நூல்; etymology.

*[சொல் + இலக்கணம்]*

**சொல்லிவிடு-தல்** *šolli-viḍu-, 18* செகுன்றாவி & 20 செ.கு.வி. (v.t & v.i.) சொல்லிப்போடு-தல் பார்க்க; see *šolli-p-poḍu-.*

*[சொல்லி + விடு-.]*

**சொல்லிவை-த்தல்** *šolli-vai-, 4* செ.குன்றாவி. (v.t.) 1. முன்னறிவித்தல்; to inform before hand; to forewarn. "அப்போதைக் கிப்போதே சொல்லி வைத்தேன்" (திவ்.பெரியாழ். 4:1). 2. கற்பித்தல்; to teach.

*[சொல் → சொல்லி + வை-.]*

**சொல்லிவைத்தாற்போல** *šolli-vaittāṟ-pōla,* வி.எ. (adv.) முன்கூட்டியே திட்டமிட்டது என்று தோன்றும் படி; as if agreed upon or preplanned. சொல்லிவைத்தாற்போல இருவரும் ஒரே மதிப்பெண் வாங்கியிருக்கிறீர்களே!

*[சொல்லி + வைத்தாற்போல]*

**சொல்லிழுக்கு** *šol-l-iḻukku,* பெ. (n.) சொற்குற்றம்; incorrectness in speech. "சோகாப்பர் சொல்லிழுக்குப்பட்டு" (குறள், 127).

*[சொல் + இழுக்கு]*

**சொல்லிற-த்தல்** *šol-l-iṟa-, 3* செ.கு.வி. (v.i.) வாக்கினைக் கடந்து நிற்றல்; to transcend description. "சொல்லிறந் தார்வ நெஞ்சந் தலைத்தலை சிறப்ப" (அகநா. 396).

*[சொல் + இற-.]*

**சொல்லின்பம்** *šol-l-inbam,* பெ. (n.) சொற்சுவை (வின்.); euphony.

*[சொல் + இன்பம்]*

**சொல்லின்முடிவினப்பொருண்முடித்தல்** *šollin-muḍivinapporuṉ-muḍittal,* பெ. (n.) உத்தி முப்பத்திரண்டனுள், சொல் முடிந்த விடத்து மற்றப் பொருள்களையும் முடிய வைக்கும் உத்தி (நன். 14.); closing a topic with the finishing word or expression of the chapter dealing with it, one of 32 utti.

*[சொல் → சொல்லின் + முடிவின் + அப்பொருண் + முடித்தல்]*

**சொல்லுதவி** *šol-l-udavi,* பெ. (n.) உறுதி மொழி தருதல் (வின்.) பரிந்துரை; word of recommendation or encouragement, dist. fr. poruḷ-udavi.

*[சொல் + உதவி]*

**சொல்லுரிமை** *šol-l-urimai,* பெ. (n.) 1. பேசுவதற்குகான உரிமை (வின்.); freedom of speech. 2. அழுத்தமாய்த் திருந்திய பேச்சு (வின்.); fine, emphatic expression.

*[சொல் + உரிமை]*

**சொல்லுருபு** *šol-l-urupu,* பெ. (n.) வேற்றுமை யுருபுகட்கு மாற்றாக வழங்குஞ் சொல்; word functioning as case-suffix. "உருபுவே றுருபு சொல்லுரு பாகியும்" *(இலக். கொத். 18).*

*[சொல் + உருபு]*

'கத்தி கொண்டு வெட்டினான்' என்பதில் 'கொண்டு' என்பது 'ஆல்' என்னும் வேற்றுமை உருபு போலச் செயல்படுவதால் அதுஒரு சொல்லுருபு ஆகும்.

**சொல்லுருமாறுபாடு** *šolluru-mārupāḍu,* பெ. (n.) சொல்லின் ஒலிப்பு ஒருவருக்கு ஒருவர் மாறுபட்ட குரலில் ஒலிப்பது; sound difference from person to person on a particular word.

*[சொல் + உரு + மாறுபாடு]*

**சொல்லுவான்குறிப்பு** *šolluvāṉ-kuṟippu,* பெ. (n.) கூறுவோன் கருத்து; speaker's aim or intention.

*[சொல் → சொல்லுவான் + குறிப்பு]*

**சொல்லுறுதி** *šol-l-uṟudi,* பெ. (n.) வாக்கு நிறைவேற்றுகை; keeping one's word or promise.

*[சொல் + உறுதி]*

**சொல்லெச்சம்** *šol-l-eccam,* பெ. (n.) சொல் எஞ்சி நிற்பது (சீவக. 4, உரை.); ellipsis in a sentence.

*[சொல் + எச்சம்]*

**சொல்லெடுப்பு** *šol-l-eḍuppu,* பெ. (n.) அழுத்தமாகச் சொல்லுகை (புதுவை.); emphasis.

*[சொல் + எடுப்பு]*

**சொல்லேருழவர்** *šol-l-ēr-uaḻavar,* பெ. (n.) 1. அமைச்சர்; king's ministers. "கொள்ளற்க சொல்லே ருழவர் பகை" *(குறள். 872).* 2. புலவர் (அக.நி.); poets. 3. சொல்லாகிய ஏரைக் கொண்ட உழவர்; those who plough with words.

*[சொல் + ஏர் + உழவர்]*

**சொல்வகை** *šol-vagai,* பெ. (n.) 1. சொல்லியற் பகுப்பு; classification of words into parts of speech. "பாடங் கருத்தே சொல்வகை" *(நன். 21).* 2. பேசுந்திறம் (வின்.); method of speaking, as of a teacher; method of cross-examining, as of a barrister. 3. சுண்ணம், சுரிதகம், வண்ணம், வரிதகம் என நால்வகைப்பட்டுக் கூத்துக் குரியவாய் வரும்பாட்டு (சிலப். 3:13, உரை, பக். 88); song accompanying dance, of four kinds viz., *cuṇṇam, curitagam, vaṇṇam, varitagam.*

*[சொல் + வகை]*

**சொல்வருநிலை** *šol-varu-nilai,* பெ. (n.) சொற்பின்வருநிலை பார்க்க; see *šoṟ-piṉvaru-nilai.*

*[சொல் + வருநிலை.]*

**சொல்வல்லபம்** *šol-vallabam,* பெ. (n.) பேச்சு வன்மை (வின்.); power of speech, eloquence.

*[சொல் + வல்லபம்]*

**சொல்வழு** *šol-vaḻu,* பெ. (n.) சொல்லிலக்கணத் தோடு பொருந்தாமை யாகிய குற்றம் (தண்டி. 108); சொல்லதிகாரத் தோடு மாறு கொள்வது (யாப். 95); etymological error.

*[சொல் + வழு]*

**சொல்வளம்** *šol-vaḷam,* பெ. (n.) சொற் பொலிவு; copiousness of vocabulary. தமிழ்மொழியின் சொல் வளத்தைப் பாவாணர் தம் நூல்களில் பலபடக் காட்டியுள்ளார்.

*[சொல் + வளம்]*

**சொல்வளர்-த்தல்** *šol-vaḷar-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. செய்தியைப் பலருமறியச் செய்தல்; to spread news. "சொல்வளர்த்தாரவர் தோழியர்" *(சீவக.1474).* 2. வீணாகச் சொல்லைப் பெருக்குதல் (உ.வ.); to talk or write unnecessarily and without point.

*[சொல் + வளர்-.]*

**சொல்வன்மை** *šol-vaṉmai,* பெ. (n.) சொற்றிறம் (குறள்,65,அதி.); eloquence, command of language.

*[சொல் + வன்மை]*

**சொல்வார்த்தை** *šol-vārttai,* பெ. (n.) 1. எச்சரிப்புரை; admonition. 2. பொய்ச் சாற்று; false accusation.

*[சொல் + வார்த்தை]*

Skt. vārtta → த. வார்த்தை

**சொல்விழுக்காடு** *šol-viḻukkāḍu*, பெ. (n.) பொருளின்றிக் கூட்டுந் துணைச்சொல் (சீவக. 1886, உரை); expletive.

*[சொல் + விழுக்காடு]*

**சொல்விளம்பி** *šol-viḷambi*, பெ.(n.) கள், சாராயம் போன்ற மதுவகைகள்; hot drinks like arrack, toddy etc., as causing garrulity.

குடித்தவர் தம் மனதிலுள்ளதை யெல்லாம் தம் மதிமயக்கத்தில் கொட்டித் தீர்ப்பதால் இக்குழூஉக் குறி வந்ததாகலாம்.

*[சொல் + விளம்பி]*

**சொல்வென்றி** *šol-veṉṟi*, பெ. (n.) சொற்போரில் வெல்லுகை; victory in argument. "வாய்ப் பகையுட் சொல்வென்றி வேண்டு மிலிங்கியும்" (திரிகடு. 17).

*[சொல் + வென்றி]*

**சொலவடை** *šola-v-aḍai*, பெ. (n.) பழமொழி; proverb.

Poli., Russ. solava; Cz. solava; Skt. sloka

*[சொலவு → சொலவடை]*

**சொலவம்** *šolavam*, பெ. (n.) சொலவு (நெல்லை) பார்க்க; see *šolavu*.

*[சொலவு → சொலவம்]*

த. சொலவம் → Skt. šlōka

**சொலவு** *šolavu*, பெ. (n.) 1. சொல்லுகை; saying, telling. "சொற்செல்லாவழிச் சொலவு" (முது. காஞ்.87). 2. பழமொழி; proverb. 'ஆயிரங் காக்கைக்கு ஓரு கல் என்று ஒரு சொலவு உண்டு' (இ.வ.).

*[சொல்¹ → சொலவு = மரபுக் கூற்று, பழமொழி, பழமொழி போன்ற செய்யுள் தொடர்]*

**சொலி¹-த்தல்** *šoli-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. உரித்தல்; to strip off, peel off. "பாம்பு சொலித்தன்ன வறுவை" (சிறுபாண். 236). 2. பெயர்த்தல், பேர்த்தல்; to tear. "திங்க ளுகிரிற் சொலிப்பது போல" (சீவக. 350). 3. தோண்டுதல்; to dig off. 4. பிளத்தல்; to split.

*[சொல்² → சொலி-.]*

**சொலி²-த்தல்** *šoli-*, 4 செ.கு.வி. (v.i.) 1. ஒளிர்தல்; to shine, be radiant. "மானமென் றுரைப்ப தெழுந்துமேற் சொலித்து வருவது போன்றும்" (பிரபோத. 11:1). 2. எரிதல்; to burn, blaze up, as fire or anger. "நாப்ப ணழல் சொலிப்பதாக வுன்னி" (பிரபோத. 44:15).

*[சுல் → சுல்லி = அடுப்பு. சுள்ளெனல் = வெயில் சுடுதல். சுள் → சுள்ளை = மட்கலஞ் சுடுமிடம் = காளவாய். சுல் → (சொல்) → சொலி → சொலி-த்தல்]*

**சொலி³** *šoli*, பெ. (n.) மரமுதலியவற்றின் தோல், பட்டை; bark of a tree; the inner fibrous covering of a bamboo. "கழைபடு சொலியின்" (புறநா. 383).

*[தொலி → சொலி]*

**சொலிதை** *šolidai*, பெ. (n.) வெளிச்சம்; brilliance. "சொலிதை யுற்றிடும் விவேகர்" (பாடு. 28, அடியவர்).

*[சொல்² → சொலிதை.]*

**சொலிப்பு** *šolippu*, பெ. (n.) வெளிச்சம் பளபளத்தல் (வின்.); shining, glittering.

*[சொலி² → சொலிப்பு.]*

**சொலியன்** *šoliyaṉ*, பெ. (n.) முடக்கொற்றான் (மலை.); balloon vine.

**சொலுசொலெனல்** *šolu-šoleṉal*, பெ. (n.) 1. இடைவிடாத் தூறலின் ஒலிக்குறிப்பு (வின்); expr. signifying, continuous drizzling. 2. சேறாதற் குறிப்பு; clayey condition, as of wet floor 3. சோறு முதலியன குழைதற் குறிப்பு; the state of being mashy, as overboiled rice.

*[சொளுசொளுத்தல் = எளிதாய்த் துளைக்குமாறு கூழ்போற் குழைதல், சேறாதல். சொளுசொளு → சொலுசொலு → சொலுசொலெனல் = சோறு குழைத்தல்]*

**சொள்** *šoḷ*, பெ. (n.) வடியும் வாய்நீர்; dribbling at the mouth.

*[சுள் → சொள்]*

**சொள்ளல்** *šoḷḷal*, பெ. (n.) 1. சொத்தை; decayed. 2. பயனற்றவன்; useless person. 3. குற்றம், கறை, இழுக்கு; stigma.

*[சொல் → சொள் → சொள்ளல்]*

**சொள்ளு** *šoḷḷu,* பெ. (n.) வடியும் வாய்நீர், சாளைவாய் நீர்; dribbling at the mouth, as of a child.

க. செல்லு; தெ. செல்லு; து. செல்லெ

*[சொள் → சொள்ளு]*

**சொள்ளை** *šoḷḷai,* பெ. (n.) 1. உள்ளீடற்ற சொத்தை; that which is decayed worm-eater, carious. 2. ஒல்லி; lean, skinny person. சொள்ளைப் பயல் (நாஞ்.) 3. ஒன்றுக்கும் பயனற்றவன்; useless, good-for-nothing person. 4. பள்ளமான அம்மை வடு; scars of small pox pock. சொள்ளை முகம். 5. இழுக்கு; stigma, flaw in character. 6. விளையாட்டில் தோற்றவர் தலையில் விழுங்குட்டு (இ.வ.); slap on the head of the loser in a game. 7. காரியக்கேடு; failure, as in a business. 8. துளை; hole. ஒற்றைக் கடுக்கன் சொள்ளை (உ.வ.).

*[சல் (துளைத்தல்) → சொல் → சொள் + சொள்ளை]*

**சொளு-த்தல்** *šoḷu-,* 4 செ.கு.வி. (v.i.) சொளுசொளு-த்தல் பார்க்க; see *šoḷu-šoḷu-.*

*[சுள் → சொள் → சொளு → சொளு-த்தல்]*

**சொளுசொளு-த்தல்** *šoḷu-šoḷu-,* 4 செ.குவி. (v.i.) 1. மழையால் தரை கூழ்போற் குழைதல், சேறாதல் (யாழ்ப்.); to become muddy, slippery as the ground by rain. 2. சோறு குழைதல்; to be sodden, as overboiled rice.

*[சொள் (=துளை) → சொளு → சொளுசொளு-த்தல். ஒ.நோ. நொள் → நொளு → நொளுநொளு-த்தல்]*

**சொளையம்** *šoḷaiyam,* பெ. (n.) 1. திருட்டு; fraud, stealing, pilfering. என்ன சொளையம் போடத் தொடங்கி விட்டாய்? (இ.வ.). 2. சுன்னம் (இ.வ.); zero.

*[சுள் → சுளை → சொளை → சொளையம்]*

**சொளையமாடு-தல்** *šoḷaiya-māḍu-,* 5 செ. குன்றாவி. (v.t.) 1. திருடுதல்; to steal. 2. திருடும் நோக்கத்துடன் வீட்டை வளைய வருதல் (உ.வ.); to pry about a house with the intention of stealing.

*[சொளையம் + ஆடு-.]*

**சொளையமாறு-தல்** *šoḷaiya-māṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) திருடுதல்; to steal.

*[சொளையம் + மாறு-.]*

**சொற்கட்டான்** *šoṟ-kaṭṭāṉ,* பெ. (n.) சொக்கட்டான் (வின்.); back-gammon.

**சொற்கட்டு**[1] *šoṟ-kaṭṭu,* பெ. (n.) 1. தாளக் கட்டுரை; imitative sounds uttered in drumming, etc. 2. செல்வாக்கு (இ.வ.); influence.

தெ. சொல்கட்டு

*[சொல் + கட்டு.]*

**சொற்கட்டு**[2] *šoṟ-kaṭṭu,* பெ. (n.) பொய் (இ.வ.); false-hood, fib.

*[சொல் + கட்டு. கால அளவைக் காட்டும் (பொருளற்ற) ஒலிக் குறிப்புகளின் தொகுதி]*

**சொற்கலகம்** *šoṟ-kalagam,* பெ. (n.) சொற்போர் (வின்.); controversy.

*[சொல் + கலகம்]*

**சொற்கா-த்தல்** *šoṟ-kā-,* 4 செ.கு.வி. (v.i.) 1. சொன்ன சொல்லை நிறைவேற்றுதல்; to keep one's word. 2. அடக்கிப் பேசுதல்; to speak with due caution. 3. புகழைப் போற்றுதல்; to guard one's reputation. "சொற்காத்துச் சோர்விலாள் பெண்" (குறள், 56).

*[சொல் + கா-.]*

**சொற்காரி** *šoṟ-kāri,* பெ. (n.) எழுவகை முகில்களுள் ஒன்று (சூடா.); one of seven kinds of clouds.

*[சொல் + காரி]*

**சொற்குற்றம்** *šoṟ-kuṟṟam,* பெ. (n.) 1. சொல்லி லக்கணத்திற்கு மாறான குற்றம்; etymological error. 2. சொல்லின் தீமை (இ.வ.); impropriety, offensiveness, in words.

*[சொல் + குற்றம்]*

**சொற்குற்றம்வாய்க்குற்றம்** *šoṟ-kuṟṟam-vāy-k-kuṟṟam,* பெ. (n.) சிறுசொற்பிழைகள் (வின்.); trivial mistakes in words.

*[சொல் + குற்றம் + வாய் + குற்றம்]*

**சொற்குறி** *šoṟ-kuṟi*, பெ. (n.) செய்நஞ்சு (மூ.அ); a prepared arsenic.

*[சொல் + குறி]*

**சொற்கேள்-தல் (சொற்கேட்டல்)** *šoṟ-kēḷ-*, 6 செ.கு.வி. (v.i.) 1. ஏவற்படி நடத்தல்; to be obedient; to listen, to pay regard. சொற்கேளாப் பிள்ளையினாற் குலத்துக் கீனம் (உ.வ.). 2. வசையைப் பொறுத்தல்; to put up with abuse or abusive words. 3. வசை பெறுதல்; to get abusive words. 4. கேட்டல்; to hear. "மழலைச் சொல் கேளாதவர்" (குறள், 66).

*[சொல் + கேட்டல்]*

**சொற்கோ** *šoṟ-kō*, பெ. (n.) திருநாவுக்கரசு நாயனார்; Tiru-nāvukkarašu-nāyaṉār. "சொற்கோவுந் தோணிபுரத் தோன்றலு மென் சுந்தரனும்" (சிவானந்தமாலை).

*[சொல் + கோ]*

**சொற்கோவை** *šoṟkōvai*, பெ. (n.) 1. சொற்களின் தொகுப்பு; thesaurus vocabulary; stock of words. 2. உரை; speech.

*[சொல் + கோவை – சொற்கோவை = ஒரு மொழியிலுள்ள அல்லது ஒருவர் அறிந்து வைத்துள்ள சொற்களின் தொகுப்பு]*

**சொற்சித்திரம்** *šoṟ-cittiram*, பெ. (n.) பேச்சு வன்மை; picturesqueness of language; play on words.

*[சொல் + சித்திரம்]*

**சொற்சிதைவு** *šoṟ-cidaivu*, பெ. (n.) சொல்லின் மாறுபட்ட உருவம்; corrupt form of a word.

*[சொல் + சிதைவு]*

**சொற்சிமிட்டு** *šoṟ-cimiṭṭu*, பெ. (n.) 1. பொடி வைத்துப் பேசுகை (யாழ்ப்.); subtle, speech. 2. பொருளை மாற்றவல்ல சிறு சொல்; use of a little word or particle easily over looked yet materially affecting the meaning. 3. சொற்றிறமை² பார்க்க; see *šoṟṟiṟamai²*.

*[சொல் + சிமிட்டு]*

**சொற்சிலம்பம்** *šoṟ-cilambam*, பெ. (n.) சொற்களின் அழகிய கூட்டு; rhetorical. கவிதையில் உணர்வு எதுவும் வெளிப்படவில்லை, எல்லாம் சொற்சிலம்பம் தான்.

*[சொற் + சிலம்பம்]*

**சொற்சீரடி** *šoṟ-cīradi*, பெ. (n.) அம்போதரங்கம் (காரிகை.செய். 10, உரை. பக்.96); one of the component elements of *kali verse*.

*[சொல் + சீரடி]*

**சொற்சுவை** *šoṟ-cuvai*, பெ. (n.) சொல்லினிமை; verbal sweetness. 'சொற்சுவையும் பொருட் சுவையும்' (குறள், 420. உரை).

*[சொல் + சுவை]*

**சொற்செல்(லு)-தல்** *šoṟ-cel(lu)-*, 13 செ.கு.வி. (v.i.) அதிகாரமுடையவனாதல்; to command obedience. "எனக்கு அடைத்த விடயத்தில் சொற் செல்லாதாகிலன்றோ எனக்குக் குறையாவது" (ஈடு, 10:2.1).

*[சொல் + செல்(லு)-.]*

**சொற்செலவு** *šoṟ-celavu*, பெ. (n.) 1. செல்வாக்கு; influence, fame. 'நிலத்துக் குரிமை, சொற்செலவு, கல்வி . . . எனப்பட்ட' (ஆசாரக். 3, உரை). 2. ஒருவர்க்காகப் பரிந்து பேசுகை (வின்.); recommendation.

*[சொல் + செலவு]*

**சொற்செறிவு** *šoṟ-ceṟivu*, பெ. (n.) சொல்வளம்; wealth of words. 'சொற்செறிவும் இசைச்செறிவு முடைத்தாதலானும்' (சிலப். 3:67, உரை.).

*[சொல் + செறிவு]*

**சொற்சேர்க்கை** *šoṟ-cērkkai*, பெ. (n.) அகரமுதலி (அகராதி) (புதுவை.); dictionary.

*[சொல் + சேர்க்கை]*

**சொற்சோதனை** *šoṟ-cōdaṉai*, பெ. (n.) சொல்லாராய்ச்சி; critical examination of words. "பேராசிரியர் சொற்சோதனை காட்டிய" (பி.வி.14).

மறுவ. சொல்லாய்வு

*[சொல் + சோதனை]*

**சொற்சோர்** *šoṟ-cōr*, பெ. (n.) சொற்சோர்வு (யாழ். அக.) பார்க்க; see *šoṟ- cōrvu*.

*[சொல் + சோர்]*

**சொற்சோர்வு** *šoṟ-cōrvu*, பெ. (n.) 1. பேச்சில் தடுமாறுகை; faltering in speech. 2. சொற்பிழை பார்க்க; see *šoṟ-pilai*. "சொற் சோர்வு படேல்" (ஆத்திசூடி.).

*[சொல் + சோர்வு]*

**சொற்பகட்டு** *šoṟ-pagaṭṭu,* பெ. (n.) 1. அணியழகுச் சொல்; bombastic word. 2. வீண் பெருமை; tall talk.

*[சொல் + பகட்டு]*

**சொற்பசி** *šoṟ-paši,* பெ. (n.) 1. சொல்தேவை; hunger for words. 2. சொல்தட்டுப்பாடு; short-age of words.

*[சொல் + பசி]*

**சொற்படு-தல்** *šoṟ-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) பலன் மிகுதல்; to yield in plenty, increase; to succeed. 'தவசம் சொற்பட்டிருக்கிறது' (வின்.).

*[சொல் + படு-.]*

**சொற்படுத்து-தல்** *šoṟ-paḍuttu-,* 5 செ.கு.வி. (v.i.) இசைக்கு ஏற்பச் சொல்லமைத்தல்; to compose to a particular tune. 'உருவுக்குச் சொற்படுத்தியும் இசைப்படுத்தியும் அறிந்து' (சிலப். 3, 150, உரை.).

*[சொல் + படுத்து-.]*

**சொற்பதம்** *šoṟ-padam,* பெ. (n.) 1. சொல்லளவு; implication, suggestion. "வெற்பன் வினாய சொற்பத நோக்கி" (திருக்கோ.61). 2. சொல்லாற் குறிக்கப்படும் நிலை; the state of being expressed in words. "சொற்பதங் கடந்த சோதி" (திருவிளை. வரகுண. 23).

*[சொல் + பதம்]*

**சொற்பயன்பாடு** *šoṟ-payaṉpāḍu,* பெ. (n.) சொற்களைத் தெரிவுசெய்து ஆளுகை; use of words in proper place.

மறுவ. சொல்லாட்சி, சொல்லாண்மை, சொல்லாளுகை

*[சொல் + பயன்பாடு]*

**சொற்பழி** *šoṟ-paḻi,* பெ. (n.) பிறர்கூறும் பழிச்சொல்; scandal, reproach. "தலையெலாஞ் சொற்பழி யஞ்சிவிடும்" (நாலடி, 297).

*[சொல் + பழி]*

**சொற்பழுத்தவர்** *šoṟ-paḻuttavar,* பெ. (n.) நாவண்மையுடையவர்; persons with great power of speech or command of language, as poets. "சொற்பழுத்தவர்க்கு மாண்மை சொல்லலாம்" (சீவக. 435).

*[சொல் + பழுத்தவர்]*

**சொற்பாடு**[1] *šoṟ-pāḍu,* பெ. (n.) 1. உடன்படிக்கை; agreement, mutual understanding. "தூமொழியாளுட றொலையாத காலத்தோர் சொற்பாடாய் வந்து . . . இலங்கையர்கோன் வரையெடுக்க" (தேவா. 677, 7.). 2. பழிச்சொல் (இ.வ.); stigma.

*[சொல் + பாடு]*

**சொற்பாடு**[2] *šoṟ-pāḍu,* பெ. (n.) புகழ்; fame. "குலந்தனிலிட்ட சொற்பாடும்" (சொக்க. உலா, 259).

*[சொல் + பாடு]*

**சொற்பிழை** *šoṟ-piḻai,* பெ. (n.) 1. சொற்குற்றம்; verbal mistake. "சொற்பிழை வராமலுனைக் கனக்கத் துதித்து" (திருப்பு. 779). 2. எழுத்துப் பிழை (இ.வ.); spelling mistake.

*[சொல் + பிழை]*

**சொற்பிறப்பியல்** *šoṟ-piṟappiyal,* பெ. (n.) சொல்லின் வேர், தோற்றம், வளர்ச்சி, மாற்றம் பற்றிய மொழியியற் பிரிவு; study of the origin and history of words and their meanings, etymology.

மறுவ. வேர்ச்சொல்லாய்வு

*[சொல் + பிறப்பு + இயல்]*

**சொற்பிறப்புவகைப்படு-த்தல்** *šoṟpiṟappu-vagai-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) வேர்ச்சொற் பிறப்பினைத் தொகுத்தல்; etymological compilation classification.

*[சொற்பிறப்பு + வகைப்படு-த்தல்]*

**சொற்பின்வருநிலை** *šoṟ-piṉ-varu-nilai,* பெ. (n.) ஒரு சொல் வெவ்வேறு பொருளிற் பல முறைவரும் அணி (தண்டி. 41, உரை); repetition of the same word with different meanings, as in a verse.

*[சொல் + பின் + வருநிலை]*

எ-டு.

மால்கரி காத்தளித்த மாலுடைய மாலைசூழ்
மால்வரைத்தோ ளாதரித்த மாலையார்-
மாவிருள்சூழ்
மாலையின் மால்கட லார்ப்ப மதன்றொடுக்கு
மாலையின் வாளி மலர்.

**சொற்பு** *šoṟpu,* பெ. (n.) *சொல்லுகை;* saying, speaking. "சொற்புறுத்தற் குரியன" *(கம்பரா. நகர்நீ. 16).*

*[சொல் → சொற்பு]*

**சொற்புத்தி** *šoṟ-putti,* பெ. (n.) *அறிவுரை (வின்.);* advice; admonition.

*[சொல் + புத்தி]*

Skt. buddhi → த. புத்தி

**சொற்புரட்டு** *šoṟ-puraṭṭu,* பெ. (n.) பொய்; falsehood, lie. "சொற்புரட் டைந்திடத்தே சொல்லலா மெய்யதாமே" *(தனிப்பா.).*

*[சொல் + புரட்டு]*

**சொற்புள்** *šoṟ-puḷ,* பெ. (n.) காக்கை *(பின்வருவதைச் சொல்லுதலுடைய பறவை);* crow, as foretelling events like the coming of guests. "நற்றாய் நயந்து சொற்புட் பராயது" *(திருக்கோ. 235, கொளு).*

*[சொல் + புள்]*

**சொற்பெருக்கு** *šoṟ-perukku,* பெ. (n.) *விரிவுரை;* lecture.

*[சொல் + பெருக்கு]*

**சொற்பொருட்பின்வருநிலை** *šoṟ-poruṭ-piṉ-varu-nilai,* பெ. (n.) ஒரு சொல் ஒரு பொருளிலேயே பலமுறை வரும் அணி *(தண்டி. 41, உரை);* repetition of a word in the same meaning as in a verse.

*[சொல் + பொருள் + பின் + வருநிலை]*

எ-டு:

செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம்
அச்செல்வம்
செல்வத்துள் எல்லாம் தலை. (குறள், 411)

**சொற்பொருத்தம்** *šoṟ-poruttam,* பெ. (n.) **செய்யுண் முதன்மொழிப் பொருத்தம் பத்தனுள், வகையுளி சேர்ந்ததும், சிறப்பில்லதும், பல்பொருட் கேற்பதும், பொருளில்லாததும் திரிதல் கெடுதல் என்னும் உறழ்ச்சியுடையது மாகாது, மூவசையுடைய மங்கலச்சொல் செய்யுளின் முதற்கண் அமைதலாகிய பொருத்தம்** *(வெண்பாப். முதன்3);* rule of propriety which enjoins that the commencing word of a poem must be trisyllabic and auspicious and must not be capable of being split in scanning. inelegant, ambiguous, meaningless, or defective in form one of ten šeyyuṇ-mudaṉ-moḻi-p-poruttam.

*[சொல் + பொருத்தம்]*

**சொற்பொருள்விரித்தல்** *šoṟ-poruḷ-virittal,* பெ. (n.) **உத்திகள் முப்பத்திரண்டனுள் சொல்லின் பொருள் வெளிப்படையாக விளங்கும்படி விரித்துக் கூறும் உத்தி** *(நன்.14);* elaborating the etymological and semantic significance of a word in a treatise, one of 32 utti.

*[சொல் + பொருள் + விரித்தல்]*

**சொற்பொழிவு** *šoṟ-poḻivu,* பெ. (n.) **நீண்டமேடைப் பேச்சு, சொற்பெருக்கு;** lecture. சமயச் சொற்பொழிவு.

*[சொல் + பொழிவு]*

**சொற்றல்** *šoṟṟal,* பெ. (n.) **சொல்லுகை;** saying, telling. "இராக்கதர் கொற்றஞ் சொற்றல்" *(கம்பரா. பொழிலிறுத். 58).*

*[சொல் → சொற்றல்]*

**சொற்றாமம்** *šoṟṟāmam,* பெ. (n.) **சொன் மாலை;** garland of words. "நற்றாமஞ் சொற்றாம நயந்து சாத்தி" *(திருத். பு. சா. 43).*

*[சொல் + தாமம்]*

**சொற்றிரிபு** *šoṟṟiribu,* பெ. (n.) **சொல்லின் கண் நிகழும் மாறுபாடு** *(வின்.);* change in the form of a word.

*[சொல் + திரிபு]*

**சொற்றிருத்தம்** *šoṟṟiruttam,* பெ. (n.) *1.* **சொல்லின் சரியான பலுக்கம்;** correct pronunciation distinct articulation. *2.* **எழுத்துப் பிழையின் திருத்தம்;** correction of errors in writting.

*[சொல் + திருத்தம்]*

**சொற்றிறமை** *šoṟṟiṟamai,* பெ. (n.) *1.* **நாவன்மை;** eloquence. *2.* **பேச்சு நயம்;** ingenuity or artfulness, in the use of words, verbal subtlety.

*[சொல் + திறமை]*

**சொற்றொடர்** *šoṟṟodar,* பெ. (n.) 1. ஒரு சொல் நீர்மைத்தான தொடர்; sentence. 2. தன்னளவிலோ ஒரு சொற்றொடரிலோ ஒரு தனித்த அலகாக முழுமையடையாத சொற்றொகுதி; phrase, clause.

*[சொல் + தொடர்]*

**சொற்றொடர்நிலைச்செய்யுள்** *šoṟṟodar-nilai-c-ceyyuḷ,* பெ. (n.) ஒரு செய்யுளினிறுதி அடுத்த மற்றொரு செய்யுட்கு முதலாக வரத் தொடுப்பது (தண்டி. 11, உரை); a verse in which the last word or later of a stanza in repeated as the first of word or letter of the next stanza.

*[சொல் + தொடர்நிலை + செய்யுள்]*

**சொற** *šoṟa,* பெ. (n.) கடல் உயிரினம்; a kind of sea fish.

*[சொறி → சொற.]*

சங்கு குளிப்பவரின் உடலின்மேல் இவ்வுயிரினம் பட்டால் தாங்க முடியாத வலியும் எரிச்சலும் ஏற்படும் என்பது மீனவர் கூற்று.

**சொறி**[1]**-தல்** *šoṟi-,* 2 செ.குன்றாவி. (v.t.) 1. தினவு நீங்க நகத்தால் வறண்டுதல்; to scratch in order to allay itching. "ஓங்கெயிற் கதவ முருமுச்சுவல் சொறியும்" (சிறுபாண். 80). பேன் அரிப்புத் தாங்காமல் தலையைச் சொறிகிறான். 2. கெஞ்சிக் கேட்டல்; to crave, solicit meanly. அவனைச் சொறிந்து கொண்டிருக்கிறான்.

ம. சொறியுக; க. துறி, சூரு; தெ. துரத; து. கெரெபுனி, தொச்சி; பர். கிர்ப், சொத்; கோண். சோக்தானா, சொகன; ப. துரிசு, துருசு

*[சுல் → சுர் → சுறு → சொறி → சொறி-தல்]*

**சொறி**[2]**-தல்** *šoṟi-,* 2 செகுவி. (v.i.) தினவுண்டாதல் (வின்.); to itch, tingle.

*[சொறி[1] → சொறி[2]]*

**சொறி**[3] *šoṟi,* பெ. (n.) 1. தினவு; itching, tingling. 2. முட்போன்ற சிரங்கு புண்; deep itches. "சொறி கொண்டெழுந் தினவுமாற" (சேதுபு. முத்தீர். 5). சொறிபிடித்தவன். 3. மர முதலியவற்றிற் காணும் சுரசுரப்பு (வின்.); roughness of surface. 4. காஞ்சொறி (மலை); climbing nettle. 5. மீன்வகை; a kind of jelly fish. 6. அரிப்புடன் கூடிய தோல் நோய்; skin disease causing itching. சொறி நாய். 7. உயிரிகளின் கரடுமுரடான புறத்தோல்; roughness of the skin. சொறித் தவளை.

ம. சொறி; க. துரி, துரிசு; தெ. துரத; து. தொச்சி; கோத. செரிங்க.

*[சுல் → சுர் → சுறு → சொறி]*

**சொறிக்கரப்பான்** *šoṟi-k-karappāṉ,* பெ. (n.) தினவெடுக்கும் சிரங்கு வகை (சங்.அக.); a kind of cutaneous eruption producing itching sensation.

மறுவ. சொறிசிரங்கு

*[சொறி + கரப்பான்]*

**சொறிக்கல்** *šoṟi-k-kal,* பெ. (n.) 1. செம்பாறாங்கல்; laterite. 2. மஞ்சளுரைக்குங்கல்; saffron stone. 3. சுக்கான்கல்; limestone.

*[சொறி + கல்]*

**சொறிக்கிட்டம்** *šoṟi-k-kiṭṭam,* பெ. (n.) இரும்புத் துரு; iron dross.

*[சொறி + கிட்டம்]*

**சொறிக்கொட்டுக்கொட்டு-தல்** *šoṟi-k-koṭṭu-k-koṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) மென்மையாக (இலேசாக) அடித்தல்; to beat lightly. சொறிக்கொட்டுக் கொட்டுவதனாற் பயனில்லை, பலமாக அடிக்க வேண்டும் (நாஞ்.).

*[சொறி + கொட்டு + கொட்டு-.]*

**சொறிகட்டை** *šoṟi-kaṭṭai,* பெ. (n.) ஆதீண்டு குற்றி; rubbing post for cattle.

*[சொறி + கட்டை]*

**சொறிகட்டையானவன்** *šoṟi-kaṭṭai-y-āṉavaṉ,* பெ. (n.) வலியற்றவன் (சவுங்கலானவன்) (யாழ்ப்.); a mean, spirit less person, as no better than a rubling post.

*[சொறிகட்டை + ஆனவன்]*

**சொறிகண்** *šoṟi-kaṇ,* பெ. (n.) கண்ணிமைகளில் உண்டாகுஞ் சொறிநோய் (வின்.); an itching complaint in the eyelids.

*[சொறி + கண்]*

**சொறிகரப்பான்** *šoṟi-karappāṉ,* பெ. (n.) சொறிக் கரப்பான் (சீவரட். 219) பார்க்க; see *šoṟi-k-karappāṉ.*

*[சொறி + கரப்பான்]*

**சொறிகொள்ளிநாய்** *šoṟi-koḷḷi-nāy,* பெ. (n.) (சொறி நோய் கொண்ட நாய்) பித்தேறிய நாய் (இ.வ.); mad dog, as being mangy.

*[சொறி + கொள்ளி + நாய்]*

**சொறிசங்கு** *šoṟi-šaṅgu,* பெ. (n.) சுற்று வெளிப்புறம் வழவழப்பாக இல்லாமல் சொர சொரப்பாக இருக்கும் சங்கு; rough surfaced conch.

*[சொறி + சங்கு]*


சொறிசங்கு

**சொறிசிரங்கு** *šoṟi-širaṅgu,* பெ. (n.) தோலில் சொரசொரப்பான தடித்த சுற்றுப் பகுதியை உடைய புண்களை உண்டாக்கி அரிப்பை ஏற்படுத்தும் ஒருநோய் (உ.வ.); a kind of itch that causes much annoyance, herpes, scab.

*[சொறி + சிரங்கு]*

**சொறித்தவளை** *šoṟi-t-tavaḷai,* பெ. (n.) தவளை வகை; Indian toad. "கேணி நீர்ப்படுஞ் சொறித்தவளை கூப்பிடுகுது" (முக்கூடற் பள்ளு, 90).

ம. சொறித்தவள

*[சொறி + தவளை]*

**சொறித்தேமல்** *šoṟi-t-tēmal,* பெ. (n.) படர்தாமரை (வின்.); ringworm.

*[சொறி + தேமல்]*

**சொறிதேய்-த்தல்** *šoṟi-dēy-,* 1 செ.குன்றாவி. (v.i.) 1. தினவுக்காக உரைசுதல் (யாழ்ப்.); to rub against a post, as a beast. 2. இழிவாய்க் கருதுதல்; to ignore, brush away, as a person. 3. சினமூட்டுதல்; to rub one the wrong way. என்னிடத்தில் சொறி தேய்க்க வருகிறான்.

*[சொறி + தேய்-.]*

**சொறிந்துகொடு-த்தல்** *šoṟindu-koḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. தூண்டுதல்; to urge, incite. 2. பிழைப்புக் கருதி ஒருவனையணுகி இச்சகமாகத்தொழில் செய்தல் (உ.வ.); to fawn servilely upon.

*[சொறிந்து + கொடு-.]*

**சொறிப்பாறை** *šoṟi-p-pāṟai,* பெ. (n.) கடலடியில் பூம்புகாருக்குக் கிழக்கே சற்றொப்ப 55 பாக ஆழத்தில் கிழக்கு மேற்காக நீண்டு வளர்ந்துள்ள பாறை; a rock outcrop situated 55 fathoms below sea level extended in the east west direction.

*[சொறி + பாறை]*

**சொறிபுண்** *šoṟi-puṇ,* பெ. (n.) சிறுபிள்ளை கட்கு உண்டாகும் கட்டுக் கரப்பான் (இ.வ.); a kind of eruption affecting children.

*[சொறி + புண்]*

**சொறிமண்டலி** *šoṟi-maṇḍali,* பெ. (n.) பாம்பு வகை (யாழ். அக.); a kind of snake.

*[சொறி + மண்டலி]*

**சொறிமீன்** *šoṟi-mīṉ,* பெ. (n.) இழுதுமீன், கூழ்மீன் (எலும்பில்லாமீன்); jelly fish.

ம. சொறிமீன்

*[சொறி + மீன்]*


சொறிமீன்

**சொறியன்** *šoṟiyaṉ,* பெ. (n.) 1. சொறி பிடித்தவன்; scabby person. 2. சொறித் தவளை; a kind of frog. 3. செந்தொட்டி (நாஞ்.); a kind of medicinal herb.

ம. சொறிபணம், சொறி யணங்ங

*[சுர் → சுர → சுற → சொறி → சொறியன்]*

**சொறியெழும்பு-தல்** *šoṟi-y-eḻumbu-,* 5 செ.குவி. (v.i.) மரம் முதலியவற்றில் சுரசுரப்புண்டாதல்; to become rough with fibres, as a piece of wood.

*[சொறி + எழும்பு-.]*

**சொறிலை** *šoṟilai,* பெ. (n.) சிறுமரவகை; medium hairy-nerved oblong acute-leaved fetid holly.

*[சொறி + இலை]*

**சொறுண்டு-தல்** *šoṟuṇḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) சொறிதல்; to scratch. "செவி சொறுண்டார். . . பெரியா ரகத்து" (ஆசாரக் 76).

*[சுரண்டு → சொறுண்டு-.]*

**சொன்ஞானம்** *šoṉ-ñāṉam,* பெ. (n.) அறிவுடை மொழி; words of wisdom. "காரறிவாளர் முன் சொன் ஞானஞ் சோர விடல்" (நாலடி, 311).

*[சொல் + ஞானம். Skt. jñāna → த. ஞானம்]*

**சொன்மகள்** *šoṉ-magaḷ,* பெ. (n.) சொன் மடந்தை பார்க்க; see *šoṉ-maḍandai.* 'நும்முடைய நாவின் மேலிருக்குஞ் சொன்மகள் (பு.வெ.9:48, உரை).

மறுவ. சொல் மடந்தை

*[சொல் + மகள்]*

**சொன்மடந்தை** *šoṉ-maḍandai,* பெ. (n.) கலைமகள்; Kalaimagaḷ as the Goddess of Speech. (சொல்லுக்குரிய பெண் தெய்வம்) "நடையூறு சொன்மடந்தை நல்குவதும்" (பு.வெ. கடவுள். 1).

மறுவ. நாமகள், சொல்மகள்

*[சொல் + மடந்தை]*

**சொன்மலைவு** *šoṉ-malaivu,* பெ. (n.) முன்னுக்குப்பின் முரணாகக் கூறுகை; self contradictory statement. "சொல்லலன் யானெனச் சொல்லுவை யாயினுஞ் சொன்மலைவாம்" (நீலகேசி 384).

*[சொல் + மலைவு]*

**சொன்மாலை** *šoṉ-mālai,* பெ. (n.) 1. புகழ்ச்சி (திவா.); encomium, eulogy, praise. 2. புகழ் மாலை (சூடா.); laudatory poem, panegyric. "சுடராழி யானடிக்கே சூட்டினன் சொன்மாலை" (திவ். இயற். 1:1). 3. சொற்களின் அணிவகுப்பு; garland of words.

*[சொல் + மாலை]*

**சொன்மிக்கணி** *šoṉ-mikkaṇi,* பெ. (n.) சொற்பின்வருநிலை (தொன். வி. 314) பார்க்க; see *šoṟ-piṉ-varu-nilai.*

*[சொல் + மிக்கணி.]*

**சொன்முதல்** *šoṉ-mudal,* பெ. (n.) மாயை (நாதத்துக்குக் காரணமாவது) (சங்.அக.); Māyā, as the source of nādam.

*[சொல் + முதல்]*

**சொன்முந்திரி** *šoṉ-mundiri,* பெ. (n.) 1. கண்ணாடியிலை; sunder - tree. 2. கண்டலங் காய்; Malay karapa.

*[சொல் + முந்திரி]*

**சொன்றி**[1] *šoṉṟi,* பெ. (n.) சோறு; boiled riec. "வரகின் சொன்றியொடு பெறூஉம்" (புறநா. 197:12).

*[சொல் → சொன்றி. சொல் = நெருப்புப் போல் அல்லது பொன் போல விளங்கித் தோன்றும் நெல்]*

**சொன்றி**[2] *šoṉṟi,* பெ. (n.) சுக்கு (சங்.அக.); dried ginger.

*[சுண்டி → சொண்டி → சொன்றி.]*

**சொன்னகாரன்** *šoṉṉakāraṉ,* பெ. (n.) தட்டான் (பிங்.); goldsmith.

ம. சொன்னான்

*[சொன்னம் + காரன்]*

**சொன்னதானம்** *šoṉṉa-dāṉam,* பெ. (n.) பொன்னைக் கொடையாக வழங்குகை; gift of gold or money. "சொன்னதானப் பயனெனச் சொல்லுவர்" (கம்பரா. சிறப்பு).

*[சொன்னம் + தானம்]*

**சொன்னபட்டி** *šoṉṉa-paṭṭi,* பெ. (n.) நாக செண்பகம், சிறுமரவகை; common yellow, trumpet flower tree (செ.அக.).

**சொன்னம்**[1] *šoṉṉam,* பெ. (n.) பொன் (திவா.); gold.

க., பட. சின்ன

*[சொல் → சொன் → சொன்னம் = பொன். வடவர் சு + வர்ண என்று பகுத்து நன்னிறமுள்ளது என்று பொருட் காரணங் காட்டுவர். இரட்டித்த னகரத்தை 'ர்ண' என்று திரிப்பது வடவர் மரபு. எ-டு. கன்னம் → கர்ண = காது. வண்ணம் → வர்ண]*

**சொன்னம்**[2] *šoṉṉam,* பெ. (n.) கால்வாய் (திவா.); a channel.

*E. channel; ME., OF. chanel; L. canalis.*

**சொன்னம்**[3] *šoṉṉam,* பெ. (n.) சோளம்; great millet.

*[சொன்னம்[1] → சொன்னம்[3]]*

**சொன்னமாக்கி** *šoṉṉam-ākki,* பெ. (n.) பவள வைப்புநஞ்சு (சங்.அக.); a prepared arsenic.

**சொன்னல்**[1] *šoṉṉal,* பெ. (n.) இரும்பு (ஆ. நி.); iron.

*[சொல் → சொன் → சொன்னல்]*

**சொன்னல்**[2] *šoṉṉal,* பெ. (n.) சோளம் (சூடா.); great millet, cereal grass.

தெ. சொந்ந

*[சொன்னம் → சொனனல்]*

**சொன்னி** *šoṉṉi,* பெ. (n.) மணம் (அக.நி.); fragrance.

**சொனகு** *šoṉagu,* பெ. (n.) பெரும்புல் வகை (தைலவ. தைல.); a kind of large grass.

*[சுணை → சோணை → சொனகு = சுணையுள்ள புல்வகை]*

**சொனாகம்** *šoṉāgam,* பெ. (n.) வேலிப் பருத்தி (மலை.); stinking swallow-wort.

# சோ

**சோ**[1] *cō/šō*, 'ச்' எனும் மெய்யெழுத்தும், 'ஓ' எனும் உயிரெழுத்தும் சேர்ந்தமைந்த உயிர் மெய்யெழுத்து; the compound of ō and c/š.

*[ச் + ஓ = சோ]*

**சோ**[2] *šō*, இடை. (part.) வியப்புப் பொருளைத் தரும் இடைச்சொல் (இ.வ.); an expletive signifying surprise.

**சோ**[3] *šō*, பெ. (n.) 1. வாணாசுரன் நகர்; the city of Bāṇāšuran. "சோவி மையழித்த மகன்" (நான்மணி. 2.). 2. அரண் (நன். 129, உரை.); fortification, fortress. 3. துன்பம்; distress. 4. மடி, சோம்பல்; idleness.

**சோகநீக்கி** *šōganīkki*, பெ. (n.) 1. மாதவி (சங். அக.); common delight of the woods. 2. குறிஞ்சா; spring creeper.

**சோகசாவேரி** *šōga-šāvēri*, பெ. (n.) பண்வகை (பரத. ராக. 55); a specific melody-type.

**சோகம்**[1] *šōgam*, பெ. (n.) ஒட்டகம்; camel.

*[சோ[3] → சோகம்]*

**சோகம்**[2] *šōgam*, பெ. (n.) அசோகம்; asoka tree. "சொரி யிதழ் வனசோகம்" (கம்பரா. வனம்புகு.81).

*[சே (= சிவப்பு) → சோ → சோகம் = சிவந்த தளிரையுடைய அசோக மரம்]*

**சோகம்**[3] *šōgam*, பெ. (n.) தொடை (திவா.); thigh.

**சோகமாதிரம்** *šōga-mātiram*, பெ. (n.) கோங்கு; false tragacanth.

**சோகா-த்தல்**[1] *šōgā-*, 4 செ.கு.வி. (v.i.) துன்புறுதல்; to grive, suffer. "சோகாப்பர் சொல்லிழுக்குப்பட்டு" (குறள். 127).

*[சோ + கா-.]*

சோகாத்தல் சிறையிற் காத்திருத்தல். அது கனகவிசயர் என்னும் ஆரிய மன்னர் தமிழ் வேந்தரைப் பழித்ததனால், சேரன் செங்குட்டுவனின் சீற்றத்திற்காளாகிச் சிறைப்பட்டது போல்வது.

'அடல்வேல் மன்னராயிரு ருள்ளும்
கடலந் தானைக் காவல னுரைக்கும்
பாலகுமரன் மக்கள் மற்றவர்
காவா நாவிற் கனகனும் விசயனும்
விருந்தின் மன்னர் தம்மொடுங்கூடி
அருந்தமி ழாற்றல் அறிந்தில ராங்கெனக்
கூற்றங் கொண்டிச் சேனை செல்வது'
(சிலப். 26: 156-62)

"ஆரிய வரசரை யருஞ்சிறை நீக்கி"
(சிலப். 28:165)

சோ என்பது அரிய பொறிகள் ஏற்றப்பட்ட சிறந்த அரண். அஃது இராவணனின் இலங்காபுரியிலும் வாணனின் சோணித புரத்திலும் இருந்தது.

"தாவியசே வடிசேப்பத் தம்பியொடுங் கான்போந்து சோவரணும் போர்மடியத் தொல்லிலங்கை ஆட்டழித்த சேவகம்" (சிலப். ஆய்ச்சியர் குரவை)

"ஆனிரை தாங்கிய குன்றெடுத்தான் சோவின்
அருமை யழித்த மகன்" (நான்மணி. 2)

சோன் என்னும் சொல்லைப் பிற்காலத்தார் பொதுவான மதிற்பெயராகவும் ஆண்டு விட்டனர்.

"சோமே விருந்தொரு கோறா வெனின்"
(சி.சி. மறைஞான தேசிகர் உரை)

காத்தல் என்பது காத்திருத்தல் அல்லது நிலையில்லாது தங்கியிருத்தல். wait என்னும் ஆங்கிலச் சொற்கு tarry, stay என்று ஆக்கசுபோர்டு ஆங்கிலச் சிற்றகர முதலி பொருள் கூறியிருத்தல் காண்க.

சோகா என்னும் சொல்லை வடசொல் தொடர்பினதாகக் காட்டல் வேண்டி, சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் அரகமுதலி அதற்குச் சோகம் + யா என்று மூலங் குறித்திருப்பது பொருந்தாது. யாத்தல் கட்டுதல், அரையாப்பு, கழல் யாப்பு, மார்யாப்பு (மாராப்பு), விதலை யாப்பு முதலிய கூட்டுச் சொற்கள் போல் சோக(ம்) யாப்பு என்றொரு சொல்லின்மையும், அவ்விரு பிறப்பியல் (hybrid) யாப்பு என்னும் சொல் இயற்கையாகப் பொருந்தாமையும் நோக்குக. இனி, சோ என்னும் சொல்லையும், வாணன்

*தலைநகர்ப் பெயரான சோணிதபுரம் என்பதன் சிதைவாக அவ்வகரமுதலி காட்டியிருப்பதும் குறும்புத்தனமாம் வாணனுக்கு முந்தின இராவணன் காலத்திலேயே சோவரண் இருந்தமையை நோக்குக (தி.ம. 105-6).*

**சோகாகக்கனகம்** *šōgāga-k-kaṉagam,* பெ. (n.) ***பிள்ளைத் தாய்ச்சிச்செடி;*** any plant in which the legumes contain large and projecting seeds. *(சா.அக.).*

**சோகாப்பு** *šōgāppu,* பெ. (n.) **துன்பம்** *(சங்.அக.);* sorrow, grief. "சோகாப்பர் சொல் இழுக்குப் பட்டு" *(குறள், 127).*

*[சோகா → சோகாப்பு]*

**சோகாரம்** *šōgāram,* பெ. (n.) ***குங்குமச் செவ்வந்தி;*** crimson coloured chamomile flower *(சா.அக.).*

*[சே → சோ → சோகாரம்]*

**சோகாரி** *šōgāri,* பெ. (n.) ***கடம்பு, கடம்பமரம்*** *(மலை.);* commom Indian oak.

**சோகி¹-த்தல்** *šōgi-,* 4 செ.கு.வி. (v.i.) *1.* ***துன்பப்படுதல்;*** to grieve; to be depressed in mind. "முகமெலாங் கண்ணீர் வாரச் சோகித்தார்" *(கோயிற்பு. நடராச. 9).* 2. **மயங்குதல்** (வின்.); to faint, swoon.

*[சோகா → சோகி-.]*

**சோகி²** *šōgi,* பெ. (n.) *1.* **பலகறை** (M.M.238); cowry, small shell, white or coloured. "முத்தக்கழற் சோகியாகி" *(உபசேகா. சிவபுண். 91).* *2.* ***சோர்ந்தூர்ந்து செல்லு மொரு கடல் முத்து;*** a sea pearl moving slowly.

*[சோழி → சோகி.]*

**சோகி³** *šōgi,* பெ. (n.) ***மாயமந்திர விச்சைகளில் தேர்ச்சியுற்றுப் பாம்பைப் பிடித்தாட்டி வயிறு வளர்க்கும் தொட்டிய இனப் பிச்சைக்காரன்*** (E.T. II,494) (இ.வ.); a caste of itinerant Teluge mendicants, who are dexterous jugglers and snake-charmer, and claim a profound knowledge of charms and medicine.

*க.* சோசி, யோகின்

**சோகிக்கீரை** *šōgi-k-kīrai,* பெ. (n.) ***பெருஞ் சீரகம்*** (M.M. 845); sweet fennel.

**சோகிகா** *šōgigā,* பெ. (n.) ***மகிழம்பூ;*** West Indian medlar *(சா.அக.).*

**சோகித்தலம்** *šōgi-t-talam,* பெ. (n.) ***காற்சிகைப்பூடு;*** an unknown plant *(சா.அக.).*

**சோகிதன்** *šōgidaṉ,* பெ. (n.) **துன்பமுற்றவன்** *(பாரத வெண். 28, உரை);* one who is sorrowful.

*[சோகி³ → சோகிதன்]*

**சோகு** *šōgu,* பெ. (n.) **பேய்** *(பிங்.);* vampire, devil, goblin. "கானத்தி லுற்பவித்து றுஞ் சோகாயுலைவரே" *(சிவரக. நந்திகேசுரர். நமனுக்கு. 8).*

தெ. சோகு

*[சோகி¹ → சோகு = துன்பந்தரும்பேய்]*

**சோகுவாகு** *šōgu-vāgu,* பெ. (n.) ***வாலுளுவை யரிசி;*** seeds of spindle tree.

**சோகை** *šōgai,* பெ. (n.) *1.* ***அரத்தக் குறைவால் முகம் வெளுத்து ஊதுமாறு செய்யும் நோய் வகை*** (M.L.); anaemia, a disease characteised by pale and bloated face. *2.* ***அறிவுக் குறைந்தவன்*** *(அப்பிராணி) (சங்.அக.);* feeble or impotent person.

*[சோ → சோகை]*

சோ என்றால் மடி அல்லது சோம்பல் என்ற பொருளாகும். இந்நோய் பீடிக்கப் பட்டவனும் விறுவிறுப்பின்றி சோம்பிக் கிடப்பதால் இந்நோய்க்கு சோகை என்ற பெயர் வந்தது.

**சோகைப்பாண்டு** *šōgai-p-pāṇḍu,* பெ. (n.) ***அரத்தமின்மையால் ஏற்படும் பாண்டு நோய்;*** dropsy due to anemic condition of the body, anemic dropsy *(சா.அக.).*

*[சோகை + பாண்டு]*

**சோகைப்பாண்டுநாசினி** *šōgai-p-pāṇḍu-nāšiṉi,* பெ. (n.) ***நறுந்தாளிப் பூண்டு;*** binweed - convolvulus genus. it is so called from its virtue of curing anemic dropsy *(சா.அக.).*

*[சோகைப்பாண்டு + நாசினி]*

**சோகைமுஞ்சி** *šōgai-mūñji,* பெ. (n.) 1. ஊதின முகம்; swollen face. 2. நீர்க்கோர்வையினால் வீங்கிக்காணும் முகம்; face grown turgid or swollen up as with water-bloated face (சா.அக.).

*[சோகை + முஞ்சி]*

**சோகையன்** *šōgaiyaṉ,* பெ. (n.) சோகை நோயால் வருந்துபவன் (யாழ்.அக.); person affected with anaemia.

*[சோகை → சோகையன்]*

**சோகைவீக்கம்** *šōgai-vīkkam,* பெ. (n.) நச்சூதை நோய் (விஷப்பாண்டு ரோகம்) (M.L.); dropsy.

*[சோகை + வீக்கம்]*

**சோங்கண்** *šōṅgaṇ,* பெ. (n.) மாறுகண் (நாஞ்.); squint eye.

மறுவ. சாய்ந்த கண்

*[சோங்கு + கண் → சோங்கண்]*

**சோங்கம்**[1] *šōṅgam,* பெ. (n.) அகில் (மலை.); blinding - tree.

**சோங்கம்**[2] *šōṅgam,* பெ. (n.) கிச்சிலிக் கிழங்கு (சங். அக.); camphor zedoary.

**சோங்கல்** *šōṅgal,* பெ. (n.) 1. மறந்துவிடல்; forgetfullness. 2. மறதி; non-rememberance (சா.அக.).

*[சோங்கு → சோங்கல்]*

**சோங்கு**[1] *šōṅgu,* பெ. (n.) கோங்கிலவு (வின்.); false tragacanth.

**சோங்கு**[2] *šōṅgu,* பெ. (n.) மறதி (சங்.அக.); forgetfulness, oblivion.

*[சோ → சோங்கு]*

சோ என்ற சொல் சோம்பல், சொக்குதல் (தூக்கக் கலக்கம்) போன்ற சொற்களை உருவாக்கும். சோம்பலால் மறதி ஏற்படுவது இயல்பு.

**சோங்கு**[3] *šōṅgu,* பெ. (n.) கானாறு சூழ்ந்து விளங்கும் மலைச் சோலை (வின்.); hilly tract thickly clustered with trees and watered by streams or cataracts.

**சோங்கு**[4] *šōṅgu,* பெ. (n.) உயரம்; height. பாரி சோங்கான ஆள். இந்த மரம் சோங்காக உள்ளது (வழ. சொ. அ).

**சோங்கு**[5] *šōṅgu,* பெ. (n.) நாரை (அக. நி.); heron.

தெ. கெங்க

**சோங்கு**[6] *šōṅgu,* பெ. (n.) 1. மரக்கலம்; boat, vessel, junk. "சோங்கினை மேலிடுசரக்கொடுங் கவிழமுட்டும்" (திருவிளை. வலைவீ. 34). 2. துமுக்கிக் கட்டை (யாழ்ப்.); gunstock.

க. சோக; தெ. சோகு

**சோங்கு**[7]**-தல்** *šōṅgu-,* 5 செ.கு.வி. (v.i) சரிவாதல் (நாஞ்.); to incline; to be oblique.

**சோங்குவெட்டு** *šōṅgu-veṭṭu,* பெ. (n.) சரிவான வெட்டு (வின்.); rough dressing of timber; slanting cut, as of rafters.

*[சோங்கு + வெட்டு - சோங்குவெட்டு]*

**சோச்சி** *šōcci,* பெ. (n.) சோறு (நாஞ்.); boiled rice.

*[சோறு → சோச்சி]*

**சோச்சிபாச்சி** *šōcci-pācci,* பெ. (n.) அன்னமும் பாலும்; boiled rice and milk.

*[சோறு → சோச்சி + பாச்சி]*

**சோச்சியகன்** *šōcciyagaṉ,* பெ. (n.) கீழ்மகன் (யாழ். அக.); low-caste person.

**சோசக்காய்** *šōšakkāi,* பெ. (n.) தேங்காய்; coconut (சா.அக.).

**சோசகம்** *šōcagam,* பெ. (n.) மரப்பட்டை (யாழ்.அக.); bark of trees.

**சோசம்** *šōšam,* பெ. (n.) தென்னை; coconut-palm; "பத்துப்பத் தடுக்கிய சோசக்காய் நீரை" (தைலவ. தைல. 134).

**சோசனம்** *šōšaṉam,* பெ. (n.) வெள்ளை வெங்காயம் (மலை.); white onion.

**சோசாங்கினி** *šōšāṅgiṉi,* பெ. (n.) துளசி; sacred basil.

**சோசி**[1]**-த்தல்** *šōši-,* 4 செகுவி. (v.i.) வற்றுதல் (வின்.); to dry up, go dry.

*[சோ[3] → சோசி]*

**சோசி**[2]**-த்தல்** *šōši-,* 4 செகு.வி. (v.i.) 1. துன்பப்படுதல் (வின்.); to grieve, sorrow. 2. சோர்வடைதல்; to languish, faint.

*[சோ[3] → சோசி]*

**சோசியார்திருவடி** *sōsiyār-diruvaḍi,* பெ. (n.) அரசுப்பணியாளருள் ஒரு பிரிவினர் (S.I.I.V. 339); an officer of the government.

*[சோசியார் + திருவடி.]*

**சோட்டா** *sōṭṭā,* பெ. (n.) சோட்டாத்தடி (சங். அக.) பார்க்க; see *sōṭṭā-t-taḍi.*

**சோட்டாத்தடி** *sōṭṭā-t-taḍi,* பெ. (n.) 1. திரண்டதடி; club, rod. 2. சிறுகழி (வின்.); small stick, baton with a curved end, walking stick.

H.,U. chōṭṭa

*[சுள் → (சொள்) → சோடு → சோட்டா + தடி.]*

**சோட்டுப்பப்பளி** *sōṭṭu-p-pappaḷi,* பெ. (n.) சேலைவகை (உ.வ.); a kind of saree.

**சோட்டை** *sōṭṭai,* பெ. (n.) 1. பேராவல்; eagerness desire, longing, yearning. 2. அன்பு; fondness, devation.

*[ஏட்டை → சோட்டை]*

**சோட்டைப்பண்டம்** *sōṭṭai-p-paṇḍam,* பெ. (n.) ஆசையுணவு (யாழ்ப்.); favourite food.

*[சோட்டை + பண்டம்]*

**சோட்டையன்** *sōṭṭaiyaṉ,* பெ. (n.) பயனற்ற ஆள் (நெல்லை); useless fellow.

*[சொட்டை → சோட்டை → சோட்டையன்]*

**சோடசம்** *sōḍašam,* பெ. (n.) 1. மரப்பட்டை; bark of a tree. 2. நார்; fibre (சா.அக.).

*[சோசகம் → சோடகம்]*

**சோடசவாண்டுமூலி** *sōḍašavāṇḍu-mūli,* பெ. (n.) பசியெடுக்காதிருக்கச் சித்தர்கள் உண்ணும் மூலிகை; a rare drug used by Šiddhars to keep them off from hunger and thirst (சா.அக.).

**சோடம்**[1] *sōḍam,* பெ. (n.) முலைக்கச்சு வகை (புதுவை.); a kind of corset.

**சோடம்**[2] *sōḍam,* பெ. (n.) பொறுமை (யாழ்.அக.); patience, endurance.

**சோடல்** *sōḍal,* பெ. (n.) புடைவை (அகநி); saree.

மறுவ. சீலை, சீரை, சேலை

**சோடன்** *sōḍaṉ,* பெ. (n.) 1. கீழ்மகன் (சங்.அக.); low-bred man. 2. சோம்பன்; idle fellow. 3. மூடன்; fool, idiot.

*[சோடை → சோடன் = சோம்பேறி]*

**சோடாப்புல்** *sōḍā-p-pul,* பெ. (n.) ஒருவகை நீர்ப் புல்; a grass growing in water.

**சோடி**[1]**-த்தல்** *sōḍi-,* 4 செ.குவி. (v.i.) வற்றுதல் (சங்.அக.); to dry up.

*[சுடு → சூடு → சோடு → சோடி → சோடி-த்தல் = காய்தல், வற்றுதல்]*

**சோடி**[2]**-த்தல்** *sōḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. அணியழகு செய்தல் (யாழ்.அக.); to adorn, beautify, decorate, as a town, a street, a dwelling, a person. 2. கற்பித்தல் (உ.வ.); to prepare carefully, concoct, arrange. அவன் பேரில் வழக்குச் சோடித்தார்கள். 3. புனைந்து பேசுதல் (வின்.); to exaggerate, elaborate, as speech.

க., பட. சோடிசு

*[சுவடி → சோடி. சுவடித்தல் = அழகு செய்தல், ஒப்பனை செய்தல்]*

**சோடி**[3] *sōḍi,* பெ. (n.) 1. இணை, இரட்டை (இ.வ.); couple, pair. 2. ஒப்பு; similarity, match.

ம., க., பட. சோடி; H. jōḍī

*[சுவள் → சுவடி → சோடி.]*

**சோடி**[4] *sōḍi,* பெ. (n.) உசிலம்பொடி (சங்.அக.); powder of the dried leaves of black sirissa.

**சோடிகாமுத்திரை** *sōḍigā-muttirai,* பெ. (n.) அன்றாட இறைவழிபாட்டின் போது கட்டை விரலால் பெருவிரலைத் தெறிக்கும் முத்திரை (செந். x. 424); a finger-pose during prayer, which consists in joining the tip of the thumb with the middle finger and snapping.

**சோடிசேர்**[1]**-த்தல்** *sōḍi-sēr-,* 4 செ.குன்றாவி. (v.t.) பொலிகாளையோடு பெற்றத்தைப் புணர விடுதல்; to let a cow and a bull cover.

*[சோடி + சேர்-.]*

**சோடிசேர்**[2]**-த்தல்** *sōḍi-sēr-,* 4 செ.குவி. (v.i.) ஒரு மாட்டிற்கு இணை சேர்த்தல்; to select a bull as match for another.

*[சோடி + சேர்-.]*

**சோடிபார்-த்தல்** *šōḍi-pār-*, 4 செ.கு.வி. (v.i.) சோடிசேர்-த்தல் பார்க்க; see *šōḍi-šēr-*.

*[சோடி[3] + பார்-.]*

**சோடினை** *šōḍiṉai*, பெ. (n.) 1. அழகு படுத்துகை (வின்.); adorning decoration; attire for a play. 2. ஒப்பனையால் தோன்றும் அழகு; beauty due to decoration. 'உடைமை சோடினையாப் பூட்டி' (விறலிவிடு. 375). 3. ஏறிட்டுக் கற்பிக்கை (இ.வ.); concoction, as of a false case.

*[சுவடி → சோடி → சோடினை. சுவடி = ஒப்பனை செய்கை]*

**சோடினைக்காரன்** *šōḍiṉai-k-kāraṉ*, பெ. (n.) 1. நாடகம் நடிப்போர்க்கான உடைகளை ஆயத்தம் செய்பவன் (வின்.); maker of costumes for actors in a play; one who dresses actors for the stage. 2. கற்பனை செய்பவன் (இவ.); one who concocts or fabricates.

*[சோடினை + காரன்]*

**சோடினைகட்டு-தல்** *šōḍiṉai-kaṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) நாடகம் நடித்தற்கு வேண்டிய உடையுடுத்தல் (யாழ்ப்.); to attire oneself for a play.

*[சோடினை + கட்டு-.]*

**சோடு[1]** *šōḍu*, பெ. (n.) 1. காற்கவசம்; a kind of legging for warriors. "காலார் சோடற்ற கழற்கால்" (களவழி, 9). 2. கவசம்; coat of mail. "தலைச் சோடு வஜ்ரச் சோடிட்டு" (கூளப்ப. 43). 3. நாலுபட்டணம்படி கொண்ட அளவு (இ.வ.); a measure of capacity equal to four Madras measures. 4. 360 நெற்கனமுள்ள ஓர் எடை; weight equal to 360 grains of paddy. 5. திரட்சி; rotundity. இந்தச்சோடு (உ.வ.).

*[சுள் → (சொள்) → சுவடு → சோடு.]*

**சோடு[2]** *šōḍu*, பெ. (n.) 1. இணை, இரட்டை; pair, cuple, brace, set. "சோடுற்றத் தாமரை மாமுகை போல" (திருப்பு. 806). 2. பறவை முதலியவற்றின் ஆண் பெண்ணிரட்டைகளுள் ஒன்று; mate, partner. "சோடுகாணாத பேடு" (குமரேசசத. 29). 3. சுவடு (உ.வ.); trace, mark, foot-print. 4. மிதியடி வகை; pair of shoes, slippers. 5. ஒப்பு; equal. "அவளுக்கவள் சோடு" (இராமநா. ஆரணி. 15). 6. ஓரிணை வரிசை (வின்.); gradual increase or decrease of things in a scries.

ம., க., பட. சோடு; H. jōḍ

*[சுவள் → சுவடு → சோடு. சுவடு = காலடித் தடமாகும் இதுவே காலணிக்கும் பெயர் ஆயிற்று.]*

**சோடுகட்டு-தல்** *šōḍu-kaṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. இணை சேர்த்தல் (வின்.); to join or unite two similar things. 2. இரட்டையாக்குதல்; to make or form a set, pair or couple.

*[சோடு[2] + கட்டு-.]*

**சோடுபறிபூண்டு** *šōḍu-paṟi-pūṇḍu*, பெ. (n.) பேய்ப்புடலை; devil's gourd (சா.அக.).

*[சோடுபறி + பூண்டு]*

**சோடுபார்-த்தல்** *šōḍu-pār-*, 4 செ.கு.வி. (v.i.) இருவர் அல்லது இரண்டு பொருள்கள் தம்முள் நிகரொத்துள்ளமையைக் கவனித்தல்; to see whether two persons or things are well matched. சேர்க்கும்போது சோடுபார்த்துச் சேர்க்க வேண்டும் (இ.வ.).

*[சோடு[2] + பார்-.]*

**சோடுபிரிவு** *šōḍu-pirivu*, பெ. (n.) 1. ஆணும் பெண்ணும் பிரிதல்; separation of the couple as that of bird. 2. கணவனும் மனைவியும் சேர்ந்து வாழாமல் செய்யும் மந்திரம்; a magic for separation of wife and husband (சா.அக.).

*[சோடு[2] + பிரிவு]*

**சோடுபெயர்ந்தகாய்** *šōḍu-peyarnda-kāy*, பெ. (n.) முதலில் இணையாக வைக்கப்பட்டும் பின்னர்த் தாயம் வேண்டியவாறு விழாமையால் தனியாகப் பிரிக்கப்பட்டதுமான காய் (உ.வ.); piece in a game of draughts moving in pair but separated owing to the unlucky fall of the dice.

*[சோடு + பெயர்ந்தகாய்]*

**சோடை[1]** *šōḍai*, பெ. (n.) 1. வறட்சி (சங்.அக.); drought, heat, dryness. 2. காய்த்து ஓய்ந்த மரம் (யாழ்ப்.); tree which has ceased to yield, withered tree. 3. சோர்வு (உ.வ.); faintness, languor. 4. அறிவிலி; person of imperfect or weak understanding, booby. "சோடைகள்

நன்னெறி சொல்லார்" (தேவா. 220, 10). 5. செயற்கேடு (வின்.); failure, as in the accomplishment of an object. 6. ஒருவகை நோய்; a kind of disease. "ஓதிய சோடையுட னஞ்சுமாம்" (சினேந். 229). 7. வாழை நோய் வகை (இ.வ.); a blight affecting the plantain.

Skt. šōṣa

[சுடு → சூடு → சோடு → சோடை = வறட்சி, சோர்வு வடவர் சுஷ் என்பதை மூலமாகக் காட்டுவர். அது சுள் என்பதன் திரிபு.]

**சோடை**[2] *šōḍai,* பெ. (n.) 1. கோடைக் காலத்தில் வயல் வழியே செல்லும் வண்டிப்பாதை; cart-track lying through a field in summer. வயல் வழியாகச் சோடை போகிறதா? (இ.வ.). 2. பாதையில் வண்டி சென்ற தடம் (இ.வ.); rut in a road. 3. சுவடு (இ.வ.); trace.

[சோடு[2] → சோடை.]

**சோடை**[3] *šōḍai,* பெ. (n.) 1. விருப்பம்; eager desire. "சமர்புரி சோடை கொண்டனன்" (விநாயகபு. 74:64). 2. மகிழ்ச்சி; delight, ecstasy. "மன்றலின் சோடையிற் பயின்ற நான்" (விநாயகபு. 80:119). 3. தொழில்; duty. "உறமுறை செலுத்துஞ் சோடை யினீங்கி" (விநாயகபு. 47:2).

[சோட்டை → சோடை.]

**சோடை**[4] *šōḍai,* பெ. (n.) 1. சொத்தை; that which is withered, blighted or decayed. 2. பயனற்றவ-ன்-ள்; useless, good-for-nothing person. 3. உடல் வலியற்றவை-ன்-ள்; weak. emaciated person. 4. உள்ளீடு இல்லாமை; hollow. அவன் ஒன்றும் சோடையில்லை (உ.வ.).

[சொள்ளை → சொட்டை → சோடை]

நிலக்கடலையுள் பருப்பு இல்லாமல் வெற்றுக் கூடாக இருப்பது சோடை எனப்படும். அறிவாற்றல் தேர்ச்சி இன்மையும் சோடை யாகும் (வழ. சொ. அக.)

**சோடைபற்று-தல்** *šōḍai-parru-,* 5 செ.குவி. (v.i.) நறுங்கிப் பலனற்றுப் போதல் (யாழ்ப்.); to become stunned, unfruitful.

[சோடை[4] + பற்று-.]

**சோடையன்** *šōḍaiyan,* பெ. (n.) பலவீனன் (வின்.); weak, sickly person.

[சோடை → சோடையன்.]

**சோணகத்திருக்கை** *šōṇaga-t-tirukkai,* பெ. (n.) முதுகில் முள் வாய்ந்த ஒரு வகைக் கடல் திருக்கை மீன்; a species of thorn back sea fish.




**சோணகவாளை** *šōṇagavāḷai,* பெ. (n.) வாளை மீன் வகை (M.M.); a kind of vāḷai fish.

**சோணகாரி** *šōṇagāri,* பெ. (n.) பட்ட இடத்தை சிவப்பாக்கி எரிச்சலை உண்டாக்கும் மருந்து; rubefacient.

[சோணம் = சிவப்பு) + காரி]

**சோணகிரி** *šōṇagiri,* பெ. (n.) திருவண்ணாமலை; Tiruvaṇṇāmalai hill in South Arcot District, sacred to Šivaṉ. "சோணகிரி வித்தகா" (பட்டினத். தாயார்தகன. 9).

[சோணம் + கிரி]

சோணம் = தீ; சிவப்பு. இதனால் தான் திருவண்ணாலையில் சிறப்பு நாளில் தீ வழிபாடு, தீப வழிபாடு நடைபெறுகிறது.

Skt. giri → த. கிரி

**சோணங்கி** *šōṇaṅgi,* பெ. (n.) 1. மெலிந்த-வன்-வள்-து (இ.வ.); lean person or animal. 2. சோர்வற்றவன்; one who get tired. 3. சோணங்கிநாய் (வின்.) பார்க்க; see *šōṇaṅgi-nāy.*

[சுணங்கு → சுணங்கி → சோணங்கி. சுணங்கு = மெலிவு]

[சுள் → சொள் → (சோள்) → சோணங்கி.]

**சோணங்கிநாய்** *šōṇaṅgi-nāy*, பெ. (n.) நாய் வகை (வின்.); a breed of dog.

*[சோணங்கி + நாய்]*

**சோணசைலம்** *šōṇa-šailam*, பெ. (n.) சோணகிரி பார்க்க; see *šōṇa-giri*. சோண சைல மாலை.

மறுவ. திருவண்ணாமலை

*[சோணம் + அசைலம்]*

Skt. šaila → த. சைலம்

**சோணப்பூ** *šōṇa-p-pū*, பெ. (n.) செம்பருத்திப்பூ; red cotton. "வாசப்பளிதமுஞ் சோணப்பூவும்" (பெருங். மகத. 17:133).

*[சோணம் (செந்நிறம்) + பூ]*

சோணம் = சிவப்பு. செம்பருத்திப்பூ செந்நிறமாய் இருப்பதால் சோணப்பூ எனப்பட்டது.

**சோணம்**[1] *šōṇam*, பெ. (n.) சிவப்பு (பிங்.); red colour, crimson.

*[சுல் (சிவத்தல்) → சுள் → (சொள்) → சோண் → சோணம்.]*

**சோணம்**[2] *šōṇam*, பெ. (n.) சோணை[2] பார்க்க; see *šōṇai*[2]. "சிலம்பு சூழுங்காற் சோணமாந் தெரிவையை" (கம்பரா. அகலிகை. 1).

*[சோணம் [1] → சோணம் [2].]*

**சோணம்**[3] *šōṇam*, பெ. (n.) பொன்; gold. "சோணந்தரு கும்பங்கிளர் துணைமாளிகை" (திருவாத. பு. திருவம்பல. 51).

Skt. svarṇa; H.,U. sōnā

*[சோணம்[1] → சோணம்[3].]*

**சோணமலை** *šōṇa-malai*, பெ. (n.) அருண மலை; Aruṇamalai.

*[சோணம்+ மலை = திருவண்ணாமலை]*

**சோணாகம்** *šōṇāgam*, பெ. (n.) பெருவாகை (மலை.); siris.

**சோணாசலங்கம்பு** *šōṇāšalaṅ-gambu*, பெ. (n.) கம்புப் பயிர் வகை (G.sm. D.I.i, 219); a variety of kambu.

**சோணாட்டுப்பூஞ்சாற்றூர்ப்பார்ப்பான் கௌணியன்விண்ணந்தாயன்** *šōṇaṭṭu-p-pūñjāṟṟūr-p-pārppāṉ-kauṇiyaṉ-viṇṇandāyaṉ*, பெ. (n.) ஆவூர் மூலங்கிழாரால் பாடப்பட்ட ஒரு வள்ளல்; a donor sung by Āvūr-Mūlaṅgiḻār.

*[சோணாட்டு + பூஞ்சாற்றூர் + பார்ப்பான் + கௌணியன் விண்ணந்தாயன்]*

**சோணாடு** *šōṇāḍu*, பெ. (n.) சோழ நாடு; the Chola country. "குறும்பல்லூர் நெடுஞ் சோணாட்டு" (பட்டினப். 28).

*[சோழன் + நாடு]*

**சோணாலு** *šōṇālu*, பெ. (n.) தாயம் முதலிய விளையாட்டில் விழும் ஒரு நற்குறி (விருத்தம்) (உ.வ.); a lucky fall of dice or cowries, as in the game of tāyam, dist. fr. pāṇālu.

**சோணி** *šōṇi*, பெ. (n.) பலகறை (இ.வ.); cowrie.

*[சோழி → சோணி]*

**சோணேசன்** *šōṇēšaṉ*, பெ. (n.) திருவண்ணா மலையிற் கோயில் கொண்ட சிவன்; Šivaṉ, as the Lord of Šōṇācalam or Tiruvaṇṇāmalai. "காட்டுமோ சோணேசன் கஞ்சமலர்த் தாளிணையை" (அருணகிரியந். 25).

*[சோணம் → சோணேசன்]*

**சோணை**[1] *šōṇai*, பெ. (n.) 1. காதினடித்தண்டு (யாழ்ப்.); lobe of the ear, thick ear-lobes. "சோணையழகியார்" (திவ். பெரியதி. 10.8:1,வியா). 2. மண் வெட்டியிற் காம்பு சொருகுமடிப் பகுதி (வின்.); extremities of the sides of a hoe near the haft. 3. புகையிலை முதலியவற்றின் காம்பினடி (யாழ்.அக.); base of a leaf or leaf-stalk which grows from the branch without a stem, as of tobacco.

*[சுணை → சோணை.]*

**சோணை**[2] *šōṇai*, பெ. (n.) பாடலிபுத்திரத்துக் கருகில் கங்கையொடு கலக்கும் ஒரு ஆறு (பிங்.); the river Sōṇai which mingle with the Ganges near Pāḍaliputra.

*[சோணம் [2] → சோணை]*

**சோணை**[3] *šōṇai*, பெ. (n.) 1. சிவப்பு; red. 2. சோணகிரி (யாழ்.அக.) பார்க்க; see *šōṇagiri*.

**சோணை**[4] *šōṇai*, பெ. (n.) முக்கோல் எனப்படும் இருபத்திரண்டாவது நாண்மீன் (திருவோணம்) (சூடா.); the 22nd nakṣatra.

**சோணை**[5] *šōṇai*, பெ. (n.) சோணாலு (இ.வ.) பார்க்க; see *šōṇālu*.

**சோணை**[6] *šōṇai*, பெ. (n.) சோனை[3] பார்க்க; see *šōṉai*.

*[சோனை → சோணை]*

**சோணை**[7] *šōṇai,* பெ. (n.) அணிகலன் அணிவதற்காகக் காது மற்றும் மூக்கில் இட்ட துளை தூர்ந்து போகாமலிருக்க இடப்படும் சிறு குச்சி; small stick which prevents the hole provided in the ear or nose from closing.

*[சுணை → சோணை. சுணை = முள், குச்சி]*

**சோணைக்காது** *šōṇai-k-kādu,* பெ. (n.) அடிபெருத்த காது (யாழ்ப்.); large-lobed ear.

*[சோணை + காது]*

**சோத்தாள்** *šōttāḷ,* பெ. (n.) வேலை செய்யாத சோம்பேறி (உ.வ.); lazy, indolent person, fit for eating only.

*[சோறு + ஆள்]*

**சோத்துப்பக்காளி** *šōttu-p-pakkāḷi,* பெ. (n.) சோற்றுப்பக்காளி பார்க்க; see *šōṟṟu-p-pakkāḷi.*

**சோத்துப்புட்டி** *šōttu-p-puṭṭi,* பெ. (n.) மீனவர் கட்டுச்சோறு எடுத்துச் செல்லப் பயன்படுத்தும் கோரையினால் ஆன பெட்டி; small box made of sedge to convey packed meals.

*[சோறு → சோத்து + புட்டி. பெட்டி → புட்டி]*

**சோத்துவெள்ளி** *šōttu-veḷḷi,* பெ. (n.) மீனவர் இரவில் உணவு உண்ணுவதற்கான நேரம் கணிக்கப் பயன்படும் வெள்ளி விண்மீன்; the silverstar, which is seen to determine the time for night meals by fishermen in sea.

*[சோறு → சோற்று → சோத்து + வெள்ளி]*

**சோதிகம்** *šōdigam,* பெ. (n.) வாலுளுவை; spindle tree.

**சோந்தை**[1] *šōndai,* பெ. (n.) *1.* பற்று; interest, concern, connection. எனக்கு அதிலே சோந்தையில்லை (வின்.). *2.* குடியானவனுக்குத் தன்மீது பற்று அதிகப்படுமாறு நிலவுடைமை யாளர் முன்னதாகக் கொடுத்து உதவும் நெல் முதலியன (இ.வ.); advance in cash or kind given by a land-owner to his cultivating tenant in order that the latter may remain continually attached to him.

*[சொந்தம் → சோந்தை.]*

**சோந்தை**[2] *šōndai,* பெ. (n.) இடையூறு; impediment, difficulty. அவன் சோந்தை பண்ணுகிறான் (வின்.).

**சோந்தைக்காரன்** *šōndai-k-kāraṉ,* பெ. (n.) பற்றுள்ளவன் (யாழ்ப்.); interested person.

*[சோந்தை + காரன்.]*

**சோநிசி** *šōniši,* பெ. (n.) குகை (சங். அக.); cave, cavern.

**சோப்பளாங்கி** *šōppaḷāṅgi,* பெ. (n.) *1.* பயனற்றவன்; lazy, worthless fellow. *2.* வலுவற்றவன் (இ.வ.); weak person.

க. சோப.

*[சோம்பு → சோப்பு → சோப்பளாங்கி]*

**சோப்பறுதி** *šōppaṟudi,* பெ. (n.) சோர்வு (வின்.); languor, lassitude, fatigue, prostration.

*[சோம்பு → சோப்பு + அறுதி]*

**சோப்பி** *šōppi,* பெ. (n.) ஈயோட்டி (யாழ்ப்.); flapper.

*[சோப்பு[1] → சோப்பி]*

**சோப்பு**[1]**-தல்** *šōppu-,* 5 செ.குன்றாவி. (v.t.) சோர்வுறச் செய்தல் (யாழ்ப்.); to cause to droop or languish.

க. சோப்பிசு; தெ. சோபு

*[சோம்பு → சோப்பு-.]*

**சோப்பு**[2]**-தல்** *šōppu-,* 5 செ.குன்றாவி. (v.t.) அடித்தல் (வின்.); to beat, flog, give a drubbing.

**சோப்பு**[3] *šōppu,* பெ. (n.) அடி; blow. "நந்தன் மனைவி கடைதாம்பாற் சோப்புண்டு" (திவ். பெரியாழ். 2. 1:5).

*[சோப்பு[2] → சோப்பு[3]]*

**சோபக்கினி** *šōba-k-kiṉi,* பெ. (n.) நிலவேம்பு; ground neem.

**சோபநாசனி** *šōbanāšaṉi,* பெ. (n.) கழற்கொடி; bonduc creeper.

**சோபம்**[1] *šōbam,* பெ. (n.) பத்துக்கோடி கோடாகோடி (வின்.); a large number ten thousand trillions.

**சோபம்**[2] *šōbam,* பெ. (n.) 1. கள்; toddy. 2. மயக்கம்; fainting. 3. களைப்பு; fatigue. 4. சோம்பல்; drowsiness. 5. ஒளி; lustre. 6. தளர்ச்சி; languor. 7. அரத்தத்தைக் குறைக்கும் நோய்வகை; disease causing bloodlessness-anaemia (சாஅக.).

[சோபலம் → சோபம்]

**சோபலம்**[1] *šōbalam,* பெ. (n.) சோம்பல் (சங்அக.); laziness, sluggishness.

[சோம்பல் → சோம்பலம் → சோபலம்]

**சோபலம்**[2] *šōbalam,* பெ. (n.) சோம்பு[3] (சங்அக.) பார்க்க; see *šōmbu*[3].

**சோபலாங்கி** *šōbalaṅgi,* பெ. (n.) சோப்பளாங்கி (வின்.) பார்க்க; see *šōppaḷāṅgi.*

[சோப்பளாங்கி → சோபலாங்கி]

**சோபாஞ்சனம்** *šōbañjaṉam,* பெ. (n.) முருங்கை; drumstick tree.

**சோபாலிகை** *šōbāligai,* பெ. (n.) 1. குடை மேற்குடைச் செடி; an unknown plant. 2. அடம்பு; hare-leaf plant. "சுனைநீலஞ் சோபாலிகை" (திணைமாலை. 2). 3. சுவாலை; fire flame.

**சோம்பரக்கு** *šōmbarakku,* பெ. (n.) சோம்புத்திநீர் பார்க்க; see *šōmbuttīnīr.*

**சோம்பரை** *šōmbarai,* பெ. (n.) சோம்பல்; laziness, drowsiness.

[சோம்பல் → சோம்பர் → சோம்பரை]

**சோம்பல்** *šōmbal,* பெ. (n.) 1. சோம்பு[2] பார்க்க; see *šōmbu*[2]. காணிக்குச் சோம்பல் கோடிக்குக் கேடு (உ.வ.). 2. மயக்கம் (வின்.); drowsiness, stupor. 3. சின்னம்மைநோய் (வைசூரி) (யாழ்ப்.); small-pox, as causing stupor.

சோம்பல் = மந்தத்தன்மை, மடிமைத்தன்மை

[சூம்பு → சோம்பு → சோம்பல்]

**சோம்பல்முறி-த்தல்** *šōmbal-muṟi-,* 4 செ.குவி. (v.i.) சோம்பற்குறியாக உடம்பை முடக்கு வாங்குதல் (உ. வ.); to stretch or twist oneself due to excessive idleness.

[சோம்பல் + முறி-]

**சோம்பலம்** *šōmbalam,* பெ. (n.) சேங்கொட்டை (மலை.); marking-nut tree.

[சே → சோ → சோம்பலம்]

**சோம்பலம்பலம்** *šōmbalampalam,* பெ. (n.) சோம்பற்சாவடி,2 பார்க்க; see *šōmbaṟšāvaḍi,2.*

[சோம்பல் + அம்பலம்]

**சோம்பலாளி** *šōmbal-āḷi,* பெ. (n.) சோம்பேறி[1] (வின்.) பார்க்க; see *šōmbēṟi,1.*

மறுவ. சோம்பற்காரன்

[சோம்பல் + ஆளி]

**சோம்பற்காரன்** *šōmbaṟkāraṉ,* பெ. (n.) 1. சோம்பேறி[1] (வின்.) பார்க்க; see *šōmbēṟi*[1]. 2. சின்னம்மை நோயால் வருந்துவோன் (யாழ்ப்.); person suffering from small pox.

[சோம்பல் + காரன்]

**சோம்பற்சாவடி** *šōmbaṟ-cāvaḍi,* பெ. (n.) 1. சோம்பேறி[1] பார்க்க; see *šōmbēṟi*[1]. 2. சோம்பேறிகள் கூடுமிடம்; place where idlers meet.

[சோம்பல் + சாவடி]

**சோம்பற்றழும்பு** *šōmbaṟ-ṟaḻumbu,* பெ. (n.) அம்மைத் தழும்பு; scar or pitted marks of small pox.

[சோம்பல் + தழும்பு]

**சோம்பறை** *šōmbaṟai,* பெ. (n.) 1. சோம்பல்,1 பார்க்க; see *šōmbal,1.* 2. முரி நிமிர்கை; stretching oneself in idleness. 3. சோம்பேறி[1] பார்க்க; see *šōmbēṟi.*

[சோம்பல் → சோம்பறை]

**சோம்பன்** *šōmbaṉ,* பெ. (n.) சோம்பேறி[1] (சங். அக.) பார்க்க; see *šōmbēṟi*[1].

[சோம்பு → சோம்பன்]

**சோம்பாகம்** *šōmbāgam,* பெ. (n.) பிள்ளை மருது; flowering murdah.

**சோம்பி** *šōmbi,* பெ. (n.) சோம்பேறி[1] (உவ.) பார்க்க; see *šōmbēṟi*[1].

[சோம்பு → சோம்பி]

**சோம்பிரு-த்தல்** *šōmbiru-*, 3 செ.கு.வி. (v.i.) வேலைக்கு வாராது நின்றுவிடுதல் (தஞ்சை.); to stay away from work.

*[சோம்பு + இரு-.]*

**சோம்புத்தனம்** *šōmbu-t-taṉam*, பெ. (n.) சோம்பல்,1 (வின்.) பார்க்க; see *šōmbal,1*.

*[சோம்பு + (தன்மை→) தனம்]*

**சோம்பு[1]-தல்** *šōmbu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. வினைமடிந்திருத்தல்; to be idle, indolent, slotthful. "சோம்பியிருந்ததக் குரங்கு மென்றார்" (கம்பரா. சுந்தரபஞ்சசே. 67). 2. அறிவு மந்தமாதல் (வின்.); to be lethargic, apathetic, dull. 3. மனவுறுதி குறைதல்; to be cast down, dejected, dispirited. "சூல மன்னதோர் வாளியாற் சோம்பினன் சாம்பன்" (கம்பரா. யுத்த முதற்போர். 199). 4. வாடுதல் (வின்.); to droop, fade, as persons, plants. 5. கெடுதல்; to be spoiled, marred. "அரிவையர் கற்புச் சோம்பி" (கலிங். 247). 6. பின்வாங்குதல்; to stint. ஒரு காசுக்குச் சோம்புகிறான்.

வ. ஸ்வப் = தூங்கு, கனவு காண்

சோம்புதல் = வினை செய்யாதிருத்தல், சுறுசுறுப்பின்மை, கால நீட்டித்தல், தூங்க விரும்புதல். ஒ.நோ. தூங்குதல் = உறங்குதல், காலந்தாழ்த்து வினை செய்தல், மந்த மாதல்.

L. somnus; Slav. supati; Lith. sapnus; AS. swef; GK. hupnos (sleep)

*[சூம்பு → சோம்பு → சோம்பு-.]*

வெப்பத்தினால் மந்தமும் மடிமையும் உண்டாகுமாதலால், வெப்பக் கருத்தில் சோம்பற் கருத்துத் தோன்றிற்று. வெப்பக் காலத்திலும் வெப்ப நாட்டிலும் வினை முயற்சி குன்றுவதையும், குளிர் காலத்திலும் குளிர் நாட்டிலும் அது மிகுவதையும், உலகியலை நோக்கிக் காணலாம்.

**சோம்பு[2]** *šōmbu*, பெ. (n.) 1. மடிமை (தொல். பொருள். 260, உரை.); sloth, idleness, inactivity. 2. மந்தம்; lethargy, dullness, sluggishness of the system. "சோம்பு தவிர்ப்பிக்கும்" (திருமந். 566). 3. தூக்க மயக்கம்; sleeping-giddiness. 4. மயக்கம்; giddiness.

Gk. somnus (sleep)

*[சூம்பு → சோம்பு]*

**சோம்பு[3]** *šōmbu*, பெ. (n.) பெருஞ்சீரகம்; common anise.

தெ. சோபு

**சோம்புத்தீநீர்** *šōmbu-t-tīnīr*, பெ. (n.) பெருஞ்சீரகத்தால் ஆகிய மருந்து நீர் (பைஷஜ); medicinal extract of aniseed.

*[சோம்பு[3] + தீநீர்]*

**சோம்பூசிகம்** *šōmbušigam*, பெ. (n.) கருப்பு மந்தாரை; black mountain ebony.

**சோம்பேறி[1]** *šōmbēṟi*, பெ. (n.) சோம்பலுள்ளவன்; sluggard, idler.

க. சோமாரி

*[சோம்பு → சோம்பேறி = சோம்பு எறியவன்]*

**சோம்பேறி[2]** *šōmbēṟi*, பெ. (n.) பொன்னைக் கரைக்கும் அமிலம் (வின்.); aqua regia.

**சோமகுண்டம்** *šōma-guṇḍam*, பெ. (n.) காவிரிப் பூம்பட்டினத்திலுள்ள ஒரு நன்னீர்க் குளம் (புண்ணிய தீர்த்தம்); a sacred tank in Kāviri-p-pūm-paṭṭiṉam.

**சோமசபன்னி** *šōmašapaṉṉi*, பெ. (n.) குங்கிலியம்; Indian damer resin.

**சோமசுந்தரம்** *šōma-šundram*, பெ. (n.) பண்வகை (சங். அக.); a specific melody type.

**சோமதனம்** *šōmadaṉam*, பெ. (n.) செம்மரம் (L.); Coromandel red-wood.

தெ. சோமித

*[சே = சிவப்பு. சே → சோ → சோமதனம்]*

**சோமநாதி** *šōmanādi*, பெ. (n.) ஒருவகைப் பெருங்காயம் (வின்.); a kind of asafoetida.

ம. சோமநாதிகாயம்; து. சோமநாதிகாயி

**சோமம்** *šōmam*, பெ. (n.) 1. கள் (வின்.); toddy. 2. கொடிக்கள்ளி; moon creeper.

**சோமலதை** *šōmaladai*, பெ. (n.) கொடிக்கள்ளி; creeping milk hedge.

**சோமவல்லரி** *šōmavallari*, பெ. (n.) பொன்னாங் காணி (மலை.); a plant.

**சோமவல்லி** *šōmavalli*, பெ.(n.) சீந்தில் (மலை.); gulancha.

**சோமவலக்கம்** *šōmavalakkam*, பெ. (n.) பெருங்குமிழ்; Cashmere tree.

**சோமவுலுக்கம்** *šōmavulukkam*, பெ. (n.) தேக்கு (மூ.அ.); teak.

**சோமாக்கியம்** *šōmākkiyam*, பெ. (n.) *1.* செந்தாமரை; red lotus. *2.* செவ்வல்லி; red Indian water-lily.

**சோமாறி**[1] *šōmāṟi*, பெ. (n.) சோம்பேறி; idle fellow, sluggard.

ம. சோமாரி; க., து. சோமாரி; தெ. சோமரி

*[சோமாறு → சோமாறி]*

**சோமாறி**[2] *šōmāṟi*, பெ. (n.) **சமையற்காரன்** (இ.வ.); cook.

*[சோமாறு → சோமாறி]*

**சோமாறி**[3] *šōmāṟi*, பெ. (n.) **ஏனாதியர் வகை** (E.T.vi, *392*); a subsect of Ēnādi caste.

**சோமாறித்தனம்** *šōmāṟi-t-taṉam*, பெ. (n.) சோம்பல் (உ.வ.); slothfulness, indolence, idleness.

மறுவ. சோம்பேறித்தனம்

*[சோமாறி + தனம்]*

**சோமாறு**[1]**-தல்** *šōmāṟu-*, 5 செ.குன்றாவி. (v.t.) *1.* **ஒரு ஏனத்திலிருப்பதை மற்றொன்றிற் பகிர்ந்து வைத்தல்** (இ.வ.); to transfer part of the contents of one vessel to another. *2.* திருடுதல் (யாழ்ப்.); to steal, pilfer; to exchange stealthily. *3.* **பிறர் உடை நகை முதலியவற்றை இரவல் வாங்கி மனம்போன போக்கில் பயன்படுத்துதல்** (யாழ்ப்.); to use indiscriminately, as another's utensils, jewels, cloths etc. *4.* **ஒரே ஏனத்தைப் (பாத்திரத்தைப்) பல வேலைகளுக்கும் பயன்படுத்துதல்** (யாழ்ப்.); to use the same, utensil for various purposes. *5.* **ஒருத்தியைப் பலர் புணர்தல்** (யாழ்ப்.); to cohabit with a woman in common with others. *6.* **பண்ட மாற்றுதல்** (யாழ்ப்.); to exchange goods and articles.

*[சொம் + மாறு-.]*

**சோமாறு**[2]**-தல்** *šōmāṟu-*, 5 செ.கு.வி. (v.i.) *1.* **சோம்புதல்**; to be lazy. *2.* **பின்வாங்குதல்**; to draw back, shirk, backsdilde. அவன் வேலையைச் செய்யச் சோமாறுகிறான்.

க. சோமாரி

*[சோம்பு + சோமாறு → சோமாறு-தல்]*

**சோயிக்கீரை** *šōyi-k-kīrai*, பெ. (n.) **சதகுப்பி** (M.M.*852*); dill.

**சோர்**[1]**-தல்** *šōr-*, 2 செ.கு.வி. (v.i.) *1.* **உடல் அல்லது மனம் மேற் கொண்டு செயல்பட ஆற்றலற்று தளர்தல்**; to languish, droop; to be prostrate or relaxed, as the limbs in sleep; to be weary, exhausted. "கடியு மிடந்தேற்றாள் சோர்ந்தனள் கை" *(கலித். 92:50).* கவலையால் சோர்ந்து விட்டான். *2.* **மனந்தளர்தல்**; to be dejected, dispirited, depressed in spirits. *3.* **மயக்கமாதல்**; to faint, swoon. "அரசன் சோர்ந்தான்" *(கம்பரா. தைலமாட்டு. 59).*

க. சோர் (துளை); தெ. சோலு

*[சொள் → சோள் → சோர் → சோர்-தல் = குழைத்தல்]*

**சோர்**[2]**-தல்** *šōr-*, 2 செ.கு.வி. (v.i.) *1.* **நழுவுதல்**; to slip off slip down, as clothes. "துகிலிறையே சோர்ந்தவாறும்" *(திருவாச. 5:57).* *2.* **கண்ணீர் முதலியன வடிதல்**; to trickle down, as tears, blood, milk. "அயறு சோருமிருஞ் சென்னிய" *(புறநா. 22: 7).* *3.* **விழுதல்** (வின்.); to fall drop; to be dropped. *4.* **கசிதல்**; to exude, to ooze out. "மலஞ்சோரு மொன்பது வாயில்" *(திருவாச. 1:54).* *5.* **கழலுதல்**; to become loose, as rings; to grow slacek,as a grip. "பைந்தொடி சோரும்" *(குறள், 1234).*

ம. சோருக; க. சோரு, சோரு; தெ. தொறகு, தொறுகு; து. சோருனி, தோருனி; **கோத.** சொர்; குட. தொர்; **கோண். தோரானா**; பர். சோர்; கட. சோர்; குரு. சுர்க்கை; மா. சுர்கெ; பட. சோரு

*[சொள் → சோள் → சோர் → சோர்-தல். சொள் → சொள்ளை = துளை]*

**சோர்**[3]**-தல்** *šōr-*, 2 செ.கு.வி. (v.i.) *1.* **வாடுதல்**; to fade, wither. "எரியிதழ் சோர்ந்துக" *(கலித். 78).* *2.* **மெலிதல்**; to be emaciated, grow thin. "காம்பேர் தோளி கண்டு சோர்ந்தன்று" *(பு.வெ.*

11, பெண்பாற். 1, கொளு.). 3. தள்ளாடுதல்; to totter. "கோலூன்றிச் சோர்ந்த நடையினராய்" (நாலடி., 13.). 4. தடுமாறுதல்; to falter, as words; to be confused. 5. துன்பப்படுதல் (இ.வ.); to be stricken with grief. 6. இறத்தல்; to dic. "பாலகன்றான் சோர" (சிலப். 9:6).

[சொள் → சோள் → சோர் → சோர்-தல்]

**சோர்[4]-தல்** *sōr-*, 2 செ.குன்றாவி. (v.t.) விட்டொழிதல்; to give up, abandon. "சூதரைச் சோர்த லினிது" (இனி. நாற். 24).

[சொள் → சோள் → சோர் → சோர்-தல். சொள் = விழுதல், நீங்குதல்]

**சோர்[5]-தல்** *sōr-*, 2 செ.கு.வி. (v.i.) உடம்பில் எண்ணெய் முதலியன இறங்குதல்; to be absorbed in the system, as oil. "எண்ணெய் சோரத் தேய்க்கிறான்" (வின்.).

[கொள் = வடிதல். சொள் → சோள் → சோர் → சோர்-தல்]

**சோர்[6]** *sōr*, பெ. (n.) ஏய்ப்பு (வஞ்சகம்); guile. "மாவலிபாற் சோரா யிரந்தவனை" (அஷ்டப். அழகர். 33).

**சோர்[7]-த்தல்** *sōr-*, திருடுதல்; to steal, to embezzle.

[சூர் → சோர்-.]

**சோர்ச்சி** *sōrcci*, பெ. (n.) ஏய்ப்பு (வஞ்சகம்); deceit, guile. "சோர்ச்சி சேர்மடவார்" (குற்றா. தல. கவுற்சன. 10).

[சோர் → சோர்ச்சி]

**சோர்பதன்** *sōr-padaṉ*, பெ. (n.) தளர்ந்த காலம்; one's weak moments. "வலையர் போலச் சோர்பத னொற்றி" (கலித். 55).

[சோர்' + பதன்]

**சோர்பு** *sōrbu*, பெ. (n.) சோர்வு' பார்க்க; see *sōrvu*. "அவன் சோர்பு காத்தல் கடனெனப் படுதலின்" (தொல். பொருள். 174).

[சோர்' → சோர்பு]

**சோர்பொழுது** *sōr-poḻudu*, பெ. (n.) மாலைக் காலம்; evening time. "சோர்பொழு தணிநகர் துறுகுவர்" (கம்பரா. திருவவ. 132).

[சோர்' + பொழுது]

**சோர்வாதம்** *sōr-vādam*, பெ. (n.) கை, கால்களில் அயர்ச்சியுண்டுபண்ணும் முடக்கு நோய் வகை (யாழ்ப்.); a disease causing loss of power in the limbs.

[சோர்' + வாதம்]

**சோர்வு** *sōrvu*, பெ. (n.) 1. அறுவகை உவர்ப்புக்களில் ஒன்றாகிய தளர்ச்சி (சது.); languishing. drooping, one of *six uvarppu*. 2. மெலிவு (இ.வ); weakness, debility. 3. மறதி; carelessness, negligence, forgetfulness. "உவகை மகிழ்ச்சியிற் சோர்வு" (குறள், 531). 4. இழுக்கு (பிங்.); fault, slip, remissness. 5. சொரிகை; falling pouring, as rain. "வான்சோர் வினிதே" (இனி. நாற்.16).

[சோர் → சோர்வு]

**சோர்வுபார்-த்தல்** *sōrvu-pār-*, 4 செ.கு.வி. (v.i.) ஏமாறும் நேரம் பார்த்தல்; to watch for an opportunity to deceive a person. "சோர்வு பார்த்து மாயந்தன்னால் வலைப் படுக்கில்" (திவ். பெரியாழ். 2.2:5).

[சோர்வு + பார்-.]

**சோரக்கதண்டு** *sōra-k-kataṇḍu*, பெ. (n.) கரு வண்டு; a kind of black bettle.

**சோரகம்** *sōragam*, பெ. (n.) ஒருவகைப் புல்; a kind of grass.

**சோரகுறுவை** *sōra-kuṟuvai*, பெ. (n.) குறுவை நெல்வகை (A.); a kind of paddy.

**சோரங்கொடு-த்தல்** *sōraṅ-godu-*, 4 செ.கு.வி. (v.i.) துன்புறுதல் (யாழ்ப்); to be suffering.

[சோர்' + அம் + கொடு-.]

**சோரப்பெய்-தல்** *sōra-p-pey-*, 1 செ.கு.வி. (v.i.) மழை மிகுதியாகப் பொழிதல் (இ.வ.); to rain profusely.

[சேர் → சேர + பெய்]

**சோரப்போடு-தல்** *sōra-p-pōḍu-*, 20 செ.கு.வி. (v.i.) காரியத்தை ஆறவிடுதல் (உ.வ.); to leave a matter to rest.

[சோர் → சோர + போடு-.]

**சோரல்** *sōral*, பெ. (n.) 1. தளர்கை; drooping, fainting. 2. கெடுகை (சூடா.); perishing.

[சோர் → சோரல்]

**சோரநஞ்சு** *šōra-nañju,* பெ. (n.) வைப்புநஞ்சு வகையுளொன்று *(வின்.);* a prepared arsenic.

**சோரன்** *šōraṉ,* பெ. (n.) ஆட்டுக்குட்டி *(திவா.);* lamb, kid.

**சோராக்கண்துடிப்பு** *šōrā-k-kaṇ-tuḍipu,* பெ. (n.) கண்ணின் பார்வைக் கடுத்துக் குத்தலுண்டாகி இமைகனத்து நீர் வடிந்து கிடைகொள்ளாமலும், தூக்கம் பிடிக்காமலும் அடிக்கடிக் கண் சிவந்து துன்புறுத்துமோர் கண்ணோய்; an eye disease marked by irritation of the lens boring pain swelling thickening of the eye lid watery discharge restlessness, sleep lessness, frequent inflammation of the eyes.

*[சோராக்கண் + துடிப்பு]*

**சோராவொற்றி** *šōrā-v-oṟṟi,* பெ. (n.) மீட்க முடியாத ஒற்றிவகை *(நாஞ்.);* an irrecoverable form of mortgage.

*[சோர் + ஆ + ஒற்றி]*

**சோரி**[1] *šōri,* பெ. (n.) *1.* சிந்தும் அரத்தம்; blood "ஓசைச் சோரியை நோக்கினன்" *(கம்பரா. கிட்கிந். வாலிவதை. 69). 2.* மழை *(அரு. நி.);* rain, shower.

ம. சோரி

*[சல் → (சோல்) → சோர் → சோரி = அரத்தம்]*

**சோரி**[2] *šōri,* பெ. (n.) சிறு செருப்படி *(மூஅ.);* a medicinal plant with small leaves.

**சோரியிளநீர்** *šōri-y-iḷanīr,* பெ. (n.) செவ்விளநீர் *(பதார்த்த. 69);* milk of reddish tender coconut.

*[சோரி' + இளநீர்]*

**சோரிவரி** *šōri-vari,* பெ. (n.) அரத்தப் படலத்துடன் வலியையுண்டாக்கும் கண்ணோய் வகை *(சீவரட்.);* an eye disease producing irritaion with red streaks.

*[சோரி + வரி]*

**சோரிவீழல்** *šōri-vīḻal,* பெ. (n.) அரத்தம் ஒழுகியமூக்கு *(தைலவ. தைல. 53);* bleeding of the nose.

*[சோரி' + வீழல்]*

**சோல்(லு)-தல்** *šōl-, 7* செ.குன்றாவி. (v.t.) *1.* கவர்ந்து கொள்ளுதல்; to plunder, seize. "நல்கிற்றை யெல்லாஞ் சோல்வான் புகுந்து" *(திவ். இயற். திருவிருத். 35). 2.* மீட்டுக் கொள்ளுதல்; to redeem, as a mortgage. "ஒற்றியெல்லாம் சோன்று கொண்டாய்" *(தேவா. 1040. 9).*

*[சூல் → சோல்-.]*

**சோலா** *šōlā,* பெ. (n.) முலைக்கச்சு வகை *(பாண்டி);* a kind of corset.

**சோலி**[1] *šōli,* பெ. (n.) *1.* செயல்; business, concern affair. "தெரியுமோ ராட்சத சோலி" *(இராமநா. ஆரணி. 8). 2.* தொந்தரவு *(யாழ்ப்.);* difficulty, annoyance.

ம., க., தெ., பட. சோலி

*[செயல் → சொல் → சோல் → சோலி]*

**சோலி**[2] *šōli,* பெ. (n.) தோணியில் ஒதுக்கிடம் அல்லது கழிவறை *(வின்.);* latrine in a boat.

**சோலிக்காய்** *šōli-k-kāy,* பெ. (n.) கற்றேக்கு (L.); racemed fish - bonetree.

**சோலிக்காரன்** *šōli-k-kāraṉ,* பெ. (n.) *1.* செயல் முனைவோன் *(வின்.);* man of business. *2.* தொந்தரவு செய்வோன் *(யாழ்ப்.);* troublesome person.

ம. சோலிக்காரன்

*[சோலி' + காரன்]*

**சோலிசெய்-தல்** *šōli-šey-, 1* செ.கு.வி. (v.i.) *1.* வேலை செய்தல் *(இ.வ.);* to do work or business. *2.* நேரம் போக்குதல் *(யாழ்ப்.);* to delay, waste time.

*[சோலி + செய்-.]*

**சோலிப்படு-தல்** *šōli-p-paḍu-, 20* செ.கு.வி. (v.i.) தொந்தரவிற்குள்ளாதல் *(யாழ்ப்.);* to be in difficulty, in truble.

*[சோலி + படு-.]*

**சோலிமாலி** *šōli-māli,* பெ. (n.) தொந்தரவு *(வின்.);* trouble, annoyance.

ம. சோலாமாலி.

**சோலை** *šōlai,* பெ. (n.) மனதிற்கு மகிழ்ச்சி ஏற்படுத்தும் வகையில் மரங்கள் செறிந்து நிழல் செய்யும் இடம்; flower garden, grove. "காடுகால் யாத்த நீடுமரச் சோலை" *(அகநா. 109).* பூஞ்சோலை, சோலைக்குயில்

ம. சோல; பட. சோலெ; குரு. சாலா; மா. சலெ

*[சல் → (சோல்) → சோலை.]*

**சோலைக்கொடுக்காய்ப்புளி** *šōlai-k-koḍukkāy-p-puḷi,* பெ. (n.) மரவகை (L.); slender-nerved broad medium-leaved gamboge.

*[சோலை + கொடுக்காய்புளி]*

**சோலைதேவியார்** *šōlai-dēviyār,* பெ. (n.) திருவரங்க இறைவனுக்கு மாலை சூட்டும் உரிமை பெற்றவர்கள்; ladies who got the right of garlanding the deity (Thirumāl) of Thiru arangam. 'அரியபிள்ளை தண்டநாயக் கன்மக்கள் சோலை தேவியார்' (தெ.க.தொ.24, கல்: 270-1)

*[சோலை + தேவியார்]*

**சோலைநுகர்வு** *šōlai-nugarvu,* பெ. (n.) வேனிற் காலத்துச் சோலையின் குளிர்ச்சியின்பம் நுகர்கை (சீவக. 2707, தலைப்பு); enjoyment in the pleasure - grove during summer.

*[சோலை + நுகர்வு]*

**சோலைப்புளி** *šōlai-p-puḷi,* பெ. (n.) இரேவற்சின்னி; Ceylon gamboge.

*[சோலை + புளி]*

**சோலைமலை** *šōlai-malai,* பெ. (n.) அழகர்மலை; Alagarmalai near Madurai. "வளர்சோலைமலைக் கண்ணினன்" (அஷ்டப். அழகர். 26).

*[சோலை + மலை]*

**சோலைவேங்கை** *šōlai-vēṅgai,* பெ. (n.) காட்டுச் சாதிக்காய்; wild mace.

*[சோலை + வேங்கை]*

**சோவன்னமில்பொரி** *šōvannamilpori,* பெ. (n.) பாதாளகருடன்; common snake dog-bane.

**சோவாசி** *šōvāci,* பெ. (n.) பயிரிடுங் குடியானவன்; cultivating tenant.

*[சோ + வாசி]*

**சோவாரி** *šōvāri,* பெ. (n.) சோமாறி' (இ.வ.) பார்க்க; see *šōmāri.*

*[சோமாறி + சோவாரி]*

**சோவானை** *šōvāṉai,* பெ. (n.) மங்களகரமான ஆரத்திப்பாட்டு; a benedictory song. சோவானை பாடி ஆரத்தி எடுத்தாள் (இ.வ.).

தெ. சோபாநு; க. சோபாநே.

**சோவி** *šōvi,* பெ. (n.) பலகறை (இ.வ.); cowry.

*[சோகி → சோவி]*

**சோவெனல்** *šōveṉal,* பெ. (n.) ஒலிக்குறிப்பு; onom. expr. of pattering, as of rain. சோவென்று மழை பெய்தது (உ.வ.).

*[சோ + எனல்]*

**சோவை** *šōvai,* பெ. (n.) சோகை பார்க்க; see *šōgai.*

*[சோகை → சோவை]*

**சோழக்கரைக்காற்று** *šōḻakkarai-k-kāṟṟu,* பெ. (n.) தென்மேற்கு திசையிலிருந்து வீசுங்காற்று; the wind blowing from South West direction.

*[சோழக்கரை + காற்று]*

**சோழகக்கச்சான்** *šōḻaga-k-kaccāṉ,* பெ. (n.) சோழக்கரைக்காற்று (யாழ்ப்.) பார்க்க; see *šōḻa-k-kari-k-kāṟṟu.*

*[சோழகம் + கச்சான்]*

**சோழகக்கொண்டல்** *šōḻaga-k-koṇḍal,* பெ. (n.) தென்கிழ்க்காற்று (வின்.); the Southeast wind.

*[சோழகம் + கொண்டல். கொண்டல் = காற்று]*

**சோழகம்** *šōḻagam,* பெ. (n.) தென்காற்று (வின்.); south wind, wind that blows during the South West monsoon.

*[சோழம் + அகம்]*

**சோழகர்** *šōḻagar,* பெ. (n.) கோவை மாவட்ட எல்லைப்பகுதியில் வாழும் பழங்குடியினர்; a tribal people in Koyambuttūr dt.

**சோழகுலவல்லிவதி** *šōḻakulavalli-vadi,* பெ. (n.) அரியலூர் வட்டத்தில் ஓர் அரசியின் பெயரால் அமைந்த பாசன வடிகால்; an irrigation drainage named after a Chola queen in the Ariyalur region. "சோழ குல வல்லி வதிக்கு கிழக்கு சோழ பாண்டிய வாய்க்காலுக்கு வடக்கு" (ஆவணம் 10-3 (1)).

*[சோழன் குலம் வல்லி + வதி]*

**சோழகேரளவாய்க்கால்** *šōḻa-kēraḷa-vāykkāl,* பெ. (n.) அரியலூர் வட்டாரத்தில் சோழ அரசரின் பட்டப்பெயரில் அமைந்த பாசன

வாய்க்கால்; an irrigation channel named after one of the titles of a Chola kings in the Ariyalur region. "இவ்வதிக்கு மேற்கு சோழ கேரள வாய்க்காலுக்கு வடக்கு" (ஆவணம் 10-3 (1)).

[சோழன் + கேரளன் + வாய்க்கால்]

**சோழங்கவைப்புநஞ்சு** *śōlaṅga-vaippu-nañju,* பெ. (n.) வைப்பு நஞ்சு வகையுள் ஒன்று (சங்.அக.); a kind of mineral poison.

**சோழங்கன்** *śōlaṅgaṉ,* பெ. (n.) சோழன் (வின்.); Chōla king.

[சோழன் → சோழங்கன்]

**சோழசிகாமணிவதி** *śōlaśigāmaṇi-vadi,* பெ. (n.) அரியலூர் வட்டாரத்தில் ஓர் அரசியின் பெயரால் அமைந்த பாசன வடிகால்; an irrigation drainage named after a Chola queen in the Ariyalur region. "சோழ சிகாமணி வதிக்கு மேற்கு முடிகொண்ட சோழ பாண்டிய வாய்க்காலுக்கு தெற்கு" (ஆவணம் 10-3 (1)).

[சோழன் + சிகாமணி + வதி]

**சோழசிராமணி** *śōla-śirāmaṇi,* பெ. (n.) நாமக்கல் மாவட்டச் சிற்றூர்; a village in Namakkal district.

[சோழன் + (சிரோன்மணி → ) சிராமணி]

**சோழநாடு** *śōla-nāḍu,* பெ. (n.) சோழர் ஆண்ட தமிழ்நாட்டுப்பகுதி; the country of the ancient Chōla dynasty in South India.

[சோழன் + நாடு.]

சேலம் மாவட்டத்தில் தோன்றிக் கடலூர் மாவட்டத்தில் ஓடும் வட வெள்ளாற்றுக்கும் தஞ்சை மாவட்டத்தின் தெற்கிற் பாயும் தென்வெள்ளாற்றுக்கும் இடையிலுள்ள வளமான நாடு சோழநாடு. இக்கால திருச்சி, தஞ்சாவூர் மாவட்டங்களும் கடலூர் மாவட்டத்தின் ஒரு பகுதியும் அடங்கிய நிலப்பரப்பே பண்டைய சோழநாடு எனலாம். காவிரியிலும் அதன் துணையாறுகளாலும் வளம்பெறும் இந்நாடு பொன்நாடு, காவிரிநாடு எனவும் வழங்கப்பெறும். இந்நாட்டில் கிடைத்த நெல்வளத்தைப் பாராட்டி, 'சோழநாடு சோறுடைத்து' என ஔவையாரும் பாடினார்.

**சோழபாண்டியவாய்க்கால்** *śōla-paṇḍya-vāykkāl,* பெ. (n.) அரியலூர் வட்டத்தில் சோழ அரசரின் பட்டப்பெயரில் அமைந்த பாசன வாய்க்கால்; an irrigation channel named after one of the titles of a Chola kings in the Ariyalur region. "சோழகுல வல்லி வதிக்குக் கிழக்கு சோழபாண்டிய வாய்க்காலுக்கு வடக்கு" (ஆவணம் 10-3 (1)).

[சோழன் + பாண்டியன் + வாய்க்கால்]

**சோழபுரம்** *śōlapuram,* பெ. (n.) வேளாள வகையினர்; a subsect of Vēḷāḷa caste.

[சோழன் + புரம்]

**சோழம்** *śōlam,* பெ. (n.) சோழநாடு பார்க்க; see śōla-nāḍu. "ஈரிருபதாஞ் சோழம்" (அட்டப். நூற்றெட். திருப். நூன்முகம், 6).

[சோழன் → சோழம்.]

**சோழமண்டலக்கரை** *śōla-maṇḍala-k-karai,* பெ. (n.) சோழநாட்டின் கடற்கரை; Coromandel coast.

[சோழன் + மண்டலம் + கரை]

**சோழமண்டலசதகம்** *śōla-maṇḍala-śadagam,* பெ. (n.) சோழநாட்டின் பெருமையைப் பற்றி 17ஆம் நூற்றாண்டில் ஆன்மநாத தேசிகரால் நூறுபாக்களிற் பாடப்பட்ட தமிழ்நூல்; a Tamil poem of one hundred stanzas dealing with the greatness of Cōla-nāḍu, by Āṉmanāda-dēśigar, 17th c.

[சோழன் + மண்டலம் + சதகம்]

**சோழமண்டலம்** *śōla-maṇḍalam,* பெ. (n.) சோழநாடு (சோழமண். சத.) பார்க்க; see śōla-nāḍu.

[சோழன் + மண்டலம்]

**சோழமாராசன்கட்டிநுளம்பன்** *śōla-mārāśaṉ-kaṭṭi-nuḷambaṉ,* பெ. (n.) திருஅத்தியூர் நின்றருளின பெருமாளுக்கு நந்தவனம் அமைக்க 250 குழி நிலம் கொடுத்தவன்; a land donar. "ஜெயங்கொண்ட சோழ மண்டலத்து எயிற் கோட்டத்து எயில் நாட்டு திருஅத்தியூர் நிறைருளின அருளைப் பெருமாளுக்கு கங்க மண்டலத்து மகா மண்டலகன் சோழமா ராசன் கட்டி நுளம்பன் திருநந்தவனம் செய்கைக்கு கொண்ட குழி

இருநூற்று ஐம்பது குழிநிலம்" (தெக.தொ. 4, கல். 861).

*[சோழன் + மாராசன்]*

**சோழர்** *šōḻar,* பெ. (n.) சோழன் பார்க்க; see *šōḻaṉ.*

தமிழ்நாட்டைச் சிறப்புடன் ஆண்ட சோழர்களைக் கழகக் காலச் சோழர், விசயாலயன் வழிவந்த சோழர், சாளுக்கியச் சோழர் என மூன்று வகையாகப் பிரிக்கலாம். கழகக் காலச் சோழரின் தலைநகரம் உறையூர், புகார். விசயாலயச் சோழர்களின் தலைநகரம் தஞ்சாவூர். கழகக் காலச் சோழர்களில் சிறந்தவன் கரிகாலன். விசயாலயன் வழிவந்தவர்களில் முதலாம் ராசராசன் சிறந்தவன். சாளுக்கியச் சோழர்களில் முதலாம் குலோத்துங்கன் சிறந்தவன். கழகக் காலத்தில் தோன்றிய சோழர்கள் ஆட்சி மூன்றாம் இராசேந்திரன் காலத்தோடு (கி.பி. 1256 - 1279) முடிவுற்றது.

**சோழவக்கொண்டல்** *šōḻava-k-koṇḍal,* பெ. (n.) சோழகக்கொண்டல் பார்க்க; see *šōḻaga-k-koṇḍal.*

**சோழவரம்** *šōḻavaram,* பெ. (n.) சோழபுரம் (E.T.ii, 103) பார்க்க; see *šōḻa-puram.*

*[சோழன் + புரம்]*

**சோழன்** *šōḻaṉ,* பெ. (n.) முற்காலத்தில் புலியை அரசுச் சின்னமாகக் கொண்டு காவிரி ஆற்றைச் சார்ந்த பகுதிகளை ஆண்ட மன்னன்; any king of the Chola dynasty that ruled over the cauvery delta. "நற்றார்க் கள்ளின் சோழன் கோயில்" (புறநா. 378).

ம. சோழன், சோனன்; க. சோள; தெ. சோட

*[சொல் (=நெல்) → சோல் → சோழன்]*

**சோழன்இராசசூயம்வேட்டபெருநற்கிள்ளி** *šōḻaṉ-irāša-šūyam-vēṭṭa-perunaṟ-kiḷḷi,* பெ. (n.) கழகக் காலச் சோழ மன்னன்; a Cōḻā king in Šaṅgam age.

*[சோழன் + இராசசூயம் + வேட்ட பெருநற்கிள்ளி]*

இவன் அரசர்கள் செய்யும் பெரிய வேள்வியைச் செய்து பெயர் பெற்றான். புறநானூறு 16, 377, 125 ஆகிய எண்ணுடைய பாடல்களில் இவனைப் பற்றி அறிய முடிகிறது.

**சோழன்உருவப்பஃறேர்இளஞ்சேட்சென்னி** *šōḻaṉ-uruvappaḵvēr-iḷañjēṭ-šeṉṉi,* பெ. (n.) கழகக் காலச் சோழ மன்னன்; a Cōḻā king in Šaṅgam age.

*[சோழன் + உருவப்பஃறேர் + இளஞ்சேட் சென்னி]*

இவனிடம் இருந்த தேர்ப்படையால் உருவப்பல்தேர் என்ற அடை மொழியைப் பெற்றிருக்கலாம். இவனைப் பரணரும், பெருங்குன்றுர் கிழாரும் புறநானூற்றில் (4, 366) பாடியுள்ளனர்.

**சோழன்குராப்பள்ளித்துஞ்சியகிள்ளிவளவன்** *šōḻaṉ-kurā-p-paḷḷi-t-tañjiya-kiḷḷi-vaḷavaṉ,* பெ. (n.) கழகக் காலச் சோழ மன்னன்; a Cōḻā king in Šaṅgam period.

*[சோழன் + குராப்பள்ளி + துஞ்சிய + கிள்ளிவளவன்]*

கிள்ளி, வளவன் என்பன சோழ மன்னர்களைக் குறிக்கும் பெயர்கள். குராப்பள்ளி துஞ்சிய குராப்பள்ளி என்னும் இடத்தில் இறந்த - இறந்தவன். புறநானூறு 373ஆம் பாடல் இவனைக் குறிக்கிறது.

**சோழன்குளமுற்றத்துத்துஞ்சியகிள்ளிவளவன்** *šōḻaṉ-kuḷamuṟṟattu-t-tuñjiya-kiḷḷi-vaḷavaṉ,* பெ. (n.) கழகக் காலச் சோழ மன்னன்; a Cōḻā king in Šaṅgam period.

*[சோழன் + குளமுற்றத்து + துஞ்சிய + கிள்ளிவளவன்]*

குளமுற்றம் என்ற இடத்தில இறந்தவன்

**சோழன்செங்கணான்** *šōḻaṉ-ceṅgaṇāṉ,* பெ. (n.) களவழி நாற்பது என்ற நூலின் பாட்டுடைத் தலைவனான சோழவரசன் (புறநா. 74, உரை.); a Chōḻā king, the hero of the poem *Kaḷa-vaḻi-nāṟpatu.*

*[சோழன் + செங்கணான்]*

**சோழன்செருப்பாழிஎறிந்தஇளஞ்சேட்சென்னி** *šōḻaṉ-šeruppāḻi-eṟinda-iḷañjēṭ-šeṉṉi,* பெ. (n.) கழகக் காலச் சோழ மன்னன்; a Cōḻā king in Šaṅgam age.

மறுவ. இளம்பெருஞ்சென்னி

*[சோழன் + செருப்பாழி + எறிந்த + இளஞ்சேட்சென்னி]*

பாழி என்னும் இடத்தை தமக்கிடமாகக் கொண்டு பொருத வடுகரைத் தம்படை வலியால் அழித்துப் பாழி நகரைச் சிதைத்ததால் செருப்பாழி எறிந்த என்னும் அடையைத் தன் பெயரில் கொண்டவன். அகநானூறு 375ஆம் பாடலும், புறநானூறு 370, 378 ஆகிய பாடல்களும் இவனைப் பற்றிய செய்திகளைக் கூறுகின்றன.

**சோழன்நல்லுருத்திரன்** *šōlaṉ-nalluruttiraṉ*, பெ. (n.) கழகக் காலச் சோழ மன்னன்; a Cōlā king in Šaṅgam age.

*[சோழன் + நல் + உருத்திரன்]*

இவர் பாடிய ஒரே பாடல் புறநானூறு 190 ஆகும்.

**சோழன்நலங்கிள்ளி** *šōlaṉ-nalaṅgiḷḷi*, பெ. (n.) கழகக் காலச் சோழ மன்னன்; a Cōlā king in Šaṅgam age.

மறுவ. சேட்சென்னி நலங்கிள்ளி, தேர்வண் கிள்ளி, புட்பகை

*[சோழன் + நலங்கிள்ளி]*

ஆலந்தூர்கிழான், முதுகண்ணன் சாத்தன் போன்றோர் இவனைப் பாடியுள்ளனர். இவன் அரசப் புலவனாகவும் இருந்தான். இவன் பாடியதாக புறநானூற்றில் இருபாடல்கள் (73, 75) உள்ளன.

**சோழன்நெய்தலங்கானல்இளஞ்சேட்சென்னி** *šōlaṉ-neydalaṅgāṉal-iḷañjēt-šeṉṉi*, பெ. (n.) கழகக் காலச் சோழ மன்னன்; a Cōlā king in Šaṅgam age.

*[சோழன் + நெய்தலங்கானல் + இளஞ்சேட்சென்னி]*

நெய்தலங்கானல் இம்மன்னனின் ஊராகும். புறநானூறு பத்தாம் பாடல் இவனைப் பற்றிக் கூறுகிறது.

**சோழன்மணக்கிள்ளி** *šōlaṉ-maṇakkiḷḷi*, பெ. (n.) கழகக் காலச் சோழ மன்னன்; a Cōlā king in Šaṅgam age.

*[சோழன் + மணக்கிள்ளி]*

இவன் சேரன் செங்குட்டுவனின் தாய்வழிப் பாட்டன். சிலப்பதிகாரம் வஞ்சிக் காண்டம் வாழ்த்துரைக் காதை, உரைப்பாட்டு மடை 'திகழொளி ஞாயிற்றுச் சோழன் மகள் ஈன்ற மைந்தன் செங்குட்டுவன்' என்று குறிக்கிறது.

**சோழி** *šōḻi*, பெ. (n.) மாலையாகக் கோக்கவோ, விளையாடவோ பயன்படும் கடல்வாழ் சிறு உயிரிகளின் வெள்ளை அல்லது பழுப்பு நிற ஓடு, பலகறை (இ.வ.); cowry.

மறுவ. சோவி

*[சோகி → சோவி → சோழி]*

**சோழிக்கூடு** *šōḻi-k-kūḍu*, பெ. (n.) நடுவில் துளையிடப்பட்டு, நான்கு மூலைகளிலும் கயிறுகளால்கட்டப்பெற்ற பலகை; a plank with a hole in the middle, tied at all four corners.

*[சோலி → சோழி + கூடு]*

தோணியின் விளிம்புக்கு வெளியே நீட்டி மலங்கழிக்கப் பயன்படுத்தும் பலகை.

**சோழிச்சி** *šōḻicci*, பெ. (n.) 1. சோழநாட்டுப் பெண் (நன். 276, மயிலை); woman of the Chōla country. 2. சோழிய வேளாளர் பெண் (தஞ்சை.); a woman of *šōḻiya-vēḷāḷa* caste.

*[சோழியன் → சோழிச்சி]*

**சோழிசொங்கமான்** *šōḻi-šoṅgamāṉ*, பெ. (n.) நாடோடிக்குரிய பை, சோழி முதலிய அடையாளங்கள் (உ.வ.); cowries, bag, etc, as the belongings of a *paradēši*.

*[சோழி + சொங்கமான்]*

**சோழிப்பல்** *šōḻi-p-pal*, பெ. (n.) பலகறை போன்ற பல்; cowry-like tooth.

*[சோழி + பல்]*

**சோழியக்கடகம்** *šōḻiya-k-kaḍagam*, பெ. (n.) 1. மண்ணள்ளுங் கூடை; basket for carrying loose earth. 2. சாட்டுக்கூடை; a large basket.

*[சோழியன் + கடகம்]*

**சோழியக்காசு** *šōḻiya-k-kāšu*, பெ. (n.) 13ஆம் நூற்றாண்டில் வழங்கியதும் ஒரு பணத்தின் நூற்றிலொரு பகுதியுமான நாணயவகை (I.M.P.Sm.32); an old coin of the 13th century, one-hundredth of a *paṇam*.

மறுவ. சோழியன்காசு

ம. சோழியர்காசு

*[சோழியன் + காசு]*

**சோழியக்கூடை** *šōḻiya-k-kūḍai*, பெ. (n.) சோழியக்கடகம் (யாழ்ப்.) பார்க்க; see *šōḻiya-k-kaḍagam*.

*[சோழியன் + கூடை]*

**சோழியநாழி** *šōḻiya-nāḻi,* பெ. (n.) நெல் அளக்கப் பயன்படும் நாழியின் பெயர்; a vessel to measure paddy etc. "நெல் சோழிய நாழியால், நெல் ஆழாக்கும் அட்டுவதாக" (தெ. க. தொ. 14, கல். 80).

*[சோழியன் + நாழி]*

**சோழியப்பல்** *šōḻiya-p-pal,* பெ. (n.) சோழிப்பல் (யாழ்ப்.) பார்க்க; see *šōḻi-p-pal.*

**சோழியப்பாரை** *šōḻiya-p-pārai,* பெ. (n.) மண்வெட்டி வகை (கட்டட. நாமா. 43); a kind of spade.

*[சோழியன் + பாரை]*

**சோழியப்பிராமணன்** *šōḻiya-p-pirāmaṇan,* பெ. (n.) முன்குடுமிப் பார்ப்பான்; a Brahmin sub-caste who have the hair-tuft in front.

*[சோழியன் + பிராமணன்]*

**சோழியப்பை** *šōḻiya-p-pai,* பெ. (n.) நாடோடிகள் பிச்சை ஏற்கும் பை (வின்.); a large kind of bag used by mendicants.

இந்தி. சோல்னா

*[தோள் + பை → தோளியப்பை → சோழியப் பை]*

தற்போது சோல்னாப்பை என்று இந்தியில் வழங்குகிறது. தொடக்கத்தில் துணியின் நான்கு முனைகளையும் முடிந்து தோளில் மாட்டி கொண்டனர். தற்போது பை தைத்து தோளில் மாட்டி கொண்டனர்.

குறி சொல்வோர் தோளில் மாட்டும் துணியில் குறி சொல்லப் பயன்படும் சோழிகளை எடுத்துச் செல்லப் பயன்பட்டதால் சோழிப்பை என்ற பெயர் சோழியப்பை என்றாயிற்று என்பாருமுளர்.

**சோழியமணம்** *šōḻiya-maṇam,* பெ. (n.) 20,000 பாக்குக் கொண்ட அளவு (வின்.); a term used for twenty thousand areca-nuts.

*[சோழம் + அமணம்]*

**சோழியவெள்ளாளர்** *šōḻiya-veḷḷāḷar,* பெ. (n.) வேளாள வகையார்; a sub-caste of Vēḷāḷas of Chōḻa country.

*[சோழியன் + வெள்ளாளர்]*

**சோழியன்**[1] *šōḻiyaṉ,* பெ. (n.) 1. சோழ நாட்டான் (தொல். சொல். 167); man of the Chōḻa country. 2. பார்ப்பனர், வேளாளர் முதலியோருட் சில வகுப்பினர்க்கு வழங்கும் பெயர் (E.T.vi, 391); the title of certain sub-castes of Brahmins, Vēḷālas, etc.

ம. சோழியன்

*[சோழம் → சோழியன்]*

**சோழியன்**[2] *šōḻiyaṉ,* பெ. (n.) ஒருவகை மண்வெட்டி (யாழ்ப்.); a kind of spade.

*[சோழம் → சோழியன்]*

**சோழியன்காசு** *šōḻiyaṉ-kāšu,* பெ. (n.) சோழியக்காசு பார்க்க; see *šōḻiya-k-kāšu.*

*[சோழியன் + காசு]*

**சோழியன்வெட்டு** *šōḻiyaṉ-veṭṭu,* பெ. (n.) பழைய காசு வகை (பணவிடு 134); an ancient coin.

*[சோழியன் + வெட்டு]*

**சோழியாவணம்** *šōḻiyāvaṇam,* பெ. (n.) சோழியமணம் (வின்.) பார்க்க; see *šōḻiya-maṇam.*

*[சோழியமணம் → சோழியாவணம்]*

**சோவென்று** *šō-v-eṉṟu,* வி.எ. (adv.) வேகமாக இரைச்சலுடன்; in a downpour. மழைசோ வென்று பெய்யத் தொடங்கியது.

*[சோ + என்று. சோ. ஒலிக்குறிப்பு]*

**சோளக்கூழ்** *šōḷa-k-kūḻ,* பெ. (n.) சோளத் தவசத்தை மாவாக அரைத்துச் செய்யும் கூழ்; food prepared from maize.

*[சோளம் + கூழ்]*

**சோளக்கொண்டை** *šōḷa-k-koṇḍai,* பெ. (n.) சோளக்கதிர் (உவ); ear of the maize.

*[சோளம் + கொண்டை]*

**சோளக்கொல்லைபொம்மை** *šōla-k-kollai-pommai,* பெ. (n.) கம்பு, சோளம் முதலியவை விளையும் நிலத்தில் பறவைகளை விரட்டுவதற்காக உயரமான கழியில் நிறுத்தி

வைக்கப்பட்டிருக்கும் துணி அல்லது வைக்கோல் அடைத்த மனித உருவத்தை ஒத்த பொம்மை; scarecrow.

*[சோளம் + கொல்லை + பொம்மை]*




**சோளகம்** *šōḷagam,* பெ. (n.) குடுமி வைக்கும் விழா (சங்அக.); ceremony of tonsure.

வ. சௌல

**சோளகாண்டம்** *šōḷa-kāṇḍam,* பெ. (n.) நீர்க்கடம்பு; water cadamba.

**சோளச்சொறி** *šōḷa-c-coṟi,* பெ. (n.) சோளக்கூழ் அதிகமாக குடிப்பதால் உடம்பில் ஏற்படும் சொறி சிரங்கு; a kind of skin disease due to the free use of maize as prinicipal food.

*[சோளம் + சொறி]*

**சோளச்சோறு** *šōḷa-c-cōṟu,* பெ. (n.) சோளமணிகளை (தவசம்)க் கொண்டு சமைக்குஞ்சோறு: food prepared from maize.

*[சோளம் + சோறு]*

சோளத் தவசத்தை மாவாக அரைத்துச் செய்யப்படுவது சோளக்கூழ். சோள மணிகளை சோறாக சமைப்பது சோளச் சோறு.

**சோளத்தட்டு** *šōḷa-t-taṭṭu,* பெ. (n.) சோளத் தட்டை (வின்) பார்க்க; see *šōḷa-t-taṭṭai.*

*[சோளத்தட்டை → சோளத்தட்டு]*

**சோளத்தட்டை** *šōḷa-t-taṭṭai,* பெ. (n.) சோளத்தின் அரிதாள் (உ.வ.); stalks of maize.

*[சோளம் + தட்டை]*

**சோளப்பொறி** *šōḷa-p-poṟi,* பெ. (n.) உப்பும் மஞ்சள் பொடியும் தூவி வறுத்த சோளம்; popcorn.

*[சோளம் + பொரி]*

**சோளம்**[1] *šōḷam,* பெ. (n.) உருண்டையான தனித்தனி மணிகளைக் கொண்ட ஒருவகைத் தவசம் (பதார்த்த. 1399); maize, great millet.

ம. சோளம்; க., து., குட., சோள; தெ. சொன; துட. ச்விளம்; கோண். சொனா; கொலா. சொன்ன; பர். சென்ன; கட. சோனல்; பட. சோலு

*[சுள் → (சொள்) → சோளம்]*

**சோளம்**[2] *šōḷam,* பெ. (n.) சோழம் (இ.வ.) பார்க்க; see *šōḻam.*

**சோளவலைக்கட்டை** *šōḷavalai-k-kaṭṭai,* பெ. (n.) வலையின் முற்பகுதியில் கட்டப் பட்டிருக்கும் மிதப்புக் கட்டை; float tied in the front portion of the net.

*[சோளவலை + கட்டை]*

மிதப்பதற்கு ஏற்ற, கனமில்லாத கட்டை, தலைவலைக் கட்டை, தொங்கு வலைக் கட்டை, கெடமால் கட்டை, மோப்புக் கட்டை என்பன பிற மிதப்புக் கட்டைகளாகும்.

**சோளன்**[1] *šōḷaṉ,* பெ. (n.) சோழன் (இ.வ.) பார்க்க; see *šōḻaṉ.*

*[சோழன் → சோளன்]*

**சோளன்**[2] *šōḷaṉ,* பெ. (n.) சோளம்[1] (யாழ்ப்.) பார்க்க; see *šōḷam,1. 2.* மக்காச்சோளம்; Indian corn.

*[சோளம் → சோளன்]*

**சோளி** *šōḷi,* பெ. (n.) கிளிஞ்சல் வகை; a kind of shell.

மறுவ. சோவி

*[சோழி → சோளி.]*

**சோளி**[2] *šōḷi,* பெ. (n.) சோளிகை பார்க்க; see *šōḷigai.*

து. சோலி; H. jōli

*[சொள் (துளை) → (சோள்) → சோளி. ஒ.நோ. பொள் → பொய் → (பய்) → பை = துளை, துளையுள்ளது; துளை போல் தையல் கொண்டது.]*

**சோளிகை** *šōḷigai,* பெ. (n.) இரப்போன் பெரும்பை; satchel, bag, as of a beggar. 'ஒருவன் மாளிகைக்காரனாக இருக்க வேண்டும், ஒருவன் சோளிகைக்காரனாக இருக்க வேண்டும்' (பழமொழி.).

க. சோலிகெ; து. சோலிகெ; தெ. சோலிய

[சோளி → சோளிகை.]

**சோளிச்சங்கு** *šōḷi-c-caṅgu,* பெ. (n.) சங்கு வகை; a kind of conch.

[சோளி' + சங்கு]

**சோளியல்** *šōḷiyal,* பெ. (n.) சோளிகை (நெல்விடு.); bag, pouch.

[சோளி² → சோளியல்.]

**சோற்றடைப்பு** *šōṟṟaḍaippu,* பெ. (n.) சோற்றறம் (அன்னதானக் கட்டளை); endowment for free feeding. "சோற்றடைப்புக்கு உடலாம் போனகப் பழநெல்" (தெ.க.தொ. 7. 299).

[சோறு + அடைப்பு]

**சோற்றப்பளம்** *šōṟṟappaḷam,* பெ. (n.) இலைவடகம் (இ.வ.); cake prepared from boiled rice-flour and dried in the sun.

[சோறு + அப்பளம்]

**சோற்றமலை** *šōṟṟamalai,* பெ. (n.) சோற்றுக் கட்டி பார்க்க; see *šōṟṟu-k-kaṭṭi.* 'பழஞ் சோற்றமலை' (பெரும்பாண். 224).

[சோறு + அமலை. அமலை = மிகுதி.]

**சோற்றலகு** *šōṟṟalagu,* பெ. (n.) 1. மரத்தில் வயிரமில்லாத பாகம்; pith of a palmyra tree, as distinct from the hard or indurated part. 2. சிப்பல்; colander.

[சோறு + அலகு. அலகு = பாகம், அளவு]

**சோற்றாலாத்தி** *šōṟṟālātti,* பெ. (n.) கடவுள் மணமக்கள் முதலியோர் முன்பு கண்ணேறு படுதற் பொருட்டுச் சுழற்றும் ஆலத்திவகை (வின்.); boiled rice waved before an idol, a married couple, etc., to avert the evil eye.

[சோறு + ஆலாத்தி]

**சோற்றாவி** *šōṟṟāvi,* பெ. (n.) தேவருணவு (அவியுணவு) முதலியவற்றின் ஆவி (சிலப். 10:144, அரும்.); vapour emitted by boiled rice or sacrificial offering to the gods.

[சோறு + ஆவி]

**சோற்றி** *šōṟṟi,* பெ. (n.) 1. மரத்தினுள் இருக்கும் மென்சோறு (யாழ்ப்.); pith of trees. 2. வயிரமற்ற கட்டை; soft wood. 3. பழத்தின் சதைப்பகுதி; fleshy part of some fruits. 4. பச்சிலை வகை (நாஞ்.); a medicinal herb.

[சோறு → சோற்றி]

**சோற்றியற்ற** *šōṟṟiyaṟṟa,* பெ.எ. (adj.) சதைப் பற்றில்லாத; pithless.

[சோறு → சோற்றி + அற்ற.]

**சோற்றிலை** *šōṟṟilai,* பெ. (n.) சோற்றுக் கற்றாழை (மூ.அ.); yellow-flowered aloe.

[சோறு + இலை]

**சோற்றிறக்கம்** *šōṟṟiṟakkam,* பெ. (n.) பசியுணர்ச்சி; appetite for food.

[சோறு + இறக்கம்]

**சோற்றுக்கட்டி** *šōṟṟu-k-kaṭṭi,* பெ. (n.) சோற்று உருண்டை (அன்னவுருண்டை); lump of boiled rice. 'புதிய வெண்சோற்றுக் கட்டியை' (புறநா. 177, உரை).

மறுவ. சோற்றுக்கவளம்

ம. சோற்றுருள

[சோறு + கட்டி]

**சோற்றுக்கடன்** *šōṟṟu-k-kaḍaṉ,* பெ. (n.) 1. உண்ட சோற்றுக்குக் கைம்மாறாகச் செய்யும் நன்றி (வின்.); duty or obligation in return for having been fed. 2. கடமையாக மாத்திரம் இடுஞ்சோறு (இ.வ.); food provided only under duty.

[சோறு + கடன்]

**சோற்றுக்கடை** *šōṟṟu-k-kaḍai,* பெ. (n.) 1. சோறு விற்குமிடம்; hotel. 2. சோறிடுகை; feeding. சோற்றுக்கடை இன்னும் ஒழியவில்லை (உவ.).

ம. சோற்று கச்சவடம் (சோற்று வணிகம்)

[சோறு + கடை]

**சோற்றுக்கத்தலை** *šōṟṟu-k-kattalai,* பெ. (n.) கடல்மீன் வகை (வின்.); a genus of sea-fish.

*[சோறு + கத்தலை]*

**சோற்றுக்கற்றாழை** *šōṟṟu-k-kaṟṟāḻai,* பெ. (n.) குட்டையான அடித்தண்டையும் வெண்ணிறச் சதைப் பற்றான மடல்களையும் கொண்ட ஒருவகைக் கற்றாழை; thick leaved Indian aloe.

*[சோறு + கற்றாழை]*




**சோற்றுக்காரி** *šōṟṟu-k-kāri,* பெ. (n.) *1.* சோற்றுக் கடை வைத்திருப்பவள் (வின்.); a woman hotel-keeper. *2.* சோறு கொண்டு வரும் வேலைக்காரி (உ.வ.); maid-servant employed to carry food.

ம. சோற்றுகச்சவடக்காரி

*[சோறு + காரி]*

**சோற்றுக்குடலை** *šōṟṟu-k-kuḍalai,* பெ. (n.) சோறு கொண்டு செல்லுங் கூடை (யாழ்ப்.); basket of plaited leaf for carrying boiled rice.

*[சோறு + குடலை]*

**சோற்றுக்குவால்** *šōṟṟu-k-kuvāl,* பெ. (n.) சோற்றுக் குவியல்; heap of cooked rice. "அந்தணர்க் காக்கிய சோற்றுக் குவாலினை" (சீவக. 934).

*[சோறு + (குவியல் →) குவால்]*

**சோற்றுக்குவீங்கி** *šōṟṟukku-vīṅgi,* பெ. (n.) சோற்றுக்கு ஏங்கியிருப்பவன் (உ.வ.); one who hankers after food, used in derision about a person willing to eat anywhere.

ம. சோற்றுமாடன் (மிகுதியாக உண்டாலும் பொந்திகை கொள்ளாதவன்)

*[சோறு + கு + வீங்கி]*

**சோற்றுக்குழி** *šōṟṟu-k-kuḻi,* பெ. (n.) இரைப்பை; stomach which is membraneous sac or receptacle for receiving the food taken in.

*[சோறு + குழி]*

**சோற்றுக்கை** *šōṟṟu-k-kai,* பெ. (n.) வலக்கை (சோற்றை எடுத்துண்ணுங் கை); right hand, as used in taking food.

ம. சோற்றுகை

*[சோறு + கை]*

**சோற்றுச்சட்டி** *šōṟṟu-c-caṭṭi,* பெ. (n.) சோற்றுப் பானை (வின்.) பார்க்க; see *šōṟṟu-p-pāṉai.*

ம. சோற்றுகலம்

*[சோறு + சட்டி]*

**சோற்றுச்செறுக்கு** *šōṟṟu-c-ceṟukku,* பெ. (n.) வயிறு நிரம்பக் கிடைக்கும் உணவினால் ஏற்படும் பெருமிதம்; a pride on the assured supply of food throughout. "காங்கேயர் கோனளித்த சோற்றுச் செறுக்கல்லவோ மூன்றரை கண்டதுவே" (சிலப்பதிகார உரைக்கு அடியார்க்கு நல்லாரின் பாயிரம்).

*[சோறு + செறுக்கு]*

**சோற்றுத்தட்டு** *šōṟṟu-t-taṭṭu,* பெ. (n.) சிப்பல் (வின்.); colander.

மறவ. வடித்தட்டு

*[சோறு + தட்டு. தட்டு = சோறுவடித்தல் போன்றவற்றுக்குதவும் சிறுதட்டு]*




**சோற்றுத்தடி** *šōṟṟu-t-taḍi,* பெ. (n.) சோற்றமலை பார்க்க; see *šōṟṟamalai.* 'சோற்றுத்தடியை.. நாடோறும் பெறுகுவிர்' (மலைபடு. 441, உரை).

*[சோறு + தடி]*

**சோற்றுத்திரளை** *šōṟṟu-t-tiraḷai,* பெ. (n.) சோற்றுக்கட்டி பார்க்க; see *šōṟṟu-k-kaṭṭi.* 'பெருஞ் சோற்றுத்திரளையைப் பாண் சுற்றத்தை ஊட்டும்' *(புறநா. 33, உரை).*

*[சோறு + திரளை]*

**சோற்றுத்துருத்தி** *šōṟṟu-t-turutti,* பெ. (n.) உடம்பு *(சோற்றால் நிரப்பிய துருத்தி);* body, as a bladder filled with food. *"சோற்றுத் துருத்தியைச் சதமெனவும்" (தாயு. பரிபூரண. 7).*

*[சோறு + துருத்தி]*

**சோற்றுத்தூக்கம்** *šōṟṟu-t-tūkkam,* பெ. (n.) பேருணவு உண்டமையால் வரும் தூக்கம் *(யாழ்ப்.);* sleep induced by over-eating.

*[சோறு + தூக்கம்]*

**சோற்றுப்பக்கரை** *šōṟṟu-p-pakkarai,* பெ. (n.) மிகுதியாக உண்பவன் *(சாப்பாட்டு இராமன்) (இ.வ.);* a glutton, as a bag for food.

*[சோறு + பக்கரை]*

**சோற்றுப்பக்காளி** *šōṟṟu-p-pakkāḷi,* பெ. (n.) சோற்றுப்பக்கரை பார்க்க; see *šoṟṟu-p-pakkarai.*

*[சோறு + பக்காளி]*

**சோற்றுப்பசை** *šōṟṟu-p-pašai,* பெ. (n.) *1.* சோற்றால் ஆகும் பசை; rice paste. *2.* வாழ்வுக்குப் *(சீவனத்துக்குப்)* போதுமான வருவாய்; income sufficient for one's maintenance. அவனுக்குச் சோற்றுப்பசை உண்டு *(உ.வ.).*

*[சோறு + பசை]*

**சோற்றுப்பட்டாளம்** *šōṟṟu-p-paṭṭāḷam,* பெ. (n.) எந்த வேலையும் செய்யாமல் உணவுக்காக மட்டும் ஒருவரை அண்டி வாழும் கும்பல்; hangers on for food.

*[சோறு + பட்டாளம்]*

**சோற்றுப்படி** *šōṟṟu-p-paḍi,* பெ. (n.) சான்றாளர் *(சாட்சி)* முதலானவர்க்கு உணவு முதலிய வற்றிற்காகக் கொடுக்கும் தொகை; batta.

*[சோறு + படி]*

**சோற்றுப்பதம்** *šōṟṟu-p-padam,* பெ. (n.) அரிசி வெந்த நிலைமை; the stage of which the rice is sufficiently boiled.

*[சோறு + பதம்]*

**சோற்றுப்பருக்கை** *šōṟṟu-p-parukkai,* பெ. (n.) சோற்றவிழ், வெந்த சோற்றின் பருக்கை; grains of boiled rice.

*[சோறு + பருக்கை]*

**சோற்றுப்பலகை** *šōṟṟu-p-palagai,* பெ. (n.) வடிபலகை *(நாஞ்.);* a wooden strainer, used in cooking rice.

*[சோறு + பலகை]*

**சோற்றுப்பற்று** *šōṟṟu-p-paṟṟu,* பெ. (n.) சோற்றுப்பருக்கை பார்க்க; see *šōṟṟu-p-parukkai.*

*[சோறு + பற்று]*

**சோற்றுப்பனை** *šōṟṟu-p-paṉai,* பெ. (n.) வைரமற்ற பனை மரம்; palymyra with a soft interior.

*[சோறு + பனை]*

**சோற்றுப்பாளையம்** *šōṟṟu-p-pāḷaiyam,* பெ. (n.) *1.* முகாமில் சமையல் செய்யும் இடம் *(வின்.);* that part of a camp where food is prepared. *2.* பயனற்றகூட்டம் *(சோற்றை யுண்ண மட்டும் தகுதியுள்ள கூட்டம்) (இ.வ.);* unserviceable or useless crowd of dependants, as fit only for eating.

ம. சோற்றுப்பாளயம்

*[சோறு + பாளையம்]*

**சோற்றுப்பானை** *šōṟṟu-p-pāṉai,* பெ. (n.) *1.* சோறாக்கும் மட்பாண்டம்; cooking pot. *2.* பெருந்தீனிக்காரன்; glutton.

*[சோறு + பானை]*

**சோற்றுப்பிச்சை** *šōṟṟu-p-piccai,* பெ. (n.) இரப்போர்க்குப் பிச்சையாக இடும் சோறு *(உ.வ.);* boiled rice given as alms.

ம. சோற்றுபிச்ச

*[சோறு + பிச்சை]*

**சோற்றுப்பு** *šōṟṟuppu,* பெ. (n.) உணவிலிடும் உப்பு; salt used in food.

*[சோறு + உப்பு]*

**சோற்றுப்புரை** *šōṟṟu-p-purai,* பெ. (n.) மடைப் பள்ளி, சமையலறை; kitchen. "சோற்றுப்புரை மணியஞ் சூரியன்" (தெய்வச். விறலிவிடு. 388).

*[சோறு + புரை]*

**சோற்றுப்பெட்டி** *šōrru-p-petti*, பெ. (n.) படகில் செல்லும்போது உணவுப் பொருள் வைப்பதற்குரிய கோரைப்பெட்டி; a box made of *koraippul* for carrying food materials in boat.

*[சோறு + பெட்டி]*

**சோற்றுப்பை** *šōṟṟu-p-pai*, பெ. (n.) இரைப்பை; stomach as a receptacle for food.

*[சோறு + பை]*

**சோற்றுப்பொதி** *šōrru-p-podi*, பெ. (n.) பொதிச்சோறு (இ.வ.); food tied up in a cloth for use on journey.

ம. சோற்றுப்பொதி

*[சோறு + பொதி]*

**சோற்றுமயக்கம்** *šōrru-mayakkam*, பெ. (n.) சோற்றுத்தூக்கம் பார்க்க; see *šōrru-t-tūkkam*.

ம. சோற்றுமயக்கம்

*[சோறு + மயக்கம்]*

**சோற்றுமரம்** *šōrru-maram*, பெ. (n.) உறுதியில்லாத (வைரமில்லாத) மரம் (வின்.); tree which is all sap-wood.

*[சோறு + மரம்]*

**சோற்றுமாடு** *šōrru-māḍu*, பெ. (n.) பயன்பாடற்றவன் (வின்.) (சோறு தின்பதற்கு மாத்திரமுள்ள மாடு போன்றவன்); worthless fellow, as fit for nothing but eating.

*[சோறு + மாடு]*

**சோற்றுமுத்து** *šōrru-muttu*, பெ. (n.) போலி முத்து (இ.வ.); artificial pearl.

*[சோறு + முத்து]*

**சோற்றுருவி** *šōrruruvi*, பெ. (n.) உடல்; body.

*[சோறு + (உரு→) உருவி]*

**சோற்றுறக்கம்** *šōrrurakkam*, பெ. (n.) சோற்றுத் தூக்கம் (இ.வ.) பார்க்க; see *šōrru-t-tūkkam*.

*[சோறு + உறக்கம்]*

**சோறாக்கி** *šōrākki*, பெ. (n.) சமையற்காரன் (இ.வ.); cook.

*[சோறு + ஆக்கி (ஆக்குபவன்)]*

**சோறாக்கு-தல்** *šōrākku-*, 5 செ.கு.வி. (v.i.) உணவு சமைத்தல்; to cook food.

ம. சோறாக்குக

*[சோறு + ஆக்கு]*

**சோறாள்வி** *šōrāḷvi*, பெ. (n.) சோறாக்கி பார்க்க; see *šōrākki*. "ஆண்பிள்ளைச் சோறாள்வியை" (திவ். பெரியதி. 2. 5:1, வியா.).

*[சோறு + ஆள்வி]*

**சோறு**[1] *šōru*, பெ. (n.) 1. சமைத்த அரிசி (அன்னம்); boiled or cooked rice (used also to the sense of food in general). "ஏற்றுக வுலையே வாக்குக சோறே" (புறநா. 172). ஒருபானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம். 2. பனை முதலியவற்றின் உள்ளீடு; pith in palms and other plants, as soft and white like boiled rice. 3. தாழைமடல் முதலியவற்றின் உள்ளீடு; filament, as of the flower of the screw-pine. 'சோறவிழ்ப்பன மடற்கைதை' (பெரியபு. திருக்குறிப். 36). 4. வீடுபேறு; final bliss, beatitude. "பாதகமே சோறு பற்றினவா தோணோக்கம்" (திருவாச. 15:7). 5. உணவு; food. ஒரு வேளைச் சோற்றுக்கே வழியில்லை.

ம. சோறு, சோர்; க. சோறு; எர. சோறு; துட. த்விர்

*[சொல் (நெல்) → சோறு]*

**சோறு**[2] *šōru*, பெ. (n.) தாழி (பரணி)நாண்மீன்; the second nakṣatra. "சதயமுதற் சோறளவும் வஞ்சிக்கும்" (இலக். வி. 881).

*[சோறு [1] → சோறு [2]]*

**சோறு**[3] *šōru*, பெ. (n.) வங்கியத்தின் (மிருதங்கத்தின்) நடுப்பாகத்திற் பூசுங் கலவைச் சாந்து (கலைமகள். 12, 401); paste used in drums.

*[சோறு [1] → சோறு [3]]*

**சோறுகவிழ்-த்தல்** *šōru-kaviḻ-*, 4 செ.கு.வி. (v.i.) சோறாக்கு (நாஞ்.) பார்க்க; see *šōrākku*.

*[சோறு + கவிழ்-.]*

**சோறுகொல்லி** *šōru-kolli*, பெ. (n.) 1. பெருந்தீனிக்காரன்; glutton. 2. மருந்துச் சரக்கு வகை (அன்னபேதி); green vitriol.

*[சோறு + கொல்லி]*

**சோறுபடை-த்தல்** *šōṟu-paḍai-*, 4 செ.கு.வி. (v.i.) *சோறு பகிர்ந்தளித்தல் (உவ.);* to serve boiled rice on plates or leaves.

*[சோறு + படை-.]*

**சோறுபொங்கு-தல்** *šōṟu-poṅgu*, 5 செ.கு.வி. (v.i.) *சோறாக்கு-தல் பார்க்க;* see *šōṟākku.*

*[சோறு + பொங்கு-.]*

**சோறுபொலிதல்** *šōṟu-polidal*, பெ. (n.) *சோறு மலர்தல்,1 (வின்.) பார்க்க;* see *šōṟu-malardal,1.*

*[சோறு + பொலிதல்]*

**சோறுமலர்தல்** *šōṟu-malardal*, பெ. (n.) *1. அரிசி நன்றாய்ப் பதப்படுகை;* the state of rice being well-cooked. *2. சமைக்கும்போது சோறு பொங்கி வழிகை;* the overflow of rice in boiling.

*[சோறு + மலர்தல்]*

**சோறுமாட்டு** *šōṟu-māṭṭu*, பெ. (n.) *பிற்காலச் சோழர் காலத்து வழங்கிய வரிவகை (தெ.க.தொ. 3, 142);* a tax levied during the time of the later Cōḻas.

*[சோறு + மாட்டு]*

**சோறுமாடு** *šōṟu-māḍu*, பெ. (n.) *வரிவகை (தெ.க.தொ. 3, 27);* a kind of tax.

*[சோறு + மாடு]*

**சோறுவடி-த்தல்** *šōṟu-vaḍi-*, 4 செ.கு.வி. (v.i.) *1. சோறாக்கு-தல் (இ.வ.) பார்க்க;* see *šōṟākku.* *2. சமைத்த சோற்றினின்று கஞ்சியை வடித்தல் (வின்.);* to strain conjee water from boiled rice.

ம. சோறுவார்க்குக

*[சோறு + வடி]*

**சோறுவாய்-த்தல்** *šōṟu-vāy-*, 4 செ.கு.வி. (v.i.) *செஞ்சோற்றுக் கடன் கழித்தல்;* to render a suitable return to one who has provided food. "சோறுவாய்த் தொழிந்தோர்" *(முல்லைப். 72).*

*[சோறு + வாய்]*

**சோறூட்டல்** *šōṟūṭṭal*, பெ. (n.) *குழந்தைக்கு முதன் முறையாகச் சோறூட்டுகை;* first feeding of an infant with boiled rice.

*[சோறு + ஊட்டல்]*

**சோறூறுதல்** *šōṟūṟudal*, பெ. (n.) *தீக்குறைவால் சோறு பதமாகாமை (யாழ்ப்.);* the state of rice being too much soaked over insufficient fire.

*[சோறு + ஊறுதல்]*

**சோனகத்திருக்கை** *šōṉaga-t-tirukkai*, பெ. (n.) *மஞ்சட் பழுப்பு நிறமுள்ளதும் 13 அடி நீளமும் 5 அடி குறுக்கும் வளரக்கூடியதுமான திருக்கை மீன் வகை;* sting ray yellowish brown, attaining 13ft. in length, 5 ft. across the disc.

**சோனகப்புல்** *šōṉagappul*, பெ. (n.) *திராய்ப்புல்;* a kind of straw plant.

ம. சோனகப்புல்லு

**சோனகப்பூ** *šōṉagappū*, பெ. (n.) *நாகப்பூ;* scarlet flowered plant.

**சோனகம்** *šōṉagam*, பெ. (n.) *தென்கிழக்குக் காற்று;* wind from southeast.

*[சோனம் → சோனகம்]*

**சோனகவாளை** *šōṉaga-vāḷai*, பெ. (n.) *ஒரு வகை வெண்ணிறமுள்ளதும் 26 விரலம் வரை வளரக்கூடியதுமான வாளை மீன்;* sea-fish, burnished silvery, attaining 26 in. in length.



சோனகவாளை

**சோனம்** *šōṉam*, பெ. (n.) *முகில்;* cloud. "சோனந்தரு குழலார்" *(பதினொ. ஆளு. மும். 12).*

க. சோனெ; தெ. சோன

*[சோனை → சோனம்.]*

**சோனாகம்** *šōṉāgam*, பெ. (n.) *பெருவாகை;* common sirissa.

**சோனாமாரி** *šōṉāmāri*, பெ. (n.) *விடாப் பெருமழை;* incessant downpour of rain. சோனா மாரியாய்ச் சொரிகிறதே (உவ.)

*[சோனைமாரி → சோனாமாரி]*

**சோனாமேகம்** *šōṉā-mēgam*, பெ. (n.) *விடாமழை பொழியும் முகில்;* clouds incessantly pouring rain. "சோனாமேகம் பொழிவது போல்" *(பாரத. பதினேழாம் 135).*

*[சோனைமேகம் → சோனாமேகம்]*

**சோனாவாரி** *šōṉā-vāri*, பெ. (n.) சோனாமாரி *(யாழ்ப்)* பார்க்க; see *šōṉā-māri.*

*[சோனாமாரி → சோனாவாரி]*

**சோனி** *šōṉi*, பெ. (n.) *1.* வளர்ச்சியற்றது; that which is stunted. *2.* மெலிந்தவன்-ள்; thin or lean person. ஏன் இப்படிச் சோனியாக இருக்கிறாய்.

*[சோர் → (சோ) → சோனம்.]*

**சோனிக்கரைச்சல்** *šōṉi-k-karaiccal*, பெ. (n.) தெற்கிலிருந்து வடக்காய் செல்லும் கடல் நீரோட்டம்; an undercurrent in the sea running from south to north.

*[சோனம் → சோனி + கரைச்சல்]*

**சோனிக்கரையெடுப்பு** *šōṉi-k-karai-y-eḍuppu*, பெ. (n.) தென்கிழக்கிலிருந்து தென் மேற்காய் செல்லும் கடல் நீரோட்டம்; an undercurrent in the sea running from southeast to southwest.

*[சோனி + கரையெடுப்பு]*

**சோனிசி** *šōṉiši*, பெ. (n.) குகை *(யாழ். அக.);* cave.

*[சோனி → சோனிசி]*

**சோனிமேமுறி** *šōṉi-mēmuṟi*, பெ. (n.) தென்மேற்கிலிருந்து வடகிழக்காய் செல்லும் கடல் நீரோட்டம்; an undercurrent in the sea running from south west to south east.

*[சோனி + மேமுறி]*

**சோனிமேமுறி வெள்ளம்** *šōṉi-mēmuṟi-veḷḷam*, பெ. (n.) மேற்கு திசையிலிருந்து வடகிழக்கு திசை நோக்கி ஓடும் கடல் நீரோட்டம் *(மீனவ.);* an undercurrent in the sea running from west to north east.

*[சோனி + மேல் + முறி + வெள்ளம்]*

**சோனிவெள்ளம்** *šōṉi-veḷḷam*, பெ. (n.) தென்திசையிலிருந்து வடதிசை நோக்கி ஓடும் கடல் நீரோட்டம் *(மீனவ.);* an undercurrent in the sea running from south to north.

*[சோனி + வெள்ளம்]*

**சோனை**[1] *šōṉai*, பெ. (n.) *1.* கார்முகில்; dark, moisture-laden clouds. "சோனை வார் குழலினார்" *(கம்பரா. நீர்விளை. 14).* *2.* சோனாமாரி (பிங்.) பார்க்க; see *šōṉā-māri.* "மேகஞ்சோனைபட" *(கம்பரா. குகப். 20).* *3.* வானினின்று நீரூற்றுச் சொரிவது போன்ற விடாப் பெரும் பெயல்; pouring rain, rain falling in torrents. *4.* மலையடிவார விடா மழைச்சாரல்; constant drizzle from clouds gathering on hill-tops.

க. சோனெ; தெ. சோன

*[சுனை → (சொனை) → சோனை. சுல் (துளைத்தல்) → (சுன்) → சுனை = நீரூற்று]*

**சோனை**[2] *šōṉai*, பெ. (n.) முக்கோல் (திருவோணம்) விண்மீன் (பிங்.) பார்க்க; see *tiruvōṇam*, the 22nd nakṣatra.

**சோனை**[3] *šōṉai*, பெ. (n.) கைப்பிடிச் சுவர் (இ.வ.); parapet wall.

*[சோ → சோனை. சோ = மதில்.]*

**சோனைகட்டுதல்** *šōṉai-kaṭṭutal*, பெ. (n.) தூரத்தில் மழை பெய்யுங் குறிப்பாக ஓரிடத்தில் மேகம் மூடியிருக்கை (உ.வ.); darkening with moisture - laden clouds, as an indication of heavy shower at distance.

*[சோனை' + கட்டுதல்]*

**சோனைத்தூற்றல்** *šōṉai-t-tūṟṟal*, பெ. (n.) மழை தூற்றல் (உ.வ.); drizzle.

*[சோனை' + (தூறல் →) தூற்றல்]*

**சோனைப்புல்** *šōṉai-p-pul*, பெ. (n.) புல் வகை; Guinea grass.

**சோனைமழை** *šōṉai-maḻai*, பெ. (n.)

**சோனைமழை** *šōṉai-maḻai*, பெ. (n.) 1. பெருமழை; heavy rain. 2. விடா மழை; continuous rain.

பட. சோனெமே

*[சோனை¹ + மழை]*

**சோனைமாரி** *šōṉai-māri*, பெ. (n.) சோனாமாரி பார்க்க; see šōṉā-māri. "சோனைமாரியிற் சொரிந்தனன்" (கம்பரா. பிரமாத்திர. 59).

*[சோனை¹ + மாரி]*

**சோனைமேகம்** *šōṉai-mēgam*, பெ. (n.) சோனாமேகம் பார்க்க; see šōṉā-mēgam. "சொரிந்தது சோனைமேகம்" (பாரத. சம்பவ. 79).

*[சோனை + மேகம்].*

# சௌ

**சௌ** *cau/šau*, பெ. (n.) 'ச்' என்ற மெய்யொலியும், 'ஔ' என்ற உயிரொலியும் சேர்ந்தமைந்த உயிர் மெய்யெழுத்து; the compound of 'c', 'š' and 'au'.

*[ச் + ஔ - சௌ]*

**சௌடு** *šauḍu*, பெ. (n.) 1. உவர்மண்; fuller's earth. 2. வண்டல்; sediment.

*[சவடு → சௌடு]*

# ஞ்

**ஞ்** *ñ*, தமிழ் நெடுங்கணக்கில், நான்காவதும் இடையண்ண ஒலிப்புடையதுமான மெல்லின இரண்டாம் மெய்யெழுத்து; the fourth consonant being the palatal nasal.

# ஞ

**ஞ** *ña*, தமிழ் நெடுங்கணக்கில், 'ஞ'கர மெய்யொலியும் 'அ'கர உயிரொலியும் சேர்ந்த உயிர்மெய் யெழுத்து; the compound of ñ and a, palatal naral.

*[ஞ் + அ - ஞ]*

**ஞஃகான்** *ñakkāṉ*, பெ. (n.) 'ஞ' என்னும் எழுத்து; the letter 'ña'. 'ஞஃகா னுறழும்' (நன். 124).

**ஞஞ்ஞை** *ññññai*, பெ. (n.) மயக்கம்; delirium. 'ஞஞ்ஞை யுற்றோ னவிநயம் (சிலப். 3-13), உரை).

**ஞஞ்ஞையெனல்** *ñaññai-y-eṉal*, பெ. (n.) ஓர் ஒலிக்குறிப்பு; onom. expr. of running at the nose, speaking through one's nose, crying of a child.

*[ஞஞ்ஞை + எனல்]*

**ஞண்டு** *ñaṇḍu*, பெ. (n.) 1. நண்டு (தொல். சொல். 452, உரை); crab, lobster. 2. கற்கடக ஓரை (சோதிடக்.); Cancer in the zodiac.

மறுவ. கற்கடகம், அலவன்

ம. ஞண்டு; க. எண்ட்ரகாயி, ஏடி, எசடி; தெ. எண்ட்ரி, எண்ட்ரகாயி, எண்ட்ரிக; குட. ஞண்டி; கோத. நய்ள்; கோண். ஏடே, யந்தீ; நா. எண்டெ; கொலா. என்டெ, எந்தெ; பர். இர்தி; கட. இரித்

*[ஞெண்டு → ஞண்டு]*

**ஞமகண்டன்** *ñama-kaṇḍaṉ*, பெ. (n.) ஒரு காணாக்கோள் (வின்.); an invisible inauspicious planet.

*[ஞமன் + கண்டன்]*

**ஞமர்-தல்** *ñamar-*, 2 செ.கு.வி. (v.i.) ஞெமிர்- பார்க்க; see ñemir-. "வரிமணனன் ஞமர" (புறநா. 90).

*[ஞெமிர் → ஞமர்-.]*

**ஞமலி** *ñamali*, பெ. (n.) 1. நாய்; dog. 'கூருகிர் ஞமலி' (பட்டினப். 140). 2. மயில் (பிங்.); peacock. 3. கள் (சூடா.); toddy.

ம. ஞமலி; க. நவல், நவில், நவலு, நவிலு, நெமலி; தெ. நமிலி, நெமலி, நெமிலி, நெவிலி; து. நெயிலு; நா. நம்லி, லம்லி; பட. நவிலு; கொலா. நம்லீ, நம்லி

*[ஞெமல் → ஞமலி]*

**ஞமன்**[1] *ñamaṉ*, பெ. (n.) **கூற்றுவன்;** Yamā, the god of Death. "ஞமற்கோலை வைத்தன்ன வொண்டிற லாற்றலான்" *(சீவக. 251).*

ம. ஞமன்

*[யமன் → ஞமன்]*

**ஞமன்**[2] *ñamaṉ*, பெ. (n.) **துலைக்கோலின் சமன்வாய்;** pointer of a balance. "தெரிகோன் ஞமன்ன் போல" *(புறநா. 6:9).*

*[சமன் → ஞமன்]*

**ஞயம்** *ñayam*, பெ. (n.) 1. **இனிமை;** pleasantness, refinement. ஞயம்படவுரை *(ஆத்திசூடி.).* 2. **நயம்;** cheapness. 3. **மேன்மை;** greatness.

*[நயம் → ஞயம்]*

**ஞரல்(லு)-தல்** *ñaral-*, 5 செ.கு.வி. (v.i.) **முழங்குதல்;** to sound, make noise. "புணரி வளைஞரல" *(பதிற்றுப். 30:6).*

ம. ஞரங்ஙுக; க. நாகு, நரல், நெரளு; தெ. நரக; து. நரகுனி, நர்குனி, நரலுனி, நெர்லுனி, நர்லுனி; குட. நெரக்; குரு. நர்யானா; மா. நிரெ; பட. நரகு

**ஞரல்வு** *ñaralvu*, பெ. (n.) **ஒலி;** sound.

மறுவ. ஓசை, முழக்கம்

*[ஞரல் → ஞரல்வு]*

**ஞரிவாளை**[1] *ñari-vāḷai*, பெ. (n.) **பூடுவகை;** bushy fire-brand teak.

**ஞரிவாளை**[2] *ñari-vāḷai*, பெ. (n.) **சிறுதேக்கு** (M.M.95); long-flowered lance-leaved glory tree.

*[நரி + வேளை – நரிவேளை → ஞரிவாளை]*

**ஞலவல்** *ñalaval*, பெ. (n.) 1. **கொசுகுவகை** (பிங்.); a species of gnat. 2. **மின்மினிப்பூச்சி** (அக.நி.); firefly, glow-worm.

**ஞவல்** *ñaval*, பெ. (n.) ஞலவல் (அக.நி.) பார்க்க; see *ñalaval*.

**ஞறா** *ñaṟā*, பெ. (n.) **மயிற்குரல்** (சது.); peacock's cry.

# ஞா

**ஞா**[1] *ñā*, **தமிழ் நெடுங்கணக்கில், 'ஞ்' என்ற மெய்யொலியும் 'ஆ' வெனும் உயிரொலியும் சேர்ந்தமைந்த உயிர்மெய்யெழுத்து;** the syllable formed by the addition of the long vowel 'ā' to the consonant 'ñ'.

*[ஞ் + ஆ – ஞா]*

**ஞா**[2] *ñā*, 1. **கட்டு;** bind. 2. **பொருந்து;** joint (சா.அக.).

**ஞா**[3]**-த்தல்** *ñā-*, 4 செ.குன்றாவி (v.t.) **கட்டுதல்** (யாழ்.அக.); to tie, fasten.

**ஞா**[4]**-த்தல்** *ñā-*, 4 செ.கு.வி (v.i.) **பொருந்துதல்;** to stick, adhere. 'மண் ஞாத்த கோட்ட மழகளிறு தோன்றுமே' *(தொல். எழுத்து. 146. உரை).*

**ஞாங்கர்**[1] *ñāṅgar*, பெ. (n.) 1. **பக்கம்** (திவா.); side. 2. **இடம்** (திவா.); place, situation, locality. 3. **வேற்படை;** lance, dart. "ஞாங்கர் வினைப்பூண் டெண்மணி வீழ்ந்தன" *(நற். 171).* 4. **கரை;** bank. "ஞாநமா தீர்த்தஞாங் கரிருந்தவை நயந்து செய்யில்" *(திருவிளை. தீர்த்த விசேட. 23).*

*[ஆங்கு → ஞாங்கு → ஞாங்கர்]*

**ஞாங்கர்**[2] *ñāṅgar*, கு.வி.எ. (adv.) 1. **மேல்;** above, on, over. "ஞாங்கர் . . . உழவர் . . . பெரும்பகடு புதவிற்பூட்டி" *(பெரும்பாண். 196).* 2. **அங்கே;** there. "ஞாங்கர் வருடை மடமறி யூர்விடைத் துஞ்சும்" *(கலித். 50).* 3. **முன்;** before, forward, in front. "ஞாங்கர்க் கிளந்த மூன்று பொருளாக" *(தொல். பொருள். 141).* 4. **இனி** (சங். அக.); henceforth, henceforward, hereafter.

*[ஆங்கு → ஞாங்கு → ஞாங்கர்]*

**ஞாஞ்சில்** *ñāñjil*, பெ. (n.) 1. **கலப்பை** (அக.நி.); plough. 2. **மதிலுறுப்பு;** a component part of a fortification.

ம. ஞேங்ஙோல்; க. நேகல், நேகில், நேகில; தெ. நாகலி, நாகெலு, நாகேலு; து. நரயெரு;

குட. நெங்கி; கோத. நேல்க்; கோண். நாங்கேல்; கூ. நான்கெலி; குவி. நன்கெல்லி; நா. நாங்கர்; கொலா. நாங்கலி, நாங்அலி; பர். நாகில்

Skt. lāṅgala; pāli. naṅgala

*[நாஞ்சில் → ஞாஞ்சில்]*

**ஞாட்பு** *ñāṭpu,* பெ. (n.) 1. போர்; battle, fight. "கடல் வயிறு கலக்கிய ஞாட்பும்" *(சிலப். 26:237).* 2. போர்க்களம்; battlefield. "ஞாட்பினு ளெண்ணாரு முட்குமென் பீடு" *(குறள், 1088).* 3. படை; army. 4. கூட்டம் (சூடா.); assemblage, crowd. "வந்தனர் மண ஞாட்பின்" *(காஞ்சிப்பு தழுவக். 279).* 5. கனம் (பிங்.); thickness, heaviness. 6. வன்மை (வின்.); power, strength, force.

**ஞாடு** *ñāḍu,* பெ. (n.) நாட்டுப்பகுதி; district, country. "வேங்கைஞ்ஞாடும்" *(தெ.க.தொ. 3,5).*

*[நாடு → ஞாடு]*

**ஞாண்** *ñāṇ,* பெ. (n.) 1. கயிறு; string, cord. "திண்ஞா ணெழினி வாங்கிய" *(முல்லைப். 63).* 2. வில்லின் நாண்; bowstring. "சாப நோன் ஞாண்" *(புறநா. 14:9).*

ம. ஞாண், ஞாணு; க. நேணு, நேண்; தெ. நானு (ஒருவகைக் கழுத்தணி); து. நேணு;கோண். நோனே; கூ. நோணு, நோசு

*[நாண் → ஞாண்]*

**ஞாண்டு** *ñāṇḍu,* பெ. (n.) நண்டு; crab *(சா.அக.).*

மறுவ. அலவன், கற்கடகம்.

*[நண்டு → ஞண்டு → ஞெண்டு → ஞாண்டு]*

**ஞாய்** *ñāy,* பெ. (n.) தாய்; mother. "ஞாயையு மஞ்சுதி யாயின்" *(கலித். 107).*

*[யாய் → ஞாய்]*

**ஞாயம்** *ñāyam,* பெ. (n.) நேர்மை, உண்மை; honesty, truth. "நன்று நன்றரசர் ஞாயமே" *(பாரத. கிருட்டிண. 122).*

*[நயம் → நாயம் → ஞாயம்]*

**ஞாயில்** *ñāyil,* பெ. (n.) 1. கோட்டையின் ஏவறை; breast-work in fortification, bastion. "ஞாயிலுஞ் சிறந்து" *(சிலப். 15:217).* 2. மதில் *(திருவிளை. நரிபரி. 86);* fort-wall..

ம. ஞாயில்

**ஞாயில்காவல்** *ñāyil-kāval,* பெ. (n.) நகர்ப்பாது காப்பு (W.G.); guarding a town, as keeping watch over its fortress.

*[ஞாயில் + காவல்]*

**ஞாயிற்றுக்கிழமை** *ñāyiṟṟu-k-kiḻamai,* பெ. (n.) கிழமை (வார) நாட்களுள் முதலாவது; sunday, first day of the week.

*[ஞாயிறு + கிழமை]*

**ஞாயிற்றுக்கிழமைநோன்பு** *ñāyiṟṟu-k-kiḻamai-nōṉbu,* பெ. (n.) கண்ணோய் வராதிருத்தற் பொருட்டுக் கதிரவனைக் குறித்து ஞாயிற்றுக் கிழமையில் மேற்கொள்ளும் நோன்பு; sunday fast in honour of the Sun, observed primarily for the prevention of eye-disease.

*[ஞாயிற்றுக்கிழமை + நோன்பு]*

**ஞாயிறு** *ñāyiṟu,* பெ. (n.) 1. கதிரவன்; the sun. "ஞாயிறு போல விளங்குதி" *(பதிற்றுப். 88:38).* 2. ஞாயிற்றுக்கிழமை பார்க்க; see *ñāyiṟṟu-k-kiḻamai.*

மறுவ. பகலவன், செங்கதிர்ச் செல்வன், கதிரவன்.

ம. ஞாயர்; க. நேசர், நேசரு; து. நெசுரு (காலை); மா. நீறு (ஞாயிற்றொளி); துட. நொர்; Pkt. ṇesar

*[நாயர் → (நாயிர்) → நாயிறு → ஞாயிறு (வ.மொ.வ.337)]*

**ஞாயிறுதிரும்பி** *ñāyiṟu-tirumbi,* பெ. (n.) 1. சூரியகாந்தி (மலை.); sunflower. 2. நெருஞ்சி; cow's thorn.

*[ஞாயிறு + திரும்பி]*

**ஞாயிறுபோது** *ñāyiṟu-pōtu,* பெ. (n.) உச்சிப் போது; midday. "விடிவோரை நட்டு ஞாயிறு போது வந்து பார்த்தால்" *(திவ். திருப்பா. 3:62, வியா.).*

*[ஞாயிறு + (பொழ்து →) போது]*

**ஞாயிறுவணங்கி** *ñāyiṟu-vaṇaṅgi,* பெ. (n.) கொள்ளுக்காய் வேளை; purple wild indigo.

*[ஞாயிறு + வணங்கி]*

**ஞால்(லு)-தல்** *ñāl-,* 5 செ.கு.வி. (v.i.) 1. தொங்குதல்; to hang. "ஞான்றன வயிரமாலை" *(சீவக. 140).* 2. பொழுது சாய்தல்; to decline, descend, as the sun. "பட்ட மாரி ஞான்ற ஞாயிற்று" *(புறநா. 82:2).*

ம. ஞாலுக; க. நேல்; தெ. வாலு, வோலு; து. நேலுனி, நெல்புனி; குட. நேர், நேத்; கோத. நேத்; பட. நேனு

*[நால் → ஞால்]*

**ஞாலம்** *ñālam,* பெ. (n.) 1. நிலம் (பூமி); earth. "மண்டிணி ஞாலத்து" *(பு.வெ. 2:14, கொளு).* 2. உலகம்; world, universe. "ஞால மூன்றடித் தாயமுதல்வற்கு" *(கலித். 124).* 3. உயர்ந்தோர்; the great, the wise. "இம்மூவர் ஞாலமெனப் படுவார்" *(திரிகடு. 26).* 4. தோணி அசையாது நிலைத்து நிற்பதற்கு இடும் மண் முதலிய சுமை; ballast of a dhoney, as sand. தோணிக்கு ஞாலமேற்றி னான் *(யாழ்ப்.).*

ம. ஞாலம்; தெ. நேல; கோண். நேலி; கூ. நேல, நேத; குவி. நேல; நா. ஏல்; கொலா. என்; குரு. நால் (மட்டமான நிலம்)

*[ஞால் → ஞாலம் (த.வ.146)]*

**ஞாலம்** *ñālam,* பெ. (n.) 1. ஊமத்தை; purple stramony.

**ஞாலமுண்டோன்** *ñālam-uṇḍōṉ,* பெ. (n.) திருமால்; Thirumāl.

*[ஞாலம்' + உண்டோன்]*

**ஞாலல்**[1] *ñālal,* பெ. (n.) மின்மினிப்பூச்சி; firefly or glowworm *(சா.அக.).*

*[ஞலவல் → ஞாலல்]*

**ஞாலல்**[2] *ñālal,* பெ. (n.) தொங்குதல்; hanging.

*[ஞால் → ஞாலல்]*

**ஞாலற்பூ** *ñālaṟpū,* பெ. (n.) ஞாழல்பூ பார்க்க; see *ñāḻalpū* *(சா.அக.).*

**ஞாலித்தட்டு** *ñāli-t-taṭṭu,* பெ. (n.) சிற்றுருக்களோடு சேர்த்து மகளிர் கழுத்திலணியும் அணிவகை (நாஞ்.); a kind of woman's ornament, worn along with ciṟṟuru.

*[ஞால் → ஞாலி + கட்டு]*

**ஞாலுத்தட்டு** *ñālu-t-taṭṭu,* பெ. (n.) ஞாலித் தட்டு (நாஞ்.) பார்க்க; see *ñāli-t-taṭṭu.*

**ஞாழ்** *ñāḻ,* பெ. (n.) யாழ்; a stringed musical instrument. "தன் ஞாழ் நவிற்றிய தாமரை யங்கை" *(பெருங். மகத. 6:17).*

*[யாழ் → ஞாழ்]*

**ஞாழல்** *ñāḻal,* பெ. (n.) 1. புலிநகக்கொன்றை; orange-cup-calyxed brasiletto climber wagaty. "குவியிணர் ஞாழல்" *(பதிற்றுப். 51:5).* 2. மயிற் கொன்றை (மலை.); peacock's crest. 3. பொன்னாவிரை (மலை.); fetid cassia. 4. கோங்கு (திவா); false tragacanth. 5. மல்லிகை வகை (வின்.); jasmine. 6. கொடி வகை (வின்.); cinnamon. 7. குங்குமம் (அக.நி.); saffron. 8. மரவாயிரம் (வின்.); heart-wood. 9. ஆண்மரம் (அக.நி.); hard, solid wood.

ம. ஞாழல்; க. நேழல், நெழல்

**ஞாழல்பூ** *ñāḻalpū,* பெ. (n.) குங்குமப்பூ; saffron *(சா.அக.).*

**ஞாழல்மா** *ñāḻalmā,* பெ. (n.) ஒட்டுமாமரம்; grafted mango tree *(சா.அக.).*

*[ஞாழல் + மா. மா = மாமரம்]*

**ஞாழல்மாது** *ñāḻal-mādu,* பெ. (n.) ஊமத்தை (மலை.); trumpet flower.

**ஞாழல்வாசுகி** *ñāḻal-vāšugi,* பெ. (n.) பெரியாநங்கை; polygala elongata *(சா.அக.).*

**ஞாழல்விரை** *ñāḻal-virai,* பெ. (n.) பொன்னா விரை; cassia siamea *(சா.அக.).*

**ஞாழி** *ñāḻi,* பெ. (n.) வள்ளைக் கொடி (மலை.); aquatic convolvulus.

**ஞாளம்**[1] *ñāḷam,* பெ. (n.) தண்டு; flower-stalk. "அம்புய ஞாளநூலாலே" *(ஞானவா. உற்ப. 30).*

*[நாளம் → ஞாளம்]*

**ஞாளம்**[2] *ñāḷam,* பெ. (n.) பொன்னாக்கத்தில் மாழை உருக்குவதற்கான குகை; crucible as in. "ஞாளத்தில் வைத்தூதல்" *(in alchemy)* *(சா.அக.).*

*[நாளம் → ஞாளம்]*

**ஞாளம்**[3] *ñāḷam,* பெ. (n.) படர்கொடி; creeper.

*[நாளம் → ஞாளம்]*

**ஞாளி**[1] *ñāḷi,* பெ. (n.) நாய்; dog. "வலஞ்சுரித் தோகை ஞாளி மகிழும்" *(அகநா.122).*

*[ஞமலி → ஞாளி]*

**ஞாளி**[2] *ñāḷi,* பெ. (n.) கள் *(பிங்.);* toddy.

**ஞாளி**[3] *ñāḷi,* பெ. (n.) கோழி; fowl *(சா.அக.).*

**ஞாளி**[4] *ñāḷi,* பெ. (n.) ஞாழி (வின்.) பார்க்க; see *ñāḷi.*

*[ஞாழி → ஞாளி]*

**ஞாளிகம்** *ñāḷikam,* பெ. (n.) வள்ளைக் கொடி; a creeper, convolvulus repens *(சா.அக.).*

*[ஞாளி[4] → ஞாளிகம்]*

**ஞாளியாதனம்** *ñāḷi-y-ādaṉam,* பெ. (n.) ஒரு விருக்கை வகையுளொன்று *(தத்துவப். 108, உரை.);* a yogic posture.

*[ஞாளி[1] + ஆதனம். Skt. āsana → த. ஆதனம்]*

**ஞாளியூர்தி** *ñāḷi-y-ūrdi,* பெ. (n.) நாயை ஊர்தியாக உடைய வைரவன் *(பிங்.);* Bhairava, as riding a dog.

*[ஞாளி[1] + ஊர்தி]*

**ஞாற்சி** *ñāṟci,* பெ. (n.) தொங்குகை; hanging, pending. "ஞாற்சியிற் றிரண்டவந் நாகம்" *(சேதுபு. கந்தமா. 27).*

*[நால் → ஞால் → ஞாற்சி]*

**ஞாற்று**[1]**-தல்** *ñāṟṟu-,* 6 செ.குன்றாவி. (v.t.) தொங்கவிடுதல்; to hang up, suspend. 'பூஞாற்றினார்' *(தொல்.எழுத்து. 145, உரை).*

ம. ஞாற்றுக

*[நால் → நாற்று → ஞாற்று-.]*

**ஞாற்று** *ñāṟṟu,* பெ. (n.) ஞாற்சி பார்க்க; see *ñāṟci.* "வாவன் ஞாற்றே" (பிங். 3:56).

*[ஞால் → ஞாற்று]*

**ஞாறு-தல்** *ñāṟu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. மணம் வீசுதல்; to smell, emit an odour. "விரை ஞாற வருதென்றல்" *(குளா. இரத். 54).* 2. தோன்றுதல்; "கண்ணிழல் ஞாறிய காமர் பள்ளியுள்" *(பெருங். இலாவாண. 11:15).*

*[நாறு → ஞாறு-.]*

**ஞான்றஞாயிறு** *ñāṉṟa-ñāyiṟu,* பெ. (n.) கதிரவன் மறையும் நேரம்; sunset. "ஞான்ற ஞாயிற்றுக் கட்டி னிணக்கு மிழிசினன்" *(புறநா. 82).*

*[ஞால் + ஞாயிறு - ஞான்ற ஞாயிறு.]*

**ஞான்று**[1] *ñāṉṟu,* பெ. (n.) 1. பொழுது; time. 2. நாள்; day. "ஊசலூர்ந்தாட வொரு ஞான்று வந்தானை" *(கலித். 37).*

ம. ஞாந்நு

**ஞான்று**[2] *ñāṉṟu,* கு.வி.எ. (adv.) காலத்தில்; at the time of. "அம்மனைக்கோ லாகிய ஞான்று" *(நாலடி. 14).*

ம. ஞாந்நு

**ஞான்றுகொள்(ளு)-தல்** *ñāṉṟu-koḷ-,* 16 செ.கு.வி. (v.i.) கழுத்திற் சுருக்கிட்டுச் சாதல்; to hang oneself, commit suicide. "ஞான்று கொள்வேனன்றி யாது செய்வேன்" *(அருட்பா. 2, பிரார்த்தனைப். 2).*

*[ஞால் → ஞான்று]*

**ஞான்றை** *ñāṉṟai,* பெ. (n.) ஞான்று பார்க்க; see *ñāṉṟu.* "அரக்கன் வவ்விய ஞான்றை" *(புறநா. 378).*

*[ஞான்று → ஞான்றை]*

# ஞி

**ஞி** *ñi,* 'ஞ்'கர மெய்யொலியும் 'இ'கர உயிரொலியும் சேர்ந்த உயிர்மெய்யெழுத்து; the syllable formed by adding the short vowel 'i' tothe consonant 'ñ'.

*[ஞ் + இ - ஞி]*

**ஞிமிர்**[1]**-தல்** *ñimir-,* 2 செ.கு.வி, (v.i.) நிமிர்தல் *(சங்.அக.);* to be erect.

*[நிமிர்- → ஞிமிர்-.]*

**ஞிமிர்²-தல்** *ñimir-*, 8 செ.கு.வி. (v.i.) வண்டு முதலியன ஒலித்தல் (சங்.அக.); to sound, buzz, hum, as bees.

*[இமிர்- → ஞிமிர்]*

**ஞிமிர்³** *ñimir*, பெ. (n.) ஒலி (வின்.); sound.

*[இமிர் → ஞிமிர்]*

**ஞிமிறு** *ñimiru*, பெ. (n.) தேனீ; bee, honey bee. "வரிஞி மிறார்க்கும் வாய்புகு கடாஅத்து" (புறநா. 93:12).

*[ஞிமிர்² → ஞிமிறு]*

# ஞீ

**ஞீ** *ñī*, 'ஞ்'கர மெய்யொலியும் 'ஈ'கார உயிரொலியும் சேர்ந்த உயிர்மெய்யெழுத்து; the syllable formed by adding the long vowel 'ī' to the consonant 'ñ'.

*[ஞ் + ஈ - ஞீ]*

# ஞு

**ஞு** *ñu*, 'ஞ்'கர மெய்யொலியும் 'உ' கர உயிரொலியும் சேர்ந்த உயிர்மெய்யெழுத்து; the compound of 'ñ' and 'u'.

*[ஞ் + உ - ஞு]*

# ஞூ

**ஞூ** *ñū*, 'ஞ்'கர மெய்யொலியும் 'ஊ' கார உயிரொலியும் சேர்ந்தமைந்த உயிர்மெய் யெழுத்து; the compound of 'ñ' and 'ū'.

*[ஞ் + ஊ - ஞூ]*

# ஞெ

**ஞெ** *ñe*, 'ஞ்'கர மெய்யொலியும் 'எ' கர உயிரொலியும் சேர்ந்த உயிர்மெய்யெழுத்து; the syllable formed by adding the short vowel 'e' to the consonant 'ñ'.

*[ஞ் + எ - ஞெ]*

**ஞெகிழ்-தல்** *ñegil-*, 2 செ.கு.வி. (v.i.) 1. கழலுதல்; to become loose, slip off, as bangles. "ஞெகிழ்தொடி யிளையவர்" (கலித். 73:8). 2. தளர்தல் (வின்.); to languish, faint. 3. மனமிளகுதல் (தொல். பொருள். 72, உரை.); to be tender hearted. 4. மலர்தல்; to blossom. "ஞெகிழிதழ்க் கோடலும்" (கலித். 101). 5. உருகுதல்; to melt, as wax. "தீயுறு மெழுகின் ஞெகிழ்வனர்" (ஐங்குறு. 32). 6. மெலிதல்; to become thin, emaciated. "தோண் ஞெகிழ்பு" (கலித். 146:6). 7. சோம்புதல் (பிங்.); to be lazy.

ம. ஞெகிழுக; மா. நெத்கெ

*[நெகிழ் → ஞெகிழ்-.]*

**ஞெகிழம்** *ñegilam*, பெ. (n.) ஞெகிழி,6 பார்க்க; see ñegili,6. "சீரார் ஞெகிழஞ் சிலம்ப" (கலித். 90).

ம. ஞெகிழம்

*[நெகிழ் → ஞெகிழம்]*

**ஞெகிழி¹** *ñegili*, பெ. (n.) 1. கடைக்கொள்ளி; fire brand. "விடுபொறி ஞெகிழியிற் கொடிபட மின்னி" (அகநா. 108). 2. தீக்கடை கோல்; piece of wood used for kindling fire by friction. "கானவர் . . . ஞெகிழி பொத்த" (குறிஞ்சிப். 226). 3. தீ (பிங்.); fire. 4. விறகு (பிங்.); fuel, fire-wood. 5. கொடுவேலி (மலை.); Ceylon leadwort. 6. சிலம்பு (பிங்.); tinkling anklet.

ம. ஞெகிழி; க. நெகள்; தெ. நெகடி, நெரெ

*[நெகிழ் → ஞெகிழி]*

**ஞெகிழி**[2] *ñegiḻi,* பெ. (n.) வெள்ளைச் சோளம்; white maize corn *(சா.அக.).*

**ஞெண்டு**[1]**-தல்** *ñeṇḍu-,* 5 செ.குன்றாவி, (v.t.) கிண்டுதல் *(சூடா.);* to scratch up, as a hen.

*[நெண்டு → ஞெண்டு]*

**ஞெண்டு**[2] *ñeṇḍu,* பெ. (n.) 1. நண்டு; crab. "வேப்பு நனையன்ன நெடுங்க ணீர்ஞெண்டு" *(அகநா. 176).* 2. கடகவோரை *(திவா.);* Cancer in the zodiac.

ம. ஞெண்டு

*[நெண்டு → ஞெண்டு]*

**ஞெண்டுகம்** *ñeṇḍugam,* பெ. (n.) பெருவாகை *(மலை.);* siris, a tree.

**ஞெமர்-தல்** *ñemar-,* 2 செ.குவி, (v.i.) 1. பரத்தல்; to spread, extend. "நீர்ஞெமர வந்தீண்டி" *(பதிற்றுப். 72:9).* 2. நிறைதல்; to be full. "இலம்படு புலவ ரேற்றகை ஞெமர" *(பரிபா. 10:126).*

*[நிமிர் → ஞெமர்-.]*

**ஞெமல்**[1]**(லு)-தல்** *ñemal-,* 13 செ.கு.வி. (v.i.) 1. திரிதல்; to wander, roam about. "அலர் ஞெமன் மகன்றில்" *(பரிபா. 8:44).*

**ஞெமல்**[2] *ñemal,* பெ, (n.) சருகு; dry leaf. "படுஞெமல் புதையப் பொத்தி" *(அகநா. 39:7).*

**ஞெமலி** *ñemali,* பெ, (n.) கொடுநுகம் நாண்மீன் (மகம்) (வீமேசு. உள். நட்சத். 3).

*[ஞெமல் (= வளைவு) → ஞெமலி]*

**ஞெமன்கோல்** *ñemaṉ-kōl,* பெ. (n.) துலாக்கோல்; balance, steelyard. "ஞெமன்கோ லன்ன செம்மைத்தாகி" *(மதுரைக். 491).*

*[சமன் → ஞெமன் + கோல்]*

**ஞெமி-தல்** *ñemi-,* 2 செ.கு.வி (v.i.) நெரிதல்; to break, to give way, as under a weight. "தேம்பலிடை ஞெமிய" *(திருக்கோ. 165).*

**ஞெமிடு-தல்** *ñemiḍu,* 5 செ.குன்றாவி. (v.t.) கசக்குதல்; to crush, press out with the hands; to rub. "அங்கை நிறைய ஞெமிடிக் கொண்டுதன்" *(நற். 22).*

*[நிமிண்டு → ஞெமிண்டு → ஞெமிடு]*

**ஞெமிர்**[1]**-தல்** *ñemir-,* 2 செ.கு.வி (v.i.) 1. பரத்தல்; to spread, extend. "தருமணன் ஞெமிரிய திருநகர் முற்றத்து" *(நெடுநல். 90).* 2. தங்குதல்; to rest, stay. "திருஞெமி ரகலத்து" *(சிலப். 28:157).* 3. முற்றுதல் *(அக.நி.);* to be mature, ripe. 4. ஒடிதல்; to break, snap off. 5. நெரிதல்; to be crushed, compressed; to be pressed out, as pulp. "மார்புறு முயக்கிடை ஞெமிர்ந்த சோர்குழை" *(நற். 20).*

*[நிமிர் → ஞெமிர்-.]*

**ஞெமிர்**[2]**-த்தல்** *ñemir-,* 4 செ.குன்றாவி (v.t.) 1. ஒடித்தல் *(திவா.);* to snap, break off. 2. நெரித்தல்; to press with the hands. "சிறுமந்தி . . . தந்தையை . . . விரலான் ஞெமிர்த்திட்டு" *(நாலடி. 237).*

*[நிமிர் → ஞெமிர்-.]*

**ஞெமிர்தம்** *ñemirdam,* பெ. (n.) உடலுக்கு வரக்கூடிய பற்பல நோய்களைத் தடுக்கும் தன்மை கொண்ட நாற்பக்க பிரண்டை; variety of kitis quadran gularis with square stem *(சா.அக.).*

**ஞெமுக்கம்** *ñemukkam,* பெ. (n.) அழுந்துகை *(சங். அக.);* yielding to pressure.

*[ஞெமுங்கு → ஞெமுக்கம்]*

**ஞெமுக்கு-தல்** *ñemukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) நெருக்கி வருத்துதல்; to press hard. "ஒண்டொடி ஞெமுக்காதீமோ" *(அகநா. 60).*

*[ஞெமி → ஞெமு → ஞெமுக்கு-.]*

**ஞெமுங்கு-தல்** *ñemuṅgu-,* 5 செ.கு.வி (v.i.) 1. அழுந்துதல்; to yield, to pressure, to be pressed in, squeezed as ripe fruit. "வளைந்துவர விளமுலை ஞெமுங்க" *(அகநா. 58).* 2. செறிதல் *(திவா.);* to be compact, in close contact.

ம. நமுங்க

*[ஞெமுக்கு → ஞெமுங்கு-.]*

**ஞெமை** *ñemai,* பெ. (n.) மரவகை; a tree. "திருந்தரை ஞெமைய பெரும்புனற் குன்றத்து" *(அகநா. 395).*

**ஞெயம்** *ñeyam,* பெ. (n.) நெய்; ghee.

*[நெய் → நெயம் → ஞெயம்]*

